இவ்வுலக வாழ்நாள் எல்லாம் நான் உமக்காய் வாழவும்,
அன்பு, தியாகம், அருள், பக்தி அனைத்தும் பெற்றோங்கவும்,
பாவ அழுக்கெல்லாம் நீக்கி தூய பாதை செல்லவும்,
ஆண்டவா, உம் அருள் தாரும்,
அடியேனை ஆட்கொள்ளும்.

* * *

இவ்விடம் வாழ்த்து சீட்டு ஒட்டவும்

# 2000

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும் அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும் தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும், சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும்படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது. (எபே.4:11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசுகிறிஸ்து எனக்கு தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும் கட்டளைகளும் 7 (அப்1: 1-3)" எனக்கு காண்பித்து, கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள்:

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் மத்28:18; மாற். 16:15.
2. விசுவாசித்து ஏற்றுக்கொள்ளுகிறவர்களை பிதா, குமாரன், பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்- மத். 28:19 (இயேசு மாதிரி (Through Action) செய்து காண்பித்தார்.
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைகொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள் - மத்28:20.
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள் - யோவான். 20: 23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள் - யோவான். 21 : 15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு - அப். 1 :5-8.
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவு கூறும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார் - 1கொரி. 11 : 23 -26

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு(2) என்கின்றனர் வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே அதெப்படி? என்றேன். இயேசுவானவர் பிரதியுத்திரமாக: இல்லை அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும் அதிகாரங்களுமாகும்.இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1:1, 10: 40-43).

## இதழின் உள்ளே

# ஆசிரியர் உரை



தேவன் செய்வதெல்லாம் நிலைக்கும். கர்த்தர் தம்முடைய சித்தத்தை வேகமாய் பூமியில் நிறைவேற்றி வருகிறார். உலகத்திலுள்ள தீய சக்திகளெல்லாம் கூட்டமாய்க் கூடி எழும்பி நிற்கின்றன. பலகைகளை ஒன்றாய் நிறுத்தி வைத்து லேசாக தள்ளிப் பார்த்திருக்கிறீர்களா? அவைகள் ஒரு நிமிஷத்தில் எல்லாம் மொத்தமாய் விழுந்து விடும். அவ்விதமாகவே தேவன் ஒரு நிமிஷத்திலே கீழேத்தள்ளி சாய்க்கப்போகிறார். நாம் பார்த்து கேள்விப்பட்டு ஆச்சரியப்படும் படியாக சம்பவம் நிகழும். தேவன் தம்முடைய வல்லமையையும், மகிமையையும் காண்பிக்க தம்முடைய பரிசுத்தவான்களை கூட்டி சேர்த்து வருகிறார். பெரிதான வல்லமையோடு கூட தெய்வீக காரியங்கள் நடை பெறும். ஒருவரும் எதிர்நிற்க முடியாத வல்லமை வெளிப்படும். ஏனென்றால் தேவரகசியம் நிறைவேறும் காலமாய் இருக்கிறது என்பதே. தேவனுடைய பிள்ளைகளே, எழும்பி பிரகாசியுங்கள்; தேவனுடைய ஜனங்கள் கூட்டி சேர்க்கப்படுவார்கள். பெருமழையின் இரைச்சல் கேட்கப்படுகிறது. ஜெபிப்போம், கிரியை செய்வோம், ஜெயிப்போம்; ஆசீர்வாதம் உண்டாகும்.

*கிறிஸ்துவுக்குள்,*

*தலைமை அப்போஸ்தலர்.என்.லாசர்*

# பரலோகம்

"என் பிதாவின் வீட்டில் அநேக வாசஸ்தலங்கள் உண்டு; அப்படியில்லாதிருந்தால் நான் உங்களுக்குச் சொல்லியிருப்பேன்; ஒரு ஸ்தலத்தை உங்களுக்காக ஆயத்தம்பண்ணப் போகிறேன்" யோவான். 14 : 2

நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்து, பரலோகத்தைக் குறித்து இவ்வாறு சொல்லியிருக்கிறார். பரலோகம் என்று ஒரு ஸ்தலம் இருக்கிறது என்றும், அது நாம் வாஞ்சிக்கிற நாடு என்றும், இந்த வசனத்தின் மூலம் அறிகிறோம். மனிதன் நிலையற்றவனாக இருக்கிறான். அவன் ஜீவிய நாட்களும் கொஞ்சமே. மனிதனின் முடிவைப் பற்றிய தெளிவான ஆதாரங்களை வேதம் நமக்கு காண்பிக்கிறது. மனிதனுக்கு ஒரு நியாயத்தீர்ப்பு உண்டென்று வேதாகமம் முடிவாகச் சொல்லுகிறது. 'வாலிபனே! உன் இளமையிலே சந்தோஷப்பட்டு, உன் வாலிப நாட்களிலே உன் இருதயம் உன்னை பூரிப்பாக்கட்டும்; உன் நெஞ்சின் வழிகளிலும், உன் கண்ணின் காட்சிகளிலும் நட; ஆனாலும் இவையெல்லாவற்றினிமித்தமும் தேவன் உன்னை நியாயத்திலே கொண்டு வந்து நிறுத்துவார் என்று அறி" (பிர. 11 : 20). மனிதனின் முடிவைக் குறித்து: "இவ்விதமாய் மண்ணானது தான் முன்னிருந்த பூமிக்குத் திரும்பி, ஆவி தன்னைத் தந்த தேவனிடத்திற்கு மறுபடியும் போகாததற்கு முன்னும், அவரை உன் வாலிபப்பிராயத்திலே நினை' (பிர. 12 : 7) என்று வேதம் கூறுகிறது. 'எல்லாம் மண்ணிலே உண்டாகிறது, எல்லாம் மண்ணுக்குத் திரும்புகிறது' (பிர. 3: 20) அடுத்த வசனத்தில், "உயர ஏறும் மனுஷனுடைய ஆவி" (பிர. 3 : 21) என்று எழுதியிருக்கிறது. நிலையற்ற மனிதன் மரித்தவுடனே, அவன் ஆவி மேலே ஏறிப் போகிறது என்றும் அவன் சரீரம் மண்ணிலே அழிந்து போகிறது என்றும் நாம் வாசிக்கிறோம். இப்படியே பிர. 12 : 13,14-ல் 'காரியத்தின் கடைத்தொகையைக் கேட்போமாக, தேவனுக்குப் பயந்து அவர் கற்பனைகளைக் கைக்கொள்; எல்லா மனுஷர் மேலும் விழுந்த கடமை இதுவே. ஒவ்வொரு கிரியையும், அந்தரங்கமான ஒவ்வொரு காரியத்தையும் நன்மையானாலும், தீமையானாலும் தேவன் நியாயத்திலே கொண்டுவருவார்' என்று எழுதியிருக்கிறது. மோட்சம், நரகம் இந்த இடங்களில் ஏதாவது ஒரு இடத்திற்கு மனிதன் செல்கிறான். நரகம் மனிதனுக்காக அல்ல, சாத்தானுக்காக உருவாக்கப்பட்டது. ஆனால் மனிதன் சாத்தானோடு சேர்ந்து தேவனுக்கு விரோதமாக கிரியை செய்கிறபடியால் அவன் போகிற இடத்திற்கு இவனும் கொண்டுபோகப்படுகிறான். மனிதனுடைய வாழ்க்கை இவ்விதமாக நரகத்துக்குப் போகும் நிலையில் காணப்படுகிறது. அப்படி நரகத்திற்குப் போகாமல், மனிதனை தேவனிடத்திற்கு சேர்க்கும்படியாய் கர்த்தராகிய இயேசு கிறிஸ்து உலகத்திற்கு வந்தார் (1 பேது 3 :18). பரலோகத்தைப் பற்றி, என் பிதாவின் வீடு என்று இயேசு சொன்னதாக யோ 14 : 2-ல் வாசிக்கிறோம். இந்தப் பரலோகத்தைப் பற்றி சிந்திப்போமாக.

1. பரலோகம் எங்கே உள்ளது?

"அவர் உத்தர மண்டலத்தை வெட்ட வெளியிலே விரித்து, பூமியை அந்தரத்திலே தொங்க வைக்கிறார்" (யோ. 26 : 7) இந்த உத்தர மண்டலம் பூமியின் வட பகுதியில் இருக்கிறது. வானத்தின் (பரலோகத்தின்) வட திசை என்று அறிகிறோம். "நான் வானத்துக்கு ஏறுவேன், தேவனுடைய நட்சத்திரங்களுக்கு மேலாக என் சிங்காசனத்தை உயர்த்துவேன்; வடபுறங்களிலுள்ள ஆராதனை கூட்டத்தின் பர்வதத்திலே வீற்றிருப்பேன் என்றும். நான் மேகங்களுக்கு மேலாக உன்னதங்களில் ஏறுவேன்; உன்னதமானவருக்கு ஒப்பாவேன் என்றும் நீ உன் இருதயத்தில் சொன்னாயே" என்று (ஏசா. 14 : 13,14)ல் சொன்னதாக சாத்தானைப் பற்றி ஒரு குறிப்பைக் காண்கிறோம். எசேக்கி யேல் 28-ம் அதிகாரத்திலேயும் சாத்தா னைக் குறித்து எழுதியிருக்கிறது. வான மண்டலத்தில், நட்சத்திரங்களுக்கு மேலாக தேவனுடைய வீடும், ஆராதனை ஸ்தலமுமாகிய பரலோகம் இருப்பதாக அறிகிறோம். எசேக். 1 : 4-ல், அந்த ஜீவன்கள் வடக்கேயிருந்து வந்ததாக வாசிக்கிறோம். வடக்கேயுள்ள உத்தர மண்டலம் வெட்ட வெளியாக இருக்கிறது. வான மண்டலத்தில் எண்ணற்ற நட்சத்திரங்களை தன்னிடத்தே கொண்ட வானமண்டலத்தின் வடபுறம் வெட்ட வெளியாக இருப்பதாக வேதாகமம் கூறுகிறது.

நமக்கு வேண்டிய வெற்றி, ஆசீர்வாதங்கள் எங்கேயிருந்து வருவதாக சங். 75 : 6,7 -ல் கூறப்பட்டிருக்கிறது. 'கிழக்கிலும் மேற்கிலும் வனாந்திர திசையிலுமிருந்து ஜெயம் வராது. தேவனே, நியாயாதிபதி ; ஒருவனை தாழ்த்தி ஒருவனை உயர்த்துகிறார்''. கிழக்கிலும் மேற்கிலும் வனாந்திர திசையிலுமிருந்து (தெற்கிலிருந்து) ஜெயம் வராது என்று கூறியிருப்பதால், எஞ்சியுள்ள வட திசையிலிருந்துதான் தேவன் ஜெயத்தைக் கட்டளையிடுகிறார் என்று அறிகிறோம்.

2. பரலோகத்தின் பரிமாணம்:

பரலோகத்திலுள்ள எருசலேம் நகரத்தின் அளவைக்குறித்து நாம் முதலாவது அறிந்தால், பரலோகத்தின் விஸ்தாரத்தைப் பற்றி நாம் ஓரளவு அறிந்து கொள்ள முடியும். "அந்த நகரம் சதுரமாயிருந்தது, அதின் அகலமும் நீளமும் சமமாயிருந்தது. அவன் அந்தக் கோலினால் நகரத்தை அளந்தான்; அது பன்னீராயிரம் ஸ்தாதி (8 ஸ்தாதி 1 மைல்) அளவாயிருந்தது; அதன் நீளமும் அகலமும் உயரமும் சமமாயிருந்தது' (வெளி. 21 : 16). இப்படி பரலோகத்திலுள்ள தங்கப்பட்டணமான எருசலேமின் அகலமும், நீளமும், உயரமும் ஒவ்வொன்றும் 1,500 மைல் இருந்தது.

3. யார் பரலோகத்தில் இருப்பார்கள்?

'பின்னும் நான் பார்த்தபோது, சிங்காசனத்தையும், ஜீவன்களையும், மூப்பர்களையும், சூழ்ந்திருந்த அநேக தூதர்களுடைய சத்தத்தைக் கேட்டேன்; அவர்களுடைய இலக்கம் பதினாயிரம் பதினாயிரமாகவும், ஆயிரமாயிரமாகவுமிருந்தது' (வெளி. 5 : 11). 'இவைகளுக்குப் பின்பு நான் பார்த்த

போது, இதோ சகல ஜாதிகளிலும் கோத்திரங்களிலும் ஜனங்களிலும் பாஷைக்காரரிலுமிருந்து வந்ததும், ஒருவனும் எண்ணக்கூடாததுமான திரளான கூட்டமாகிய ஜனங்கள், வெள்ளை அங்கிகளைத் தரித்து, தங்கள் கைகளில் குருத்தோலைகளைப் பிடித்து, சிங்காசனத்திற்கு முன்பாகவும், ஆட்டுக்குட்டியானவருக்கு முன்பாகவும் நிற்கக் கண்டேன்' (வெளி. 7 :9). பரலோகத்தில் பிதாவாகிய தேவன் இருக்கிறார். குமாரனாகிய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து இருக்கிறார். அங்கு நான்கு ஜீவன்கள் இருக்கிறார்கள்; இருபத்திநான்கு மூப்பர்கள் இருக்கிறார்கள். கேருபீன்கள், சேராபீன்கள் என்று கூறப்படுகிற தேவதூதர்களின் தலைமைக் கூட்டங்கள் இருக்கின்றன. ஜாதிகளிலிருந்தும், ஜனங்களிலிருந்தும் மீட்கப்பட்ட கோடானுகோடி மக்கள் இருக்கின்றார்கள். ஏனோக்கும், எலியாவும் அங்கேயிருக்கின்றார்கள். ஏராளமான தூதர் கூட்டங்களும், ஏராளமான பரிசுத்தவான்களும் அங்கே இருக்கிறார்கள் என்று சொல்லி நாம் வாசிக்கிறோம் (எபி. 12 : 22-24). தேவன், தூதர்களையெல்லாம் பெயர் சொல்லி அழைக்கிறார் (யூதா. 9 ; லூக். 1 : 19,26). நமக்கு பாதுகாவல் அளிக்கும் தூதர்களும் உண்டு (அப். 12 : 11,15; மத். 18 : 10). பணிவிடை செய்யும் தூதர்களும் உண்டு (எபி. 1 : 14). கர்த்தருக்குள் மரித்த பரிசுத்தவான்கள் உண்டு (லூக். 9 : 30; லூக். 16 : 23,25). பரலோகத்தில், மரித்த நமக்கு அருமையானவர்களை, தூதர்களை அடையாளம் கண்டு கொள்வோம்.

4. பரலோகத்தில் என்ன பார்ப்போம்?

உன் கண்கள் ராஜாவை மகிமைப் பொருந்தினவராகக் காணும். ஆம், தேவனைக் காண்போம்; தூரத்திலுள்ள தேசத்தையும் பார்ப்போம் (ஏசா. 33 : 17). பரிசுத்தவான்களைக் கண்டு இந்த உலகத்தில் அவர்கள் சாதனைகளையும், இரகசியங்களையும் கேட்டு அறிந்து கொள்ளப் போகிறோம். பரிசுத்தவான்கள் எல்லோரும் இப்போது ஆவியில் நம்மை பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

5. பரலோகத்தில் நாம் என்ன செய்யப் போகிறோம்?

தேவனைப்பாடி மகிமைப் படுத்தப் போகிறோம் (வெளி. 5 : 8-10). தேவனைப் பாடி மகிமைப் படுத்த இங்கேயே நாம் அதிகமாக பிரயாசப்படவேண்டும். பரலோகத்தில் பாடப்படும் சில பாடல்கள் முதற்பலன்களைத் தவிர மற்றவர்கள் பாடமுடியாதவைகளாக இருக்கிறது. பரலோகத்தில் மோசேயின் பாட்டையும் (யாத் 15-ம் அதிகாரம்; உபா. 32-ம் அதிகாரம்) ஆட்டுக்குட்டியானவரின் பாட்டையும், இயேசுவானவர் இப்பூமியில் இருந்தபோது பாடிய பாட்டுகளையும் பாடினதாக வெளி. 15 : 2,3-ல் எழுதப்பட்டிருக்கிறது. அங்கே நமக்கு நித்திய பேரின்பம் உண்டு (சங். 16 : 11). மனிதனின் சகல நல் வாஞ்சைகளும் பரலோகத்தில் நிறைவடையப் போகிறது. அங்கே நாம் ஜீவ விருட்சத்தின் கனியைப் புசிப்போம் (வெளி. 2 : 7 ; வெளி. 22 : 2). ஜீவத் தண்ணீரைக் குடிப்போம் (வெளி. 22 : 1). அங்கே தேவ அன்பில் களிகூர்ந்திருப்போம் (வெளி. 21 : 3-5). அங்கே தேவ தூதரைப் போலிருப்போம் (மாற். 12 : 25). அங்கே இளைப்பாறுதல் அடைவோம். சாபம் இருக்காது (வெளி.

22 : 3,4). நமது நற்கிரியைகள் நம்மோடு கூட பரலோகத்திற்கு வரும் (வெளி. 14 : 13). அங்கே நாம் ஆவிக்குரிய திட சரீரத்துடன், மகிமை அடைந்த சரீரத்துடன் செல்வோம் (லூக். 24 : 39,43).

6. பரலோகத்தில் யார் இருக்க மாட்டார்கள்?

மனந்திரும்பி இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து ஏற்றுக்கொள்ளாதவர்கள் அங்கே இருக்க மாட்டார்கள் (யோவா. 3 : 3,5 ; யோவா. 8 : 21). அங்கே பாவம் செய்கிறவர்கள் இருக்க மாட்டார்கள் (வெளி. 21 : 8; 22 : 15). "அநியாயக்காரர் தேவனுடைய ராஜ்யத்தைச் சுதந்தரிப்ப தில்லையென்று அறியீர்களா? வஞ்சிக்கப் படாதிருங்கள்; வேசிமார்க்கத்தாரும், விக்கிரகாராதனைக்காரரும், விபச்சாரக்காரரும், சுயபுணர்ச்சிக்காரரும், ஆண்புணர்ச்சிக்காரரும், திருடரும், பொருளாசைக்காரரும், வெறியரும், உதாசினரும், கொள்ளைக்காரரும் தேவனுடைய ராஜ்யத்தைச் சுதந்த ரிப்பதில்லை" (1 கொரி. 6 : 9,10). விபச்சாரக் காவனாவது, அசுத்தனாவது, விக்கிரகாராதனைக்காரனாகிய பொருளாசைக்காரனாவது தேவனுடைய ராஜ்ஜியமாகிய கிறிஸ்துவின் ராஜ்ஜி யத்திலே சுதந்திரமடைவதில்லை யென்று அறிந்திருக்கிறீர்களே (எபே. 5 : 5).

7. பரலோகத்தில் எவ்வளவு காலம் இருக்கப் போகிறோம்?

நாம் சதாகாலமும் அங்கு ஜீவிக்கப் போகிறோம் (எபி. 13 : 14). அது பிரமாண்டமான நகரம். மேலும் காணப்படுகிறவைகளையல்ல காணப்படாதவைகளை நோக்கியிருக்கிற நமக்கு, அதி சீக்கிரத்தில் நீங்கும் இலேசான நம்முடைய உபத்திரவம் மிகவும் அதிகமான நித்திய கனமகிமையை உண்டாக்குகிறது. ஏனெனில், காணப்படுகிறவைகள் அநித்தியமானவைகள், காணப்படாதவைகளோ நித்தியமானவைகள் (IIகொரி. 4 : 17,18).

8. பரலோகத்திற்கு எப்படி போக முடியும்?

நாம் அனுதினமும் பரிசுத்தமடைய வேண்டும்; பரிசுத்தத்திலே வளரவேண்டும். 'நீதியுள்ளவன் இன்னும் நீதி செய்யட்டும்; பரிசுத்தமுள்ளவன் இன்னும் பரிசுத்தமாகட்டும்; இதோ, சீக்கிரமாய் வருகிறேன்; அவனவனுடைய கிரியைகளின் படி அவனவனுக்கு நான் அளிக்கும் பலன் என்னோடு கூட வருகிறது' (வெளி. 22 : 11,12). பரலோகம் என்பது ஒரு நிலையைக் குறிப்பிடுவது அல்ல, அது ஒரு இடம்; அங்கே இராக்காலமிருக்காது; தேவனாகிய கர்த்தரே அங்கே விளக்கும் வெளிச்சமுமாயிருப்பார் (வெளி. 22 : 3,5). இந்த பரலோகத்திற்குப் போக நாம் தீவிரமாக முயற்சி செய்ய வேண்டும். இரட்சிக்கப்பட வேண்டியது முக்கியம். பரிசுத்தமாகுதல் தொடர்ந்து நடை பெறுகிற காரியம்; அதற்காகவே நாம் கூடி வருகிறோம், உபதேசம் கேட்கிறோம், ஜெபம் பண்ணுகிறோம், கீழ்ப்படிகிறோம். நமது முயற்சியில் வெற்றி பெறாதபடிக்கு, சாத்தான் பாவ சோதனைகளைக் கொண்டு வந்து பாவம் செய்யத் தூண்டுவான். பாவம் செய்தவுடன் எதிராளியாக மாறி நம்மேல் குற்றம் சுமத்தி தன்னுடைய வித்து நமக்குள் வந்து

விட்டதென்றும் தன்னுடனேயே வந்து விடும்படியும் அழைப்பான். இதைக் குறித்து கர்த்தராகிய இயேசு சொல்வது: "எதிராளி உன்னை நியாயாதி பதியினிடத்தில் ஒப்புக்கொடாமலும், நியாயாதிபதி உன்னைச் சேவகனிடத்தில் ஒப்புக் கொடாமலும், நீ சிறைச்சாலையில் வைக்கப்படாமலும் இருக்கும்படியாக, நீ உன் எதிராளியோடு வழியில் இருக்கும் போதே சீக்கிரமாய் அவனுடனே நல் மனம் பொருந்து. பொருந்தாவிட்டால், நீ ஒரு காசும் குறைவின்றிக் கொடுத்துத் தீர்க்குமட்டும் அவ்விடத்திலிருந்து புறப்படமாட்டாய் என்று, மெய்யாகவே உனக்குச் சொல்லுகிறேன்" (மத். 5 : 25,26). நாம் நம்மைத் தாழ்த்த வேண்டும்; நம் எதிராளியுடனே வழியில் சமாதானமாகி விடவேண்டும். எதிராளி சாத்தான். நியாயாதிபதி கர்த்தராகிய இயேசுகிறிஸ்து. சாத்தான் குற்றம் சாட்டும் போது நமது பெருமையினால், வாக்குவாதம் பண்ணிக்கொண்டிராமல் நம்மைத் தாழ்த்தி குற்றத்தை ஒப்புக்கொண்டு, நியாயாதிபதி யாகிய இயேசு தம்முடைய இரத்தத்தினால் என்னுடைய பாவத்தை சுத்திகரிப்பார், என்று சொல்லவேண்டும்; மனந்திரும்ப வேண்டும். நியாயாதிபதியினிடத்தில் கெஞ்சி பாவத்திற்கு மன்னிப்பைப் பெற்றுக்கொள்ள வேண்டும். பாவத்தை அறிக்கை செய்து மன்னிப்பு பெற்றுக்கொள்ள வேண்டும்.

பிசாசை எதிர்க்கும் வழி:

"தேவனுக்கு கீழ்ப்படிந்திருங்கள்; பிசாசுக்கு எதிர்த்து நில்லுங்கள் அப்பொழுது அவன் உங்களை விட்டு ஓடிப்போவான்" (யாக். 4 : 7). தேவன் பெருமையுள்ளவர்களுக்கு எதிர்த்து நிற்கிறார், தாழ்மையுள்ளவர்களுக்கோ கிருபை அளிக்கிறார் (யாக். 4 : 6). எனவே மனந்திரும்புவதும் தன்னைத் தாழ்த்தி பாவ அறிக்கை செய்து சுத்திகரிப்பை பெற்றுக்கொள்வதும் தொடர்ந்து பரலோகத்தை நோக்கி இந்த தெய்வீக வாழ்க்கையில் நடக்க முன்னேறிக் கொண்டே இருக்க வேண்டும். எனவே தைரியமாய் சாத்தானுக்கு விரோதமாக போராட வேண்டும் (எபி. 10 : 34,35) பூரணமடைய, கிறிஸ்துவைப் போல் ஜீவிக்க முயல வேண்டும். ஆனால் கிறிஸ்து மட்டும் தான் கிறிஸ்துவைப் போல ஜீவிக்க முடியும். நாம் கிறிஸ்துவை உள்ளத்தில் ஏற்றுக் கொண்டு, அவர் நம்மை ஆளுகை செய்யும் படிக்கு, அவர் நம்மிலிருந்து வெளிப்படும்படிக்கு ஒப்புக்கொடுப்பதே கிறிஸ்தவ வாழ்க்கை. அப்போது அவர் நம்மிலிருந்து, தம்முடைய வாழ்க்கையை வாழுவார். நாம் கிறிஸ்துவாகிய செடியுடன் ஐக்கியமாயிருக்கும்போது, தானாக செடியின் பலன் நம்மிலிருந்து வெளிப்படும், கிறிஸ்து வெளிப்படுவார்.

தேவன் தம்மில் அன்புகூறுகிற வர்களுக்கு ஆயத்தம் பண்ணினவை களைக் கண் காணவில்லை, காது கேட்கவுமில்லை, அவைகள் மனுஷனுடைய இருதயத்தில் தோன்றவு மில்லை (1கொரி. 2 ; 9). இரண்டாயிரம் ஆண்டுகளாக கிறிஸ்து நமக்காக ஒரு நகரத்தை பொன்னினாலும் இரத்தினங்களாலும் கட்டிக் கொண்டி ருக்கிறார். ஆதிகால பரிசுத்தவான்களும் இந்த தங்கப் பட்டணத்தைத் தான் ஆவியிலே கண்டு அதற்காகக் காத்தி ருந்தார்கள். தேவன் அவர்களை வெட்கப் படவிடவில்லை. அவர்களுக்கு அந்த நகரத்தை ஆயத்தம் பண்ணியிருக்கிறார்.

(எபி. 11 : 16,10). ஸ்திரிகளும், மேன்மையான உயிர்த்தெழுதலைப் பெற்றுக் கொள்ளும்படி தங்களையும், தங்களுடையவர்களையும் சாகக் கொடுத்தார்கள் (எபி. 11 : 35). பரலோகத்தைப் பற்றி கொஞ்சமாவது அறிந்தவர்கள் தான் தங்களுடைய தெல்லாவற்றையும் விற்று தேவனை உறுதியாய் பற்றிக் கொள்கிறார்கள் (மத். 13 : 44-46). பரலோகத்தில் தேவன் நமக்காக ஆயத்தம் பண்ணியவைகளை நாம் ஒப்பிட்டுப் பார்த்தால் அதற்காக நாம் செய்யும் தியாகங்களெல்லாம் மிகவும் சொற்பமே. கர்த்தராகிய இயேசு கிறிஸ்து பரலோகத்தை குறித்து நமக்கு அறிவித்தார். அங்கே நம்மை சேர்க்கும்படி இந்த உலகத்திற்கு வந்து மரித்தார். "நான் மறுபடியும் வந்து உங்களை என்னிடத்தில் சேர்த்துக் கொள்ளுவேன்" (யோ. 14 : 3) என்று கிறிஸ்து கூறியிருக்கிறார்.

மனிதன் நித்தியமாய் இந்த உலகத்தில் இருக்கப்போவதில்லை. மரித்தவுடன் மோட்சத்துக்கோ, நரகத்துக்கோ கொண்டுப் போகப் படுகிறான். அவன் சரீரம் மண்ணுக்குத் திரும்புகிறது; அவனது ஆவி தேவனிடம் கடந்து செல்லும். தேவன் நியாயந் தீர்த்து அதை பரதீசுக்கோ அல்லது பாதாளத்துக்கோ அனுப்பி வைக்கிறார். ஒரு நாள் சரீரத்தையும் சேர்த்து இறுதி நியாயத்தீர்ப்பு அளித்து மோட்சத்துக்கோ, நரகத்துக்கோ அனுப்பி வைக்கிறார். பாதாளம் என்பது நரகத்தின் முன் அனுபவம்; பரதீஸ் மோட்சத்தின் முன் அனுபவமாகும். கிறிஸ்துவுக்குள் மரித்தவர்கள் பரதீசில் இளைப்பாறு கிறார்கள். நாம் பாவிகளாயிருந்த போது நமக்காகத் தம்மை ஒப்புக்கொடுத்த கர்த்தராகிய இயேசுகிறிஸ்து நம்மைப் பரிபூரணப்படுத்துவார்; பரிபூரணப் படுத்திக்கொண்டே இருக்கிறார்.

நம்முடைய சிந்தனைகளிலும் எல்லா பழக்கவழக்கங்களிலும் கிறிஸ்து வந்து ஆளுகை செய்யும்படி ஒப்புக்கொடுக்க வேண்டும். தொடர்ந்து பாவம் செய்கிறவர்கள் பிசாசின் ஆளுகைக்கு உட்படுகிறார்கள். கிருபைக்காக ஜெபிக்க வேண்டும். தவறு ஏற்பட்டால் உடனே தங்களைத் தாழ்த்தி, தாழ்மையைக் கடைப்பிடிக்க வேண்டும்; மன்னிப்புக் கேட்க வேண்டும்; மனப்பூர்வமாக மன்னிப்புக் கொடுக்க வேண்டும் (IIகொரி. 2 : 10,11). தேவனை அறிகிற அறிவுக்கு விரோதமாக எழும்புகிற எல்லா எண்ணங்களையும், மேட்டிமைகளையும் கீழ்ப்படுத்த வேண்டும் (IIகொரி. 10 : 3-5). சாத்தானுக்கு இடங்கொடுக்க கூடாது. தேவன் ஆதாமுக்கு, "நீ மண்ணாயிருக்கிறாய்; மண்ணுக்குத் திரும்புவாய்" என சாபமிட்டார். அப்படியே சர்ப்பத்திடம்: 'மண்ணைத் தின்பாய்' என்று சாபம் கூறினார். மண் என்பது மாம்ச சுபாவமாகும். மனிதனிடம் காணப்படும் மாம்ச சுபாவம் சாத்தானுக்கு ஆகாரமாகும். மாம்ச சுபாவம் காணப்படும்போதெல்லாம் மண்ணை, மாம்ச சுபாவத்தை தேடித்திரிகிற சாத்தான் சாப்பிட வந்து விடுகிறான்.

இந்த மோட்சப்பிரயாணத்தில் நமக்கு இடையூறுகள், வீழ்ச்சிகள், ஆபத்துக்கள், சத்துருவின் தாக்குதல்கள் உண்டானாலும் கர்த்தர் நம்மை பரலோகத்தில் கொண்டு சேர்ப்பார். அவர் தேவனுடைய வலது பாரிசத்தில் உட்கார்ந்திருக்கிறார். "நீர் எனக்குத் தந்த என்னுடைய மகிமையை நீர் எனக்குத் தந்தவர்கள் காணும்படியாக, நான் எங்கே

இருக்கிறேனோ அங்கே அவர்களும் என்னோடு கூட இருக்க விரும்புகிறேன்' (யோ. 17 : 24) என்று ஜெபம் பண்ணி யிருக்கிறார். பிதாவாகிய தேவன் அவர் ஜெபத்தை நிறைவேற்றுவார். பரிசுத்த ஆவியானவர் நமக்காக யுத்தம் செய்கிறார். நமக்காக மரித்த ஆண்டவர் ஆவிக்குரிய பிரகாரம் நம்மை பரலோகத்தில் சேர்த்து விட்டார். ஆனால் முழு மனிதனாக பரலோகத்துக்கு சேரும் காலத்தை நாம் எதிர் நோக்கியிருக்கிறோம். இந்த பரலோகத்தை குறித்து இன்னும் அனேக காரியங்கள் சங்கீதங்களிலேயும், தீர்க்கதரிசன புஸ்தகங்களிலேயும் எழுதப்பட்டிருக்கிறது. அவைகளையும் பரிசுத்த ஆவியானவர் உங்களுக்கு வெளிப்படுத்திக் கொடுப்பாராக. தேவனை சந்திக்க ஆயத்தப்படுவோமாக (ஆமோஸ். 4 : 12). கர்த்தருக்காக கனி கொடுப்போமாக (யோவா. 15 : 2,3). புத்தியில்லாதவர்களைப் போல பரலோகத்தை இழந்து போகாதிருப் போமாக (எபி. 12:16,17). கர்த்தர் நமக்கு மோட்சமருளுவார். ஆமென்.

# பிள்ளைபேற்றினால் இரட்ச்சிக்கப்படுவாள்

## (1 தீமோ. 2:15)

சிறு குழந்தை என்றாலே எல்லாருக்கும் பிடித்தமான காரியம். குழந்தைகள் தேவதூதர்கள் போன்று அழகாகவும், குற்றமற்றதாகவும் இருப்பதால் சிறு பிள்ளைகளோடு கொஞ்சி விளையாடுவது எல்லாருக்கும் பிடித்தமான காரியம். குழந்தை பிறந்த வீட்டில் சந்தோஷமே. கற்பமான தாய் பிள்ளைப்பேறு உண்டாகும் வரைக்கும் துக்ககரமான சூழ்நிலை உண்டாயிருக்கும். பிள்ளை பிறந்தபின் எல்லோருக்கும் சந்தோஷம் உண்டாகும் (யோவா. 16 : 21).

பிள்ளையாகிய இயேசு பிறந்த பின் உலகத்தில் மகா சந்தோஷம் உண்டாயிற்று. நமக்கு ஒரு பாலகன் பிறந்தார், நமக்கு ஒரு குமாரன் கொடுக்கப் பட்டார் (ஏசா. 9:6) என்ற தீர்க்கதரிசனம் நிறைவேறி மிகுந்த சந்தோஷத்தை உண்டாக்கும் நற்செய்தி உண்டாயிற்று (லூக். 2:10). தேவ தூதர்களும் சந்தோஷப்பட்டு மகிழ்ந்தார்கள். குழந்தைப்பேறு ஒரு சந்தோஷ மான காரியம். ஆபிரகாமிற்கும் நீண்ட நாட்களுக்குப்பின் முதிர்வயதில் குழந்தை ஈசாக்கு பிறந்த போது சந்தோஷப்பட்டு ஈசாக்கு பால் மறந்த நாளிலே ஆபிரகாம் பெரிய விருந்து பண்ணினார் (ஆதி. 21:8) ஈசாக்கு பிறந்து வாக்குத்தத்தத்தின் பிள்ளையாக மாறினான் (கலாத். 4: 28) ஆயிரவருட அரசாட்சியிலும் ஒரு சிறு பையன் பெரிய மிருகங்களை வழிநடத்துவான்என்று எழுதப்பட்டி ருக்கிறது (ஏசா. 11 : 6).

ஸ்திரீயாகிய திருச்சபைக்கு (கன்னிகைக்கு) சுகப்பிரசவத்தினால் விடுதலை உண்டாகும் என்று பவுல் அப்போஸ்தலன் தீர்க்கதரிசனமாக எழுதுகிறார். ஏவாள் வஞ்சிக்கப் பட்டாள். அப்படியிருந்தும் தெளிந்த புத்தியோடும், விசுவாசத்திலும், அன்பி

லும், பரிசுத்தத்திலும் நிலைகொண்டிருக்கிற ஸ்தி பிள்ளைப் பேற்றினால் இரட்சிக்கப்படுவாள் (1தீமோ. 2 : 15) ஏவாளைப் போன்று ஆதி சபை வஞ்சிக்கப்பட்டது. ஆவியின் தெளிந்த புத்தியோடும், சகோதர அன்பிலும், பரிசுத்தத்திலும் நிலைகொண்டிருக்கிற கன்னிகையாகிய திருச்சபைக்கு முழுமீட்பு, இரட்சிப்பு, பரமேறுதல், பிள்ளை பேற்றினால் உண்டாகும் என்று தீர்க்கதரிசனமாக அறிவிக்கிறது. கன்னிகை கற்பவதியாகி ஒரு குமாரனைப் பெறுவாள் என்ற தீர்க்கதரிசனம் இயேசுகிறிஸ்துவில் நிறைவேறியது போல கன்னிகையாகிய திருச்சபைக்கு அதிகாரமுள்ள குழந்தையாகிய அப்போஸ்தல பிறப்பு (மருரூபம்) உண்டாக வேண்டும் அதை தொடர்ந்து அதிகார ஆளுகை நடப்பிக்கப்பட்டு சத்துரு தாழ்த்தப்பட வேண்டும்.

கடைசிகாலமாகிய இக்காலத்தில் மக்கள் முழு இரட்சிப்பை அடைந்து சரீரமீட்பாகிய புத்திரசுவிகாரத்தை அடைவதற்கு வழி நடத்துகிற கன்னிகையாகிய திருச்சபை கரை ஏறாதபடி சாத்தான் பிரசவ வேதனையாகிய வருத்தத்தைக் கொடுத்துக் கொண்டிருக் கிறான் (வெளி. 12 :2) . ஆனாலும் என்ன, இது வருத்தமான காரியமல்ல! சந்தோஷமான காரியமே. அடுத்து பிள்ளை பிறக்க இருக்கிறது. (யோவா.16 : 21). "பெறப்பண்ணுகிறவராகிய நான் பெறச்செய்யாமல் இருப்பேனோ என்று கர்த்தர் சொல்லுகிறார் பிரசவிக்கப் பண்ணுகிறவராகிய நான் பிரசவத்தை தடுப்பேனோ என்று உன் தேவன் சொல்லுகிறார்" என்று ஏசாயா. 66 : 9 ல் எழுதப்பட்டிருக்கிறது

சர்வராசிகளையும் சிருஷ்டித்து, பிறப்பித்து அண்டசராசரத்தையும் ஆண்டு வழிநடத்துகிற தேவன் ஸ்திரீயின் பிரசவமாகிய மறுரூபம் நடந்து மனுக்குலத்திற்கு உண்டாகப்போகிற மீட்பைத் தடுப்பாரோ? தடுக்கமாட்டார். சீக்கிரமாக நிறைவேற்றுவார். கடைசி காலத் திருச்சபைக்கு புத்திர பிரசவத்தினாலே மீட்பு உண்டாகும். இந்த மரண சரீரத்திலிருந்து நாம் வல்ல பெரிய காரியங்களை நடப்பிக்கமுடியாது. துரோகி, துரோகம் பண்ணிக்கொண்டு பாழாக்குகிறவன் பாழாக்கிக் கொண்டிருக்கிறான் (ஏசா. 21 : 2). இதற்கு முடிவு நிச்சயமாக உண்டு. அது பிள்ளைப்பேற்றினால் உண்டாகப் போகிறது. சிதறடிக்கிறவன் உன் முகத்துக்கு முன்பாக வருகிறான்; அரணைக் காத்துக்கொள். வழியைக் காவல்பண்ணு. அரையைக் கெட்டியாய்க் கட்டிக்கொள். உன் பெலனை மிகவும் ஸ்திரப்படுத்து (நாகூம். 2 : 1) என்று எழுதப்பட்டிருக்கிறது. நம்முடைய பெலனை மிகவும் ஸ்திரப்படுத்த வேண்டிய காலக்கட்டத்திற்குள் வந்திருக்கிறோம். ஏலாமே எழும்பு, மேதியாவே முற்றிக்கைப்போடு: அதினாலே உண்டான தவிப்பையெல்லாம் ஒழியப்பண்ணுவேன் (ஏசா. 21:2) என்று கர்த்தர் கூறுகிறார். துஷ்டனுடைய காரியத்தினால் உண்டாகிய தவிப்பையெல்லாம் கர்த்தர் ஒழியப்பண்ணப் போகிறார்.

அக்கிரமத்திற்கு முடிவு கட்டக்கூடிய காலம் நெருங்கிவிட்டது. தேவன் தாம் தெரிந்துகொண்ட மனிதரைக் கொண்டு ஜாதிகளையும், இராஜ்யங் களையும், குதிரையையும், குதிரை வீரனையும், இரதத்தையும், இரத

வீரனையும், புருஷனையும், ஸ்திரீயையும், கிழவனையும், இளைஞனையும், வாலிபனையும், கன்னிகையையும், மேய்ப்பனையும், மந்தையையும், உழவனையும், உழவுகளையும், அதிபதிகளையும், அதிகாரிகளையும் நொறுக்குவேன் என்று கூறுகிறார் (எரேமி. 51 : 20-23). இருப்புக்கோலால் ஆளுகை செய்து மண்பாண்டங்களைப் போல ஜாதிகளை நொறுக்கும் காலம் வந்துவிட்டது (வெளி. 2: 26,27).

இருபதாம் நூற்றாண்டின் இறுதி ஆண்டு வந்துவிட்டது. தேவன் நம்மத்தியில் பெரிய காரியங்களை செய்ய பிள்ளைப்பேற்றை நடப்பிக்க எதிர் பார்த்து நிற்போமாக. ஊக்கமாய் ஜெபம் பண்ணுவோமாக.

# வேதபாடம்

*(1 சாமுவேல் 4 : 1 முதல் 1 சாமுவேல் 6 : 21 முடிய)*

பெலிஸ்தருடன் உண்டான யுத்தத்தில் இஸ்ரவேலருக்கு தோல்வியுண்டான உடனே தோல்வியினின்று வெற்றியை கொண்டுவருகிறதற்காக கர்த்தருடைய உடன்படிக்கைப் பெட்டியை ஒரு வசீகர சக்தியை உபயோகிக்கிறது போல் இஸ்ரவேலர்கள் பாவித்தனர். ஆனால் அதை யுத்தம் நடக்கும் இடத்திற்கு கொண்டுபோவதைக்குறித்து தேவனிடம் அவர்கள் விசாரித்துக் கேட்க வில்லை; தங்களுக்குள்ளே பேசிக்கொண்டார்கள். ஆனதால் அதில் வல்லமை இல்லாமற் போயிற்று. அவர்கள் மத்தியில் தேவன் வாசம் செய்வதற்கு உடன்படிக்கைப் பெட்டகம் ஒரு அடையாளமாக இருந்தது. ஆனால் கடவுளைச் சார்ந்திருப்பதே மிகவும் முக்கியமானது; பெட்டியை சார்ந்திருப்பதல்ல. தேவனுக்கு கீழ்ப்படியாமல் மந்திர தந்திரங்களை நம்புகிற மக்கள் இந்நாட்களிலேயுண்டு.

அநேகர் வேதாகமத்தை வாசித்து தங்களுடைய இருதயத்திலே அதை ஏற்றுக்கொண்டு, கீழ்ப்படிந்து அதன்படி செய்ய விரும்பமாட்டார்கள். ஆனால் அது ஒரு வசீகர சக்திபோல் தலையணைக்கு கீழே வைத்து படுத்துக்கொள்வார்கள். திருவசனத்தை உங்கள் இருதயத்தில் பாதுகாத்து அதற்கு கீழ்ப்படிய வேண்டும். அடுத்தபடியாக மரணத்தீர்ப்புக்குட்பட்ட ஒப்னியும், பினெகாசும் உடன்படிக்கைப் பெட்டியின் பக்கத்திலிருந்தார்கள். அவர்கள் யுத்தக்களத்திற்கு வந்தார்கள் என்பது ஒரு நல்ல அறிகுறி அல்ல. தன் குமாரர் அநியாயமாக பலி போஜனங்களை கொண்டுவருகிற மக்களை நடத்துகிறதும் பலியிலுள்ள முக்கியமான பொருட்களை வலுக்கட்டாயமாக எடுத்துக் கொள்வதுமான காரியங்கள் நடந்தபோதிலும், ஆசாரிய ஊழியத்திலிருந்து அந்தக்குமாரர்களை நீக்காதது ஏலியின் பெரிய குற்றமாகும். இப்படியே பெட்டகத்தை யுத்த காலத்திற்கு கொண்டு போனாலும் இவர்கள் தேவனைச் சார்ந்திருக்காததினால், கீழ்ப்படியாததினால், கீழ்ப்படியாத ஆசாரியர் களாயிருந்ததினால் பெட்டகம் பிடிக்கப்பட்டது; இஸ்ரவேலர்கள் தோல்வியடைந்தார்கள், மிகவும் தாழ்த்தப்பட்டார்கள். பெட்டகம் பிடிக்கப்பட்டது ஒப்னி, பினெகாஸ் இருவரும் மரித்தார்கள். இந்த செய்தி ஊரிலே அறிவிக்கப்பட்டது தன்னுடைய குமாரர்கள் மரித்தார்கள் என்கிற செய்தியின்

போதல்ல, பெட்டகம் பிடிக்கப்பட்டதை கேள்விப்பட்டவுடனே ஏலி மல்லாக்க விழுந்தார் அவருடைய சரீரமும் ஸ்தூலித்ததாயிருந்ததினால் பிடரி முறிந்து மரித்துப் போனார் என்று எழுதப்பட்டிருக்கிறது ஏலியிடம் காணப்பட்ட சிறப்பான குணம் இதில் விளங்குகிறது. பாவத்தின் பலாபலன் முழுக் குடும்பத்திற்கும் வந்தது. ஒருவனும் தனக்கென்றே ஜீவிப்பதில்லை. ஒருவனுடைய நன்மையோ தீமையோ பிறனுடைய வாழ்க்கையில் பலன் தரும். பாவமுள்ள ஜனத்தாரை பாதுகாக்க பெட்டகத்தில் மந்திர சக்தி இல்லாதிருந்தபோதிலும், பெட்டகத்தை பெலிஸ்தர் அவமதித்தபோது தேவன் அவர்களைத் தண்டிக்காமல் விடவில்லை. அவர்களைத் தண்டித்தார். அவர்களுடைய தேவனான தாகோன், தேவனுடைய பெட்டிக்கு முன்பாக விழுந்து சிதைந்தது. இந்தத் தாகோனின் கோயிலைத்தான் சிம்சோன் தன்னுடைய அந்திய காலத்தில் கீழேவிழத்தள்ளினார்.

பெட்டகத்தை பிடித்துக்கொண்டு போனதினிமித்தம் பெலிஸ்தரில் பெரிய சாபம் உண்டாயிற்று நோய்கள் உண்டாக ஆரம்பித்தது. மூல வியாதிகளும், மேலும் விளைச்சல்களை சுண்டெலிகள், எலிகள் சூரையாட ஆரம்பித்தது. இதனிமித்தம் அவர்கள் பயந்து, ஆலோசனை பண்ணி கன்றுகளுக்காக கூப்பிட்டுக் கொண்டிருந்த பசுக்களை ஒரு இரதத்தில் கட்டி அந்த இரதத்தில் கர்த்தருடைய பெட்டியையும் அதற்கு அபராதமான பொன் சுருபங்களை வைத்து அனுப்பினார்கள். காணப்படாத ஒரு கரம் தேவனுடைய மெய்யான பிரசன்னத்திற்கு அடையாளமாக பெட்டி செல்லும்படியாக இடத்திற்கு (ஊருக்கு) பசுக்களை நடத்தியது. பெத்சிமேஸ் ஊர்மட்டும் சென்றது ஆனால் பெத்ஷிமேஸ் ஊரார் கர்த்தருடைய பெட்டகத்தை மேன்மையாகப் பாவியாததற்காக தண்டிக்கப்படுகின்றனர். இவ்விதமாக கர்த்தருடைய பெட்டி திரும்ப அனுப்பப்பட்டது.

தேவனுக்கு முன்பாக தாகோன் எம்மாத்திரம். தாகோன் மச்ச அவதாரம் போல பாதிமீனும் பாதி மனிதனுமாக இருந்தது தேவனுடைய பிரசன்னத்திற்கு முன்பாக எந்த சிலையும் எந்த விக்கிரகங்களும் ஒன்றுமில்லை என்பதை இந்த வேதபாகம் நமக்குத் திட்டமாக அறிவிக்கிறது. ஆனபடியினால் தேவனை மகிமைப்படுத்துவோமாக. சிலகாலம் கர்த்தருடைய பெட்டி பெத்ஷிமேசில் இருந்தது. பெத்ஷிமேசின் குடிகள் கீரியாத்யாரீமின் குடிகளுக்கு ஆட்களை அனுப்பி பெலிஸ்தர் கர்த்தருடைய பெட்டியை திரும்ப அனுப்பினார்கள் அதை உங்களிடத்தில் எடுத்துக்கொண்டுபோங்கள் என்று சொல்லச் சொன்னார்கள் என்று நாம் பார்க்கிறோம். கர்த்தருடைய பெட்டி எங்கே இருக்கிறதோ அங்கே பெரிய ஆசீர்வாதமும் மகிமையுமுண்டாகும். ஆனால் அதை சாதாரணமாய் எண்ணினதினிமித்தம் பெத்ஷிமேசின் மனிதர்களுக்கு தீங்கு ஏற்பட்டது நாமும் தெய்வீகக் காரியங்களில் மிகவும் கவனமாக இறைவனுக்குப் பிரியமாய் இறைவனுக்குப் பயந்து நடப்பிப்போமாக. அப்பொழுது பெரும் ஆசீர்வாதம் பெற்றுக்கொள்வோம். வசனத்திற்குக் கீழ்ப்படிவதும் தெய்வீக அதிகாரங்களுக்கு கீழ்ப்படிவதும் அபிஷேக ஊழியத்திற்கு அடங்கியிருப்பதும் மிகவும் முக்கியம். ஊழியர்களாய் இருக்கிறவர்கள் துணிகரமாய் நடந்தால் தேவன் சிட்சிக்காமல் விடார் என்று இதன் மூலமாக நாம் அறிந்து கொள்கிறோம். (தொடரும்)

“தேவனுடைய பெட்டி பிடிபட்டு போனபடியினால், மகிமை இஸ்ரவேலை விட்டு விலகிப்போயிற்று என்றான்“. *(1சாமு. 4 : 22)*

# திரித்துவம் திரியேகத்துவம்

திரித்துவத்தைப் பற்றி விளக்கம் முக்கியமாக கொடுத்தவர்கள் பரிசுத்த அகஸ்டின், தாமஸ் அக்யுனஸ், கால்வின் போன்றவர்கள். அவர்கள் பற்பல விதத்தில் திரித்துவத்தை மக்கள் விளங்கிக்கொள்ளும்படி அறிவித்து விளக்கமாகும்படியாக பல உவமேயங்கள், உவமானங்கள் மூலமாக விளக்கினார்கள் திரித்துவத்தில் மூவரும் முப்பொருள் எனப்படாமல் மூவர் என்ற ஆள் என்றே ஒப்புக்கொள்ளப்படுவர். அதே சமயத்தில் மூன்று பிரிக்கப்பட்ட ஆள் எனக் கருதப்படாமல் ஒரே தன்மை சம்பந்தப்பட்ட மூன்று தனித்துவமென்றே கொள்ளப்பட வேண்டும். இதுவே விசுவாச அறிக்கை. இச் சம்பந்தம் மூலம் பிதா, குமாரன், பரிசுத்தாவி என்ற மூவரும் தம்மில்தாமே தனித்து இயங்குவதும், தனித்து இயங்குவதில் பிரத்தியேகப் பட்டது எனக் கொள்ளாமல் தனித்து இயங்குவதில் ஒரே தன்மையில் சம்பந்தப்பட்டதின் மூலம் திரித்துவமாக இயங்குவதைக் குறிக்கும். இக் குறிப்புகள் ஆள் என்ற சித்தாந்தத்தை விளக்க உபயோகப் படுத்தப்பட்டவை.

திரித்துவத்தை விளக்குவதற்கு உபயோகப்படுத்தப்பட்ட உவமைகளாயிருக்கட்டும், உவமேயங்களாயிருக்கட்டும், வார்த்தைகளாயிருக்கட்டும், அனைத்தும் குறைவுபட்டதே. திரித்துவத்தை பூரணமாக விளக்குவது முடியாத காரியமே. திரித்துவ தேவன் ஆள் என்ற தன்மைக்கு மாறாக ஆளற்ற பொருள் என ஒரு போதும் எண்ணக்கூடாது. திரித்துவ சித்தாந்தமான ஆள் ஒரு உயிரற்ற பொருளின் சம்பந்தத்தைக் கூறாமல் பிதா குமாரன் பரிசுத்தாவி என்று உயிருள்ள அந்நியோன்ய ஒருமைப்பாட்டை அவ் அந்நியோன்யத்தின் மூலம் நமக்கு கிடைத்த 'அப்பா பிதாவே' என்ற சுவிகாரத்தையும் விளக்குகிறது. திரித்துவ சித்தாந்த அனுபவத்தின் படி திரித்துவ சித்தாந்த அனுபவமும், அறிவும், விளக்கமும் விருத்தியும் திருச்சபையில் மாத்திரமே தொடர்ந்து பூரண வெளிப்பாட்டை அடையக்கூடும். இன்று சபை எனப்பட்டது கிறிஸ்துவின் சரீரத்தாலான சபையேயல்லாமல வேறல்ல. கிறிஸ்துவின் சரீரத்தில் ஆன திருச்சபையே திரித்துவ அனுபவத்தாலான 'அப்பா பிதாவே' என்று கூப்பிடப்பண்ணுகிற புத்திர சுவிகாரத்தினால் உண்டான அந்நியோன்யத்தில் கட்டப்பட்ட சபையாகும்.

திருச்சபையைப் பற்றிய சித்தாந்தம் எவ்வளவு அவசியம் என்பது இதன்மூலம் எல்லாரும் உணர்ந்து கொள்ளலாம். கிறிஸ்துவின் சரீரமாகிய திருச்சபையில் அங்கமாயிராதவன் திரித்துவத்தின் மேன்மையை அறியக்கூடாதவன். திருச்சபைக்கு புறம்பே இரட்சிப்பு இல்லையென்ற சுலோகத்தின் கருத்து அதுவே. கால்வின் போன்றவர்கள் வார்த்தை தேவனிடத்திலிருந்தது. வார்த்தை தேவனாயிருந்தது என்று யோவான் கூறுவதை சான்றாகக் கொண்டே பிதாவே உலகம் உண்டாகாததற்கு முன்னே உம்மிடத்தில் எனக்கு உண்டாயிருந்த மகிமையை (யோ

17 :5) எனக் கூறப்பட்டிருப்பதும் அதன் உண்மையை விளக்குமென்றே விளக்கம் கொடுத்தார். கால்வின் வேதச் சான்றுகளைத் தழுவியே தன்னுடைய கோட்பாட்டை விளக்க முயன்றார் அத்தேனே பட்டணத்தின் மேடையில் எழுதப்பட்ட பரிசுத்த பவுலால் கண்டு கொள்ளப்பட்ட வாக்கியமேயாயினும் திரித்துவ சித்தாந்த ஆராய்ச்சியில் கிறிஸ்துவின் மந்தைக்குள் கொண்டுவரப்படாத மக்களின் அனுபவம் அத்தகையதே. கிறிஸ்துவின் வெளிப்பாடு உடையவர்களிலேயே திரித்துவத்தைப் பற்றி ஆராய்வதில் அரியப்படாத தேவன் என்ற வாசகம் உண்மையாயிருக்கு மேயாயின் ஏனைய மக்களில் அவ்வசனம் எவ்வளவு அதிகமாக உண்மையாயிருக்க கூடும். கடவுள் உண்டு என்று ஒப்புக்கொள்ளுகிற ஒரு சாதாரண மனுஷன் முதன் முதலில் உலக சிருஷ்டிப்பையே நோக்க கூடும். உலகின் அமைப்பு அழகு, நோக்கம் இவைகளை ஆராயும்போது உலகத்தை உண்டாக்கின கடவுள் அவ்விதமான ஞானம், அறிவு, பகுத்தறிவும் நோக்கமுடைய ஆள் என்ற தன்மையுடையவராக இருக்க வேண்டு மென அறிந்து கொள்வான். கடவுள் உண்டென கூறுவதற்குரிய சான்றுகளே இங்கு ஆராயப்படுகிறது. எனினும் ஒன்று ஞாபகப்படுத்த வேண்டியது அவசியம். உலக அமைப்பிற்கு பின்னால் காணப்படுவது உலகை அமைத்த கடவுளே ஒன்றுமில்லாமையிலிருந்து சர்வத்தையும் சிருஷ்டித்த ஆண்டவர் 'வெளிச்சம் உண்டாக்கக்கடவது' இது கடவுளின் தீர்மானம் அல்லது விருப்பம் எனப்படும். மனிதனை சிருஷ்டித்த காலத்தில் நாம் என்ற பன்மைப் பதம் உபயோகிக்கப்படுத்தப்பட்டிருப்பதைக் காணலாம். எபிரேய மொழியில் ஏலோகீம் எனப்படும் அது ஒரு வேளை யேகோவாவின் மகத்துவத்தை எடுத்துக்காட்ட உபயோகப்படுத்தப்பட்ட சிறப்புப் பதமாயிருக்கலாம். எனினும் தற்கால மனோதத்துவ சாஸ்திர ஆராய்ச்சி முறையில் திரித்துவ சித்தாந்த ஆராய்ச்சிமுறையும் கடவுள் தன்மையில் மூவர் என்ற உண்மையை எடுத்துக் காட்டக் கூடியவாறு சிருஷ்டிக்க வேண்டு மென்ற முதல் எண்ணம் அல்லது தீர்மானம் இறைவனில் உண்டாயிற்று; அத்தீர்மானத்தை நிறைவேற்றும் தன்மை அதை மக்கள் அறிவிக்கத்தக்கதாக வெளியாக்கும் தன்மையே யாவும், கடவுள் சிருஷ்டிகர் என்ற தொடரில் ஒருங்கே அமையப்பெற்றுள்ளது.

கடவுள் சிற்பி. சிற்பி நோக்கத்தை நிறைவேற்றுபவர் வார்த்தை. சிருஷ்டிப்பின் அவசியத்தின் அடிப்படையாகிய அன்பை வெளிப் படுத்துவதும், சிற்பியாகிய பிதாவையும், நிறைவேற்றுபவராகிய வார்த்தையையும் அன்பெனும் காந்தத்தால் இணைப்பவர் பரிசுத்தாவி. (நீதி. 8 : 30; யோ. 1:3 ; கொலோ. 1 : 16 ; எபி. 1 : 2; ஆதி. 1 : 26, கொலோ. 1 :15 ; 2கொரி. 4 :4 ; பிலி. 2 : 6) ஒரே கடவுள் என்ற சித்தாந்தத்தில் கூட்டு ஒருமைப்பாடு குறிப்பிடப்பட்டது மூவரில் ஒருவர், ஒருவரில் மூவர் என்ற திரித்துவத்தின் ஆள் உபதேசத்திலும், இந்த உயரிய ஒருமைப்பாடு, ஒருமைப்பாட்டில் காணப்படும் தனித்துவ வெளிப்பாடு இயங்குவதை நாம் அறியலாம். இந்த அனுபவம் மனிதரின் சமூக வாழ்க்கையிலும், அரசியல் வாழ்க்கையிலும், சபை வாழ்க்கையிலும் காணப்பட வேண்டும். மனிதரில் தனித்த வாழ்க்கையில் இந்த திரித்துவ அனுபவம்

காணப்பட வேண்டும் (எபேசி 2 : 21,22; 4 : 11-16).

திரித்துவத்தின் ஒருமைப்பாடும் ஐக்கியமும், அன்பும் எவ்விடத்திலும் எல்லாரிடத்திலும் விளங்க வேண்டும். திரித்துவ சித்தாந்தத்தில் கிறிஸ்துவை உலகிற்கு கொடுக்க வேண்டிய நற்செய்தியைப் பெற்றுக்கொள்ளுகிறான். வாழ்க்கையில் இரண்டு முக்கிய அம்சங்கள் உண்டு. ஒன்று கடவுள் மனிதனை தேடுவது. மற்றது மனிதன் கடவுளை நாடுவது. ஒன்று மேலிருந்து உண்டாவது, மற்றது கீழிலிருந்து உண்டாவது. வார்த்தை மாம்சமானார் மேலிருந்து உண்டாவது. இவ்வடிகளில் கடவுள் தம்மையே வெளிப்படுத்து கிறவராகவும், குமாரன் மூலம் வெளிப்படுகிறவராகவும், பரிசுத்தாவியின் மூலம் மக்களுக்கு வெளிப்பாட்டை ஊட்டுகிறவராகவும் அறியலாம். இதிலடங்கியுள்ள அன்பின் பண்பாட்டை கிறிஸ்துவின் நற்செய்தி போதனை மூலம் இன்றும் கடவுள் உலகிற்கு வெளிப்படுத்த சித்தங் கொண்டுள்ளார். சுவிசேஷம் கிறிஸ்து மூலம் அல்லது சுவிசேஷகன் மூலம் கடவுள் தம்மை அறிந்து கொள்ளாத மக்களுக்கு அறியப்படாத தேவனாக அல்ல அறியப்படுகிற தேவனாகத் தம்மை வெளிப்படுத்துகிறார். இதுவே சுவிசேஷ வேலையின் வேத சித்தாந்தம். கடவுள் மனிதனைத் தேடி வந்தது மனிதன் கடவுளை நாடி அடைய வேண்டுமென்பதே. கடவுள் தம்மை வெளிப்படுத்திய பரிசுத்தாவியின் கிரியை எங்ஙனமோ அவ்விதமாகவே மனிதனின் வீழ்ச்சியிலும் மனிதன் பரிசுத்தாவி யானவரால் குமாரன் மூலம் பிதாவினிடத்தில் சேரும் சிலாக்கியம் உண்டாகக்கூடும். திரித்துவ அனுபவம் மேலிருந்து கீழ்வரும், கீழ் இருந்து மேல் வரும் என்று இரு வழிகளிலும் காணப்பட வேண்டியது (1கொரி. 12 : 3, யோ. 14 : 6). சுவிசேஷச் செய்தியின் மூலமாய் ஒருவன் பரிசுத்தாவியினால், கர்த்தராகிய இயேசுவினால் இழுக்கப் பட்டு இயேசுவிடம் இழுக்கப்பட்டு, அவர் மூலம் பிதாவை அடைகிறான்.

திரித்துவமும், சுவிசேஷமும் பிரிக்கப்படாமல் இணைக்கப் பட்டுள்ளது (எபே. 2 : 18). திருச்சபையின் கடமையும் அதுவே. சுவிசேஷத்தின் மூலம் அக்கடவுளின் அன்பை மக்களுக்கு எடுத்துக்காட்ட வேண்டும் காட்டுவது மாத்திரமன்றி அதை பகிர்ந்து கொடுக்க வேண்டும். பின் மக்களின் அன்பையும் சேவையையும் கடவுளுக்கு கொடுக்க வேண்டும். திருச்சபையின் வணக்கம் ஆராதனை இவற்றின் கருத்தும் அதுவே. திரித்துவத்தின் 'அனுப்பப் படுதல்' என்ற ஒரு முக்கிய பதம், அவ்விதமாக திருச்சபையிலும் அனுப்புதல், அனுப்பப் படுதல் என்ற திரித்துவ வெளிப்பாடு காணப்பட வேண்டும். கடவுள் தம்முடைய ஒரே பேரான குமாரனை அனுப்பியதில் கடவுளுக்கு மனிதன் மேலுள்ள அன்பையும், மனிதன் கடவுள் மேல் கொள்ளவேண்டிய அன்பையும் விளங்கப்பண்ணினார்(அப். 10 : 38, ரோ. 5 : 8-10). அவ்வாறே பரிசுத்தாவியையும் அனுப்பினார். கிறிஸ்துவில் வெளிப் பட்ட கடவுளின் அன்பை பரிசுத்தாவியின் மூலமாய் மாத்திரமே நன்கு அறிய முடியும் (ரோ. 5 : 5; கலா. 4 :6). அனுப்புதல் அல்லது அனுப்பப் படுதல் என்பது அக்காலத்தில் நித்தியத்தில் திரித்துவத்திலியங்கிய அதே தன்மை காலவரையறையில் காணப்

படுகிற உலகத்தில் திருச்சபை ஏனைய உலகத்திற்கு சுவிசேஷகரை அனுப்புவதில் தொடர்ந்து பிரத்தியட்சமாகக் காணப் பட்டது. அனுப்புதல் என்ற குறிப்பில் சிந்திக்கிடக்கும் அன்பு கடவுளின் அன்பேயாகும். அது பரிசுத்தாவியின் மூலமே வெளிப்படும். ஆதலின் திருச்சபையின் அனுப்புதலில் அனுப்புகிற பிதாவும் அனுப்பப்படுகிற குமாரனும் பெறப்போகிற பரிசுத்தாவியும் அடங்கி யுள்ளார்கள். அனுப்புதல் என்ற இந்த சுவிசேஷ வார்த்தை திரித்துவத்திற்கும் திருச்சபையின் அனுபவத்திற்கும் உள்ள ஒரு பெரிய தொடர்பைக் காட்டும். இயேசு சுவாமி சீஷரை அனுப்பும்போது பிதா என்னை அனுப்பினது போல நானும் உங்களை அனுப்புகிறேன் என்று சொன்னார் (யோ. 20 :21). ஆகவே திருச்சபை இன்று சுவிஷேச ஊழியம் செய்யவும், மிஷன் ஊழியம் செய்யவும் தனிப்பட்ட ஒன்றாக அதை நிறைவேற் றாமல் திரித்துவ அனுபவத்திற்குள் புத்திரசுவிகாரத்தின் மூலம் பெற்ற அனுபவமுடைய திரித்துவத்தின் பயனாக திரித்துவமாக நிறைவேற்றுகிறது என்பதே உண்மை. (தொடரும்)

"ஒன்றான மெய்த்தேவனாகிய உம்மையும் நீர் அனுப்பினவராகிய இயேசுகிறிஸ்துவையும் அறிவதே நித்திய ஜீவன்" (யோ. 17 : 3).

# சாட்சி

என்னுடைய பெயர் ஜெ. தாமஸ். நான் சி. எஸ். ஐ. குடும்பத்தை சார்ந்தவன். ஒரு நாள் என்னுடைய நண்பர் மூலமாக பள்ளப்பட்டி புதிய எருசலேம் சபைக்கு சென்று ஆராதனையில் கலந்து கொண்டேன். அந்த ஆராதனையில் தேவனுடைய ஆளுகையும், வல்லமையும் மற்றும் பரிசுத்தவான்களின் அன்பும், தேவ பிள்ளைகளின் அரவணைப்பும் கண்டு மெய்யாகவே தேவனுடைய சபை இதுதான் என்று அறிந்து கொண்டேன். அந்த நாட்களில் எனக்கு ஒரு அழகான ஆண்குழந்தையை தேவன் தந்திருந்தார். அந்த குழந்தைக்கு திடீரென்று ஒருநாள் வயிற்றுக்கடுப்பு நோய் அதிகமானது தனியார் மருத்துவமனைக்கு கொண்டு சென்றோம். அங்கு சென்ற இரண்டு நாள் கழித்து இரத்த பேதி, சிறு நீர் கோளாறு, வயிற்று வீக்கம் இதன் காரணமாக கண்களும் திறக்காமல் இருந்தது.

அங்கு 11 நாள் சிகிச்சை செய்து விலை உயர்ந்த மருந்தும் மாத்திரையும் கொடுத்தும் பலன் இல்லை. 12-ம் நாள் குழந்தை மரித்து விட்டதாக டாக்டர் என்னிடம் கூறி வீட்டிற்கு எடுத்துச் செல்லச் சொன்னார். உடனே நான் பெரிய குளம் புதிய எருசலேம் சபைக்கு சென்று பாஸ்டர் பி. இஸ்ரவேல் ஐயாவிடம், டாக்டர் எனக்கு கூறின வார்த்தைகளைச் சொன்னேன். சொல்லி அழுதேன். ஐயா அவர்களும் குழந்தை இருந்த இடத்திற்கு வந்து ஜெபித்தார்கள் வல்லமையுள்ள தேவன் குழந்தைக்கு அற்புத சுகம் தந்தார். குழந்தை அதிகாலையில் எழுந்து உட்கார்ந்து பேச ஆரம்பித்தது. எங்களுக்கு அதிகமான சந்தோஷம் உண்டானது. டாக்டர்கள், நர்சுகள் அங்கு மரித்த குழந்தைக்கு ஜெபம் செய்கிறார்கள் என்று பரியாசம் செய்த அனைவரும் பிரமிக்கும் வகையில் தேவன் அற்புதம் செய்தார். கர்த்தருக்கு ஸ்தோத்திரம்! தேவனுக்கு மகிமையுண் டாவதாக!! (ஜெ. தாமஸ், புதிய எருசலேம் சபை, பெரிய குளம் கிளை)

# விசுவாசம்

'லீஸ்திராவிலே ஒருவன் தன் தாயின் வயிற்றிலிருந்து பிறந்தது முதல் சப்பாணியாயிருந்து ஒருபோதும் நடவாமல், கால்கள் வழங்காதவனாய் உட்கார்ந்து, பவுல் பேசுகிறதைக் கேட்டுக் கொண்டிருந்தான். அவனை பவுல் உற்றுப்பார்த்து, இரட்சிப்புக்கேற்ற விசுவாசம் அவனுக்கு உண்டென்று கண்டான்' அப். 14 : 8,9. இவ்விதமாய், அவனைப் பவுல் உற்றுப்பார்த்து இரட்சிப்புக்கேற்ற விசுவாசம் அவனுக்கு உண்டென்று கண்டு, நீ எழுந்து காலூன்றி நிமிர்ந்து நில் என்று உரத்த சத்தத்தோடே சொன்னான். உடனே அவன் குதித்தெழுந்து நடந்தான் என்று ஒரு அற்புதமான சம்பவம் குறிப்பிடப் பட்டிருக்கிறது. 'இரட்சிப்புக்கேற்ற விசுவாசம் அவனுக்கு உண்டென்று கண்டு' என்பதைக் கவனிக்கவும்.

கிறிஸ்தவ உபதேசங்களில் மிகவும் பிரதானமாய் கூறப்படுவது விசுவாச மாகும். தேவனுடைய வசனத்தைக்கேட்டு மனந்திரும்பி விசுவாசிக்கிற மக்களே இந்த உலகத்திலே தேவனால் ஆசீர்வாதம் பெற்ற மக்கள். அவர்கள் பாக்கிய வான்கள். அவர்கள் மகா விசேஷித் தவர்கள். அவர்கள் பரலோகத் துக்குரியவர்கள், பூமிக்குரியவர்களல்ல. அவர்களை தேவர்கள் என்று வேதத்தில் எழுதியிருக்கிறது. அதற்காகக் கர்த்தரை ஸ்தோத்தரிப்போமாக. இந்த நாட்களில் கிறிஸ்துவைப் பற்றிய உபதேசமானது உலகமெங்கும் பரவி வருகிறது. வெவ்வேறு விதமாக கிறிஸ்து பிரசங்கிக்கப்படுகிறார். அப். 14 : 8,9-ல் கண்டபடி, இந்த உயிருள்ள விசுவாசமானது, மகா பெரிய சக்தியாயிருக்கிறது என்று வேதாகமத்தின் மூலமாகவும், நடைமுறை மூலமாகவும், அனுபவமூலமாகவும் நாம் அறிகிறோம். விசுவாசமானது தேவன் அருளுகிற ஈவாக இருக்கிறது. உலகத்தில் யாருக்கு தேவன் இந்த விசுவாசத்தை அருளுகிறாரோ அவர்களே மிகவும் உயர்ந்த மக்கள், தேவ அனுக்கிரகம் பெற்றவர்கள், அருள் பெற்றவர்கள் என்று நாம் திட்டமாகச் சொல்லமுடியும். எல்லோருக்கும் விசுவாசம் இல்லையே என்றும் இது எல்லோருக்கும் அருளப்படுகிறது அல்ல என்றும் சத்திய வேதாகமம் உறுதிப்படுத்துகிறது.

இந்த விசுவாசமானது என்ன என்று அறிந்து அதை உறுதியாய்ப் பற்றி அதை வளர்க்க வேண்டும்; விசுவாசத்திலே நாம் வல்லவர்களாக வேண்டும் என்று தேவன் விரும்புகிறார். விசுவாசம் என்றால் என்ன என்று நாம் அறிந்து கொள்ளும் போது நாம் இன்னும் அதிகமாக கிறிஸ்தவ ஜீவியத்தில் பலப்படவும் வளரவும் தேவனுக்காக பெரிய காரியங்களை செய்யவும், நிலை நிற்கவும், பூரணப்படவும், கர்த்தருடைய வருகைக்கு ஆயத்தப்படவும் முடியும்

முதலாவது எது விசுவாசமல்ல என்பதை நாம் அறிந்து கொள்ள வேண்டும். தேவன் என்று ஒருவர் உண்டு என்று விசுவாசிக்கிறேன், தேவனை விசுவாசிக்கிறேன், இயேசுகிறிஸ்துவை விசுவாசிக்கிறேன் என்று சொல்வது விசுவாசமல்ல. அந்த விசுவாசப்

பிசாசுகளுக்கும் உண்டு என்று யாக். 2 : 19-ல் வாசிக்கிறோம். பிசாசுகளும் தேவன் உண்டென்று விசுவாசித்து நடுங்குகின்றன. ஆனால் கீழ்ப்படிகிறதில்லை. அப்படியே இறைவனுடைய வார்த்தைக்குக் கீழ்ப் படியாமல் நான் இறைவனை விசுவாசிக்கின்றேன் என்று சொல்வது உண்மையான விசுவாசமல்ல. அடுத்த படியாக, தேவனுக்கு ஊழியம் செய்கிறதோ, அதிசய அற்புதங்களை நடப்பிக்கிறதோ, பெரிய காரியங்களை நடப்பிக்கிறதோ விசுவாசமல்ல. இந்த விசுவாசம் யூதாசுக்கும் உண்டு. ஆண்டவரே உம்முடைய நாமத்தினாலே பிசாசுகளும் எங்களுக்கு கீழ்ப்படிகிறதே என்று சொன்ன சீஷர்களில் அவனும் ஒருவனாய் இருந்தான் (லூக். 10 : 17). அதிசயங்களையும், அற்புதங்களையும் நடப்பித்தான். கர்த்தர் பன்னிரண்டு சீஷர்களையும் வரவழைத்து, வியாதியுள்ளவர்களை சொஸ்தமாக்குங்கள், குஷ்டரோகிகளை சுத்தம் பண்ணுங்கள், மரித்தோரை எழுப்புங்கள், பிசாசுகளைத் துரத்துங்கள் என்று அதிகாரப்படுத்தி அனுப்பினார். அவர்களில் யூதாசும் ஒருவனாய் இருந்தான். ஆனபடியால் அதிசய அற்புதங்களை செய்கிறதினாலே, ஊழியம் செய்கிறதினாலே அவன் விசுவாசமுடையவன் என்று சொல்லிவிட முடியாது. இயேசுவின் நாமத்திற்கே வல்லமையுண்டு. அந்த நாமத்தைச் சொல்லி யார் எதைச் செய்தாலும் அநேக வேளைகளிலே நடக்கலாம், நடக்கும் என்று வேதாகமம் காண்பிக்கிறது. இந்த உலகத்தில் அநேகர் தங்களை ஊழியர்கள், விசுவாசிகள் என்று எண்ணிக்கொண்டிருக்கிறார்கள். அந்த விசுவாசம் யூதாசுக்கும் இருந்தது.

அடுத்தபடியாக விசுவாசித்து பின்னர் இடறிப்போகிறவர்களும், பின்மாறிப்போகிறவர்களும், பாவத்திலே விழுந்தவர்களும் கர்த்தரை விட்டுவிட்டவர்களும் விசுவாசிகளல்ல; 'நீங்கள் முன்னமே அறிந்திருந்தாலும், நான் உங்களுக்கு நினைப்பூட்ட விரும்புகிறது என்னவெனில், கர்த்தர் தமது ஜனத்தை எகிப்து தேசத்திலிருந்து வரப்பண்ணி இரட்சித்து, பின்பு விசுவாசியாதவர்களை அழித்தார்' என்று யூதா 5-ம் வசனத்தில் வாசிக்கிறோம். எனவே விழுந்து போகிறவர்களும், பின்மாறிப்போகிறவர்களும், கீழ்ப்படியாமல் போகிறவர்களும் இரட்சிப்புக்கேற்ற உயிருள்ள விசுவாசத்தை உடையவர்களல்லர் என்று வேதாகமம் நமக்கு அறிவிக்கிறது. ஸ்கேவாவின் மகன்கள், பவுல் பிரசங்கிக்கிற இயேசுவின் நாமத்தினாலே போ பிசாசே என்று பிசாசை விரட்ட முற்பட்ட போது பிசாசு பிடித்தவன் அவர்கள் மீது விழுந்து அடிக்க, வஸ்திரம் கிழிந்து நிர்வாணமாய் அவர்களை விட்டு ஓடிப்போனார்கள் என்று அப். 19 : 13-16ல் வாசிக்கிறோம். இந்நாட்களில் இயேசுவின் நாமத்தைச் சொல்லி ஊழியம் செய்கிறோம் என்று சொல்லும் அநேகர் பிசாசுகளை எதிர்க்க, விரட்ட பயப்படுகிறார்கள். பிசாசும் அதிகாரம் பெற்று தான் வந்து வேலை செய்கிறான். எனவே விரட்டக்கூடாது என்று சொல்லிக் கொண்டு இருக்கிறார்கள் நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் மேல் விசுவாசம் வேண்டும். அவரது நாமத்தின் மேலோ அல்லது ஒரு சில சொற்களை வைத்துக்கொண்டோ, இப்படி தந்திரமான விசுவாசிகளாய், ஊழியர்களாய் நடக்கக்கூடாது.

"தேவனைத் தேடு"
"Seek God"
Regd.No. 040088/84
Postal Regd.No. Tech/47-201/MBI/2000
Tamil Monthly Magazine

யோவான் 2 : 11 - ல் 'இவ்விதமாக இயேசு இந்த முதலாம் அற்புதத்தை கலிலேயாவிலுள்ள கானா ஊரிலே செய்து, தம்முடைய மகிமையை வெளிப்படுத்தினார்; அவருடைய சீஷர்கள் அவரிடத்தில் விசுவாசம் வைத்தார்கள்' என்று வாசிக்கிறோம். யோவான் 2 : 23,24-ல் 'பஸ்கா பண்டிகையிலே அவர் எருசலேமிலிருக்கையில், அவர் செய்த அற்புதங்களை அநேகர் கண்டு, அவருடைய நாமத்தில் விசுவாசம் வைத்தார்கள்'. அவர் நாமத்தின் மேல் விசுவாசம் வைத்தவர்களை கர்த்தர் நம்பவில்லை. நமக்கு கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் மேல் உயிருள்ள விசுவாசம் வேண்டும் என்று இந்த சம்பவங்கள் எல்லாம் நமக்கு வெளிப்படுத்தப்பட்டிருக்கின்றன. உண்மையான சீஷர்கள் இயேசுவின் நாமத்தில் செய்கிற காரியங்களைக் குறித்து நாம் கூறவில்லை. இயேசுவின் நாமத்தின் மேல் விசுவாசம் வைத்துக்கொண்டு நாமம், நாமம் என்று சில மந்திர சொற்கள் போன்று கூறிக்கொண்டு காரியங்களை நடப்பிக்கிறவர்களைக் குறித்து நாம் எச்சரிக்கையாயிருக்க வேண்டும். 'விசுவாசமில்லாமல் தேவனுக்குப் பிரியமாயிருப்பது கூடாத காரியம்' என்று எபி 11 :6-ல் வாசிக்கிறோம். எபிரேயர் 11 : 1-ல் 'விசுவாசமானது நம்பப்படுகிறவைகளின் உறுதியும், காணப்படாதவைகளின் நிச்சயமுமாயிருக்கிறது' என்று எழுதப்பட்டிருக்கிறது. 'விசுவாசம்' என்று கூறப்படுவது மகா பெரிய சக்தி . இ. தேவன் அருளும் ஈவு.

(தொடரு

## அறிவிப்புகள்

முழு இரவு விழிப்பு ஜெபம்
21 (ஜனவ... ...ரி 2000
18 (பிப்ரவரி) ... ...ரி 2000

புதிய எருசலேம் ...யதி பத்திரிக்கை
ஆண்டு சந்தா Rs.30.00
வெளிநாடு ஆண்டு சந்தா Rs.400.00

அனுப்ப வேண்டிய முகவரி
Chief Apostle N.Lazar,
"NEW JERUSALEM CHURCH"
Church Lane, Tilak Nagar,
Darga Cross Road, Sonapur,
Bhandup (W), MUMBAI-400 078

மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா எண்ணைக் குறிப்பிடவும். பழைய சந்தாதாரரா அல்லது புதிய சந்தாதாரரா என்பதையும் குறிப்பிடவும்.

பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதையும் தெளிவாகக் குறிப்பிடவும்.

"புதிய எருசலேம் செய்தி" பத்திரிக். வாங்குவோர் ரூ.30 (முப்பது) சந்தா தொகையுட... தங்கள் விலாசத்தையும் தெளிவாகக் கொ... எழுத்துகளில் (Capital Letters), M.O. ... செய்திக்காக ஒதுக்கப்பட்ட (Space for Communication) பத்திரிகையைப் பெற்றுக் கொள்ளும்படி... கொள்ளப்படுகிறீர்கள்.

Edited, Printed and Published by Chief Apostle N.LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Darga cross rd., Sonapur, Bhandup(W), Mumbai-400 078, India. Phone 91-22-5605515; Fax: 91-22-5681992, e-mail: njc@vsnl.com
Printed at New Jerusalem Press, Tilak Nagar, Bhandup, Mumbai-400 078

# புதிய எருசலேம் செய்தி

**PUTHIYA YERUSALEM CHEIDHI**

எக்காளம் 19; சத்தம்: பிப்ரவரி 2000




"......வீட்டெஜமான் (இயேசுகிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல் கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்...... விழித்திருங்கள்...... உங்களுக்கு சொல்லுகிறதை எல்லோருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்......" மாற்கு 13 : 35-37.

**EDITOR : CHIEF APOSTLE N LAZAR**

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும் அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும் தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும், சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும்படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது. (எபே.4:11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசுகிறிஸ்து எனக்கு தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும் கட்டளைகளும் 7 (அப்1: 1-3)" எனக்கு காண்பித்து, கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள்:

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் மத்28:18; மாற். 16:15.
2. விசுவாசித்து ஏற்றுக்கொள்ளுகிறவர்களை பிதா, குமாரன், பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்- மத். 28:19 (இயேசு மாதிரி (Through Action) செய்து காண்பித்தார்.
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைகொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள் - மத்28:20.
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள் - யோவான். 20: 23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள் - யோவான். 21 : 15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு - அப். 1 :5-8.
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவு கூறும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார் - 1கொரி. 11 : 23 -26

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு(2) என்கின்றனர் வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே அதெப்படி? என்றேன். இயேசுவானவர் பிரதியுத்திரமாக: இல்லை அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும் அதிகாரங்களுமாகும்.இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1:1, 10: 40-43).

## இதழின் உள்ளே

# ஆசிரியர் உரை



தேவன் செய்வதெல்லாம் நிலைக்கும். கர்த்தர் தம்முடைய சித்தத்தை வேகமாய் பூமியில் நிறைவேற்றி வருகிறார். உலகத்திலுள்ள தீய சக்திகளெல்லாம் கூட்டமாய்க் கூடி எழும்பி நிற்கின்றன. பலகைகளை ஒன்றாய் நிறுத்தி வைத்து லேசாக தள்ளிப் பார்த்திருக்கிறீர்களா? அவைகள் ஒரு நிமிஷத்தில் எல்லாம் மொத்தமாய் விழுந்து விடும். அவ்விதமாகவே தேவன் ஒரு நிமிஷத்திலே கீழேதள்ளி சாய்க்கப்போகிறார். நாம் பார்த்து கேள்விப்பட்டு ஆச்சரியப்படும் படியாக சம்பவம் நிகழும். தேவன் தம்முடைய வல்லமையையும், மகிமையையும் காண்பிக்க தம்முடைய பரிசுத்தவான்களை கூட்டி சேர்த்து வருகிறார். பெரிதான வல்லமையோடு கூட தெய்வீக காரியங்கள் நடை பெறும். ஒருவரும் எதிர்நிற்க முடியாத வல்லமை வெளிப்படும். ஏனென்றால் தேவரகசியம் நிறைவேறும் காலமாய் இருக்கிறது என்பதே. தேவனுடைய பிள்ளைகளே, எழும்பி பிரகாசியுங்கள்; தேவனுடைய ஜனங்கள் கூட்டி சேர்க்கப்படுவார்கள். பெருமழையின் இரைச்சல் கேட்கப்படுகிறது. ஜெபிப்போம், கிரியை செய்வோம், ஜெயிப்போம்; ஆசீர்வாதம் உண்டாகும்.

*கிறிஸ்துவுக்குள்,*

*தலைமை அப்போஸ்தலர்.என்.லாசர்*

# பரலோகம்

"என் பிதாவின் வீட்டில் அநேக வாசஸ்தலங்கள் உண்டு; அப்படியில்லாதிருந்தால் நான் உங்களுக்குச் சொல்லியிருப்பேன்; ஒரு ஸ்தலத்தை உங்களுக்காக ஆயத்தம்பண்ணப் போகிறேன்" யோவான். 14 : 2.

நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்து, பரலோகத்தைக் குறித்து இவ்வாறு சொல்லியிருக்கிறார். பரலோகம் என்று ஒரு ஸ்தலம் இருக்கிறது என்றும், அது நாம் வாஞ்சிக்கிற நாடு என்றும், இந்த வசனத்தின் மூலம் அறிகிறோம். மனிதன் நிலையற்றவனாக இருக்கிறான். அவன் ஜீவிய நாட்களும் கொஞ்சமே. மனிதனின் முடிவைப் பற்றிய தெளிவான ஆதாரங்களை வேதம் நமக்கு காண்பிக்கிறது. மனிதனுக்கு ஒரு நியாயத்தீர்ப்பு உண்டென்று வேதாகமம் முடிவாகச் சொல்லுகிறது. 'வாலிபனே! உன் இளமையிலே சந்தோஷப்பட்டு, உன் வாலிப நாட்களிலே உன் இருதயம் உன்னை பூரிப்பாக்கட்டும்; உன் நெஞ்சின் வழிகளிலும், உன் கண்ணின் காட்சிகளிலும் நட; ஆனாலும் இவையெல்லாவற்றினிமித்தமும் தேவன் உன்னை நியாயத்திலே கொண்டு வந்து நிறுத்துவார் என்று அறி" (பிர. 11 : 20). மனிதனின் முடிவைக் குறித்து: "இவ்விதமாய் மண்ணானது தான் முன்னிருந்த பூமிக்குத் திரும்பி, ஆவி தன்னைத் தந்த தேவனிடத்திற்கு மறுபடியும் போகாததற்கு முன்னும், அவரை உன் வாலிபப்பிராயத்திலே நினை' (பிர. 12 : 7) என்று வேதம் கூறுகிறது. 'எல்லாம் மண்ணிலே உண்டாகிறது, எல்லாம் மண்ணுக்குத் திரும்புகிறது' (பிர. 3: 20) அடுத்த வசனத்தில், "உயர ஏறும் மனுஷனுடைய ஆவி" (பிர. 3 : 21) என்று எழுதியிருக்கிறது. நிலையற்ற மனிதன் மரித்தவுடனே, அவன் ஆவி மேலே ஏறிப் போகிறது என்றும் அவன் சரீரம் மண்ணிலே அழிந்து போகிறது என்றும் நாம் வாசிக்கிறோம். இப்படியே பிர. 12 : 13,14-ல் 'காரியத்தின் கடைத்தொகையைக் கேட்போமாக, தேவனுக்குப் பயந்து அவர் கற்பனைகளைக் கைக்கொள்; எல்லா மனுஷர் மேலும் விழுந்த கடமை இதுவே. ஒவ்வொரு கிரியையும், அந்தரங்கமான ஒவ்வொரு காரியத்தையும் நன்மையானாலும், தீமையானாலும் தேவன் நியாயத்திலே கொண்டுவருவார்' என்று எழுதியிருக்கிறது. மோட்சம், நரகம் இந்த இடங்களில் ஏதாவது ஒரு இடத்திற்கு மனிதன் செல்கிறான். நரகம் மனிதனுக்காக அல்ல, சாத்தானுக்காக உருவாக்கப்பட்டது. ஆனால் மனிதன் சாத்தானோடு சேர்ந்து தேவனுக்கு விரோதமாக கிரியை செய்கிறபடியால் அவன் போகிற இடத்திற்கு இவனும் கொண்டுபோகப்படுகிறான். மனிதனுடைய வாழ்க்கை இவ்விதமாக நரகத்துக்குப் போகும் நிலையில் காணப்படுகிறது. அப்படி நரகத்திற்குப் போகாமல், மனிதனை தேவனிடத்திற்கு சேர்க்கும்படியாய் கர்த்தராகிய இயேசு கிறிஸ்து உலகத்திற்கு வந்தார் (1 பேது. 3 :18). பரலோகத்தைப் பற்றி, என் பிதாவின் வீடு என்று இயேசு சொன்னதாக யோ 14 : 2-ல் வாசிக்கிறோம். இந்தப் பரலோகத்தைப் பற்றி சிந்திப்போமாக.

1. பரலோகம் எங்கே உள்ளது?

"அவர் உத்தர மண்டலத்தை வெட்ட வெளியிலே விரித்து, பூமியை அந்தரத்திலே தொங்க வைக்கிறார்" (யோ. 26 : 7). இந்த உத்தர மண்டலம் பூமியின் வட பகுதியில் இருக்கிறது. வானத்தின் (பரலோகத்தின்) வட திசை என்று அறிகிறோம். "நான் வானத்துக்கு ஏறு வேன், தேவனுடைய நட்சத்திரங்களுக்கு மேலாக என் சிங்காசனத்தை உயர்த்து வேன்; வடபுறங்களிலுள்ள ஆராதனை கூட்டத்தின் பர்வதத்திலே வீற்றிருப்பேன் என்றும். நான் மேகங்களுக்கு மேலாக உன்னதங்களில் ஏறுவேன்; உன்னதமான வருக்கு ஒப்பாவேன் என்றும் நீ உன் இருதயத்தில் சொன்னாயே" என்று (ஏசா. 14 : 13,14)ல் சொன்னதாக சாத்தானைப் பற்றி ஒரு குறிப்பைக் காண்கிறோம். எசேக்கி யேல் 28-ம் அதிகாரத்திலேயும் சாத்தா னைக் குறித்து எழுதியிருக்கிறது வான மண்டலத்தில், நட்சத்திரங்களுக்கு மேலாக தேவனுடைய வீடும், ஆராதனை ஸ்தலமுமாகிய பரலோகம் இருப்பதாக அறிகிறோம். எசேக். 1 : 4-ல், அந்த ஜீவன்கள் வடக்கேயிருந்து வந்ததாக வாசிக்கிறோம். வடக்கேயுள்ள உத்தர மண்டலம் வெட்ட வெளியாக இருக்கிறது. வான மண்டலத்தில் எண்ணற்ற நட்சத்திரங்களை தன்னிடத்தே கொண்ட வானமண்டலத்தின் வடபுறம் வெட்ட வெளியாக இருப்பதாக வேதாகமம் கூறுகிறது.

நமக்கு வேண்டிய வெற்றி, ஆசிர்வாதங்கள் எங்கேயிருந்து வருவதாக சங். 75 : 6,7 -ல் கூறப்பட்டிருக்கிறது. 'கிழக்கிலும் மேற்கிலும் வனாந்திர திசையிலுமிருந்து ஜெயம் வராது. தேவனே, நியாயாதிபதி ; ஒருவனை தாழ்த்தி ஒருவனை உயர்த்துகிறார்". கிழக்கிலும் மேற்கிலும் வனாந்திர திசையிலுமிருந்து (தெற்கிலிருந்து) ஜெயம் வராது என்று கூறியிருப்பதால், எஞ்சியுள்ள வட திசையிலிருந்துதான் தேவன் ஜெயத்தைக் கட்டளையிடுகிறார் என்று அறிகிறோம்.

2. பரலோகத்தின் பரிமாணம்:

பரலோகத்திலுள்ள எருசலேம் நகரத்தின் அளவைக்குறித்து நாம் முதலாவது அறிந்தால், பரலோகத்தின் விஸ்தாரத்தைப் பற்றி நாம் ஓரளவு அறிந்து கொள்ள முடியும். "அந்த நகரம் சதுரமாயிருந்தது, அதின் அகலமும் நீளமும் சமமாயிருந்தது. அவன் அந்தக் கோலினால் நகரத்தை அளந்தான்; அது பன்னீராயிரம் ஸ்தாதி (8 ஸ்தாதி 1 மைல்) அளவாயிருந்தது; அதன் நீளமும் அகலமும் உயரமும் சமமாயிருந்தது' (வெளி. 21 : 16). இப்படி பரலோகத்திலுள்ள தங்கப்பட்டணமான எருசலேமின் அகலமும், நீளமும், உயரமும் ஒவ்வொன்றும் 1,500 மைல் இருந்தது

3. யார் பரலோகத்தில் இருப்பார்கள்?

'பின்னும் நான் பார்த்தபோது, சிங்காசனத்தையும், ஜீவன்களையும், மூப்பர்களையும், சூழ்ந்திருந்த அநேக தூதர்களுடைய சத்தத்தைக் கேட்டேன்; அவர்களுடைய இலக்கம் பதினாயிரம் பதினாயிரமாகவும், ஆயிரமாயிரமாகவுமிருந்தது' (வெளி. 5 : 11). 'இவைகளுக்குப் பின்பு நான் பார்த்த

போது, இதோ சகல ஜாதிகளிலும் கோத்திரங்களிலும் ஜனங்களிலும் பாஷைக்காரரிலுமிருந்து வந்ததும், ஒருவனும் எண்ணக்கூடாததுமான திரளான கூட்டமாகிய ஜனங்கள், வெள்ளை அங்கிகளைத் தரித்து, தங்கள் கைகளில் குருத்தோலைகளைப் பிடித்து, சிங்காசனத்திற்கு முன்பாகவும், ஆட்டுக்குட்டியானவருக்கு முன்பாகவும் நிற்கக் கண்டேன்' (வெளி. 7 :9). பரலோகத்தில் பிதாவாகிய தேவன் இருக்கிறார். குமாரனாகிய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து இருக்கிறார். அங்கு நான்கு ஜீவன்கள் இருக்கிறார்கள்; இருபத்திநான்கு மூப்பர்கள் இருக்கிறார்கள். கேருபீன்கள், சேராபீன்கள் என்று கூறப்படுகிற தேவதூதர்களின் தலைமைக் கூட்டங்கள் இருக்கின்றன. ஜாதிகளிலிருந்தும், ஜனங்களிலிருந்தும் மீட்கப்பட்ட கோடானுகோடி மக்கள் இருக்கின்றார்கள். ஏனோக்கும், எலியாவும் அங்கேயிருக்கின்றார்கள். ஏராளமான தூதர் கூட்டங்களும், ஏராளமான பரிசுத்தவான்களும் அங்கே இருக்கிறார்கள் என்று சொல்லி நாம் வாசிக்கிறோம் (எபி. 12 : 22-24). தேவன், தூதர்களையெல்லாம் பெயர் சொல்லி அழைக்கிறார் (யூதா. 9 ; லூக். 1 : 19,26). நமக்கு பாதுகாவல் அளிக்கும் தூதர்களும் உண்டு (அப். 12 : 11,15; மத். 18 : 10). பணிவிடை செய்யும் தூதர்களும் உண்டு (எபி. 1 : 14). கர்த்தருக்குள் மரித்த பரிசுத்தவான்கள் உண்டு (லூக். 9 : 30; லூக். 16 : 23,25). பரலோகத்தில், மரித்த நமக்கு அருமையானவர்களை, தூதர்களை அடையாளம் கண்டு கொள்வோம்.

4. பரலோகத்தில் என்ன பார்ப்போம்?

உன் கண்கள் ராஜாவை மகிமைப் பொருந்தினவராகக் காணும். ஆம், தேவனைக் காண்போம்; தூரத்திலுள்ள தேசத்தையும் பார்ப்போம் (ஏசா. 33 : 17) பரிசுத்தவான்களைக் கண்டு இந்த உலகத்தில் அவர்கள் சாதனைகளையும், இரகசியங்களையும் கேட்டு அறிந்து கொள்ளப் போகிறோம். பரிசுத்தவான்கள் எல்லோரும் இப்போது ஆவியில் நம்மை பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

5. பரலோகத்தில் நாம் என்ன செய்யப் போகிறோம்?

தேவனைப்பாடி மகிமைப் படுத்தப் போகிறோம் (வெளி. 5 : 8-10). தேவனைப் பாடி மகிமைப் படுத்த இங்கேயே நாம் அதிகமாக பிரயாசப்படவேண்டும். பரலோகத்தில் பாடப்படும் சில பாடல்கள் முதற்பலன்களைத் தவிர மற்றவர்கள் பாடமுடியாதவைகளாக இருக்கிறது. பரலோகத்தில் மோசேயின் பாட்டையும் (யாத் 15-ம் அதிகாரம்; உபா. 32-ம் அதிகாரம்) ஆட்டுக்குட்டியானவரின் பாட்டையும், இயேசுவானவர் இப்பூமியில் இருந்தபோது பாடிய பாட்டுகளையும் பாடினதாக வெளி. 15 : 2,3-ல் எழுதப்பட்டிருக்கிறது. அங்கே நமக்கு நித்திய பேரின்பம் உண்டு (சங். 16 : 11). மனிதனின் சகல நல் வாஞ்சைகளும் பரலோகத்தில் நிறைவடையப் போகிறது அங்கே நாம் ஜீவ விருட்சத்தின் கனியைப் புசிப்போம் (வெளி. 2 : 7 ; வெளி. 22 : 2) ஜீவத் தண்ணீரைக் குடிப்போம் (வெளி 22 : 1). அங்கே தேவ அன்பில் களிகூர்ந்திருப்போம் (வெளி. 21 : 3-5) அங்கே தேவ தூதரைப் போலிருப்போம் (மாற். 12 : 25). அங்கே இளைப்பாறுதல் அடைவோம். சாபம் இருக்காது (வெளி

22 : 3,4). நமது நற்கிரியைகள் நம்மோடு கூட பரலோகத்திற்கு வரும் (வெளி. 14 : 13). அங்கே நாம் ஆவிக்குரிய திட சரீரத்துடன், மகிமை அடைந்த சரீரத்துடன் செல்வோம் (லூக். 24 : 39,43)

6. பரலோகத்தில் யார் இருக்க மாட்டார்கள்?

மனந்திரும்பி இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து ஏற்றுக்கொள்ளாதவர்கள் அங்கே இருக்க மாட்டார்கள் (யோவா. 3 : 3,5 ; யோவா. 8 : 21). அங்கே பாவம் செய்கிறவர்கள் இருக்க மாட்டார்கள் (வெளி. 21 : 8; 22 : 15). "அநியாயக்காரர் தேவனுடைய ராஜ்யத்தைச் சுதந்தரிப்ப தில்லையென்று அறியீர்களா? வஞ்சிக்கப் படாதிருங்கள்; வேசிமார்க்கத்தாரும், விக்கிரகாராதனைக்காரரும், விபச்சாரக்காரரும், சுயபுணர்ச்சிக்காரரும், ஆண்புணர்ச்சிக்காரரும், திருடரும், பொருளாசைக்காரரும், வெறியரும், உதாசினரும், கொள்ளைக்காரரும் தேவனுடைய ராஜ்யத்தைச் சுதந்த ரிப்பதில்லை" (I கொரி. 6 : 9,10). விபச்சாரக் காரனாவது, அசுத்தனாவது, விக்கிரகாராதனைக்காரனாகிய பொருளாசைக்காரனாவது தேவனுடைய ராஜ்ஜியமாகிய கிறிஸ்துவின் ராஜ்ஜி யத்திலே சுதந்திரமடைவதில்லை யென்று அறிந்திருக்கிறீர்களே (எபே. 5 : 5).

7. பரலோகத்தில் எவ்வளவு காலம் இருக்கப் போகிறோம்?

நாம் சதாகாலமும் அங்கு ஜீவிக்கப் போகிறோம் (எபி. 13 : 14). அது பிரமாண்டமான நகரம் மேலும் காணப்படுகிறவைகளையல்ல காணப்படாதவைகளை நோக்கியிருக்கிற நமக்கு, அதி சீக்கிரத்தில் நீங்கும் இலேசான நம்முடைய உபத்திரவம் மிகவும் அதிகமான நித்திய கனமகிமையை உண்டாக்குகிறது. ஏனெனில், காணப்படுகிறவைகள் அநித்தியமானவைகள், காணப்படாதவைகளோ நித்தியமானவைகள் (IIகொரி. 4 : 17,18).

8. பரலோகத்திற்கு எப்படி போக முடியும்?

நாம் அனுதினமும் பரிசுத்தமடைய வேண்டும்; பரிசுத்தத்திலே வளரவேண்டும். 'நீதியுள்ளவன் இன்னும் நீதி செய்யட்டும்; பரிசுத்தமுள்ளவன் இன்னும் பரிசுத்தமாகட்டும்; இதோ, சீக்கிரமாய் வருகிறேன்; அவனவனுடைய கிரியைகளின் படி அவனவனுக்கு நான் அளிக்கும் பலன் என்னோடு கூட வருகிறது' (வெளி. 22 : 11,12). பரலோகம் என்பது ஒரு நிலையைக் குறிப்பிடுவது அல்ல, அது ஒரு இடம்; அங்கே இராக்காலமிருக்காது; தேவனாகிய கர்த்தரே அங்கே விளக்கும் வெளிச்சமுமாயிருப்பார் (வெளி. 22 : 3,5) இந்த பரலோகத்திற்குப் போக நாம் தீவிரமாக முயற்சி செய்ய வேண்டும். இரட்சிக்கப்பட வேண்டியது முக்கியம். பரிசுத்தமாகுதல் தொடர்ந்து நடைபெறுகிற காரியம்; அதற்காகவே நாம் கூடி வருகிறோம், உபதேசம் கேட்கிறோம், ஜெபம் பண்ணுகிறோம், கீழ்ப்படிகிறோம். நமது முயற்சியில் வெற்றி பெறாதபடிக்கு, சாத்தான் பாவ சோதனைகளைக் கொண்டு வந்து பாவம் செய்யத் தூண்டுவான். பாவம் செய்தவுடன் எதிராளியாக மாறி நம்மேல் குற்றம் சுமத்தி தன்னுடைய வித்து நமக்குள் வந்து

விட்டதென்றும் தன்னுடனேயே வந்து விடும்படியும் அழைப்பான். இதைக் குறித்து கர்த்தராகிய இயேசு சொல்வது: "எதிராளி உன்னை நியாயாதிபதியினிடத்தில் ஒப்புக்கொடாமலும், நியாயாதிபதி உன்னைச் சேவகனிடத்தில் ஒப்புக் கொடாமலும், நீ சிறைச்சாலையில் வைக்கப்படாமலும் இருக்கும்படியாக, நீ உன் எதிராளியோடு வழியில் இருக்கும் போதே சீக்கிரமாய் அவனுடனே நல் மனம் பொருந்து. பொருந்தாவிட்டால், நீ ஒரு காசும் குறைவின்றிக் கொடுத்துத் தீர்க்குமட்டும் அவ்விடத்திலிருந்து புறப்படமாட்டாய் என்று, மெய்யாகவே உனக்குச் சொல்லுகிறேன்" (மத். 5 : 25,26). நாம் நம்மைத் தாழ்த்த வேண்டும்; நம் எதிராளியுடனே வழியில் சமாதானமாகி விடவேண்டும். எதிராளி சாத்தான் நியாயாதிபதி கர்த்தராகிய இயேசுகிறிஸ்து. சாத்தான் குற்றம் சாட்டும் போது நமது பெருமையினால், வாக்குவாதம் பண்ணிக்கொண்டிராமல் நம்மைத் தாழ்த்தி குற்றத்தை ஒப்புக்கொண்டு, நியாயாதிபதியாகிய இயேசு தம்முடைய இரத்தத்தினால் என்னுடைய பாவத்தை சுத்திகரிப்பார், என்று சொல்லவேண்டும்; மனந்திரும்ப வேண்டும். நியாயாதிபதியினிடத்தில் கெஞ்சி பாவத்திற்கு மன்னிப்பைப் பெற்றுக்கொள்ள வேண்டும். பாவத்தை அறிக்கை செய்து மன்னிப்பு பெற்றுக்கொள்ள வேண்டும்.

பிசாசை எதிர்க்கும் வழி:

"தேவனுக்கு கீழ்ப்படிந்திருங்கள்; பிசாசுக்கு எதிர்த்து நில்லுங்கள் அப்பொழுது அவன் உங்களை விட்டு ஓடிப்போவான்" (யாக். 4 : 7). தேவன் பெருமையுள்ளவர்களுக்கு எதிர்த்து நிற்கிறார், தாழ்மையுள்ளவர்களுக்கோ கிருபை அளிக்கிறார் (யாக். 4 : 6). எனவே மனந்திரும்புவதும் தன்னைத் தாழ்த்தி பாவ அறிக்கை செய்து சுத்திகரிப்பை பெற்றுக்கொள்வதும் தொடர்ந்து பரலோகத்தை நோக்கி இந்த தெய்வீக வாழ்க்கையில் நடக்க முன்னேறிக் கொண்டே இருக்க வேண்டும். எனவே தைரியமாய் சாத்தானுக்கு விரோதமாக போராட வேண்டும் (எபி. 10 : 34,35). பூரணமடைய, கிறிஸ்துவைப் போல் ஜீவிக்க முயல வேண்டும். ஆனால் கிறிஸ்து மட்டும் தான் கிறிஸ்துவைப் போல ஜீவிக்க முடியும். நாம் கிறிஸ்துவை உள்ளத்தில் ஏற்றுக் கொண்டு, அவர் நம்மை ஆளுகை செய்யும் படிக்கு, அவர் நம்மிலிருந்து வெளிப்படும்படிக்கு ஒப்புக்கொடுப்பதே கிறிஸ்தவ வாழ்க்கை. அப்போது அவர் நம்மிலிருந்து, தம்முடைய வாழ்க்கையை வாழுவார். நாம் கிறிஸ்துவாகிய செடியுடன் ஐக்கியமாயிருக்கும்போது, தானாக செடியின் பலன் நம்மிலிருந்து வெளிப்படும், கிறிஸ்து வெளிப்படுவார்.

தேவன் தம்மில் அன்புகூறுகிறவர்களுக்கு ஆயத்தம் பண்ணினவைகளைக் கண் காணவில்லை, காது கேட்கவுமில்லை, அவைகள் மனுஷனுடைய இருதயத்தில் தோன்றவுமில்லை (1கொரி. 2 ; 9). இரண்டாயிரம் ஆண்டுகளாக கிறிஸ்து நமக்காக ஒரு நகரத்தை பொன்னினாலும் இரத்தினங்களாலும் கட்டிக் கொண்டிருக்கிறார். ஆதிகால பரிசுத்தவான்களும் இந்த தங்கப் பட்டணத்தைத் தான் ஆவியிலே கண்டு அதற்காகக் காத்திருந்தார்கள். தேவன் அவர்களை வெட்கப்படவிடவில்லை. அவர்களுக்கு அந்த நகரத்தை ஆயத்தம் பண்ணியிருக்கிறார்

(எபி. 11 : 16,10). ஸ்திரிகளும், மேன்மையான உயிர்த்தெழுதலைப் பெற்றுக் கொள்ளும்படி தங்களையும், தங்களுடைய வர்களையும் சாகக் கொடுத்தார்கள் (எபி. 11 : 35). பரலோகத்தைப் பற்றி கொஞ்சமாவது அறிந்தவர்கள் தான் தங்களுடைய தெல்லாவற்றையும் விற்று தேவனை உறுதியாய் பற்றிக் கொள்கிறார்கள் (மத். 13 : 44-46). பரலோகத்தில் தேவன் நமக்காக ஆயத்தம் பண்ணியவைகளை நாம் ஒப்பிட்டுப் பார்த்தால் அதற்காக நாம் செய்யும் தியாகங்களெல்லாம் மிகவும் சொற்பமே. கர்த்தராகிய இயேசு கிறிஸ்து பரலோகத்தை குறித்து நமக்கு அறிவித்தார். அங்கே நம்மை சேர்க்கும்படி இந்த உலகத்திற்கு வந்து மரித்தார். "நான் மறுபடியும் வந்து உங்களை என்னிடத்தில் சேர்த்துக் கொள்ளுவேன்" (யோ. 14 : 3) என்று கிறிஸ்து கூறியிருக்கிறார்.

மனிதன் நித்தியமாய் இந்த உலகத்தில் இருக்கப்போவதில்லை. மரித்தவுடன் மோட்சத்துக்கோ, நரகத்துக்கோ கொண்டுப் போகப் படுகிறான். அவன் சரீரம் மண்ணுக்குத் திரும்புகிறது; அவனது ஆவி தேவனிடம் கடந்து செல்லும். தேவன் நியாயந் தீர்த்து அதை பரதீசுக்கோ அல்லது பாதாளத்துக்கோ அனுப்பி வைக்கிறார். ஒரு நாள் சரீரத்தையும் சேர்த்து இறுதி நியாயத்தீர்ப்பு அளித்து மோட்சத்துக்கோ, நரகத்துக்கோ அனுப்பி வைக்கிறார். பாதாளம் என்பது நரகத்தின் முன் அனுபவம்; பரதீஸ் மோட்சத்தின் முன் அனுபவமாகும். கிறிஸ்துவுக்குள் மரித்தவர்கள் பரதீசில் இளைப்பாறு கிறார்கள். நாம் பாவிகளாயிருந்த போது நமக்காகத் தம்மை ஒப்புக்கொடுத்த கர்த்தராகிய இயேசுகிறிஸ்து நம்மைப் பரிபூரணப்படுத்துவார்; பரிபூரணப் படுத்திக்கொண்டே இருக்கிறார்.

நம்முடைய சிந்தனைகளிலும் எல்லா பழக்கவழக்கங்களிலும் கிறிஸ்து வந்து ஆளுகை செய்யும்படி ஒப்புக்கொடுக்க வேண்டும். தொடர்ந்து பாவம் செய்கிறவர்கள் பிசாசின் ஆளுகைக்கு உட்படுகிறார்கள். கிருபைக்காக ஜெபிக்க வேண்டும். தவறு ஏற்பட்டால் உடனே தங்களைத் தாழ்த்தி, தாழ்மையைக் கடைப்பிடிக்க வேண்டும்; மன்னிப்புக் கேட்க வேண்டும்; மனப்பூர்வமாக மன்னிப்புக் கொடுக்க வேண்டும் (IIகொரி. 2 : 10,11). தேவனை அறிகிற அறிவுக்கு விரோதமாக எழும்புகிற எல்லா எண்ணங்களையும், மேட்டிமைகளையும் கீழ்ப்படுத்த வேண்டும் (IIகொரி. 10 : 3-5). சாத்தானுக்கு இடங்கொடுக்க கூடாது. தேவன் ஆதாமுக்கு, "நீ மண்ணாயிருக்கிறாய்; மண்ணுக்குத் திரும்புவாய்" என சாபமிட்டார். அப்படியே சர்ப்பத்திடம்: 'மண்ணைத் தின்பாய்' என்று சாபம் கூறினார். மண் என்பது மாம்ச சுபாவமாகும். மனிதனிடம் காணப்படும் மாம்ச சுபாவம் சாத்தானுக்கு ஆகாரமாகும். மாம்ச சுபாவம் காணப்படும்போதெல்லாம் மண்ணை, மாம்ச சுபாவத்தை தேடித்திரிகிற சாத்தான் சாப்பிட வந்து விடுகிறான்.

இந்த மோட்சப்பிரயாணத்தில் நமக்கு இடையூறுகள், வீழ்ச்சிகள், ஆபத்துக்கள், சத்துருவின் தாக்குதல்கள் உண்டானாலும் கர்த்தர் நம்மை பரலோகத்தில் கொண்டு சேர்ப்பார். அவர் தேவனுடைய வலது பாரிசத்தில் உட்கார்ந்திருக்கிறார். "நீர் எனக்குத் தந்த என்னுடைய மகிமையை நீர் எனக்குத் தந்தவர்கள் காணும்படியாக, நான் எங்கே

இருக்கிறேனோ அங்கே அவர்களும் என்னோடு கூட இருக்க விரும்புகிறேன்' (யோ. 17 : 24) என்று ஜெபம் பண்ணியிருக்கிறார். பிதாவாகிய தேவன் அவர் ஜெபத்தை நிறைவேற்றுவார். பரிசுத்த ஆவியானவர் நமக்காக யுத்தம் செய்கிறார். நமக்காக மரித்த ஆண்டவர் ஆவிக்குரிய பிரகாரம் நம்மை பரலோகத்தில் சேர்த்து விட்டார். ஆனால் முழு மனிதனாக பரலோகத்துக்கு சேரும் காலத்தை நாம் எதிர் நோக்கியிருக்கிறோம். இந்த பரலோகத்தை குறித்து இன்னும் அனேக காரியங்கள் சங்கீதங்களிலேயும், தீர்க்கதரிசன புஸ்தகங்களிலேயும் எழுதப்பட்டிருக்கிறது. அவைகளையும் பரிசுத்த ஆவியானவர் உங்களுக்கு வெளிப்படுத்திக் கொடுப்பாராக. தேவனை சந்திக்க ஆயத்தப்படுவோமாக (ஆமோஸ். 4 : 12). கர்த்தருக்காக கனி கொடுப்போமாக (யோவா. 15 : 2,3). புத்தியில்லாதவர்களைப் போல பரலோகத்தை இழந்து போகாதிருப்போமாக (எபி. 12:16,17). கர்த்தர் நமக்கு மோட்சமருளுவார். ஆமென்.

# பிள்ளைபேற்றினால் இரட்ச்சிக்கப்படுவாள்
## (1 தீமோ. 2:15)

சிறு குழந்தை என்றாலே எல்லாருக்கும் பிடித்தமான காரியம். குழந்தைகள் தேவதூதர்கள் போன்று அழகாகவும், குற்றமற்றதாகவும் இருப்பதால் சிறு பிள்ளைகளோடு கொஞ்சி விளையாடுவது எல்லாருக்கும் பிடித்தமான காரியம். குழந்தை பிறந்த வீட்டில் சந்தோஷமே. கற்பமான தாய் பிள்ளைப்பேறு உண்டாகும் வரைக்கும் துக்ககரமான சூழ்நிலை உண்டாயிருக்கும். பிள்ளை பிறந்தபின் எல்லோருக்கும் சந்தோஷம் உண்டாகும் (யோவா. 16 : 21)

பிள்ளையாகிய இயேசு பிறந்த பின் உலகத்தில் மகா சந்தோஷம் உண்டாயிற்று. நமக்கு ஒரு பாலகன் பிறந்தார், நமக்கு ஒரு குமாரன் கொடுக்கப்பட்டார் (ஏசா. 9:6) என்ற தீர்க்கதரிசனம் நிறைவேறி மிகுந்த சந்தோஷத்தை உண்டாக்கும் நற்செய்தி உண்டாயிற்று (லூக். 2:10). தேவ தூதர்களும் சந்தோஷப்பட்டு மகிழ்ந்தார்கள். குழந்தைப்பேறு ஒரு சந்தோஷ மான காரியம். ஆபிரகாமிற்கும் நீண்ட நாட்களுக்குப்பின் முதிர்வயதில் குழந்தை ஈசாக்கு பிறந்த போது சந்தோஷப்பட்டு ஈசாக்கு பால் மறந்த நாளிலே ஆபிரகாம் பெரிய விருந்து பண்ணினார் (ஆதி. 21:8) ஈசாக்கு பிறந்து வாக்குத்தத்தத்தின் பிள்ளையாக மாறினான் (கலாத். 4: 28) ஆயிரவருட அரசாட்சியிலும் ஒரு சிறு பையன் பெரிய மிருகங்களை வழிநடத்துவான்என்று எழுதப்பட்டிருக்கிறது (ஏசா. 11 : 6).

ஸ்திரீயாகிய திருச்சபைக்கு (கன்னிகைக்கு) சுகப்பிரசவத்தினால் விடுதலை உண்டாகும் என்று பவுல் அப்போஸ்தலன் தீர்க்கதரிசனமாக எழுதுகிறார். ஏவாள் வஞ்சிக்கப்பட்டாள். அப்படியிருந்தும் தெளிந்த புத்தியோடும், விசுவாசத்திலும், அன்பி

லும், பரிசுத்தத்திலும் நிலைகொண்டிருக்கிற ஸ்தி பிள்ளைப் பேற்றினால் இரட்சிக்கப்படுவாள் (1தீமோ. 2 : 15) ஏவாளைப் போன்று ஆதி சபை வஞ்சிக்கப்பட்டது. ஆவியின் தெளிந்த புத்தியோடும், சகோதர அன்பிலும், பரிசுத்தத்திலும் நிலைகொண்டிருக்கிற கன்னிகையாகிய திருச்சபைக்கு முழுமீட்பு, இரட்சிப்பு, பரமேறுதல், பிள்ளை பேற்றினால் உண்டாகும் என்று தீர்க்கதரிசனமாக அறிவிக்கிறது. கன்னிகை கற்பவதியாகி ஒரு குமாரனைப் பெறுவாள் என்ற தீர்க்கதரிசனம் இயேசுகிறிஸ்துவில் நிறைவேறியது போல கன்னிகையாகிய திருச்சபைக்கு அதிகாரமுள்ள குழந்தையாகிய அப்போஸ்தல பிறப்பு (மருரூபம்) உண்டாக வேண்டும். அதை தொடர்ந்து அதிகார ஆளுகை நடப்பிக்கப்பட்டு சத்துரு தாழ்த்தப்பட வேண்டும்.

கடைசிகாலமாகிய இக்காலத்தில் மக்கள் முழு இரட்சிப்பை அடைந்து சரீரமீட்பாகிய புத்திரசுவிகாரத்தை அடைவதற்கு வழி நடத்துகிற கன்னிகையாகிய திருச்சபை கரை ஏறாதபடி சாத்தான் பிரசவ வேதனையாகிய வருத்தத்தைக் கொடுத்துக் கொண்டிருக் கிறான் (வெளி. 12 :2) . ஆனாலும் என்ன, இது வருத்தமான காரியமல்ல! சந்தோஷமான காரியமே. அடுத்து பிள்ளை பிறக்க இருக்கிறது. (யோவா. 16 : 21). "பெறப்பண்ணுகிறவராகிய நான் பெறச்செய்யாமல் இருப்பேனோ என்று கர்த்தர் சொல்லுகிறார் பிரசவிக்கப் பண்ணுகிறவராகிய நான் பிரசவத்தை தடுப்பேனோ என்று உன் தேவன் சொல்லுகிறார்" என்று ஏசாயா. 66 : 9 ல் எழுதப்பட்டிருக்கிறது.

சர்வராசிகளையும் சிருஷ்டித்து, பிறப்பித்து அண்டசராசரத்தையும் ஆண்டு வழிநடத்துகிற தேவன் ஸ்திரீயின் பிரசவமாகிய மறுரூபம் நடந்து மனுக்குலத்திற்கு உண்டாகப்போகிற மீட்பைத் தடுப்பாரோ? தடுக்கமாட்டார் சீக்கிரமாக நிறைவேற்றுவார். கடைசி காலத் திருச்சபைக்கு புத்திர பிரசவத்தினாலே மீட்பு உண்டாகும் இந்த மரண சரீரத்திலிருந்து நாம் வல்ல பெரிய காரியங்களை நடப்பிக்கமுடியாது. துரோகி, துரோகம் பண்ணிக்கொண்டு பாழாக்குகிறவன் பாழாக்கிக் கொண்டிருக்கிறான் (ஏசா. 21 : 2). இதற்கு முடிவு நிச்சயமாக உண்டு. அது பிள்ளைப்பேற்றினால் உண்டாகப் போகிறது. சிதறடிக்கிறவன் உன் முகத்துக்கு முன்பாக வருகிறான்; அரணைக் காத்துக்கொள். வழியைக் காவல்பண்ணு. அரையைக் கெட்டியாய்க் கட்டிக்கொள். உன் பெலனை மிகவும் ஸ்திரப்படுத்து (நாகூம். 2 : 1) என்று எழுதப்பட்டிருக்கிறது. நம்முடைய பெலனை மிகவும் ஸ்திரப்படுத்த வேண்டிய காலக்கட்டத்திற்குள் வந்திருக்கிறோம். ஏலாமே எழும்பு, மேதியாவே முற்றிக்கைப்போடு: அதினாலே உண்டான தவிப்பையெல்லாம் ஒழியப்பண்ணுவேன் (ஏசா. 21:2) என்று கர்த்தர் கூறுகிறார் துஷ்டனுடைய காரியத்தினால் உண்டாகிய தவிப்பையெல்லாம் கர்த்தர் ஒழியப்பண்ணப் போகிறார்

அக்கிரமத்திற்கு முடிவு கட்டக்கூடிய காலம் நெருங்கிவிட்டது தேவன் தாம் தெரிந்துகொண்ட மனிதரைக் கொண்டு ஜாதிகளையும், இராஜ்யங் களையும், குதிரையையும், குதிரை வீரனையும், இரதத்தையும், இரத

வீரனையும், புருஷனையும், ஸ்திரீயையும், கிழவனையும், இளைஞனையும், வாலிபனையும், கன்னிகையையும், மேய்ப்பனையும், மந்தையையும், உழவனையும், உழவுகளையும், அதிபதிகளையும், அதிகாரிகளையும் நொறுக்குவேன் என்று கூறுகிறார் (எரேமி. 51 : 20-23). இருப்புக்கோலால் ஆளுகை செய்து மண்பாண்டங்களைப் போல ஜாதிகளை நொறுக்கும் காலம் வந்துவிட்டது (வெளி. 2: 26,27).

இருபதாம் நூற்றாண்டின் இறுதி ஆண்டு வந்துவிட்டது. தேவன் நம்மத்தியில் பெரிய காரியங்களை செய்ய பிள்ளைப்பேற்றை நடப்பிக்க எதிர் பார்த்து நிற்போமாக. ஊக்கமாய் ஜெபம் பண்ணுவோமாக.

# வேதபாடம்

*(1 சாமுவேல் 4 : 1 முதல் 1 சாமுவேல் 6 : 21 முடிய)*

பெலிஸ்தருடன் உண்டான யுத்தத்தில் இஸ்ரவேலருக்கு தோல்வியுண்டான உடனே தோல்வியினின்று வெற்றியை கொண்டுவருகிறதற்காக கர்த்தருடைய உடன்படிக்கைப் பெட்டியை ஒரு வசிகர சக்தியை உபயோகிக்கிறது போல் இஸ்ரவேலர்கள் பாவித்தனர். ஆனால் அதை யுத்தம் நடக்கும் இடத்திற்கு கொண்டுபோவதைக்குறித்து தேவனிடம் அவர்கள் விசாரித்துக் கேட்க வில்லை; தங்களுக்குள்ளே பேசிக்கொண்டார்கள். ஆனதால் அதில் வல்லமை இல்லாமற் போயிற்று. அவர்கள் மத்தியில் தேவன் வாசம் செய்வதற்கு உடன்படிக்கைப் பெட்டகம் ஒரு அடையாளமாக இருந்தது. ஆனால் கடவுளைச் சார்ந்திருப்பதே மிகவும் முக்கியமானது; பெட்டியை சார்ந்திருப்பதல்ல. தேவனுக்கு கீழ்ப்படியாமல் மந்திர தந்திரங்களை நம்புகிற மக்கள் இந்நாட்களிலேயுண்டு.

அநேகர் வேதாகமத்தை வாசித்து தங்களுடைய இருதயத்திலே அதை ஏற்றுக்கொண்டு, கீழ்ப்படிந்து அதன்படி செய்ய விரும்பமாட்டார்கள். ஆனால் அது ஒரு வசிகர சக்திபோல் தலையணைக்கு கீழே வைத்து படுத்துக்கொள்வார்கள். திருவசனத்தை உங்கள் இருதயத்தில் பாதுகாத்து அதற்கு கீழ்ப்படிய வேண்டும். அடுத்தபடியாக மரணத்தீர்ப்புக்குட்பட்ட ஒப்னியும், பினெகாசும் உடன்படிக்கைப் பெட்டியின் பக்கத்திலிருந்தார்கள் அவர்கள் யுத்தக்களத்திற்கு வந்தார்கள் என்பது ஒரு நல்ல அறிகுறி அல்ல. தன் குமாரர் அநியாயமாக பலி போஜனங்களை கொண்டுவருகிற மக்களை நடத்துகிறதும் பலியிலுள்ள முக்கியமான பொருட்களை வலுக்கட்டாயமாக எடுத்துக் கொள்வதுமான காரியங்கள் நடந்தபோதிலும், ஆசாரிய ஊழியத்திலிருந்து அந்தக்குமாரர்களை நீக்காதது ஏலியின் பெரிய குற்றமாகும். இப்படியே பெட்டகத்தை யுத்த காலத்திற்கு கொண்டு போனாலும் இவர்கள் தேவனைச் சார்ந்திருக்காததினால், கீழ்ப்படியாததினால், கீழ்ப்படியாத ஆசாரியர் களாயிருந்ததினால் பெட்டகம் பிடிக்கப்பட்டது; இஸ்ரவேலர்கள் தோல்வியடைந்தார்கள், மிகவும் தாழ்த்தப்பட்டார்கள். பெட்டகம் பிடிக்கப்பட்டது. ஒப்னி, பினெகாஸ் இருவரும் மரித்தார்கள் இந்த செய்தி ஊரிலே அறிவிக்கப்பட்டது தன்னுடைய குமாரர்கள் மரித்தார்கள் என்கிற செய்தியின்

போதல்ல, பெட்டகம் பிடிக்கப்பட்டதை கேள்விப்பட்டவுடனே ஏலி மல்லாக்க விழுந்தார். அவருடைய சரீரமும் ஸ்தூலித்ததாயிருந்ததினால் பிடரி முறிந்து மரித்துப் போனார் என்று எழுதப்பட்டிருக்கிறது. ஏலியிடம் காணப்பட்ட சிறப்பான குணம் இதில் விளங்குகிறது. பாவத்தின் பலாபலன் முழுக் குடும்பத்திற்கும் வந்தது. ஒருவனும் தனக்கென்றே ஜீவிப்பதில்லை. ஒருவனுடைய நன்மையோ தீமையோ பிறனுடைய வாழ்க்கையில் பலன் தரும். பாவமுள்ள ஜனத்தாரை பாதுகாக்க பெட்டகத்தில் மந்திர சக்தி இல்லாதிருந்தபோதிலும், பெட்டகத்தை பெலிஸ்தர் அவமதித்தபோது தேவன் அவர்களைத் தண்டிக்காமல் விடவில்லை. அவர்களைத் தண்டித்தார். அவர்களுடைய தேவனான தாகோன், தேவனுடைய பெட்டிக்கு முன்பாக விழுந்து சிதைந்தது. இந்தத் தாகோனின் கோயிலைத்தான் சிம்சோன் தன்னுடைய அந்திய காலத்தில் கீழேவிழத்தள்ளினார்.

பெட்டகத்தை பிடித்துக்கொண்டு போனதினிமித்தம் பெலிஸ்தரில் பெரிய சாபம் உண்டாயிற்று. நோய்கள் உண்டாக ஆரம்பித்தது. மூல வியாதிகளும், மேலும் விளைச்சல்களை சுண்டெலிகள், எலிகள் சூரையாட ஆரம்பித்தது. இதனிமித்தம் அவர்கள் பயந்து, ஆலோசனை பண்ணி கன்றுகளுக்காக கூப்பிட்டுக் கொண்டிருந்த பசுக்களை ஒரு இரதத்தில் கட்டி அந்த இரதத்தில் கர்த்தருடைய பெட்டியையும் அதற்கு அபராதமான பொன் சுருபங்களை வைத்து அனுப்பினார்கள். காணப்படாத ஒரு கரம் தேவனுடைய மெய்யான பிரசன்னத்திற்கு அடையாளமாக பெட்டி செல்லும்படியாக இடத்திற்கு (ஊருக்கு) பசுக்களை நடத்தியது. பெத்சிமேஸ் ஊர்மட்டும் சென்றது ஆனால் பெத்ஷிமேஸ் ஊரார் கர்த்தருடைய பெட்டகத்தை மேன்மையாகப் பாவியாததற்காக தண்டிக்கப்படுகின்றனர். இவ்விதமாக கர்த்தருடைய பெட்டி திரும்ப அனுப்பப்பட்டது.

தேவனுக்கு முன்பாக தாகோன் எம்மாத்திரம். தாகோன் மச்ச அவதாரம் போல பாதிமீனும் பாதி மனிதனுமாக இருந்தது. தேவனுடைய பிரசன்னத்திற்கு முன்பாக எந்த சிலையும் எந்த விக்கிரகங்களும் ஒன்றுமில்லை என்பதை இந்த வேதபாகம் நமக்குத் திட்டமாக அறிவிக்கிறது. ஆனபடியினால் தேவனை மகிமைப்படுத்துவோமாக. சிலகாலம் கர்த்தருடைய பெட்டி பெத்ஷிமேசில் இருந்தது. பெத்ஷிமேசின் குடிகள் கீரியாத்யாரீமின் குடிகளுக்கு ஆட்களை அனுப்பி பெலிஸ்தர் கர்த்தருடைய பெட்டியை திரும்ப அனுப்பினார்கள் அதை உங்களிடத்தில் எடுத்துக்கொண்டுபோங்கள் என்று சொல்லச் சொன்னார்கள் என்று நாம் பார்க்கிறோம். கர்த்தருடைய பெட்டி எங்கே இருக்கிறதோ அங்கே பெரிய ஆசீர்வாதமும் மகிமையுமுண்டாகும். ஆனால் அதை சாதாரணமாய் எண்ணினதினிமித்தம் பெத்ஷிமேசின் மனிதர்களுக்கு தீங்கு ஏற்பட்டது. நாமும் தெய்வீகக் காரியங்களில் மிகவும் கவனமாக இறைவனுக்குப் பிரியமாய் இறைவனுக்குப் பயந்து நடப்பிப்போமாக. அப்பொழுது பெரும் ஆசீர்வாதம் பெற்றுக்கொள்வோம். வசனத்திற்குக் கீழ்ப்படிவதும் தெய்வீக அதிகாரங்களுக்கு கீழ்ப்படிவதும் அபிஷேக ஊழியத்திற்கு அடங்கியிருப்பதும் மிகவும் முக்கியம். ஊழியர்களாய் இருக்கிறவர்கள் துணிகரமாய் நடந்தால் தேவன் சிட்சிக்காமல் விடார் என்று இதன் மூலமாக நாம் அறிந்து கொள்கிறோம். (தொடரும்)

"தேவனுடைய பெட்டி பிடிபட்டு போனபடியினால், மகிமை இஸ்ரவேலை விட்டு விலகிப்போயிற்று என்றாள்". *(1சாமு. 4 : 22)*

# திரித்துவம் திரியேகத்துவம்

திரித்துவத்தைப் பற்றி விளக்கம் முக்கியமாக கொடுத்தவர்கள் பரிசுத்த அகஸ்டின், தாமஸ் அக்யுனஸ், கால்வின் போன்றவர்கள். அவர்கள் பற்பல விதத்தில் திரித்துவத்தை மக்கள் விளங்கிக்கொள்ளும்படி அறிவித்து விளக்கமாகும்படியாக பல உவமேயங்கள், உவமானங்கள் மூலமாக விளக்கினார்கள் திரித்துவத்தில் மூவரும் முப்பொருள் எனப்படாமல் மூவர் என்ற ஆள் என்றே ஒப்புக்கொள்ளப்படுவர். அதே சமயத்தில் மூன்று பிரிக்கப்பட்ட ஆள் எனக் கருதப்படாமல் ஒரே தன்மை சம்பந்தப்பட்ட மூன்று தனித்துவமென்றே கொள்ளப்பட வேண்டும். இதுவே விசுவாச அறிக்கை. இச் சம்பந்தம் மூலம் பிதா, குமாரன், பரிசுத்தாவி என்ற மூவரும் தம்மில்தாமே தனித்து இயங்குவதும், தனித்து இயங்குவதில் பிரத்தியேகப் பட்டது எனக் கொள்ளாமல் தனித்து இயங்குவதில் ஒரே தன்மையில் சம்பந்தப்பட்டதின் மூலம் திரித்துவமாக இயங்குவதைக் குறிக்கும். இக் குறிப்புகள் ஆள் என்ற சித்தாந்தத்தை விளக்க உபயோகப் படுத்தப்பட்டவை.

திரித்துவத்தை விளக்குவதற்கு உபயோகப்படுத்தப்பட்ட உவமைகளாயிருக்கட்டும், உவமேயங்களாயிருக்கட்டும், வார்த்தைகளாயிருக்கட்டும், அனைத்தும் குறைவுபட்டதே. திரித்துவத்தை பூரணமாக விளக்குவது முடியாத காரியமே திரித்துவ தேவன் ஆள் என்ற தன்மைக்கு மாறாக ஆளற்ற பொருள் என ஒரு போதும் எண்ணக்கூடாது திரித்துவ சித்தாந்தமான ஆள் ஒரு உயிரற்ற பொருளின் சம்பந்தத்தைக் கூறாமல் பிதா குமாரன் பரிசுத்தாவி என்று உயிருள்ள அந்நியோன்ய ஒருமைப்பாட்டை அவ் அந்நியோன்யத்தின் மூலம் நமக்கு கிடைத்த 'அப்பா பிதாவே' என்ற சுவிகாரத்தையும் விளக்குகிறது திரித்துவ சித்தாந்த அனுபவத்தின் படி திரித்துவ சித்தாந்த அனுபவமும், அறிவும், விளக்கமும் விருத்தியும் திருச்சபையில் மாத்திரமே தொடர்ந்து பூரண வெளிப்பாட்டை அடையக்கூடும். இன்று சபை எனப்பட்டது கிறிஸ்துவின் சரீரத்தாலான சபையேயல்லாமல வேறல்ல. கிறிஸ்துவின் சரீரத்தில் ஆன திருச்சபையே திரித்துவ அனுபவத் தாலான 'அப்பா பிதாவே' என்று கூப்பிடப்பண்ணுகிற புத்திர சுவிகாரத்தினால் உண்டான அந்நியோன் யத்தில் கட்டப்பட்ட சபையாகும்.

திருச்சபையைப் பற்றிய சித்தாந்தம் எவ்வளவு அவசியம் என்பது இதன்மூலம் எல்லாரும் உணர்ந்து கொள்ளலாம் கிறிஸ்துவின் சரீரமாகிய திருச்சபையில் அங்கமாயிராதவன் திரித்துவத்தின் மேன்மையை அறியக்கூடாதவன். திருச்சபைக்கு புறம்பே இரட்சிப்பு இல்லையென்ற சுலோகத்தின் கருத்து அதுவே. கால்வின் போன்றவர்கள் வார்த்தை தேவனிடத்திலிருந்தது, வார்த்தை தேவனாயிருந்தது என்று யோவான் கூறுவதை சான்றாகக் கொண்டே பிதாவே உலகம் உண்டாகாததற்கு முன்னே உம்மிடத்தில் எனக்கு உண்டாயிருந்த மகிமையை (யோ

17 :5) எனக் கூறப்பட்டிருப்பதும் அதன் உண்மையை விளக்குமென்றே விளக்கம் கொடுத்தார். கால்வின் வேதச் சான்றுகளைத் தழுவியே தன்னுடைய கோட்பாட்டை விளக்க முயன்றார். அத்தேனே பட்டணத்தின் மேடையில் எழுதப்பட்ட பரிசுத்த பவுலால் கண்டு கொள்ளப்பட்ட வாக்கியமேயாயினும் திரித்துவ சித்தாந்த ஆராய்ச்சியில் கிறிஸ்துவின் மந்தைக்குள் கொண்டுவரப்படாத மக்களின் அனுபவம் அத்தகையதே. கிறிஸ்துவின் வெளிப்பாடு உடையவர்களிலேயே திரித்துவத்தைப் பற்றி ஆராய்வதில் அரியப்படாத தேவன் என்ற வாசகம் உண்மையாயிருக்கு மேயாயின் ஏனைய மக்களில் அவ்வசனம் எவ்வளவு அதிகமாக உண்மையாயிருக்க கூடும். கடவுள் உண்டு என்று ஒப்புக்கொள்ளுகிற ஒரு சாதாரண மனுஷன் முதன் முதலில் உலக சிருஷ்டிப்பையே நோக்க கூடும். உலகின் அமைப்பு அழகு, நோக்கம் இவைகளை ஆராயும்போது உலகத்தை உண்டாக்கின கடவுள்அவ்விதமான ஞானம், அறிவு, பகுத்தறிவும் நோக்கமுடைய ஆள் என்ற தன்மையுடையவராக இருக்க வேண்டு மென அறிந்து கொள்வான். கடவுள் உண்டென கூறுவதற்குரிய சான்றுகளே இங்கு ஆராயப்படுகிறது. எனினும் ஒன்று ஞாபகப்படுத்த வேண்டியது அவசியம். உலக அமைப்பிற்கு பின்னால் காணப்படுவது உலகை அமைத்த கடவுளே. ஒன்றுமில்லாமையிலிருந்து சர்வத்தையும் சிருஷ்டித்த ஆண்டவர் 'வெளிச்சம் உண்டாக்கக்கடவது' இது கடவுளின் தீர்மானம் அல்லது விருப்பம் எனப்படும். மனிதனை சிருஷ்டித்த காலத்தில் நாம் என்ற பன்மைப் பதம் உபயோகிக்கப்படுத்தப்பட்டிருப்பதைக் காணலாம். எபிரேய மொழியில் ஏலோகிம் எனப்படும் அது ஒரு வேளை யேகோவாவின் மகத்துவத்தை எடுத்துக்காட்ட உபயோகப்படுத்தப்பட்ட சிறப்புப் பதமாயிருக்கலாம். எனினும் தற்கால மனோதத்துவ சாஸ்திர ஆராய்ச்சி முறையில் திரித்துவ சித்தாந்த ஆராய்ச்சிமுறையும் கடவுள் தன்மையில் மூவர் என்ற உண்மையை எடுத்துக் காட்டக் கூடியவாறு சிருஷ்டிக்க வேண்டு மென்ற முதல் எண்ணம் அல்லது தீர்மானம் இறைவனில் உண்டாயிற்று; அத்தீர்மானத்தை நிறைவேற்றும் தன்மை அதை மக்கள் அறிவிக்கத்தக்கதாக வெளியாக்கும் தன்மையே யாவும், கடவுள் சிருஷ்டிகர் என்ற தொடரில் ஒருங்கே அமையப்பெற்றுள்ளது.

கடவுள் சிற்பி. சிற்பி நோக்கத்தை நிறைவேற்றுபவர் வார்த்தை. சிருஷ்டிப்பின் அவசியத்தின் அடிப்படையாகிய அன்பை வெளிப் படுத்துவதும், சிற்பியாகிய பிதாவையும், நிறைவேற்றுபவராகிய வார்த்தையையும் அன்பெனும் காந்தத்தால் இணைப்பவர் பரிசுத்தாவி. (நீதி. 8 : 30; யோ. 1:3 ; கொலோ. 1 : 16 ; எபி. 1 : 2; ஆதி. 1 : 26, கொலோ. 1 :15 ; 2கொரி. 4 :4 ; பிலி. 2 : 6) ஒரே கடவுள் என்ற சித்தாந்தத்தில் கூட்டு ஒருமைப்பாடு குறிப்பிடப்பட்டது மூவரில் ஒருவர், ஒருவரில் மூவர் என்ற திரித்துவத்தின் ஆள் உபதேசத்திலும், இந்த உயரிய ஒருமைப்பாடு, ஒருமைப்பாட்டில் காணப்படும் தனித்துவ வெளிப்பாடு இயங்குவதை நாம் அறியலாம். இந்த அனுபவம் மனிதரின் சமூக வாழ்க்கையிலும், அரசியல் வாழ்க்கையிலும், சபை வாழ்க்கையிலும் காணப்பட வேண்டும். மனிதரில் தனித்த வாழ்க்கையில் இந்த திரித்துவ அனுபவம்

காணப்பட வேண்டும் (எபேசி. 2 : 21,22; 4 : 11-16).

திரித்துவத்தின் ஒருமைப்பாடும் ஐக்கியமும், அன்பும் எவ்விடத்திலும் எல்லாரிடத்திலும் விளங்க வேண்டும். திரித்துவ சித்தாந்தத்தில் கிறிஸ்துவை உலகிற்கு கொடுக்க வேண்டிய நற்செய்தியைப் பெற்றுக்கொள்ளுகிறான். வாழ்க்கையில் இரண்டு முக்கிய அம்சங்கள் உண்டு. ஒன்று கடவுள் மனிதனை தேடுவது. மற்றது மனிதன் கடவுளை நாடுவது. ஒன்று மேலிருந்து உண்டாவது, மற்றது கீழிலிருந்து உண்டாவது. வார்த்தை மாம்சமானார் மேலிருந்து உண்டாவது. இவ்வடிகளில் கடவுள் தம்மையே வெளிப்படுத்து கிறவராகவும், குமாரன் மூலம் வெளிப்படுகிறவராகவும், பரிசுத்தாவியின் மூலம் மக்களுக்கு வெளிப்பாட்டை ஊட்டுகிறவராகவும் அறியலாம். இதிலடங்கியுள்ள அன்பின் பண்பாட்டை கிறிஸ்துவின் நற்செய்தி போதனை மூலம் இன்றும் கடவுள் உலகிற்கு வெளிப்படுத்த சித்தங் கொண்டுள்ளார். சுவிசேஷம் கிறிஸ்து மூலம் அல்லது சுவிசேஷகன் மூலம் கடவுள் தம்மை அறிந்து கொள்ளாத மக்களுக்கு அறியப்படாத தேவனாக அல்ல அறியப்படுகிற தேவனாகத் தம்மை வெளிப்படுத்துகிறார். இதுவே சுவிசேஷ வேலையின் வேத சித்தாந்தம். கடவுள் மனிதனைத் தேடி வந்தது மனிதன் கடவுளை நாடி அடைய வேண்டுமென்பதே. கடவுள் தம்மை வெளிப்படுத்திய பரிசுத்தாவியின் கிரியை எங்ஙனமோ அவ்விதமாகவே மனிதனின் வீழ்ச்சியிலும் மனிதன் பரிசுத்தாவி யானவரால் குமாரன் மூலம் பிதாவினிடத்தில் சேரும் சிலாக்கியம் உண்டாகக்கூடும். திரித்துவ அனுபவம் மேலிருந்து கீழ்வரும், கீழ் இருந்து மேல் வரும் என்று இரு வழிகளிலும் காணப்பட வேண்டியது (1கொரி. 12 : 3, யோ. 14 : 6). சுவிசேஷச் செய்தியின் மூலமாய் ஒருவன் பரிசுத்தாவியினால், கர்த்தராகிய இயேசுவினால் இழுக்கப் பட்டு இயேசுவிடம் இழுக்கப்பட்டு, அவர் மூலம் பிதாவை அடைகிறான்.

திரித்துவமும், சுவிசேஷமும் பிரிக்கப்படாமல் இணைக்கப் பட்டுள்ளது (எபே. 2 : 18). திருச்சபையின் கடமையும் அதுவே. சுவிசேஷத்தின் மூலம் அக்கடவுளின் அன்பை மக்களுக்கு எடுத்துக்காட்ட வேண்டும் காட்டுவது மாத்திரமன்றி அதை பகிர்ந்து கொடுக்க வேண்டும். பின் மக்களின் அன்பையும் சேவையையும் கடவுளுக்கு கொடுக்க வேண்டும். திருச்சபையின் வணக்கம் ஆராதனை இவற்றின் கருத்தும் அதுவே. திரித்துவத்தின் 'அனுப்பப் படுதல்' என்ற ஒரு முக்கிய பதம், அவ்விதமாக திருச்சபையிலும் அனுப்புதல், அனுப்பப் படுதல் என்ற திரித்துவ வெளிப்பாடு காணப்பட வேண்டும். கடவுள் தம்முடைய ஒரே பேரான குமாரனை அனுப்பியதில் கடவுளுக்கு மனிதன் மேலுள்ள அன்பையும், மனிதன் கடவுள் மேல் கொள்ளவேண்டிய அன்பையும் விளங்கப்பண்ணினார்(அப். 10 : 38, ரோ. 5 : 8-10). அவ்வாறே பரிசுத்தாவியையும் அனுப்பினார். கிறிஸ்துவில் வெளிப் பட்ட கடவுளின் அன்பை பரிசுத்தாவியின் மூலமாய் மாத்திரமே நன்கு அறிய முடியும் (ரோ. 5 : 5; கலா. 4 :6). அனுப்புதல் அல்லது அனுப்பப் படுதல் என்பது அக்காலத்தில் நித்தியத்தில் திரித்துவத்திலியங்கிய அதே தன்மை காலவரையறையில் காணப்

படுகிற உலகத்தில் திருச்சபை ஏனைய உலகத்திற்கு சுவிசேஷகரை அனுப்புவதில் தொடர்ந்து பிரத்தியட்சமாகக் காணப் பட்டது. அனுப்புதல் என்ற குறிப்பில் சிந்திக்கிடக்கும் அன்பு கடவுளின் அன்பேயாகும். அது பரிசுத்தாவியின் மூலமே வெளிப்படும். ஆதலின் திருச்சபையின் அனுப்புதலில் அனுப்புகிற பிதாவும் அனுப்பப்படுகிற குமாரனும் பெறப்போகிற பரிசுத்தாவியும் அடங்கி யுள்ளார்கள். அனுப்புதல் என்ற இந்த சுவிசேஷ வார்த்தை திரித்துவத்திற்கும் திருச்சபையின் அனுபவத்திற்கும் உள்ள ஒரு பெரிய தொடர்பைக் காட்டும். இயேசு சுவாமி சீஷரை அனுப்பும்போது பிதா என்னை அனுப்பினது போல நானும் உங்களை அனுப்புகிறேன் என்று சொன்னார் (யோ. 20 :21). ஆகவே திருச்சபை இன்று சுவிஷேச ஊழியம் செய்யவும், மிஷன் ஊழியம் செய்யவும் தனிப்பட்ட ஒன்றாக அதை நிறைவேற் றாமல் திரித்துவ அனுபவத்திற்குள் புத்திரசுவிகாரத்தின் மூலம் பெற்ற அனுபவமுடைய திரித்துவத்தின் பயனாக திரித்துவமாக நிறைவேற்றுகிறது என்பதே உண்மை. (தொடரும்)

"ஒன்றான மெய்த்தேவனாகிய உம்மையும் நீர் அனுப்பினவராகிய இயேசுகிறிஸ்துவையும் அறிவதே நித்திய ஜீவன்" (யோ. 17 : 3).

# சாட்சி

என்னுடைய பெயர் ஜெ. தாமஸ். நான் சி. எஸ். ஐ. குடும்பத்தை சார்ந்தவன். ஒரு நாள் என்னுடைய நண்பர் மூலமாக பள்ளப்பட்டி புதிய எருசலேம் சபைக்கு சென்று ஆராதனையில் கலந்து கொண்டேன். அந்த ஆராதனையில் தேவனுடைய ஆளுகையும், வல்லமையும் மற்றும் பரிசுத்தவான்களின் அன்பும், தேவ பிள்ளைகளின் அரவணைப்பும் கண்டு மெய்யாகவே தேவனுடைய சபை இதுதான் என்று அறிந்து கொண்டேன். அந்த நாட்களில் எனக்கு ஒரு அழகான ஆண்குழந்தையை தேவன் தந்திருந்தார். அந்த குழந்தைக்கு திடீரென்று ஒருநாள் வயிற்றுக்கடுப்பு நோய் அதிகமானது. தனியார் மருத்துவமனைக்கு கொண்டு சென்றோம். அங்கு சென்ற இரண்டு நாள் கழித்து இரத்த பேதி, சிறு நீர் கோளாறு, வயிற்று வீக்கம் இதன் காரணமாக கண்களும் திறக்காமல் இருந்தது.

அங்கு 11 நாள் சிகிச்சை செய்து விலை உயர்ந்த மருந்தும் மாத்திரையும் கொடுத்தும் பலன் இல்லை. 12-ம் நாள் குழந்தை மரித்து விட்டதாக டாக்டர் என்னிடம் கூறி வீட்டிற்கு எடுத்துச் செல்லச் சொன்னார். உடனே நான் பெரிய குளம் புதிய எருசலேம் சபைக்கு சென்று பாஸ்டர் பி. இஸ்ரவேல் ஐயாவிடம், டாக்டர் எனக்கு கூறின வார்த்தைகளைச் சொன்னேன். சொல்லி அழுதேன். ஐயா அவர்களும் குழந்தை இருந்த இடத்திற்கு வந்து ஜெபித்தார்கள் வல்லமையுள்ள தேவன் குழந்தைக்கு அற்புத சுகம் தந்தார். குழந்தை அதிகாலையில் எழுந்து உட்கார்ந்து பேச ஆரம்பித்தது. எங்களுக்கு அதிகமான சந்தோஷம் உண்டானது. டாக்டர்கள், நர்சுகள் அங்கு மரித்த குழந்தைக்கு ஜெபம் செய்கிறார்கள் என்று பரியாசம் செய்த அனைவரும் பிரமிக்கும் வகையில் தேவன் அற்புதம் செய்தார். கர்த்தருக்கு ஸ்தோத்திரம்! தேவனுக்கு மகிமையுண் டாவதாக!! (ஜெ. தாமஸ், புதிய எருசலேம் சபை, பெரிய குளம் கிளை)

# விசுவாசம்

'லீஸ்திராவிலே ஒருவன் தன் தாயின் வயிற்றிலிருந்து பிறந்தது முதல் சப்பாணியாயிருந்து ஒருபோதும் நடவாமல், கால்கள் வழங்காதவனாய் உட்கார்ந்து, பவுல் பேசுகிறதைக் கேட்டுக் கொண்டிருந்தான். அவனை பவுல் உற்றுப்பார்த்து, இரட்சிப்புக்கேற்ற விசுவாசம் அவனுக்கு உண்டென்று கண்டான்' அப். 14 : 8,9. இவ்விதமாய், அவனைப் பவுல் உற்றுப்பார்த்து இரட்சிப்புக்கேற்ற விசுவாசம் அவனுக்கு உண்டென்று கண்டு, நீ எழுந்து காலூன்றி நிமிர்ந்து நில் என்று உரத்த சத்தத்தோடே சொன்னான். உடனே அவன் குதித்தெழுந்து நடந்தான் என்று ஒரு அற்புதமான சம்பவம் குறிப்பிடப் பட்டிருக்கிறது. 'இரட்சிப்புக்கேற்ற விசுவாசம் அவனுக்கு உண்டென்று கண்டு' என்பதைக் கவனிக்கவும்.

கிறிஸ்தவ உபதேசங்களில் மிகவும் பிரதானமாய் கூறப்படுவது விசுவாச மாகும். தேவனுடைய வசனத்தைக்கேட்டு மனந்திரும்பி விசுவாசிக்கிற மக்களே இந்த உலகத்திலே தேவனால் ஆசீர்வாதம் பெற்ற மக்கள். அவர்கள் பாக்கிய வான்கள். அவர்கள் மகா விசேஷித் தவர்கள். அவர்கள் பரலோகத் துக்குரியவர்கள், பூமிக்குரியவர்களல்ல. அவர்களை தேவர்கள் என்று வேதத்தில் எழுதியிருக்கிறது. அதற்காகக் கர்த்தரை ஸ்தோத்தரிப்போமாக. இந்த நாட்களில் கிறிஸ்துவைப் பற்றிய உபதேசமானது உலகமெங்கும் பரவி வருகிறது. வெவ்வேறு விதமாக கிறிஸ்து பிரசங்கிக்கப்படுகிறார். அப். 14 : 8,9-ல் கண்டபடி, இந்த உயிருள்ள விசுவாசமானது, மகா பெரிய சக்தியாயிருக்கிறது என்று வேதாகமத்தின் மூலமாகவும், நடைமுறை மூலமாகவும், அனுபவமூலமாகவும் நாம் அறிகிறோம். விசுவாசமானது தேவன் அருளுகிற ஈவாக இருக்கிறது. உலகத்தில் யாருக்கு தேவன் இந்த விசுவாசத்தை அருளுகிறாரோ அவர்களே மிகவும் உயர்ந்த மக்கள், தேவ அனுக்கிரகம் பெற்றவர்கள், அருள் பெற்றவர்கள் என்று நாம் திட்டமாகச் சொல்லமுடியும். எல்லோருக்கும் விசுவாசம் இல்லையே என்றும் இது எல்லோருக்கும் அருளப்படுகிறது அல்ல என்றும் சத்திய வேதாகமம் உறுதிப்படுத்துகிறது.

இந்த விசுவாசமானது என்ன என்று அறிந்து அதை உறுதியாய்ப் பற்றி அதை வளர்க்க வேண்டும்; விசுவாசத்திலே நாம் வல்லவர்களாக வேண்டும் என்று தேவன் விரும்புகிறார். விசுவாசம் என்றால் என்ன என்று நாம் அறிந்து கொள்ளும் போது நாம் இன்னும் அதிகமாக கிறிஸ்தவ ஜீவியத்தில் பலப்படவும் வளரவும் தேவனுக்காக பெரிய காரியங்களை செய்யவும், நிலை நிற்கவும், பூரணப்படவும், கர்த்தருடைய வருகைக்கு ஆயத்தப்படவும் முடியும்.

முதலாவது எது விசுவாசமல்ல என்பதை நாம் அறிந்து கொள்ள வேண்டும். தேவன் என்று ஒருவர் உண்டு என்று விசுவாசிக்கிறேன், தேவனை விசுவாசிக்கிறேன், இயேசுகிறிஸ்துவை விசுவாசிக்கிறேன் என்று சொல்வது விசுவாசமல்ல. அந்த விசுவாசம்

பிசாசுகளுக்கும் உண்டு என்று யாக். 2 : 19-ல் வாசிக்கிறோம். பிசாசுகளும் தேவன் உண்டென்று விசுவாசித்து நடுங்குகின்றன. ஆனால் கீழ்ப்படிகிறதில்லை. அப்படியே இறைவனுடைய வார்த்தைக்குக் கீழ்ப் படியாமல் நான் இறைவனை விசுவாசிக்கின்றேன் என்று சொல்வது உண்மையான விசுவாசமல்ல. அடுத்த படியாக, தேவனுக்கு ஊழியம் செய்கிறதோ, அதிசய அற்புதங்களை நடப்பிக்கிறதோ, பெரிய காரியங்களை நடப்பிக்கிறதோ விசுவாசமல்ல. இந்த விசுவாசம் யூதாசுக்கும் உண்டு. ஆண்டவரே உம்முடைய நாமத்தினாலே பிசாசுகளும் எங்களுக்கு கீழ்ப்படிகிறதே என்று சொன்ன சீஷர்களில் அவனும் ஒருவனாய் இருந்தான் (லூக். 10 : 17). அதிசயங்களையும், அற்புதங்களையும் நடப்பித்தான். கர்த்தர் பன்னிரண்டு சீஷர்களையும் வரவழைத்து, வியாதியுள்ளவர்களை சொஸ்தமாக்குங்கள், குஷ்டரோகிகளை சுத்தம் பண்ணுங்கள், மரித்தோரை எழுப்புங்கள், பிசாசுகளைத் துரத்துங்கள் என்று அதிகாரப்படுத்தி அனுப்பினார் அவர்களில் யூதாசும் ஒருவனாய் இருந்தான். ஆனபடியால் அதிசய அற்புதங்களை செய்கிறதினாலே, ஊழியம் செய்கிறதினாலே அவன் விசுவாசமுடையவன் என்று சொல்லிவிட முடியாது. இயேசுவின் நாமத்திற்கே வல்லமையுண்டு. அந்த நாமத்தைச் சொல்லி யார் எதைச் செய்தாலும் அநேக வேளைகளிலே நடக்கலாம், நடக்கும் என்று வேதாகமம் காண்பிக்கிறது. இந்த உலகத்தில் அநேகர் தங்களை ஊழியர்கள், விசுவாசிகள் என்று எண்ணிக்கொண்டிருக்கிறார்கள். அந்த விசுவாசம் யூதாசுக்கும் இருந்தது.

அடுத்தபடியாக விசுவாசித்து பின்னர் இடறிப்போகிறவர்களும், பின்மாறிப்போகிறவர்களும், பாவத்திலே விழுந்தவர்களும் கர்த்தரை விட்டுவிட்டவர்களும் விசுவாசிகளல்ல; 'நீங்கள் முன்னமே அறிந்திருந்தாலும், நான் உங்களுக்கு நினைப்பூட்ட விரும்புகிறது என்னவெனில், கர்த்தர் தமது ஜனத்தை எகிப்து தேசத்திலிருந்து வரப்பண்ணி இரட்சித்து, பின்பு விசுவாசியாதவர்களை அழித்தார்' என்று யூதா 5-ம் வசனத்தில் வாசிக்கிறோம். எனவே விழுந்து போகிறவர்களும், பின்மாறிப்போகிறவர்களும், கீழ்ப்படியாமல் போகிறவர்களும் இரட்சிப்புக்கேற்ற உயிருள்ள விசுவாசத்தை உடையவர்களல்லர் என்று வேதாகமம் நமக்கு அறிவிக்கிறது. ஸ்கேவாவின் மகன்கள், பவுல் பிரசங்கிக்கிற இயேசுவின் நாமத்தினாலே போ பிசாசே என்று பிசாசை விரட்ட முற்பட்ட போது பிசாசு பிடித்தவன் அவர்கள் மீது விழுந்து அடிக்க, வஸ்திரம் கிழிந்து நிர்வாணமாய் அவர்களை விட்டு ஓடிப்போனார்கள் என்று அப். 19 : 13-16ல் வாசிக்கிறோம். இந்நாட்களில் இயேசுவின் நாமத்தைச் சொல்லி ஊழியம் செய்கிறோம் என்று சொல்லும் அநேகர் பிசாசுகளை எதிர்க்க, விரட்ட பயப்படுகிறார்கள். பிசாசும் அதிகாரம் பெற்று தான் வந்து வேலை செய்கிறான். எனவே விரட்டக்கூடாது என்று சொல்லிக் கொண்டு இருக்கிறார்கள்.நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் மேல் விசுவாசம் வேண்டும். அவரது நாமத்தின் மேலோ அல்லது ஒரு சில சொற்களை வைத்துக்கொண்டோ, இப்படி தந்திரமான விசுவாசிகளாய், ஊழியர்களாய் நடக்கக்கூடாது.

"தேவனைத் தேடு"
"Seek God"
Regd.No. 040088/84
Postal Regd.No. Tech/47-201/MBI/2000
Tamil Monthly Magazine

யோவான் 2 : 11 - ல் 'இவ்விதமாக இயேசு இந்த முதலாம் அற்புதத்தை கலிலேயா விலுள்ள கானா ஊரிலே செய்து, தம்முடைய மகிமையை வெளிப்படுத் தினார்; அவருடைய சீஷர்கள் அவரிடத்தில் விசுவாசம் வைத்தார்கள்' என்று வாசிக்கிறோம். யோவான் 2 : 23,24-ல் 'பஸ்கா பண்டிகையிலே அவர் எருசலே மிலிருக்கையில், அவர் செய்த அற்புதங் களை அநேகர் கண்டு, அவருடைய நாமத்தில் விசுவாசம் வைத்தார்கள்'. அவர் நாமத்தின் மேல் விசுவாசம் வைத்தவர்களை கர்த்தர் நம்பவில்லை. நமக்கு கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் மேல் உயிருள்ள விசுவாசம் வேண்டும் என்று இந்த சம்பவங்கள் எல்லாம் நமக்கு வெளிப்படுத்தப்பட்டிருக்கின்றன. உண்மையான சீஷர்கள் இயேசுவின் நாமத்தில் செய்கிற காரியங்களைக் குறித்து நாம் கூறவில்லை. இயேசுவின் நாமத்தின் மேல் விசுவாசம் வைத்துக்கொண்டு நாமம், நாமம் என்று சில மந்திர சொற்கள் போன்று கூறிக்கொண்டு காரியங்களை நடப்பிக்கிறவர்களைக் குறித்து நாம் எச்சரிக்கையாயிருக்க வேண்டும். 'விசுவாச மில்லாமல் தேவனுக்குப் பிரியமாயிருப்பது கூடாத காரியம்' என்று எபி 11 :6-ல் வாசிக்கிறோம். எபிரேயர் 11 : 1-ல் 'விசுவாசமானது நம்பப்படுகிறவைகளின் உறுதியும், காணப்படாதவைகளின் நிச்சயமுமாயிருக்கிறது' என்று எழுதப் பட்டிருக்கிறது. 'விசுவாசம்' என்று கூறப்படுவது மகா பெரிய சக்தி . இது தேவன் அருளும் ஈவு.

(தொடரும்)

## அறிவிப்புகள்

முழு இரவு விழிப்பு ஜெபம்
21 (ஜனவரி) வெள்ளி 2000
18 (பிப்ரவரி) வெள்ளி 2000

புதிய எருசலேம் செய்தி பத்திரிக்கை

| | |
|---|---|
| ஆண்டு சந்தா | Rs.30.00 |
| வெளிநாடு ஆண்டு சந்தா | Rs.400.00 |

அனுப்ப வேண்டிய முகவரி
Chief Apostle N.Lazar,
"NEW JERUSALEM CHURCH"
Church Lane, Tilak Nagar,
Darga Cross Road, Sonapur,
Bhandup (W), MUMBAI-400 078

மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா எண்ணைக் குறிப்பிடவும். பழைய சந்தாதாரரா அல்லது புதிய சந்தாதாரரா என்பதையும் குறிப்பிடவும்.

பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல் நன்கொடையா என்பதையும் தெளிவா குறிப்பிடவும்.

"புதிய எருசலேம் செய்தி" பத்திரிக்கை வாங்குவோர் ரூ.30 (முப்பது) சந்தா தொகையுட தங்கள் விலாசத்தையும் தெளிவாகக் கொட்டை எழுத்துகளில் (Capital Letters), M.O. பாரத்தின் செய்திக்காக ஒதுக்கப்பட்ட பகுதியில் (Space for Communication) எழுதிப் பத்திரிகையைப் பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.

Edited, Printed and Published by Chief Apostle N.LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Darga cross rd. Sonapur, Bhandup(W), Mumbai-400 078, India. *Phone 91-22-5605515; Fax:91-22-5681992; e-mail njc@vsnl.com*
Printed at New Jerusalem Press, Tilak Nagar, Bhandup, Mumbai-400 078.

# புதிய எருசலேம் செய்தி

# PUTHIYA YERUSALEM CHEIDHI

எக்காளம் 18; சத்தம்: மார்ச் 2000




[illegible] (இயேசுகிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, [illegible] நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் [illegible] விழித்திருங்கள். [illegible] உங்களுக்கு சொல்லுகிறதை எல்லோருக்கும் [illegible] விழித்திருங்கள்.

மாற்கு 13 : 35-37.

EDITOR : CHIEF APOSTLE N.LAZAR

MUMBAI, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும் அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும் தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும், சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும்படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது (எபே.4:11-16)

# புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசுகிறிஸ்து எனக்கு தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும் கட்டளைகளும் 7 (அப்1: 1-3)" எனக்கு காண்பித்து, கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள்:

1 உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் மத்28:18; மாற். 16:15.
2 விசுவாசித்து ஏற்றுக்கொள்ளுகிறவர்களை பிதா, குமாரன், பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்- மத். 28:19 (இயேசு மாதிரி (Through Action) செய்து காண்பித்தார்
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள் - மத்28:20.
4 அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள் - யோவான். 20: 23
5 அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள் - யோவான் 21 : 15-17
6 இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்[illegible] பெற்றுக்கொண்டு - அப். 1 :5-8
7 நான் வருகிற வரையிலும் என்னை நினைவு [illegible] திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார் - 1கொரி. 11 : 23 -26

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு(2) என்கின்றனர்; வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன் இயேசுவானவர் பிரதியுத்திரமாக: இல்லை அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி9:1-6) இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும் அதிகாரங்களுமாகும் இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1:1, 10: 40-43)

## இதழின் உள்ளே

# ஆசிரியர் உரை



தேவன் உலகத்தை சிருஷ்டித்து, தானே இயங்கும்படி விட்டுவிடவில்லை. அதை இயக்குகிறார் என்று வேதம் திட்டமாக அறிவிக்கிறது. ஆனபடியால் நடப்பதெல்லாம் நன்மையென்று வேதத்தில் எழுதவில்லை. நடப்பதையெல்லாம் நன்மையாக மாற்றுகிறார் என்றே எழுதப்பட்டுள்ளது இந்நாட்களில் இந்து வெறி பிடித்த துன்மார்க்கர்கள் தேவ ஜனங்களை உபத்திரவப்படுத்தி, இடையூறு செய்து, அசட்டை பண்ணி, புறக்கணித்து வருகின்றனர்; தாக்கியும் வருகின்றனர். அவர்கள் கிரியைகளுக்கு ஏற்ற தண்டனையை அவர்கள் உள்ளத்திலும், ஆத்துமாவிலும், சரீரத்திலும் அனுபவிப்பார்கள். தேவன் தம்முடைய நீதியையும், சித்தத்தையும், திட்டத்தையும் நிறைவேற்ற தீவிரமாயிருக்கிறார். ஆனபடியினால் தேவ ஜனங்கள் தைரியமாயிருக்க வேண்டும்; யுத்தம் செய்ய வேண்டும் (போராட வேண்டும்). இந்நாட்களில் ஒருவன் கிறிஸ்தவனாய் இருப்பதென்றால் ஆண் பிள்ளையாவான். தீமை செய்ய திரளான பேர்களை பின்பற்றுகிறவர்கள் கோழைகளாவர். ஒருவன் தான் அறிந்த சத்தியத்தைச் சாதிக்க முன்வைத்த காலை உலகமே எதிர்த்தாலும் பின்னெடுக்காமல் முன்னேறுகிறவனே முதுகெலும்புள்ள மனிதனாவான். நாம் முதுகெலும்புள்ளவர்களாக நடந்து செல்வோம். நெளிய நாம் புழுவல்லவே. தேவ ஜனங்கள் தேவன் தம்முடைய கிரியையை வேகமாய் நிறைவேற்றுவதைக் காண்பீர்கள் சந்தோஷமாயிருங்கள்.

*கிறிஸ்துவுக்குள்,*

*தலைமை அப்போஸ்தலர்.என்.லாசர்*

# பொருளாசை

உலகம் முழுவதும் பொருளாசையை பின்பற்றி செல்கிறது. பொருள் அவசியம் தான். பணம் எல்லாக் காரியத்துக்கும் உதவுகிறதாயிருக்கிறது. ஆனால் பணம் எவ்விதமாக சம்பாதிக்கிறோம் என்பதைக் குறித்து இந்நாட்களில் சிந்தனை செய்ய வேண்டியவர்களாக இருக்கிறோம். மக்கள் குறைந்த உழைப்பில் அதிகம் சம்பாதிக்க முயல்கின்றனர். அனேக விதமான குறுக்கு வழிகளையும் தந்திர மந்திர யோசனைகளையும் செய்கின்றனர். இது தவறு, "உன் பிரயாசத்தின் பலனை நீ சாப்பிடுவாய்" என்று கர்த்தர் கூறுகிறார். (சங். 128 :2). பிரயாசப்பட்டு நெற்றி வேர்வை நிலத்தில் சிந்த பாடுபட வேண்டும். உண்மை முறையில் உழைக்க வேண்டும். அந்த சம்பாத்தியம் நம்மிடத்தில் தங்கியிருக்கும் (ஆதி. 3 : 19). அதை அனுபவிப்பதில் சந்தோஷம் உண்டாகும்.

தாழ்த்தப்பட்ட மக்கள் சூதாட்டம் ஆடுகின்றனர். வாங்கிய சிறிய சம்பளத்தை சூதாடி தோற்கின்றனர். வாழ்க்கையில், வீட்டில் சண்டையும், சமாதானக் குறைவும் உண்டாகிறது. சாத்தான் அவர்கள் மனதை ஏமாற்றி நீ சூதாடு, உனக்குள்ள ஆயிரம் ருபாய்க்கு லட்சம் ருபாய் கிடைக்கும் என்று அவன் மனதில் பேசி சூதாடச்செய்து பணத்தை இழக்கச் செய்கிறான் சில சமயங்களில் சூதாட்டத்தில் வெற்றியடையச் செய்து உழைக்காமல் அதிக பணம் சம்பாதிக்கும் ஆசையை மனதில் வைத்துவிட்டு செல்கிறான் ஆகையால் ஜெயித்தாலும், தோற்றாலும் ஒவ்வொரு மாதமும் சூதாடுகின்றனர். சூதாடி ஜெயித்த பணம் கையில் நிலைப்பதில்லை. கெட்ட பழக்கத்திலும் ஊதாரித்தனத்திலும் பணத்தை விரயம் செய்கின்றனர். ஏனென்றால் அது உழைப்பினால் வந்ததல்ல. ஆதலால் மக்களே சூதாட்டத்திற்கு விலகி ஓடுங்கள்.

செல்வந்தர்கள் ஏழை மக்களிடம் வேலை வாங்கி அவர்களுக்குத் தகுந்த சம்பளம் ஏற்ற சமயத்தில் கொடுக்காமல் ஏமாற்றுவதும் பாவமே, இது பொருளாசையே. ஐசுவரியவான்களே! உங்கள் வயல்களை அறுத்த வேலைக்காரருடைய கூலி உங்களால் அநியாயமாய்ப் பிடிக்கப்பட்டுக் கூக்குரலிடுகிறது. அறுத்தவர்களுடைய கூக்குரல் சேனைகளுடைய கர்த்தரின் செவிகளில் பட்டது (யாக்.5 :4) வியாபாரிகள் கள்ளத்தராசு, கள்ளக் கணக்கு வைத்து சம்பாதிப்பதும் பொருளாசையே, பாவமே. கள்ளத்தராசு கள்ளப்படிகளும் கர்த்தருக்கு அருவருப் பானது (நீதி. 11 : 1). சுமுத்திரையான தராசே கர்த்தருக்குப் பிரியம் (நீதி. 16:11, லேவி.19 :36; எசே. 45 : 10). அவன் வியாபாரி, கள்ளத் தராசு அவன் கையில் இருக்கிறது. அநியாயஞ்செய்ய விரும்புகிறான் (ஓசி.12:7). என்று ஓசியா கூறுகிறார். துன்மார்க்கனுடைய வீட்டிலே துன்மார்க்கத்தினால் சம்பாதித்த பொக்கிஷங்களும் அருவருக்கப்பட்ட குறைந்த மரக்காலும் இன்னும் இருக்கிறதல்லவா?

கள்ளத்தராசும், கள்ளப்படிக்கற்களுள்ள பையும் இருக்கும்போது அவர்

களைச் சுத்தமுள்ளவர்களென்று எண்ணுவேனோ? என்று (மீகா. 6: 10,11) கர்த்தர் சொல்லுகிறார்.

துன்மார்க்கர்கள் பொருளாசையைப் போற்றுவார்கள் (சங். 10 : 3). புதிய ஏற்பாட்டுக்காலத்தில் பரிசேயர்கள் பொருளாசைக்காரராக இருந்தார்கள் என்று வேதம் கூறுகிறது (லூக். 16 : 14). பொருளாசைக்காரர்கள் தேவனுடைய இராஜ்ஜியத்தை சுதந்தரிப்பதில்லை. (1கொரி. 5 : 10-11, 6 : 9-10, எபேசி. 5 : 5). பவுலும் தீமோத்தேயுக்கு பொருளாசையை வெறுக்க கட்டளையிட உத்தரவு பிறப்பிக்கிறார்(1தீமோ3:3). பொருளாசைக்காரர்கள் பெருகிப்போவது கடைசி காலத்தின் அடையாளமாயிருக்கிறது (2தீமோ 3: 2) இது கள்ளத்தீர்க்கத்தரிசி, கள்ளப்போதகர்களின் அடையாளமாயிருக்கிறது(11பேது. 2 : 14), பொருளாசை மற்ற பல பாவங்களையும் பிறப்பிக் கிறதாயிருக்கிறது. பொருளாசை கீழ்க் கண்ட பாவத்தை பிறப்பிக்கிறது.

1. விரோதத்தையும், கொலையையும் உண்டாக்குகிறது - (நீதி. 1:19; ஏசா. 56:11; எரே. 22:17).
2. வறுமையையும் கோபாக்கினையையும் உண்டாக்குகிறது - (நீதி. 11 : 24).
3. எதிர்ப்பையும், போராட்டத்தையும் உண்டாக்குகிறது. - (நீதி. 22:16; எரே. 22:17, மீகா. 2 : 2).
4. மறுதலிப்பை உண்டாக்குகிறது - (நீதி. 3 : 8-9).
5. அநீதியை உண்டாக்குகிறது - (ஏசா. 1 : 23; மீகா. 7 : 3).
6. பின் மாற்றத்தை உண்டாக்குகிறது. - (மீகா. 3 : 11).
7. பலனற்ற தன்மையை உண்டாக்குகிறது. -(மத். 13 : 22).
8. மனுஷனைத் தீட்டுப்படுத்துகிறதாயிருக்கிறது. - (மாற். 7 : 20)
9. சோதனையையும், இச்சையையும் உண்டாக்குகிறதாயிருக்கிறது- (1தீமோ. 6 : 9-11, 1யோவா. 2 : 15).
10. குறைந்த ஆயுசையும் மூர்க்கமான முடிவையும் உண்டாக்குகிறதாயிருக்கிறது -(எரே. 17:11;லூக்.12: 16-21)

பொருளாசையின் எடுத்துக்காட்டு:

1. ஏவாள் - விலக்கப்பட்ட மரத்தின் கனி (ஆதி. 3 : 6).
2. லோத்து - நிலங்கள் (ஆதி 13 : 10 -13).
3. பிலேயாம் - பரிசுகள் (2பேது. 2 : 15).
4. ஆகான் - பொருள்கள் (யோசு. 7 : 21)
5. ஆகாப் - திராட்சத்தோட்டம் (1 இரா. 21 : 2-16).
6. கேயாசி - காணிக்கை பொருள்கள் (2இரா. 5 : 20-27).
7. யூதாஸ்காரியோத்து - வெள்ளிக்காசு (மத். 26 : 15-16).
8. பெஸ்துஸ் - பணம் (அப். 24 : 26).
9. தேமா - இப்பிரபஞ்சம் (2தீமோ. 4 : 10).

ஆகையால் தேவனுடைய பிள்ளைகளே பொருளாசைக்கு விலகி யிருந்து உங்களைக் காத்துக் கொள்ளுங்கள்.

**பண ஆசை எல்லாத் தீமைக்கும் வேராயிருக்கிறது. சிலர் அதை இச்சித்து விசுவாசத்தை விட்டு வழுவி, அனேக வேதனைகளாலே தங்களை உருவக் குத்திக் கொள்கிறார்கள் ( 1 தீமோ. 6:10)**

# வேதபாடம்

(1 சாமுவேல். 7 : 1 முதல் 9 : 27 வரை)

தீர்க்கதரிசியாகிய சாமுவேலின் திருப்பணிவிடை:

இருபது நீடித்த ஆண்டுகளாய் சாமுவேல் ஜனங்களுக்குப் போதித்து ஜனங்களுக்கு பெரிய எழுப்புதல் உண்டாக்கிவரச் செய்தார் நியாயம் விசாரித்து வந்தார் கருத்தாய் தேவனுக்கு கீழ்ப்படிதலானது, எப்போதும் நிரந்தரமானது, ஆவிக்குரிய கனியை கொடுக்க உதவுகிறது; இதற்கு இருபது ஆண்டுகள் பிடித்தன. இந்த உயிர் மீட்சியின் அம்சங்களாவன. கடவுளைப் பற்றிய தேட்டம் 7 : 2,3, பாவத்தை அகற்றிவிடுதல், நியாயந்தீர்க்கப்பட்டு தவறுதல், திருத்தப்படுதல், உபவாச ஜெபம், முதலியவைகளே 1சாமு. 7:4-6. தண்ணீர் மொண்டு ஊற்றுதலானது மனந்திரும்புதலுக்கு ஓர் அறிகுறியாக இருந்தது தேவனிடமாக அவர்கள் திரும்பினதை சத்துரு பெலிஸ்தர்களுக்குள் புகுந்து உடனே எதிர்த்தான்

இஸ்ரவேலர்கள் மிஸ்பாவிலே கூடிவந்திருக்கிறார்கள் என்று பெலிஸ்தர் கேள்விப்பட்டபோது பெலிஸ்தரின் அதிபதிகள் இஸ்ரவேலுக்கு விரோதமாக எதிர்த்து வந்தார்கள். அதை இஸ்ரவேல் புத்திரர்கள் கேட்டு பெலிஸ்தரினிமித்தம் பயப்பட்டு என்று வாசிக்கிறோம். ஆனால் சாமுவேலின் ஊக்கமான வேண்டுதல் மேற்கொண்டதினால் சத்துரு முறியடிக்கப்பட்டான் தேவ ஜனங்கள் மேற்கொண்டார்கள். ஆனபடியினால் எபனேசர் என்ற ஜெய ஸ்தம்பத்தை ஞாபக ஸதம்பமாக நிறுத்தினார்கள் 'எபனேசர்' என்றால் ஒத்தாசையின் கல் என்று அர்த்தப்படும். சத்துருக்களுக்கு விரோதமாக தேவன் ஒத்தாசை புரிந்ததை பிற்காலத்தில் அவர்களுக்கு நினைப்பூட்ட இந்த ஸ்தம்பம் உதவினது (1சாமு. 7 : 12). 4ம் அதிகாரத்தில் கர்த்தருடைய பெட்டி பிடிக்கப்பட்டதற்கும், இந்த யுத்தத்திற்கும் எத்தனை வேற்றுமை பாருங்கள். இந்த இருபது வருட காலங்களில் மக்களின் ஆவிக்குரியதும், அறிவுக்கடுத்ததுமான வாழ்க்கை தரத்தை உயர்த்த பெரிதும் சாமுவேல் முயற்சி செய்தார் தீர்க்கத்தரிகளின் வேத பாடசாலையை அவர் நிறுவினார்

சாமுவேலின் குமாரர்கள் தங்கள் தகப்பனின் அடிச்சுவடுகளைப் பின்பற்றவில்லை. ஏலியின் புத்திரரைப்போல் சாமுவேலின் பிள்ளைகள் அவ்வளவு துன்மார்க்கராயிராவிட்டாலும் அவர்கள் அநீதியுள்ளவர்களும் நியாயாதிபதிகளாய் இருக்க அபாத்திரருமாயிருந்தனர். பொருளாசைக்கு சாய்ந்தார்கள்; பண ஆசை எல்லாத் தீமைக்கும் வேராயிருக்கிறது. அவர்களுடைய தப்பிதத்திற்காக ஆண்டவர் சாமுவேலைக் கடிந்து கொள்ளவில்லை. ஏனென்றால், எவ்வளவு கிறிஸ்தவ வளர்ப்பு இருப்பினும் ஒரு நல்ல தகப்பனுக்கு பொல்லாத பிள்ளைகளும் இருக்கக்கூடும். ஆனால், ஏமான் பாடகன் சாமுவேலின் உகந்த பேரனாக விளங்கினான் என்பதைக் கவனிக்க (1நாளா. 6 : 33). உபா 17 : 20-ல் ஒரு அரசனின் கடமையை அறிவிப்பதாக உள்ளது ஒரு இராஜாவை ஏற்படுத்த உத்தரவு இருந்தது ஆனால் ஜனங்கள் ஒருவனை கேட்ட நோக்கமானது தவறாக இருந்தது. தேவனுடைய சித்தத்தை நிறைவேற்றும் படிக்கு அல்ல, ஏனைய

தேசத்தார் போல் இருக்கவே அவர்கள் ஒரு இராஜா வேண்டுமென்று கேட்டார்கள். தங்களைச் சூழ உள்ள மக்களைப் போல வாழ ஆசிக்கும்படியான ஆபத்து கிறிஸ்தவர்களுக்கு நேரிடும் (யோ 7: 7) கிறிஸ்தவர்களாக இருப்பதால் நாம் சிறந்த பிரஜைகளாக விளங்கவேண்டும். ஆனால் தேசிய பண்பாடுகளோடு ஒத்துப்போகும் படிக்கு வரும் அழைப்பைக்குறித்து நாம் எச்சரிக்கையாயிருக்க வேண்டும். அது ஒரு வேளை தவறானவையோடு ஒப்புரவாகுதலாகும். சகல ஜாதிகளிலும் நீங்கள் எனக்கே சொந்த சம்பத்தாய் இருப்பீர்கள். எனக்கு ஆசாரிய இராஜ்யமும் பரிசுத்த ஜாதியுமாய் இருப்பீர்கள் என்று இறைவன் சொல்லியிருக்கிறார் (யாத். 19 : 5,6).

யேகோவாவை இராஜாவாக ஏற்காமல் புறக்கணித்து தள்ளினார்கள். தங்கள் பாவங்களுக்காக மனஸ்தாபப்பட்டபோது தேவன் அவர்களுக்கு நியாயாதிபதிகளை ஏற்படுத்தினதை அவர்கள் மறந்தனர். நீங்கள் என் சொந்த ஜனங்களாய் இருப்பீர்கள் என்று கடவுள் சொன்னார். ஜனங்களோ மற்ற ஜாதியாரைப் போல நாங்களும் இருக்க வேண்டுமென்றனர். அதை அவர்கள் அவ்வளவாக வற்புறுத்தி ஒரு சர்வாதிகாரிக்கு கீழ் அடங்க சம்மதித்தனர் ஆனால் சாமுவேல் அதற்கு இடங்கொடுக்கவில்லை. இராஜாவின் கடமைகளை அவர் வரைந்து வைத்தார். அதில் பிரதானமானது இராஜா தேவனுக்கு பயந்து நியாயப்பிரமாணத்தை கைக்கொள்ள வேண்டுமென்பதே. அவன் சர்வாதிகாரியாய் அல்ல, கடவுளுடைய உத்தரவின்படியே ஆளுகை செய்கிறவனாக இருக்க வேண்டும். எனவே கர்த்தரிடம் இருந்து திட்டமான கட்டளை பெற்று சவுலை இஸ்ரவேலின் முதல் மன்னனாக சாமுவேல் அபிஷேகஞ்செய்தார். தேவனுடைய நேரடியான சித்தத்திற்கும், அவர் இடங்கொடுக்கிற சித்தத்திற்கும் பெரும் பேதம் உண்டு என்பதை நாம் மனதில் இருத்த வேண்டும். இச்சமயத்தில் தேவன் ஒரு இராஜனை அங்கிகரிக்க வேண்டுமென்று ஆஞ்ஞாபிக்க வில்லை; அதாவது கட்டளையிடவில்லை. ஆனால் அவர்கள் ஒருவனை நியமித்துக்கொள்ள அனுமதி கொடுத்தார். தேவன் இடம் கொடுக்கிற சித்தமானது இரண்டாந்தரமாய் தான் இருக்கும். பூரண ஆசீர்வாதத்திலும் அது மிகவும் குறைவானதாகவே இருக்கும். பரீட்சைக்கு நிற்க துணிந்தவர்களுக்கு தேவன் தமது சிறந்த காரியங்களை வைத்திருக்கிறார் அந்த மேலானதை விரும்பாதவர்களுக்கோ மட்டமானதையே அருளுகிறார்.

இவர்கள் இராஜாவை தெரிந்து கொண்டது அவர்களுக்கு அவ்வளவு பிரயோஜனமாக இருக்கவில்லை என்பதை இராஜாக்களின் சரித்திரம் நமக்கு காண்பிக்கிறது. தாவீதைப் போன்ற நல்ல அரசர்கள் ஒரு சிலரே இருந்தனர். பெரும்பாலான இராஜாக்கள் தேவ துரோகிகளாய் துணிகரமுடையவர்களாய் இருந்தார்கள். நீ உனக்கு இராஜாவையும், அதிபதியையும் ஏற்படுத்த வேண்டுமென்றாயே, இப்போதும் உன்னுடைய எல்லாப் பட்டணங்களிலும் உன்னை இரட்சிக்கும் இராஜா எங்கே? உன் நியாயாதிபதிகள் எங்கே? நான் கோபத்திலே உனக்கு இராஜாவைக் கொடுத்தேன்; என் உக்கிரத்திலே அவனை எடுத்துக்கொண்டேன் என்கிறார் (ஓசியா. 13 : 10, 11). கடவுள் ஏற்பாடு செய்கிற தலைவருக்கு கீழடங்கி இருக்க வேண்டும். தாங்களாக தலைவர்களைத் தெரிந்து கொண்டால் அது அவர்களுடைய அழிவுக்கே போய் முடியும். இராஜாக்களினால் இஸ்ரவேலர்கள் கெட்டுப்போனதை இராஜாக்கள், நாளாகமப்

புஸ்தகங்களிலே நாம் பார்க்கலாம் அதோடு கூட சவுலின் முடிவு மிகவும் எச்சரிப்பான காரியமாகும்.

"அப்பொழுது கர்த்தர் சாமுவேலை நோக்கி: ஜனங்கள் உன்னிடத்தில் சொல்வதெல்லாவற்றிலும் அவர்கள் சொல்லைக் கேள்; அவர்கள் உன்னைத் தள்ளவில்லை, நான் அவர்களை ஆளாதபடிக்கு, என்னைத்தான் தள்ளினார்கள்" (1சாமு. 8 : 7)

(தொடரும்)

# விசுவாசம்

சென்ற இதழின் தொடர்ச்சி

ஒரு நாணயத்திற்கு இரண்டு பக்கம் இருப்பது போல, இந்த விசுவாசத்திற்கும் இரண்டு புறம் உண்டு. முதல் புறம், இயேசுகிறிஸ்துவின் மேல் வைக்கும் தேவன் அருளும் ஈவாகிய உயிருள்ள விசுவாசம். அப். 13 : 47,48 -ல் "நீர் பூமியின் கடைசி பரியந்தமும் இரட்சிப்பாயிருக்கும்படி உம்மை ஜாதிகளுக்கு ஒளியாக வைத்தேன் என்கிற வேதவாக்கியத்தின் படி கர்த்தர் எங்களுக்கு கட்டளையிட்டிருக்கிற படியினால் இப்படிச் செய்கிறோம் என்றார்கள் புறஜாதியார் அதைக் கேட்டுச் சந்தோஷப்பட்டு, கர்த்தருடைய வசனத்தை மகிமைப்படுத்தினார்கள். நித்திய ஜீவனுக்கு நியமிக்கப்பட்டவர்கள் எவர்களோ அவர்கள் விசுவாசித்தார்கள்"

இந்த உலகத்தில் பல விதமான ஊழியங்கள் மூலமாக கிறிஸ்து பிரசங்கிக்கப்படுகிறார். ஆனால் நித்திய ஜீவனுக்கு யார் நியமிக்கப்பட்டார்களோ அவர்களுக்கு இந்த விசுவாசம் அருளப்படுகிறது. இந்த விசுவாசத்தை உடையவர்கள், உயிருள்ள மட்டும் விசுவாசத்தைக் காத்துக் கொள்ள வேண்டும். இந்த விசுவாசத்தை உங்களை விட்டு நீக்கும்படி அல்லது இந்த விசுவாசத்திலிருந்து நீங்கும்படி மாம்சமும், உலகமும் போராடும். இந்த விசுவாசத்தை விட்டு தேவனுடைய பிள்ளைகள் ஒரு போதும் விழுந்து போகக் கூடாது, விலகிப்போகக் கூடாது, இழந்து போகக் கூடாது.

விசுவாசம் என்பதை அநேகர் புரிந்து கொள்வதில்லை. நமது வாழ்க்கையே விசுவாசத்தில் தான் அமைந்திருக்கிறது. கடையில் ஒரு பொருள் வாங்கும்போது விசுவாசத்தில் தான் வாங்குகிறோம். கணவனும் மனைவியும் ஒருவரை யொருவர் நம்ப வேண்டும். பெற்றோரும் பிள்ளைகளும் ஒருவரையொருவர் நம்ப வேண்டும். மாம்ச பிரகாரமாக இருக்கட்டும் அல்லது ஆவிக்குரிய பிரகாரமாக இருக்கட்டும். மனித வாழ்க்கை விசுவாசத்தில் தான் இருக்கிறது. ஒரு விவசாயி உழுது பயிரிடுகிறான் என்றால் நிச்சயமாக பலன் கிடைக்கும் என்ற விசுவாசத்தில் தான் செய்கிறான். மழை பெய்யச் செய்து விளையச் செய்கிறது தேவனே என்றாலும், விசுவாசத்துடன் தான்

விவசாயி தன் வேலையைச் செய்யவேண்டும். ஒரு டாக்டரிடம் சிகிச்சை பெறும்போது அவர் சரியாகத்தான் சிகிச்சை அருளுகிறார் என்று நம்புகிறோம். அவர் கொடுக்கும் மருந்துக்களை வாங்கி சாப்பிடுகிறோம் விஞ்ஞானிகளும் தங்களுக்கு முன்பாக கண்டுபிடிக்கப் பட்டவைகளை விசுவாசித்துத்தான், மேற்படி ஆராய்ச்சி செய்கிறார்கள். சாதாரணமாக நமது வாழ்க்கையில் இப்படிப்பட்ட மனிதர் களையெல்லாம் நம்பும்போது, தேவனை ஏன் நம்பக்கூடாது? தேவனை நம்பலாமா, வேண்டாமா என்று யோசித்தார்கள் என்றால் இதைப்போல முட்டாள்தனம் எதுவும் கிடையாது.

தேவனை, தேவனுடைய வார்த்தை யை நம்புவதே விசுவாசம். இந்த விசுவாசம் ஒரு மகா பெரிய சக்தி இது இறைவன் அருளுகிற ஈவாகும். இந்த விசுவாசத்தி னால் அதிசயங்களையும், அற்புதங்களை யும் செய்கிறதும், பற்பல விதமான கிரியைகளை நடப்பிக்கிறதும் விசுவாசத் தின் அடுத்தபுறமாகும். இந்த விசுவாசத்தில் வளர்ச்சியடைய வேண்டும். 1கொரி. 12 : 8,9,1-ல் இந்த விசுவாச வரம் பரிசுத்த ஆவியினால் அளிக்கப் பட்டிருக்கிறது என்று பார்க்கிறோம். 1கொரி. 13 : 2-ல் 'நான் தீர்க்கதரிசன வரத்தை உடையவனாயிருந்து, சகல இரகசியங் களையும், சகல அறிவையும் அறிந்தாலும், மலைகளைப் பேர்க்கத்தக்கதாகச் சகல விசுவாசமுள்ள வனாயிருந்தாலும், அன்பு எனக்கிரா விட்டால் நான் ஒன்றுமில்லை' என்று எழுதியிருக்கிறது. ஸ்தேவான் விசுவாசத்தினாலும் பரிசுத்த ஆவியி னாலும் நிறைந்தவனாயிருந்தான். பர்னபாஸ் விசுவாசத்தினாலும் பரிசுத்த ஆவியினாலும் நிறைந்தவனாய், நல்லவனாய் இருந்தான். ஆனபடியினால் அநேகர் கர்த்தரிடமாய்ச் சேர்க்கப் பட்டார்கள் என்று அப் 11 : 24-ல் எழுதியிருக்கிறது இது விசுவாசமாகிய அடுத்த பக்கம். விசுவாசிக்கிறவர்களால் எல்லாம் கூடும் என்று இயேசு சொன்னார். இது விசுவாசத்தின் வர்த்தனை. ஒன்று இறைவனை அறிகிற விசுவாசம். இது இறைவன் அருளுகிற மகா பெரிய ஈவாகும். மற்றொன்று வேதாகமத்தை விசுவாசித்து, தேவனை விசுவாசித்து, தேவனுடைய வார்த்தையை படித்து விசுவாசித்து, விசுவாசத்திலே வளர்ச்சி யடைகிறதாகும். IIதீமோ 4 : 7 ல் 'நல்ல போராட்டத்தைப் போராடினேன், ஓட்டத்தை முடித்தேன், விசுவாசத்தைக் காத்துக்கொண்டேன்"

இரட்சிப்புக்கேற்ற விசுவாசம் உண்டு என்று கண்டு, நீ எழுந்து நட என்று பவுல் சொன்னார். இந்த இரட்சிப்புக் கேற்ற விசுவாசம், தேவன் அருளும் ஈவாகும். இந்த விசுவாசம் உடையவர்க ளெல்லாம் பாக்கியவான்களும், பரிசுத்தவான்களும், பரிசுத்தவாட்டி களுமாக இருக்கிறார்கள் ஆம், மனித வாழ்க்கையே விசுவாசத்தினால் தான் நடைபெறுகிறது என்றால், விசுவாசி களாகிய நாம் தேவனையும், தேவனுடைய வார்த்தைகளையும், அவருடைய நியமங்களையும், விசுவாசிக்கிறது எவ்வளவு பெரிய அவசியமான, எளிதான காரியம். மனிதனை நம்புகிறோம், டாக்டரை நம்புகிறோம், மருந்து கடைக்காரரை நம்புகிறோம்; பிரயாணத் தில் விபத்துக்கள் நேரிடலாம். அதற்காக நாம் பிரயாணப்படாமல் இருக்க முடியாது ஆனால் மனித வாழ்க்கை விசுவாசத்தில் தான் இருக்கிறது. எனவே, தேவனை விசுவாசியுங்கள், அவருடைய

வார்த்தையை விசுவாசியுங்கள். பவுல் பேசுகிறதை உற்றுக் கேட்டுக் கொண்டிருந்தான், "இரட்சிப்புக்கேற்ற விசுவாசம்" அவனுக்கு உண்டென்று, பவுல் கண்டார்.

கிறிஸ்து இரட்சகர் நமக்காக ஆயத்தம் பண்ணின புண்ணிய பலன்களை பெற்றுக்கொள்கிற வகைக்கே விசுவாசம் என்று பெயர். இந்த விசுவாசத்தை தேவனுடைய மக்கள் தெளிவாக பற்றிக்கொள்ள வேண்டும் ஒரு நாமத்தையோ, உபதேசத்தையோ, கொள்கையையோ விசுவாசிக்கிறது அல்ல. கிறிஸ்து இயேசுவினால் ஆயத்தப் படுத்தப்பட்டிருக்கிற புண்ணியங்களை பெற்றுக்கொள்ளும் வகைக்கே விசுவாசம் என்று பெயர். யோவா. 3 : 16-ல் 'தேவன், தம்முடைய ஒரேபேறான குமாரனை விசுவாசிக்கிறவன் எவனோ அவன் கெட்டுப்போகாமல் நித்திய ஜீவனை அடையும்படிக்கு, அவரைத் தந்தருளி, இவ்வளவாய் உலகத்தில் அன்புகூர்ந்தார்' என்று வாசிக்கிறோம். யோவான். 3 : 15-ல் 'தன்னை விசுவாசிக்கிறவன் எவனோ அவன் கெட்டுப்போகாமல் நித்திய ஜீவனை அடையும்படிக்கு, உயர்த்தப்பட வேண்டும்' என்று இயேசு சொன்னார். நமக்காக தியாகம் செய்த ஒரு ஆண்டவர் இருக்கிறார். ஆனால் வெளியே உள்ள மதங்களிலே, கட்சிகளிலே அவர்கள் கெட்டுப் போகாமல் உய்வடையும் படியாக அவர்களுக்காக தியாகம் செய்த ஒரு ஆள் கிடையாது; ஒரு மாதிரி கிடையாது தன்னை விசுவாசிக்கிறவன் கெட்டுப் போகாமல் நித்திய ஜீவன் அடையும் படிக்கு தான் உயர்த்தப்பட வேண்டும் என இயேசு சொன்னார். அப்படியே அவர் நமக்காக உயர்த்தப்பட்டார். அவரை விசுவாசிக்கிறவர்கள் கெட்டுப் போகாமல் நித்திய ஜீவனை அடையும் படிக்கு தேவன் தன்னை தியாகம் செய்தார். அந்த இரட்சிப்பை பெற்றுக் கொள்ள அவரை விசுவாசித்து, கீழ்ப்படிந்து மனந்திரும்பி ஞானஸ்நானம் பெற்றுக் கொள்ள வேண்டும் (மாற். 16 :16), இரட்சிக்கப்பட அவரை விசுவாசிக்க வேண்டும் (அப். 16 :30,31).

யோவா. 3:18-ல் "அவரை விசுவாசிக்கிறவன் ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்படான்" என்று எழுதியிருக்கிறது நீ இயேசு கிறிஸ்துவை விசுவாசித்தும், இந்த இரட்சிப்பைப் பெற்றுக்கொள்ள வில்லை என்றால், உன்மேல் ஆக்கினை த் தீர்ப்பு கூறப்பட்டாகிவிட்டது; ஏற்ற காலத்தில் அது நிகழும். கிறிஸ்து இயேசுவைப் பற்றி கேள்விப்பட்டும், ஏற்றுக்கொள்ளாதவர்கள், ஞானஸ்நானம் பெறாதவர்கள் ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்பட்டாயிற்று என்று மாற்கு. 16 : 16-ல் வாசிக்கிறோம். உலகத்திலுள்ள எல்லாருக்காகவும் இயேசு இரத்தம் சிந்தி மரித்திருக்கிறார். எல்லாருக்கும் விடுதலை உண்டு. ஆனால் கிறிஸ்து இயேசுவாகிய இந்த விடுதலையை ஏற்றுக்கொள்ளாதது நிமித்தம், அவர்கள் நரகத்துக்குப் போகப்போகிறார்கள். இன்றைக்கு உலகம் கிறிஸ்துவை விசுவாசிக்காதது நிமித்தம், ஏற்றுக்கொள்ளாததினிமித்தம் தங்களுக்குக் கொடுக்கப்படுகிற விடுதலையை, பாவமன்னிப்பை, அவர்களுக்குக் கொடுக்கப்படுகிற ஆசீர்வாதத்தை, சுதந்திரத்தை, பரலோகத்தை அவர்கள் வேண்டாமென்று, அவர்கள் கிறிஸ்துவை விசுவாசிக்காதது நிமித்தம் நரகத்திற்குப் போகப்போகிறார்கள். இது திட்டமும் சத்தியமுமான காரியமாகும். ஏசா. 28: 16-ல் விசுவாசிக்கிறவன் பதறான் என்று கூறப்பட்டுள்ளது. ஏசாயா 45 :22-ல் 'பூமியின் எல்லையெங்குமுள்ளவர்களே,

என்னை நோக்கிப்பாருங்கள்; அப்பொழுது இரட்சிக்கப்படுவீர்கள்; நானே தேவன், வேறொருவரும் இல்லை'. உலகத்தில் வேறு ஒருவரால் இரட்சிப்பு இல்லை, தெய்வீக சுகம் இல்லை, பாவத்திலிருந்து விடுதலை கிடையாது, 'சமாதானம் கிடையாது, இயேசுவாலன்றி வேறு ஒருவராலும் முடியாது.

விசுவாசம் மகா பெரிய அருள் (யோவா. 6: 40). இந்த உயிருள்ள விசுவாசத்தை நாம் பற்றிக்கொள்ள வேண்டும். விசுவாசம் என்றால் என்ன? "தேவன் மேலுள்ள அன்புள்ள நம்பிக்கை" என்று அர்த்தமாகும். இயேசு கிறிஸ்துவை ஏற்றுக்கொள்வதும், அங்கிகரிக்கிறதும், அவருக்கு கீழ்ப்படிவதும் அதில் அடங்கியிருக்கிறது. விசுவாசமென்றால் நம்பி, பற்றிக் கொண்டு, கீழ்ப்படிந்து, அவரைச் சார்ந்து கொள்கிறது; இது விசுவாசத்தில் அடங்கியிருக்கிறது. மெய்யான விசுவாசம் என்றால் என்ன? அந்த விசுவாசம் கெட்ட நம்பிக்கையை விட்டு, தேவ கிருபையை விரும்பி, அவருடைய பாடு மரணத்தை ஏற்றுக் கொள்வது ஆகும்.

என் கர்த்தராகிய கிறிஸ்து இயேசுவை அறிகிற அறிவின் மேன்மைக்காக எல்லாவற்றையும் நஷ்டமென்று எண்ணிக் கொண்டிருக்கிறேன் (பிலி. 3 : 7,9,11). தேவனுடைய நீதிதான் நம்மை அலங்கரிக்கும், பூரணப்படுத்தும். பாவ மனிதன் செய்யும் எந்த நற்கிரியையும் அங்கிகரிக்கப்படுவதில்லை. 'கிறிஸ்துவுடனேகூடச் சிலுவையிலறையப் பட்டேன்; ஆயினும், பிழைத்திருக்கிறேன்; இனி நான் அல்ல, கிறிஸ்துவே எனக்குள் பிழைத்திருக்கிறார்; நான் இப்பொழுது மாம்சத்தில் பிழைத்திருக்கிறதோ, என்னில் அன்பு கூர்ந்து எனக்காகத் தம்மைத்தாமே ஒப்புக் கொடுத்த தேவனுடைய குமாரனைப் பற்றும் விசுவாசத்தினாலே பிழைத்திருக்கிறேன் (கலா. 2 : 20) 'தேவனால் பிறப்பதெல்லாம் உலகத்தை ஜெயிக்கும்; நம்முடைய விசுவாசமே உலகத்தை ஜெயிக்கிற ஜெயம்' (1யோவா 5:4). இந்த விசுவாச வரத்தை உடையவர்கள் மிகவும் பாக்கியவான்கள் ஏனெனில் இது மெய் தேவனிலே வைக்கிற விசுவாசம். எபி. 11 : 33-ல் 'விசுவாசத்தினாலே அவர்கள் ராஜ்யங்களை ஜெயித்தார்கள், நீதியை நடப்பித்தார்கள், வாக்குத்தத்தங்களைப் பெற்றார்கள், சிங்கங்களின் வாயை அடைத்தார்கள்' என்று கூறப்பட்டுள்ளது.

இறைவன் நமக்காக சகலத்தையும் ஏற்படுத்திவைத்துள்ளார் என்று நம்ப வேண்டும். மனிதன் தோன்றுவதற்கு முன்பே உலகம் உண்டாக்கப்பட்டது. பின்பு மனிதன் உண்டாக்கப்பட்டான். உலகத்தை மாத்திரமல்ல கிறிஸ்துவை நமக்காக தந்துள்ளார். "தம்முடைய சொந்த குமாரனென்றும் பாராமல் நம்மெல்லா ருக்காகவும் அவரை ஒப்புக்கொடுத்தவர், அவரோடே கூட மற்ற எல்லாவற்றையும் நமக்கு அருளாதிருப்பதெப்படி?" ரோ.8: 32. தேவன் மேல் அன்புள்ள நம்பிக்கை கொள்ள வேண்டும் அதுவே விசுவாசம். தேவன் மேல் கொண்ட அன்பிற்கு பக்தி என்று பெயர். பக்தியானது விசுவாசத்திற்கு மேலானது. ஆபிரகாமின் குமாரனை பலியிட விரும்பாத இறைவன் நம்மை இரட்சிக்கத் தம்முடைய ஒரே பேரான குமாரனை பலியிட்டார். குமாரனின் அன்பு எவ்வளவு பெரியது தன்னை விசுவாசிக்கிறவன் கெட்டுப் போகாமல் நித்திய ஜீவனை அடைய தான் நிவாரணம் செய்ய வேண்டும், தான் பலியாக வேண்டும் என்று பலியானார்.

ஆதலால் தன்னை அறிகிறதும்,

கிறிஸ்துவை அறிகிறதும், தேவனை அறிந்து துன்பத்தைச் சகித்து மரணபரியந்தம் அவரிடத்தில் நிலைநிற்கிற தைரியமும் இந்த விசுவாசத்தில் அடங்கும். இந்த விசுவாசத்திற்காக நாம் எதையும் தியாகம் செய்யலாம். உலகத்தில் கட்சிகளுக்காக, க ழ க ங் க ளு க் க ா க மொட்டையடிக்கிறார்கள், தீக்குளிக் கிறார்கள், என்னென்னமோ செய்கிறார்கள். கிறிஸ்துவுக்காக பாடுபட, சகிக்க, உபத்திரவங்கள் அடைய யார் முன் வருவார்கள். அப்படிப்பட்டவர்கள் இன்று தேவையாய் இருக்கிறது. இந்நாட்களில் ஊழியம் என்றால் உலகப்பிரகாரமாக சுபிட்சமாய் வாழ்வதே ஊழியம் என்று சொல்கிறார்கள். எந்த நிலையிலும், சாதிக்க, நிலைநிற்க நமக்கு தைரியமுண்டு. மரணபரியந்தம் நிலைநிற்கும் தைரியம் இந்த விசுவாசத்தில் அடங்கியுள்ளது.

இந்த விசுவாசத்தின் பலனாய் மனிதனுக்கு கிடைப்பது:-

1. பாவ மன்னிப்பு:

பாவ மன்னிப்பு இயேசுகிறிஸ்துவின் இரத்தத்தாலன்றி பாவ மன்னிப்பு உலகத்தில் எந்த இடத்திலும் கிடையாது. நீங்கள் மனந்திரும்பி, இயேசுவின் இரத்தத்தை விசுவாசித்து, பாவ அறிக்கை செய்து மன்னிப்புக் கேட்டால் மன்னிக்க கர்த்தர் ஆயத்தமாயிருக்கிறார். பாவிகளுக் காக மாத்திரமல்ல, விசுவாசிகளாய் இருந்தும் தவறு செய்கிறவர்கள் அந்த இரத்தத்தினால் மீட்பைப் பெறுகிறார்கள். இயேசுவின் இரத்தமே நம் மனச்சாட் சியை சுத்திகரிக்கும். வேறு எந்த விதத்திலும் மனிதன் சுத்திகரணம் அடைய முடியாது. இந்த உலகத்தில், பாவிகளும், ரிஷிகளும் கடுந்தவம் போன்ற பல காரியங்களைச் செய்து பாவத்திலிருந்து மன்னிப்பு பெற முயற்சி செய்கிறார்கள். ஆனால் அவர்களுக்கு பாவத்திலிருந்து விடுதலை, சமாதானம் கிடைக்கப் போவதில்லை. ஆகையால் மெய்நிலை யைத் தேடுகிறவர்கள், அந்த மெய்நிலை, அந்த பிரம்மம் அங்கே இல்லை, இங்கே கிறிஸ்துவண்டை உள்ளது என்று வந்து கொண்டிருக் கிறார்கள்.

2. பலமான ஆகாரம் (எபிரே. 5 : 13)

குழந்தைகளுக்கு முதலாவது பால், சிறிது வளர்ச்சியடைந்த பின் கீரை பருப்போடு சோறும் அதன் பின் காய்கறிகளும் இன்னும் வளர்ச்சி யடைந்தபின் மாமிச ஆகாரம் கொடுத்து வளர்க்கிறோம். அப்படியே தேவ வசனமாகிய பால், உச்சிதமான கோதுமை, கன்மலையின் தேன் பின்பு இயேசு கிறிஸ்துவினுடைய இரத்தமும், மாம்சமும் என்பதாகும். இப்படியே படிப்படியாக ஆகார விதிகள் வேதாகமத்திலுள்ளது. சிலருக்கு மனந்திரும்புதலுக்கு அந்த பால் மட்டுமே கொடுக்கமுடியும். வேறே ஒன்றும் கொடுக்க முடியாது. பயிற்சியினால் முயற்சி செய்கிற தேவனு டைய நன்மையும், பிரியமும், பரிபூரண மானது என்று எழுதப்பட்டுள்ளது (ரோமர். 12 : 2).

"பின்பு சாமுவேல் சமையற் காரனைப் பார்த்து: நான் உன் கையிலே ஒரு பங்கைக் கொடுத்துவைத்தேனே, அதைக் கொண்டுவந்து வை என்றான். அப்பொழுது சமையற்காரன், ஒரு முன்னந்தொடையையும், அதனோடிருந் த்தையும் எடுத்துக்கொண்டு வந்து,

அதை சவுலுக்கு முன் வைத்தான்; அப்பொழுது சாமுவேல்: இதோ, இது உனக்கென்று வைக்கப்பட்டது, இதை உனக்கு முன்பாக வைத்துச் சாப்பிடு; நான் ஜனங்களை விருந்துக்கு அழைத்தது முதல், இது வரைக்கும் இது உனக்காக வைக்கப் பட்டிருக்கிறது என்றான். அப்படியே சவுல் அன்றையதினம் சாமுவேலோடே சாப்பிட்டான்" (1சாமு. 9 :23,24).

நமக்குத் தெரியாத உபதேசமும், வெளிப்படுத்தலும் புதிய எருசலேமுக்கு உண்டாயிற்றா என்று இன்று கிறிஸ்தவர்கள் நினைக்கிறார்கள். அந்த கிறிஸ்தவர்களுக்கு அது ஜீரணமாகாது, அந்த பலமான ஆகாரம் அவர்களுக்கு கொடுக்கப்பட முடியாது, வெளிப்படுத்தல் உண்டாகாது, அவர்கள் ஜீரணிக்க முடியாது. அதற்கென்று தெரிந்து கொள்ளப்பட்ட பரிசுத்தவான்களுக்கு, அந்த குறித்த ஸ்தானத்திற்காக, அந்த முதற்பலனாயிருக்கும்படியாக வருகைக்காய் தேவனால் தெரிந்து கொள்ளப்பட்ட மக்களுக்காய் இந்த உன்னதமான வெளிப்பாடும், இந்த ஆகாரமும் அருளப்படும். இல்லையெனில் பாலையே குடித்துக் கொண்டிருப்பார்கள். அவர்கள் பலமான ஆகாரம் சாப்பிடும் அளவுக்கு வளரவில்லை.

புத்திர சுவிகாரம்:

தேவனை ஏற்றுக் கொள்வதினால் தேவனுடைய பிள்ளைகளாகும் புத்திர சுவிகாரத்தைப் பெற்றோம். நாம் பிள்ளைகள் தான் என்பதற்கு ஆதாரமாக தேவன் தம்முடைய ஆவியை அனுப்பினார். ஆனபடியால் அப்பா, பிதாவே என்று தேவனை அழைக்கிறோம்.

பரிசுத்தமாகுதல்:

பிரதிஸ்டை செய்தல் பரிசுத்தமாகுதல் என்றால் தேவனுக்காக , நாம் முதல்நிலை நாம் பரிசுத்தமடைந்து கொண்டு இருக்கிறோம். தேவனுடைய பிள்ளைகள் ஆவிக்குரிய ஜீவியத்தில் போராடிக் கொண்டு இருக்கிறீர்கள் என்றால் வளர்ந்து கொண்டு இருக்கிறீர்கள் என்று அர்த்தம். நீங்கள் அழைக்கப்பட்ட அழைப்புக்கு பாத்திரவான்களாய் நடக்க வேண்டும். தேவன் மேலுள்ள விசுவாசத்தில் இருக்கிற மக்கள் பூரண நிலையையடைவார்கள்.

நித்திய ஜீவனாகிய இரட்சிப்பு:-

நாம் இரட்சிக்கப்பட்டு நித்திய ஜீவனை பெற்றிருக்கிறோம். "குமாரனை உடையவன் ஜீவனை உடையவன், தேவனுடைய குமாரன் இல்லாதவன் ஜீவன் இல்லாதவன்" 1யோவா. 5 : 12. குமாரன் மேல் விசுவாசமாயிருக்கிற நமக்கு நித்திய ஜீவன் உண்டு. ஒருவன் இரட்சிக்கப்படும்போது ஏராளமான ஆசீர்வாதங்களும், ஸ்தானங்களும், வெகுமானங்களும் அவனுக்கு உண்டாகிறது. ஒரு மனிதன் இரட்சிக்கப்படும் போது முப்பத்தாறுக்கும் அதிகமான ஆசீர்வாதம் அவனுக்கு உண்டாகிறது.

பிதாவாகிய தேவன் தம்முடைய குமாரனாகிய இயேசு கிறிஸ்துவை அனுப்பி ஏழைகளாகிய நமக்கு எல்லாவற்றையும் ஆயத்தப்படுத்தி வந்து ஏற்றுக்கொள்ளுங்கள், புசியுங்கள், குடியுங்கள் என்று சொல்லுகிறார். நாம் கர்த்தராகிய இயேசுவைப் பார்க்கும் போது பிழைப்போம் (எண். 21:8,9). நாம் தேவனை நோக்கிப் பார்த்து அவரை

ஏற்றுக்கொள்ள வேண்டும். அவருக்கு கீழ்ப்படிந்து ஆசீர்வாதம் பெற்றுக் கொள்ள வேண்டும். இதுவே விசுவாசம்.

தேவனே சகலத்தையும் ஆயத்தம் பண்ணியிருக்கிறார். நாம் செய்யத்தக்கது ஒன்றுமில்லை. பாவமில்லாத இயேசுவை நமக்குக் கொடுத்துவிட்டார். அவருக்குள்ளே சகலமும் இருக்கிறது. நம்மிடத்தில் தேவன் விசுவாசத்தை மட்டும் எதிர்பார்க்கிறார். கடவுள் வேறு, நாம் வேறு. நாம் அவருடைய கிரியையின் சிருஷ்டியாகும். நம்மில் பாவத்தன்மையும் நம்முடைய சுபாவத்திலே பெலவீனமும் குறைவும் இருக்கிறதினால் தேவனைச் சார்ந்து, தேவனுடைய பரிசுத்தவான்களைச் சார்ந்து ஜீவிக்க வேண்டும் அல்லாமல் பாவத்தில் சார்ந்திருந்தால், பாதாளத்திற்கே சென்றுவிடுவோம் ஆகவே எதற்காக சபை ஐக்கியம்? எதற்காக சபை கூடி வருகிறோம்? எதற்காக ஆராதனை? நம்முடைய பாவத்தன்மையில் இறைவனன்றி ஒருபோதும் உய்வெய்ய முடியாது என நமக்கு உணர்த்துகிறது. ஆகவே இறைவனை எப்போதும் சார்ந்து வாழ்வோமாக. மனிதன் தன்னுடைய சாயலை, குமாரனுடைய சாயலை அடைந்து கொள்ளும்படியாக இறைவன் இயேசுகிறிஸ்து மூலமாய் அவனை அழைத்து இருக்கிறார். அந்த குமாரனுடைய சாயல் குமாரனுக்கு ஒப்பாய் மாற முடியும்; அதற்காக நாம் அழைக்கப்பட்டு இருக்கிறோம். நாம் முதலாவது மனித நிலையை அடைகிறோம். மனித நிலையிலிருந்து தெய்வீக நிலை அடைந்து குமாரனைப்போல் ஆகப் போகிறோம். அப்படி குமாரனைப்போல் ஆகும் நிலை தான் மனித வாழ்க்கையின் உயர்ந்த நிலையாகும்.

குமாரத்துவம்:

குமாரத்துவம் என்றால் அப்பா பிதாவே என்று சொல்லி தேவனுக்கும் நமக்கும் இடையே உறவு நிலையை உருவாக்கி, உயந்த நிலையில் தேவனோடு ஐக்கியப்படும் நிலை. பிதாவின் சித்தம் செய்வதும், பிதாவுக்கு பிரியமாயிருப்பதும், பிதாவை சேவிக்கிறதும், பிதாவின் சித்தம் நிறைவேற்றி முடிக்கிறதுமான நிலைக்குள்ளாக மனுமக்கள் விசுவாசிகளாக மாற வேண்டும். இந்த குமாரத்துவ நிலையை அடையும் போது, அப்பா பிதாவே என்று கூப்பிடுகிற உறவு உண்டாகிறது. அந்த தெய்வீக ஐக்கியம் தான் மிக முக்கியமான உறவு. தேவனே நமக்கு சகலத்தையும் ஆயத்தம் பண்ணியிருக்கிறார். பாவிகளான நம்மிடத்தில் தேவன் வேறு எதையும் கேட்கவில்லை, விசுவாசத்தையே கேட்கிறார்.

கிறிஸ்துவே நமக்காக எல்லாவற்றிற்காகவும் முன் நிற்கிறவராயும், நமக்காக பரிந்து பேசுகிறவராயும் இருக்கிறார். நம்முடைய பிரதிநிதியாய், நமக்காக அவர் அங்கே நிற்கிறார். பரிசுத்தாவியானவர் நமக்காக பரிந்து மன்றாடுகிறார். இன்று உலகத்தில் மக்கள் எதை விசுவாசித்தாலும் முக்தியடைய முடியும் என நம்புகிறார்கள். அவர்கள் விசுவாசிக்கிறது அவர்களை இரட்சிக்காது. வெளியே இரட்சகர் இல்லை. நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவே இரட்சகர். இரட்சிப்பின் அதிகாரம் முழுவதும் அவருக்கு கொடுக்கப்பட்டுள்ளது. அவர் இரட்சிப்பின் அதிபதியாய் நமக்காக அபிஷேகிக்கப்பட்டுள்ளார் (எபி7 : 25). நம்மை முற்று முடிய இரட்சிக்க வல்லவராயுமிருக்கிறார்.

நாம் கிறிஸ்துவை விசுவாசிக்கிறது மாத்திரமல்ல, கிறிஸ்துவுக்காக சாதிக்க வேண்டும். நன்மை செய்ய வேண்டும், நற்கிரியை செய்ய வேண்டும். நம்முடைய ஆவி, ஆத்துமாவை பரிசுத்தப்படுத்தி, அவருடைய கையில் ஒப்படைக்க வேண்டும் அப்போது தமக்குப் பிரியமான கருவியாய் தேவன் நம்மை எடுத்து உபயோகிப்பார் தேவன் தம்மை வெளிப்படுத்தும்படியாக நம்மையும் திருச்சபையையும் ஏற்படுத்தியுள்ளார் உலகத் தோற்றத்துக்கு முன்பே திட்டமிட்டு சபையை எழுப்பியுள்ளார். உயிருள்ள விசுவாசிகளாய், விசுவாசத்தில் வல்லவர்களாகி, சகல விசுவாசமுடையவர்களாய் விசுவாசத்தினால் தேவன் மூலம் ஆயத்தப்படுத்தப்பட்டுள்ள சகல புண்ணிய பலன்களையும் ஏற்றுக் கொண்டு இந்த உலகத்தில் தேவனை, கிறிஸ்துவை, கிறிஸ்தவத்தை இந்த உலகத்திற்கு காண்பிப்போமாக.

## புதிய எருசலேம் சபையின் புதிய கிளைகள் ஆரம்பம்

*31.10.99 அன்று திருச்சியில் மனப்பாறை அருகே உள்ள மஞ்சம்பட்டி என்ற இடத்தில் புதிய எருசலேம் சபையின் புதிய கிளையும்,*

*1.11.99 அன்று தஞ்சையில் கள்ளப்பெரம்பூர் என்ற இடத்தில் புதிய எருசலேம் சபையின் புதிய கிளையும்,*

*28.12.99 அன்று மும்பையில் அம்பர்நாத் என்ற இடத்தில் புதிய எருசலேம் சபையின் புதிய கிளையும் ஆரம்பிக்கப் பட்டது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.*

## ஞானஸ்நானம்

*1 - 11 - 99 அன்று தஞ்சை மாவட்டம் கள்ளப்பெரும்பூர் புதிய எருசலேம் சபை கிளையில் பதினொரு பேர்களும் 8 - 12 - 99 அன்று குஜராத் பாலசினூர் கிளைசபையில் எட்டு பேர்களும் 1 - 1 - 2000 நாகர்கோவில் கிளை சபையில் இருபத்தைந்து பேர்களும் 26 - 1 - 2000 அன்று பம்பாய் தலைமை சபையில் எட்டுப் பேர்களும் ஞானஸ்நானம் பெற்று திருச்சபையில் அங்கமானார்கள் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள்கிறோம்.*

## பரிசுத்த விவாகம்

| மணமகன் | மணமகள் | நாள் | இடம் |
|---|---|---|---|
| 1. Bro. எட்வின் ஜேக்கப் | ஈ. கிரேஸி | 5-1-2000 | சேலம் |
| 2 Eld. Bro. ஜெயராஜ் | ந. எலிசபெத் | 26-1-2000 | பள்ளப்பட்டி |

# வாலிபனே உனக்கு

நவீன கால வாலிபனுக்கு நியாயாதிபதியாகிய சிம்சோனின் வாழ்க்கைச் சரித்திரம் ஒரு நல்ல படிப்பினையாகும். அவர் ஒரு நியாயாதிபதியாய் இருபது வருடம் இஸ்ரவேலை நியாயம் விசாரித்தார். அவருடைய வாழ்க்கை சரித்திரத்தைப் பற்றி 4 அதிகாரங்களிலும், அவர் நியாயம் விசாரித்த காரியத்தைப்பற்றி எழுதப் பட்டவைகள் மிகக் குறைவே. ஆனால் பாவத்தில் விழுந்து அவருடைய ஆவிக்குரிய வல்லமையை இழந்த எழுத்துக்கள் அதிகம்.

அவர் ஒரு நல்ல வாலிபனாய், நியாயாதிபதியாய் இஸ்ரவேலை திறம்பட ஆட்சி செய்திருக்கக் கூடும். ஆனால் அவருடைய இச்சை, பாவத்தினால் வல்லமை இழந்து பெலிஸ்தருடைய பரிகாசத்திற்குள்ளாகி இறந்தார் என்று எழுதப்பட்டிருக்கிறது. பாவ ஈர்ப்பினால் அவருடைய வல்லமையின் இரகசியத்தை ஒரு பெண்ணுக்கு வெளிப்படுத்தி சக்தியிழந்தார். அவருடைய வாழ்க்கையில் அவருடைய தாயைத் தவிர மூன்று பெண்கள் இடம்பெற்றனர். மூவரும் விருத்தசேதனம் இல்லாத அந்நியர்களின் புத்திரிகளே. திம்னாத்தில் பெலிஸ்தரின் குமாரத்தியை முறையாக திருமணம் முடித்தார். பின் காசாவிலுள்ள வேசியினிடத்தில் சென்றார். பெலிஸ்தர்கள் அவரைக்கொல்ல எத்தனித்திருக்கும்போது கர்த்தர் அவரை நடு ராத்திரியில் எழுப்பி தப்புவித்தார். பின்பு சோரேக் ஆற்றங்கரையிலுள்ள தெலீலாள் என்ற ஸ்திரீயோடு சிநேகமாயிருந்தார். பெண்கள் பற்றிய காரியங்களில் சிம்சோன் கர்த்தரிடத்தில் ஆலோசனை கேட்காதவராய் இருந்தார். தெலீலாள் உண்மை யில்லாதவளாய் பண ஆசையுள்ளவளாய் ஐந்து பெலிஸ்திய பிரபுக்கள் கொடுக்கும் 5500 வெள்ளிக் காசின் மேல் ஆசை கொண்டு தன் சிநேகிதனை காட்டிக்கொடுக்கிறவளாய் இருந்தாள். சோரேக் என்பதற்கு தெரிந்து கொள்ளப்பட்ட உன்னதமான திராட்ச ரசம் என்று அர்த்தமாம். சோரேக் என்பதின் அர்த்தம் எப்படியோ அப்படியே தெலீலாள் சிம்சோனை மயக்குகிறவளாய், இரகசியத்தைக் கறக்கிறவளாய் இருந்தாள்.

தெலீலாளின் அழகில் மயங்கி அவளுடைய மடியில் படுத்து உண்மையையெல்லாம் வெளிப் படுத்துகிறவராய் சிம்சோன் விளங்கினார். அவருடைய தலைமயிர் சிரைக்கப்பட்டு வல்லமை அவரை விட்டு புறப்பட்டுச் சென்றதையும் அறியாமல், உணர்வில்லாமல் தெலீலாளின் மடியில் படுத்துக் கொண்டிருக்கிறவராய் இருந்தார். இந்நாளிலும் அவ்விதமாகவே தங்கள் வல்லமை இழந்து பாவப் பெண்களின் மத்தியில் உலாவிக் கொண்டிருக்கிற வாலிபர்கள் உண்டு. விபச்சார பாவத்தில் ஈடுபடுகிறவர்கள், கண்களின் இச்சையில் நிலைத்திருக் கிறவர்களின் ஆத்மீகக் கண்கள் குருடாக்கப்படும், (சிம்சோனைப் போல), ஆத்மீக வல்லமை எடுபடும் வல்லமை யில்லாதவர்களாய், பதராய் உலகத்தில் ஆத்மீக உலகில் சுற்றித் திரிவார்கள். அவர்களால் ஆவிக்குரிய

உலகத்திற்கு ஒரு நன்மையும் கிடையாது சிம்சோனின் கண்கள் குருடாக்கப்பட்டு, மாவரைக் கிறவராய் மற்றவர்களின் பரியாசத்திற் குரியவராய் இருந்தார். அவ்விதமாகவே விபச்சார பாவத்தில் ஈடுபடுகிற ஆவிக்குரிய வாலிபர்களின் நிலையும் இருக்கும். கர்த்தர் உன்னை நல்ல நியாயாதிபதியாக ஆக்க திட்டமிட்டுள்ளார் என்பதை மறவாதே. வாலிபனே உன் இச்சையான பாவத்தை விட்டு விலகி உன்னைக் காத்துக்கொள்.

கண்களின் இச்சையினால் ஆவிக்குரிய கண்களின் ஒளி குறையும், கண் சொருகிப்போன குருடர் ஆவார்கள். மோசேயைக் குறித்து அவர் மரிக்கிற போது நூற்றிருபது வயதாயிருந்தார். அவர் கண் இருளடையவுமில்லை. அவர் பெலன் குறையவுமில்லை(உபா. 34: 7) என்று எழுதப்பட்டிருக்கிறது. மோசேயின் பரிசுத்தத்தினால் அவர் மரிக்கும் வரைக்கும் அவர் கண்களில் ஒளி குறையவில்லை என்றும், ஆவிக்குரிய பெலனும் குறையாதவராய் இருந்தார் என்றும் எழுதப்பட்டிருக்கிறது. கண்களின் இச்சையினால் ஆவிக்குரிய பார்வை குறைந்து வேதத்தின் மகத்துவங்களை காணக்கூடாதபடி மாமிசத்தின் கிரியைகள் மேலோங்கி ஆவிக்குரிய குருடர்களாய் காணப்படுகிறார்கள். உன் கண்களின் ஒளி குறையாதவனாய் பரிசுத்தவானாய் நீ ஜீவித்தால் உன் கண்களின் ஒளி உன் சபை மக்களின் இருதயத்தைப் பூரிப்பாக்கும். நாங்களும் எங்கள் மேய்ப்பரின் முகத்தைப் பார்க்கும்போது மனதில் பூரிப்படைகிறவர்களாய் அவருடைய சத்தத்தைக் கேட்கும்போது மனதில் சந்தோஷமடைகிறவர்களாய் இருக்கிறோம். இவ்விதமான மேய்ப்பர்களைக் கண்டடைகிறவன் யார்?

கண்களானது சரீரத்தின் விளக்காய் இருக்கிறது (மத். 6 : 22) இருட்டான அறையில் பொருள்களைத் தேட, வழி நடக்க கைவிளக்கு எவ்விதமாக உபயோகிக்கப்படுகிறதோ அவ்விதமாகவே கண்களும் ஆவிக்குரிய இருண்ட உலகில் மாமிசமாகிய சரீரத்தை வழிநடத்த விளக்கைப் போன்று இருக்கிறது. பாவத்தினால் உன் கண்கள் இருண்டுவிட்டால் இந்த பாவ உலகத்தில் வாலிபனே நீ எப்படி நடப்பாய்? உனக்கு வழிகாட்டும் கண்களாகிய விளக்கின் ஒளியை இழந்து விடாதே. மோசே தேவனுடைய நெருங்கிய தொடர்பினாலும், அவருடைய மகிமையில் ஜீவித்ததாலும், கடின உபவாசமும், கண்டிப்பான வாழ்க்கையையும் மேற்கொண்டதினாலும் அவருடைய ஆவிக்குரிய வல்லமை அவர் மரிக்கும் வரைக்கும் குறையவில்லை. கண்களின் ஒளியும் குறையவில்லை. அதே பாக்கியத்தை இந்நாளில் முயற்சிக்கிறவர்கள் அடையமுடியும்.

பொல்லாத கண்ணுடையவனுடைய ஆகாரத்தைப் புசியாதே என்று எழுதப்பட்டுள்ளது. புசியும் என்று சொன்னாலும் அவனுடைய இருதயம் உன்னோடே கூட இராதே. நீ புசித்த துணிக்கையை வாந்தி பண்ணி இனிய சொற்களை இழக்க நேரிடும் என்று சாலொமோன் கூறுகிறார் (நீதி. 23:6-8). ஒன்றுமில்லாமல் (பரிசுத்தமில்லாமல்) செல்வனாக (பரிசுத்தனாக) விரும்பு கிறவன் பொல்லாத கண்களையு டையவன் என்று எழுதப்பட்டிருக்கிறது (நீதி. 28 : 22). ஊசியின் காதைப்போன்ற உன் கண்களில் ஒட்டகத்தைப் போன்ற பாவத்தை நுழையவிடாதே (மத். 19 : 24). இமைப் பொழுதில் மறுரூபமாக்கப்படும்;

மறுருபத்திற்கு ஆயத்தமாயிரு (IIகொரி 15:22) உன் கண்கள் பாவத்தையல்ல பரிசுத்தவான்களைக் காணட்டும் (வெளி.1:7) உன் கண்ணிமையை பாவத்திற்கு அலைய விடாதே.

உன் கண்களை விபச்சார மயக்கத்தால் நிறைய விடாதே; பாவத்தை விட்டு ஓய்ந்திரு (IIபேது. 2 :14). உன் கண்களுக்கு கலிக்கம் போடு (வெளி. 3 : 18). உன் கண்கள் இயேசுவின் கண்கள் போலிருக்கட்டும். உன் கண்களிலிருந்து பரிசுத்த அக்கினி புறப்படட்டும் (வெளி 1 : 14). உன் வாழ்க்கையை கட்டுப்படுத்தி பரிசுத்த ஜீவியம் ஜீவித்த உன் கண்களின் கண்ணீரை இயேசு ஒரு நாளில் துடைப்பார் (வெளி. 7 : 17; 21 : 4) ஆமென்.

"என் கண்களோடே உடன் படிக்கை பண்ணின நான் ஒரு கன்னிகையின் மீது நினைப்பாய் இருப்பது எப்படி?" (யோபு. 31 :1).

# திரித்துவம் திரியேகத்துவம்

<u>தேவனே உமக்கு ஒப்பானவர் யார்?</u>

திரித்துவ சித்தாந்த ஆராய்ச்சியில் இந்திய மக்களாகிய நாம் விழிப்பாய் இருக்க வேண்டியது அவசியம். எவருமே ஒன்றை மற்றொன்றோடு ஒப்பிட முன்வருவர். குறிப்பாக இந்து, புத்த, முகமதிய சமய சூழ்நிலையில் உள்ள மக்கள் கிறிஸ்துவ சித்தாந்தத்தில் எப்பகுதியையும் சமரச நோக்கோடு தங்கள் சூழ்நிலை அனுபவத்தில் ஒப்பிட முன்வருவார்கள். இன்றும் இந்து சமயத்தின் கிரீடம் கிறிஸ்து மார்க்கமென சொல்வாரும் உண்டு (crown of Hinduism) திரித்துவ சித்தாந்தத்தின் ஆழத்தையும் அனுபவத்தையும் அறியாதவர் இந்து சமயத்திலும் அத்தகைய கோட்பாடு உண்டு என்று கூறி வருவார்கள். இந்து சமயத்திலும் நல்ல போதனைகள் உண்டு என்று சொல்லிக்கொள்வார்கள். இவ்வாராய்ச்சியின் முதற்பகுதியில் இவ்வகை கூற்றை கடுமையாக மறுத்துள்ளோம்.

இந்து சமயம் கூறுவது என்ன? திருமூர்த்தி அல்லது மும்மூர்த்தி உண்டெனக் கூறும் ரிக் வேதத்தில் சூரியன், வாயு, அக்கினி என கூறப்பட்டது. பிற்காலத்தில் இவர்கள் பிரஜாபதியினுடைய புத்திரராகக் கொள்ளப் பட்டார்கள். கிறிஸ்துவ திரித்துவ அனுபவத்தோடு கூட இக் கோட்பாடு சற்றும் பொருந்தாது. ஒரே தன்மை மூவர் என்ற கிறிஸ்தவ விசுவாசமும் அனுபவமும் இந்து சமயத்தின் மும்மூர்த்தி அனுபவத்தில் கிடையாது. மும்மூர்த்திகளின் கொள்கை பிரஜாபதி என்ற ஒரு பரம்பொருள் உண்டு. சூரியன், வாயு, அக்கினி என்பவர்கள் மூன்று கீழ்த்தர தேவர்கள்என்பதாம். திரித்துவத்தின் ஆள் அனுபவம் தனித்துவத்திலும், ஒருமைப்பாட்டிலும் விளங்குகிறபடி மும்மூர்த்திக் கொள்கையில் கிடையாது.

உபநிடத்தில் பிரஜாபதியின் ஒரு தன்மை ருத்ரா என்றும் மற்ற தன்மை பிரம்மா என்றும் மற்றொரு தன்மை விஷ்ணு என்றும் சொல்லப்படுகிறது.

பிரம்மா சிருஷ்டிப்பவர், விஷ்ணு பராமரிப்பவர், ருத்ரா அழிக்கிறவர். இந்த மூவரும் பிரஜாபதியின் வெளிப்பாடு என்பர். மற்றொரு கோட்பாடும் உண்டு பிரம்மனை நடுமையமாகக் கொண்டு ஆத்துமா என்றும் பிரகிரிதி என்றும் ஈஸ்வர் என்றும் கூறுவார்கள். இது பிரம்மாவின் மும்மூர்த்தி என்பார்கள் இந்து சமயத்தாரில் ஒவ்வொரு வகுப்பினரும் ஒவ்வொன்றை அதிகமாய் வற்புறுத்திச் சொல்வார்கள். ஈஸ்வரர் என்ற சொல் ஆள் தன்மையுடையது போல் காணப்பட்டாலும் திரித்துவ உபதேசத்தில் நாம் ஆள் எனக் கொள்ளும் பதத்திற்கும், ஈஸ்வரன் என்ற பதத்திற்கும் வித்தியாசம் அதிகமுண்டு. திரித்துவத்தின் ஆள் ஒரே கடவுளினின்று காலம், இடம், பொருள் எல்லா வகையிலும், எவ்வகையிலும், எத்தன்மையிலும், எச்செயலிலும் பிரிக்கப்படக் கூடாதவர் என்று அர்த்தமாகும். ஆனால், சிவன், விஷ்ணு, ஈஸ்வரன், பிரம்ம... பதங்கள் ஆள் என்ற கருத்தை... கூடியவைகளாய்த் தோன்... திரித்துவத்தில் கிறிஸ்தவன் அனுபவிக்கும் ஆள் என்ற அறிவிற்கும் இதற்கும் பெரிய வித்தியாசமே

திருமூர்த்தி கோட்பாட்டை நவீன இந்து சமயமக்கள் கிறிஸ்துவ சமயக் கோட்பாட்டோடு எடுத்துக்காட்ட முயன்ற போதிலும் அவர்கள் திரித்துவ சித்தாந்தத்தின், சித்தாந்த அனுபவத்தை அறிந்து, ஏற்றுக்கொள்ளாமல் ஒரு சில வார்த்தைகளினால் மயக்க முற்று மற்றவரை மயக்க முயலுகின்றனரே ஒழிய வேறு அல்ல; என்பதைச் சொல்லக் கடமைப்பட்டுள்ளோம். திருமூர்த்தி என்று சொல்லும் போது தமக்குள் ஒருவராயும், தோற்றுவிப்பதிலும் ஒருவராயும், போற்றுவதிலும் தொலைப்பதிலும் தன் இயற்கையோடு சம்மந்தப் படாது வேறுபட்ட முக்கடவுள் என்ற கொள்கையே உண்டு. கிறிஸ்துவ திரித்துவ அனுபவம் அதற்கு முற்றிலும் வேறுபட்டதாகும். அன்புள்ள கடவுள் அவரினின்று தோன்றி, மீண்டும் அன்பு கொள்ளும் கடவு எவரினின்று தோன்றினாரோ அவரே அன்பு கொள்ளும் கடவுள். அன்பு என்ற தூய அகஸ்தலின் கூற்றுப்படி ஒன்று இவன் ஆராயப்பட்டால் அது நன்கு விளங்கும். (One who loves him who is from him one who loves him from whom he is and love itself). திருமூர்த்தி கொள்கை போதிப்பது ஒரே கடவுள் மூன்று ஆட்கள் என்பதே (One God and three persons). கிறிஸ்துவ சித்தாந்த திரித்துவ சித்தாந்தத்தில் மூவரில் ஒருவர் (God is one in three persons) என்பதே கோட்பாடு.

திருமூர்த்தி கோட்பாட்டில் பிரஜாபதியும் பிரம்மா, விஷ்ணு, ருத்ரா ... அவருடைய மூன்று தோற்றமும் ...னும் ஆத்துமா பிரகுதிஸ்வரா என்ற அவர்களுடைய வெளிப்பாடும் ஒன்று கூட்டல் மூன்று (1 + 3) என்ற கோட் பாடே சொல்லப்பட்டது. நாம் விசுவாசிப்பதென்ன: பிதா, குமாரன் பரிசுத்தாவி வெவ்வேறு தேவர்களாய் அல்ல, ஒரே கடவுள் தெரிந்து கொள்ளுதல், மீட்பு, உள்ளுரைதல் என்ற மூன்று ஒப்பற்ற கிரியைகள் மூலம் வெளிப்பட்டாரென்று தனித்துவத்தில் திரித்துவமும், திரித்துவத்தில் தனித்துவத் தையும் விசுவாசித்து, அறிந்து அனுபவித்துக் கொள்வதே கிறிஸ்தவ உபதேசம்.

(தொடரும்.)

"தேவனைத் தேடு"
"Seek God"

Regd.No. 040088/84
Postal Regd.No. Tech/47-201/MBI/2000
Tamil Monthly Magazine

**FORM IV**
**(See Rule 8)**

| | |
|---|---|
| 1. Place of publication | BOMBAY |
| 2. Periodicity of its publication | MONTHLY |
| 3. Printer's Name | CHIEF PASTOR N LAZAR |
| (Whether citizen of Indian | YES |
| (if foreigner, state the country of origin) | |
| Address | CHURCH LANE, TILAK NAGAR, DHARGA CROSS ROAD, BHANDUP, MUMBAI,- 400078 |
| 4. Publisher's Name | CHIEF PASTOR N LAZAR |
| (Whether citizen of India?) | YES |
| (if foreigner, state the country of origin) | |
| Address | CHURCH LANE, TILAK NAGAR, DHARGA CROSS ROAD, BHANDUP, MUMBAI - 400078 |
| 5. Editor's Name | CHIEF PASTOR N LAZAR |
| (whether citizen of India?) | YES |
| (if foreigner, state the country of origin) | |
| Address | CHURCH LANE, TILAK NAGAR, DHARGA CROSS ROAD, BHANDUP, MUMBAI - 400078 |
| 6. Names and addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one percent of the total capital | NEW JERUSALEM CHURCH CHURCH LANE, TILAK NAGAR, DHARGA CROSS ROAD, BHANDUP, MUMBAI - 400 078 |

I, Chief Pastor N Lazar hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief

Date 10.2.2000

Sd
Signature of Publisher
CHIEF PASTOR N.LAZAR
Editor/Printer/Publisher

## அறிவிப்புகள்

### முழு இரவு விழிப்பு ஜெபம்

*18, வெள்ளி (பிப்ரவரி 2000)*
*20, திங்கள் (மார்ச் 2000)*
*18, செவ்வாய் (ஏப்ரல் 2000)*

### புதிய எருசலேம் செய்தி பத்திரிக்கை

| | |
|---|---|
| ஆண்டு சந்தா | Rs. 30.00 |
| வெளிநாடு ஆண்டு சந்தா | Rs. 400.00 |

### அனுப்ப வேண்டிய முகவரி

Chief Apostle N.Lazar,
"NEW JERUSALEM CHURCH"
Church Lane, Tilak Nagar,
Darga Cross Road, Sonapur,
Bhandup (W), MUMBAI-400 078

மணி ஆர்டர் கூப்பனில் (Money Order Coupen) உங்கள் சந்தா எண்ணைக் குறிப்பிடவும். பழைய சந்தாதாரரா அல்லது புதிய சந்தாதாரரா என்பதையும் குறிப்பிடவும். பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதையும் தெளிவாகக் குறிப்பிடவும்.

"புதிய எருசலேம் செய்தி" பத்திரிக்கை வாங்குவோர் ரூ.30 (முப்பது) சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தையும் தெளிவாகக் கொட்டை எழுத்துகளில் (Capital Letters), M.O. பாரத்தின் செய்திக்காக ஒதுக்கப்பட்ட பகுதியில் (Space for Communication) எழுதிப் பத்திரிகையைப் பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.

Edited, Printed and Published by Chief Apostle N.LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Darga cross rd.. Sonapur, Bhandup(W), Mumbai-400 078, India. *Phone 91-22-5605515, Fax 91-22-5681992, e-mail njc@vsnl.com*
Printed at New Jerusalem Press, Tilak Nagar, Bhandup, Mumbai-400 078

# புதிய எருசலேம் செய்தி

## PUTHIYA YERUSALEM CHEIDHI

எக்காளம் 18; சத்தம்: ஏப்ரல் 2000




"___வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல் கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்___ விழித்திருங்கள்___ உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லோருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்___"

மாற்கு. 13 : 35-37

EDITOR : CHIEF APOSTLE N.LAZAR

MUMBAI, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும் அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும் தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும், சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும்படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது (எபே.4:11-16)

# புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசுகிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும் கட்டளைகளும் 7 (அப்1: 1-3)" எனக்கு காண்பித்து, கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள்:

1 உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் மத்28:18; மாற். 16:15.
2 விசுவாசித்து ஏற்றுக்கொள்ளுகிறவர்களை பிதா, குமாரன், பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்- மத். 28:19 (இயேசு மாதிரி (Through Action) செய்து காண்பித்தார்
3 திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள் - மத்28:20.
4 அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள் - யோவான் 20: 23
5 அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள் - யோவான். 21 : 15-17.
6 இவைகளை நடப்பிக்கக் காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு - அப். 1 :5-8
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவு கூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார் - 1கொரி. 11 : 23 -26

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு(2) என்கின்றனர். வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன் இயேசுவானவர் பிரதியுத்திரமாக: இல்லை அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும் அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1:1, 10: 40-43).

## இதழின் உள்ளே

# ஆசிரியர் உரை



உலகத்திலே உங்களுக்கு உபத்திரவம் உண்டு. ஆனால் நான் உலகத்தை ஜெயித்தேன், என்று சொன்னவர் நம்மோடு இருக்கிறார். கிறிஸ்தவம் என்று சொல்லப்படுகிறது துன்பம், துக்கங்கள், கஷ்டங்கள் வராது என்று இறைவன் சொல்லவில்லை, ஆனால், அவைகள் மேல் நீங்கள் ஜெயித்து வெற்றியடைவீர்கள். வெற்றி வீரர்களாக நடைபோடுவீர்கள்; உங்களுக்கு விடுதலை உண்டாகு மென்று கர்த்தர் சொல்லுகிறார். எந்த நெருக்கடி இருந்த காலங்களிலேயும்; எதிரிகள் கோஷங்கள் உண்டாயிருக்கும் போது தேவ ஜனங்கள் தைரியமாயிருக்கலாம். சேனைகளின் கர்த்தர் நம்மோடு இருக்கிறார். அவர் இஸ்ரவேலின் சேனைகளின் கர்த்தராகிய இயேசு கிறிஸ்து தம்மை புதிய முறையில் வெளிப்படுத்துவார். அதுவரை வெளிப்படுத்தப்பட்டதிலிருந்து வித்தியாசமான முறையில் யோசுவாவுக்கு தரிசனமானார். உருவிய பட்டயத்தோடு அவருக்கு முன்னால் ஒருவர் நின்றார். நீர் யார்? எங்களைச் சேர்ந்தவரோ அல்லவோ என்று கேட்டபோது, நான் இஸ்ரவேலின் சேனைகளின் அதிபதியாய் வந்திருக்கிறேன்' என்று சொன்னார். யோசுவா தரையிலே முகங்குப்புற விழுந்து தொழுது கொண்டார். நீ நிற்கிற இடம் பரிசுத்த பூமி; உன் பாதரட்சையைக் கழற்றிப்போடு என்றார். ஆண்டவர் அடியானுக்குச் சொல்லுகிறது என்ன என்று கேட்டார்.

ஆம், அவர் முன் சென்று சேனாதிபதியாய் சத்துருக்களை முறியடித்து, கானானை சுதந்தரிக்கச் செய்தார். அப்படியே கடவுள் இந்தக் கடைசிக் காலத்திலேயும் திருச்சபைக்காக அவர் தம்மை புதிய முறையில் வெளிப்படுத்துகிறார். கர்த்தர் பராக்கிரமசாலியைப்போலப் புறப்பட்டு யுத்த வீரனைப்போல் வைராக்கியம் கொண்டு முழங்கி, கெர்ச்சித்து தம்முடைய சத்துருக்களை மேற்கொள்ளுவார் (ஏசா. 42 : 13). தேவ ஜனங்கள் அணிவகுத்து நிற்பீர்களாக! கடவுள் இயேசு கிறிஸ்து நம்முடைய சேனாதிபதியாய் நமக்கு முன் நிற்கிறார். ஆமேன்!

*கிறிஸ்துவுக்குள்,*

*தலைமை அப்போஸ்தலர்.என்.லாசர்*

# இயேசு கிறிஸ்துவின் மரணமும் உயிர்த்தெழுதலும்

அவரை இறக்கிக் கல்லறையில் வைத்தார்கள் அவர் மரித்தோரிலிருந்து உயிர்த்தெழுந்தார். தேவன் உயிர்த்தெழுந்தார். இந்த உயிர்த்தெழுதலின் செய்தி உயிருள்ள செய்தியாக இருக்கிறது மானிடரின் பாவங்களுக்காக தேவன் மரித்து மூன்றாம் நாள் உயிரோடு எழுந்தார். அவரைச் சிலுவையில் அறைந்து கொலை செய்தவர்கள் அவர் இவ்விதமாய் மூன்றாம் நாள் உயிரோடு எழும்புவார் என்று ஏற்கனவே சொல்லியிருந்ததை நம்பி அவருடைய கல்லறைக்கு காவல் வைத்து பத்திரமாக காத்தார்கள்

ஆனால் மூன்றாம் நாள் அவர் அற்புதமாய் உயிர்த்தெழுந்தார். ஒரு தேவ தூதன் இறங்கி வந்து அந்த மிகப்பெரிய கல்லைப் புரட்டித்தள்ளிவிட்டு, கல்லறையைத் திறந்து வைத்தார். அதற்கு முன்னால் உயிர்த்தெழுந்து வெளியே வந்துவிட்டார். தூதனைக் கண்டு, காவலர்கள் பயந்து மயக்கமடைந்தார்கள். பின்பு அவர்கள் தெளிவடைந்து இயேசு கிறிஸ்து உயிர்த்தெழுந்ததைப் பார்த்து அதிசயப் பட்டார்க; அரண்டு போனார்கள்; ஏனென்றால் அவர் சரீரத்தை சுற்றியிருந்த வஸ்திரமானது (பிரேதச்சீலையானது) அப்படியே கூடுபோல இருந்தது. உள்ளே அவருடைய சரீரம் இல்லை. திறக்கப்பட்ட வெறுமையான கல்லறை கிறிஸ்தவ மதத்திற்கு ஒரு பெரிய சாடசியாகும். அந்தகார வல்லமையும் அதிகாரங்களும் அவரைக் கல்லறையில் வைத்து மூடின போதிலும், காவல் வைத்தப்போதிலும் எல்லா உலக அதிகாரங்களையும், காவல்களையும் முறியடித்துவிட்டு அவர் உயிரோடு எழுந்து அவர் தம்முடைய அன்பர்களுக்கும், சீஷர்களுக்கும் தரிசனமானார். அதைக் காவல் செய்தவர்கள் கண்டு, ஓடிப்போய் நகரத்திலே அறிவித்தார்கள். அதை மறைக்கும்படியாக ஒரு பொய் நாடகத்தையும் அவர்கள் நடிக்க வேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டார்கள்.

ஆகவே இயேசு கிறிஸ்து உயிரோடு எழுந்தார். சீஷர்கள் அவரை தரிசித்தார்கள். அவரைக்குறித்து, அவருடைய உயிர்த்தெழுதலைக் குறித்து பிரசங்கித்தார்கள். அவர் அழிவைக் காணவில்லை. இன்று உலகத்திலே தெய்வங்கள் என்று சொல்லப் படுகிறவர்களும், மகான்கள் என்று சொல்லப்படுகிறவர்களும் பலவிதத்திலும் தாங்கள் கண்டோம் என்று சொல்லுகிறவர்களும் மரித்தார்கள்; அழிந்து போனார்கள்; அவர்களுடைய சரீரம் அழிக்கப்பட்டுப் போய்விட்டது; அவர்கள் இல்லை. இவரோ அழியாமையை சுதந்தரித்துக் கொண்டார். அவருடைய சரீரம் அழிவைக் காணவில்லை. அவர் உயிரோடு எழுந்தார். இவர் மூலமாய் இவர்களுக்கு பாவமன்னிப்பு உண்டாகும். மானிடருடைய பாவத்துக்காக மரித்து உயிர்த்த தெய்வம் இயேசு கிறிஸ்துவே.

1. அவர் உயிரோடு இருக்கும் போதே தம்மைப் பிடித்து சிலுவையில் அடித்து

கொலைசெய்வார்கள்; மூன்றாம் நாள் நான் உயிரோடு எழுந்திருப்பேன் என்று அவர் அறிவித்தார் (மத். 16 : 21; 20 : 19; மாற்கு. 8 : 30,31). அவர் சொன்னபடி உயிர்த்தெழுந்தார்.

2. அவர் உயிர்த்தெழுந்ததைக் கண்ட, கேட்ட யூதர்கள் தாங்கள் அவரைக் கொலை செய்தது தவறு என்று உணர்ந்து மனஸ்தாபப்பட்டு கூட்டம் கூட்டமாய் கிறிஸ்தவர்களாக மாறி னார்கள். யூத மதம் ஒரே தெய்வ வணக்கமுள்ளதாகும். மனிதனை வணங்குவதை அது கடுமையாக எதிர்ப்பதாகும். இயேசு என்னும் மனிதனைக் கடவுளாக இவர்கள் பொய்க்கதை கட்டுகிறார்கள் என்று கிறிஸ்தவர்களைப் பகைத்த சவுலும் மனந்திரும்பி பவுலானார். இயேசு கிறிஸ்து உயிர்த்தெழவில்லை என்றால் உயிர்த் தெழுந்த கர்த்தர் தரிசனமாக வில்லை யென்றால் அவர்கள் பவுலைப் போன்ற பட்டதாரிகள், ஞானிகள் மனந்திரும்பு வதோ, கிறிஸ்தவனாவதோ கூடாதகாரியம். ஆம், அவர் உயிர்த்தெழுந்ததினால் யூதர்கள் விசுவாசித்தார்கள், மனந்திரும்பி னார்கள்.

3. அவர் உயிர்த்தெழுந்ததினால் மனித ஜாதி மேன்மையடைந்தது இயேசுவை விசுவாசிக்கிறவர்களும் மகிமையான உயிர்த்தெழுதலைப் பெறுவார்கள் அவர்கள் மரித்துப் போனாலும், உயிர்த் தெழும்புவார்கள். உயிரோடு இருந்தாலும் மறுருபமடைந்து பரலோகப் பிரவேசம் அடைவார்கள். இந் நாட்களிலே உயிருள்ளவர்கள் செத்தவர்களிடத்தில் கேட்கிறார்கள், குறி கேட்கிறார்கள், மரித்த ஆவிகளிடத்தில் பேசுகிறார்கள். ஆவிகளு டைய உதவியினாலே சில காரியங்களை செய்கிறார்கள், அது ஒரு சாபமாகும்.

4. அவரை பலர் தரிசித்தார்கள். ஒரே சமயத்தில் ஐந்நூறுக்கும் அதிகமான பேர் மொத்தமாக தரிசித்தார்கள். பின்பு அவர் தம்முடைய சிஷர்களுக்கு வாக்கருளி, தம்முடைய தரிசனத்தை அவர் நிறுத்தி வைத்து அவருடைய தரிசனமே மனிதனுடைய மெய் பாக்கியமாகத் தேடும் படியாக சொல்லிவிட்டு பரலோகத்துக்கு கடந்து சென்று இருக்கிறார் (1 கொரி. 15:4). ஆம், அவர் உயிர்த்தெழுந்ததினால், யூதர்கள், கிறிஸ்தவமார்க்க விரோதிகள் அவரை தெய்வமாக ஏற்றுக்கொண்டு கிறிஸ்தவர் களாக மாறுகிறார்கள்.

5. அவர் உயிர்த்தெழுந்ததினால் மக்கள் இரட்சிக்கப் படுகிறார்கள், பாவத்திலிருந்து விடுதலையாகிறார்கள், குடியிலிருந்து விடுதலையாகிறார்கள், விபச்சாரத்திலிருந்தும், பலவிதமான சாபங்களிலிருந்தும் விடுதலையாகி றார்கள். பேய் பிடியிலிருந்தும் விடுதலையாகிறார்கள். உயிர்த்தெழுந்த கர்த்தர் அவர்களை ஆசீர்வதிக்கிறார். உயிர்த்தெழுந்த கர்த்தரின் ஜீவனின் வல்லமையானது மனுமக்களை ஒரு வல்லமையுள்ள வாழ்க்கை வாழும் படியாக இந்த பூமியிலே நடத்துகிறது அவர் அருளிய பரிசுத்தாவியானவரைக் கொண்டு தேவன் பலத்த காரியங்களை, ஆசீர்வாதங்களை உலகத்துக்கு கட்டளை யிட்டுக் கொண்டிருக்கிறார்.

6. இயேசு கிறிஸ்து உயிர்த்தெழுந் ததினால் சபைகள் உண்டாயிற்று. மெய் கிறிஸ்து மார்க்கத்தை அழித்துப் போடும்படியாக பல ராஜ்யங்களும், ராஜாக்களும், ஜாதிகளும், தலைவர்களும் தங்களை ஞானிக ளென்று சொல்லிக் கொள்கிற பெரிய பெரிய

படிப்பாளிகளும் எழும்பினார்கள், அவர்கள் செத்துப் போனார்கள். அவர்கள் பேரும் அழிக்கப்பட்டுப் போய்விட்டது. ஆனால் கிறிஸ்தவம் வளர்கிறது, சபைகள் எழும்புகின்றன, சபைகள் வாழ்கின்றன. மேலும் இயேசு கிறிஸ்து உயிரோடு இருக்கிறதினால் சபைகள் வளர்கிறது, இன்றைக்கு உலகமெங்கும் சபைகள் வளர்கிறது.

7. கிறிஸ்தவம் ஜீவனுள்ள மார்க்கம் என்பதை இந்நாட்களில் எல்லோரும் ஒப்புக்கொள்கிறார்கள். கிறிஸ்தவர்களிலே பெலவீனம், சில குறைகள் காணப்பட்டாலும் கிறிஸ்துவ மார்க்கத்திலே எந்தக் குறையும் இல்லை; கிறிஸ்துவில் எந்தக் குறையும் இல்லை இந்த குறைவுள்ளவர்கள் ஒரு நாள் நிறைவடைவார்கள் கிறிஸ்தவர்களுக்கு நம்பிக்கை உண்டு, விடுதலையுண்டு.

8.இயேசு கிறிஸ்து உயிர்த்தெழுந்ததினால் அவர் உலகத்தை அடக்குவார் (1கொரி. 15 : 24- 27). உலகம் முழுவதும் அவருடைய கட்டுப்பாட்டுக்குள் வரப்போகிறது.

9. இயேசு கிறிஸ்து உயிர்த்தெழுந்ததினால் வாக்குத்தத்தங்களெல்லாம் உறுதி செய்யப்பட்டது. வேதாகமத்திலே எழுதி இருக்கிற எல்லா வாக்குத்தத்தங்களும் நிறைவேறி முடியும் (11கொரி 1 : 20, 21; அப். 13 : 32).

10. அவரது உயிர்த்தெழுதல் நமக்கும் வெற்றியாகும் (யோவான். 16 : 33; ரோ. 8 : 3 ; 1கொரி. 15 : 57; வெளி. 12 : 1-10) கர்த்தராகிய இயேசு கிறிஸ்து உயிர்த்தெழுந்ததைப் பற்றிய நிச்சயம், அனுபவம் மக்களுக்கு வேண்டும். லண்டன் பட்டணத்தின் பெரிய குருவாகிய R.W. டைல் உயிர்த்தெழுதலின் பண்டிகைக்காக சனிக்கிழமை இரவு குறிப்பு எடுத்துக் கொண்டிருந்தார். அப்படி அவர் குறிப்பு எடுத்து ஆராய்ச்சி பண்ணிக் கொண்டிருக்கும் போது, இயேசு கிறிஸ்து உயிரோடு இருக்கிறார் என்கிறதை அவர் எழுதும்படியாக ஏவப்பட்டது. அவர் உயிரோடு இருக்கிறார் என்ற எண்ணம் அவருடைய உள்ளத்தில் வந்தபோது அவருடைய உள்ளத்தில் வெளிச்சம் உண்டாயிற்று. இதோ இயேசு கிறிஸ்து உயிரோடிருக்கிறார். எழுந்து அங்கும், இங்கும் ஓடினார். இயேசு உயிரோடு இருக்கிறார்! இதோ இயேசு உயிரோடு இருக்கிறார்! கிறிஸ்துவே ஸ்தோத்திரம்! என்று சொல்லி சத்தமிட்டார்; மிகவும் மகிழ்ச்சி யடைந்தார். பல ஆண்டுகள் அவர் உயிர்த்தெழுந்ததை பற்றி பேசினாலும், எழுதினாலும் அன்று ஒரு நிச்சயமான அனுபவம் உண்டாயிற்று. மறுநாள் உயிர்த் தெழுதலின் பண்டிகையிலே வல்லமையாய் கிறிஸ்துவை பிரசங்கித்தார். கிறிஸ்துவின் பிரசன்னம் உண்டாயிற்று. அப்படியே நமக்கும் இயேசு கிறிஸ்து உயிரோடு இருக்கிறார் என்ற நிச்சயம் வேண்டும். அதை இறைவன் நமக்கு அருளுவாராக

11. உயிர்த்தெழுந்த கர்த்தரைத் தொழுது கொள்ளுங்கள். உயிர்த்தெழுந்த கர்த்தர் உங்களை ஆசீர்வதிப்பாராக. இயேசு கிறிஸ்து உயிர்த்தெழுந்ததினால் ஏராளமான நன்மைகள், ஆசீர்வாதங்கள் உலகத்திலே உண்டாகிக் கொண்டிருக்கின்றன. மக்கள் ஆறுதல் அடைகிறார்

கள், தேற்றப்படுகிறார்கள், ஆசீர்வதிக்கப்படுகிறார்கள், பலப்படுத்தப்படுகிறார்கள் உங்களுக்கு உயிருள்ள தெய்வம் ஒருவர் இருக்கிறார். உயிர்த்தெழுந்த கர்த்தர் உன்னையும் சந்திப்பாராக! உயிர்த்தெழுந்த கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து உன் தெய்வமாக ஏற்றுக்கொண்டு அவரைத் தொழுது கொள் அவருக்கு ஆராதனை செய் அவர் உன்னைச் சந்திப்பார் மானிடரின் பாவத்துக்காக அவர் மரித்தார் மானிடரை விடுதைலை செய்து, மேல் நிலை அடைவதற்காக அவர் உயிரோடு எழும்பினார். அவர் மறுபடியும் இந்த உலகத்துக்கு வரப்போகிறார் இயேசுவே தெய்வம்; வெறொரு தேவன் இல்லை. இவரே உயிருள்ள ஜீவனுள்ள தேவன். ஆமேன்!!

# வேதபாடம்

**1 சாமு 10 : 1 முதல் 12 : 25 வரை**

கடவுளுடைய கட்டளையின்படி சாமுவேல் சவுலை ராஜாவாக அபிஷேகம் பண்ணினார். சவுலுக்கு கெம்பீரமான இராஜரீக தோற்றமிருந்தது. ஆரம்பத்தில் அவனிடத்தில் மனத்தாழ்மை, அடக்கம், பொறுமை, மன்னிக்கும் குணம், தைரியம் முதலிய குணங்கள் விளங்கின தேவ ஆவி அவன்மேல் இறங்கினதினால் தீர்க்கதரிசன ஆவியும் சவுல் பெற்றிருந்தார் ஜனங்களில் தலைவனாக அவர் பொது ஜன சேவைக்கென்று அபிஷேகம் பெற்றார்.

கிலேயாத்திலுள்ள யாபேஸ் பட்டணத்திற்கு நேர்ந்த ஆபத்தானது சவுல் தன் மதிப்பை நிருபித்துக்காட்ட சந்தர்ப்பம் கிடைத்தது. அப்பட்டணத்தைக் குறித்து சவுலுக்கு இருந்த கவலை, அவருடைய தைரியம், சேனையை நடத்தும் திறமை, அவருடைய மன்னிப்பின் சிந்தை இவைகள் யாவும் மக்களின் உள்ளத்தைக் கவர்ந்தது. எனவே கில்காலில் கூடிவந்த மற்றோர் குழுவினரால் சவுலினுடைய தலைமை ஸ்தானம் முறைப்படி அங்கீகாரம் செய்யப்பட்டது.

யோசுவாவின் காலத்தில் யோர்தானைக் கடந்தபின், அவ்விடத்தில்தான் இஸ்ரவேலர் முதன்முதலில் பாளயமிறங்கி இருந்தார்கள். கில்கால் - அங்கேதான் இஸ்ரவேலர்கள் முதன் முதல் கானானுக்குள் பிரவேசித்து பாளயமிறங்கின இடம். அங்கே தான் சவுல் இராஜாவாக ஏற்படுத்தப்பட்டதாகப் பார்க்கிறோம். தேச மக்களுக்கு தன் கடைசி பொதுவான உபந்நியாசத்தைச் செய்ய சாமுவேல் இந்தச் சந்தர்ப்பத்தைக் கையாடினார். நியாயாதிபதியாகிய அவருடைய உண்மையான நடக்கை மக்களால் ஒப்புக்கொள்ளப்பட்டது கடவுளை அசட்டை செய்வது எப்போதும் தோல்வியும் மனந்திரும்பி அவரை நோக்கிக் கூப்பிடும்போது வெற்றிசிறக்கும் தலைவன் ஒருவனை ஈண்பதிலும், தேவ உத்தரவைக் கொண்டுவந்ததைக் கடந்த கால சரித்திரத்தினின்று அவர்களுக்கு சாமுவேல் நினைப்பூட்டுகிறார். ஒரு அரசன் கெட்டதினால் பாவம் செய்தோம் என்று ஒப்புக்கொண்டபோது அவர்களுக்கு ஆறுதலும், நம்பிக்கையுமான வார்த்தைகளையும் சாமுவேல் உரைத்தார். தங்கள் முழு இருதயத்தோடும் தேவனை

உண்மையாய் சேவிக்கும்படியாக சாமுவேல் மக்களை ஏவினார். நன்மை, தீமை தெரிந்து கொள்ளக்கூடிய ஒரு சுயாதீன ஆளாக தேவன் மனிதனை நடத்துவதால் தாம் தீர்மானிக்காத சில காரியங்கள் நடைபெறும்படிக்கு இடம் கொடுக்கிறார். அவன் தீமையைத் தெரிந்து கொண்டாலும் கூட அதிலும் நன்மை பிறப்பிக்கும்படியாக அவர் விரும்பி ஒரு அளவான கட்டுப்பாட்டை உபயோகிக்கிறார். சாமுவேல் அவர்களுக்கு நினைப்பூட்டினபிரகாரம் தீமையானவற்றை ஒருவன் தொடர்ந்து செய்வானானால் அவன் அழிவுக்குள்ளாகக் கூடும், (1சாமு. 12 : 25). அவர்களுக்கு இருதயமாவது இன்றியமையாததாக இருக்கையில் ஒரு அரசாங்கமாறுதல் தங்களுக்கு உதவி செய்யுமென்று எதிர்பார்த்தார்கள். கடவுளை அசட்டை செய்யும் எந்த ராஜாங்கமும் முற்றிலும் திருப்தி அளிக்க முடியாது.

அதிகாரம் 13 : 1 ; 15 : 35: சவுலின் கீழ்ப்படியாமை தொடர்ந்து, சவுல் கீழ்ப்படியாமல் நீடித்திருத்தல் 1 சாமு 10 : 8 சவுல் கில்காலில் தனக்காகக் காத்திருக்கும்படி சாமுவேல் சொல்லியிருந்தார். எவ்வளவு காலம் சென்றது என்று நாம் திட்டமாக அறியோம். அவன் ராஜாவாக அபிஷேகம் செய்யப்பட்ட நாளில் நடந்த சம்பவங்களை சவுல் மறந்திருக்க முடியாது. சாமுவேலுக்குக் காத்திருக்க வேண்டியதானது ஒரு பரீட்சையாக சவுலுக்கு இருந்தது. அதில் அவன் தவறினான் நியாயப்பிரமாணத்திற்கு மேலாக அவன் தன்னை உயர்த்தினான். அது தேவனுக்கு விரோதமான கலகமாகும். ஒரு மன்னனும் கூட தனக்கு மேலாக இருக்கும் ஒரு வல்லமையை அங்கீகாரம் செய்ய வேண்டும். ஆதாமுடைய பாவத்துக்கு மூலகாரணம் சுயதிருப்தியே. அதாவது தேவனின்றி பிழைப்பதாகும். தேவனின்றி வாழ்வதே பாவத்தினுடைய விளைவு அதே விஷயத்தில் சவுல் தவறினான். சவுல் வம்சத்தாரை ராஜாக்களாக்க என்றென்றும் நிலைப்பெற செய்ய தேவன் விருப்பமாயிருந்தார் ஆனால் தன் இஷ்டமாய் நடக்கும்படிக்கு சவுல் அவ்வாசீர்வாதத்தை அசட்டை செய்தான் கில்காலில் தென்பட்ட அவனுடைய சுயசித்தமானது, அவனுடைய ஆவிக்குரிய வாழ்க்கையின் மோசமான நிலைமையை குறிப்பிட்டது. அது முதல் அவனுடைய பொல்லாத குணம் அதிகமாக வெளிப்பட ஆரம்பித்தது. கீழ் நோக்கிச் செல்ல ஆரம்பித்துவிட்டான் இனி சத்துருவின் மேல் வெற்றிபெற வேறொருவன் முன் வர வேண்டியது அவசியமாயிற்று கர்த்தருடைய சேனையின் அதிபதிக்கு சவுல் ராஜா கீழ்ப்படியாதவனாய் விளங்கினான்

தலைவராகிய சாமுவேலை வேளையினின்று இளைப்பாறும்படிக்கு ஜனங்கள் அனுப்பியிருந்தார்கள். இத்தருணத்தில் இளவரசனான யோனத்தான் காணப்படுகிறான். பெலிஸ்தியர் காவலத்தண்டையில் தாக்கினது ஒரு பெரிய வீரச்செயலாகும் எதிர்த்துப்போவதற்காக யோனத்தான் தேவனுடைய சம்மதத்தை தேடினார் எனவே இது அசட்டைத் தனமான துணிச்சல் விசுவாசத்தினால் பிறந்ததேயாகும் மலைமேல் இருந்த ஒரு சிலரான பெலிஸ்தியர், யோனத்தானும் அவன் ஆயுதம் சுமப்பவனும் படையைவிட்டு ஓடிவருகிறவர்கள் என்று நினைத்தனர் இஸ்ரவேலரிடம் ஆயுதங்கள் இல்லை எனவே தங்கள் ஆயுதங்களை அவர்களுக்கு காண்பிக்கலாமென்று ஒருவேளை நினைத்திருப்பார்கள் இந்தியாவில் மலைகளிலுள்ள திருத்தலங்களைப் போலவே ஏறக்கூடாதபடி அது செங்குத்தாய் இருந்ததினால் ஒரு வேளை அவர்கள் பரிகாசமாக

அப்படிப் பேசியிருக்கலாம் எப்படியாயினும் தேவன் யோனத்தானுக்குச் சகாயம் செய்தார். அதே சமயத்திலுண்டான ஒரு பூமி அதிர்ச்சி சத்ததுருக்களை மேலும் கலங்கடித்தது சவுல் புத்தியீனமாக ஆணையிடாதிருந்தால் இந்த சமயத்தில் பெரிதான வெற்றியை கண்டடைந்திருப்பார்கள், புத்தியீனமாய் ஆணையிட்டுவிட்டு தன் சொந்தகுமாரனை சவுல் கொல்லும்படியாக நினைத்ததாகப் பார்க்கிறோம். அந்நாளில் யோனத்தான் கர்த்தரோடு சேர்ந்து நடப்பித்த கிரியையை ஜனங்கள் அங்கிகரித்தவர்களாக ஜனங்கள் குறிப்பிட்டு யோனத்தானைக் காப்பாற்றினார்கள். சவுலினிமித்தமாக அல்ல, தமது ஜனங்கள் சத்துருவினின்று விடுதலைபெற வேண்டுமென்று ஆண்டவர் யோனத்தானையும் சேனையையும் நடத்தினார்.

ஆகாகையும் அமலேக்கியரையும் நடத்தின விதத்தில் சவுலின் கீழ்ப்படியாத சுபாவம் மெய்யான மனந்திரும்புதலின் இன்மையும் வெளிப்படுகிறது. சீனாய் வந்து சேர்பவன் இந்த ஜாதியான், இந்த அமலேக்கியர்கள் இஸ்ரவேலரோடு யுத்தம் செய்தார்கள் யாத் 17ம் அதிகாரம். அச்சமயத்திலும் திரும்ப 25 : 17 - 19 ம் அவர்களை நிர்மூலமாக்கும்படி கர்த்தருடைய கட்டளை கொடுக்கப்பட்டது. கிறிஸ்து உலகத்தில் பிறக்க தேவன் இஸ்ரவேல் கோத்திரத்தைத் தெரிந்து கொண்டார். வேறு ஒரு ஜாதியாரும் அப்படிப்பட்ட சிலாக்கியத்தைப் பெற்றதில்லை என்று நாம் நினைவு கூறவேண்டும். அதினிமித்தம் அவர்கள் ஒரு ஜாதியாராக தங்களுக்கு சொந்தமான ஒரு நாட்டில் குடியிருந்து, மேலான ஆவிக்குரிய இலட்சியங்களையும் பண்பையும் உடையவர்களாய் இருப்பதே அவசியமாயிற்று. அமலேக்கியரும் சூழயிருந்த ஏனைய ஜாதியாரும் இஸ்ரவேலரின் பிராண சத்துருக்களாக இருந்தனர். கானான் தேசத்தைப் பிடித்து இஸ்ரவேலர்களை அடிமைகளாக்கி, அவர்கள் வணக்கத்தை ஒழித்து, அவர்கள் விசுவாசத்தையும், நற்குணத்தையும் சீர்கெட்டுப்போகச்செய்ததற்கு இடைவிடாமல் முயற்சிசெய்தனர்.

தேவன் விரும்பின பிரகாரம் இஸ்ரவேலர் தப்பிப் பிழைக்கக்கூடியதாயிருந்த ஒரே வழியானது தங்கள் சத்துருக்களை எதிர்ப்பதேயாகும். இக்காரணத்தை முன்னிட்டே அவர்கள் போர் செய்ய நேரிட்டது. ஆனால் இக்காலத்தில் தீமையை நன்மையினால் வெல்லும்படிக்கே நாம் அழைக்கப்பட்டிருக்கிறோம். திருச்சபை சகல தேசத்தாருக்கும் உரியதாயிருக்கிறது. எனவே அதன் வெற்றிகள் படையின் வாயிலாக அல்ல; ஆவிக்குரிய வல்லமையினால் பெற்ற ஜெயமாக இருக்கவேண்டும். ஆனாலும் தேவ ஜனம் ஒரு தேவசேனையாய் ஆயத்தப்பட்டவர்களாக இருக்கவேண்டும். தேவஆவியானவர் காலாகாலத்துக்கு வெவ்வேறுவிதமாக சபையை எடுத்து உபயோகிப்பார். ஏனென்றால் யோவேல் 2-ம் அதிகாரத்தில் தேவ ஜனங்கள் ஒரு சேனையாக வர்ணிக்கப்பட்டு இருக்கிறார்கள். அது நடைபெறப்போகிற காரியமாகும்.

சவுலுக்கு தேவன் கொடுத்த கட்டளையானது வெகு தெளிவாக இருந்தது. நீ போய் அந்த பாவிகளாகிய அமலேக்கியர்களை முற்றிலும் அழித்துப்போடு; அவர்களுக்குரிய எல்லாவற்றையும் சங்காரம் செய் என்பதே கட்டளையாகும் அமலேக்கியரை மடங்கடித்து, அவர்களுக்கு உண்டான எல்லாவற்றையும் சங்கரித்து, அவன்மேல் இரக்கம் வைக்காமல் சகலத்தையும் அழித்துப்போடு என்பதே ஆனால் சவுல் அதற்குக் கீழ்ப்படியவில்லை தன் அதிகாரத்தை மக்களுக்குக் காட்டும்படியாக ஆகாகை

காப்பாற்றினான். ஒரு ஆடம்பரமான பலியை செலுத்தும்படியாக ஆடுமாடுகளை ஆயத்தமாக வைத்துக்கொண்டான். கர்த்தருக்கு பலி செலுத்தும்படியாக ஜனங்கள் அவைகளைத் தப்புவித்ததாக சவுல் நியாயம் சொன்னான் குற்றம் தன்னுடையது என்று ஒத்துக் கொள்ளாமல், அதை ஜனங்கள் மேல் சுமத்தினான். பின்னர் அவர்கள் கீழ்ப்படியாமைக்கும் ஒரு காரணத்தை தெரிவிக்கிறான். மனந்திரும்பாத ஆவிக்கு இவை இரண்டும் அடையாளமாக இருக்கின்றன. ஆகாகை தப்பவிட்டதற்கு சவுல் விளக்கம் கூறவில்லை சவுல் செய்திருக்க வேண்டியதை, சாமுவேல் ஆகாகுக்குச் செய்தார். பலியிலும் உத்தமம், கீழ்ப்படிதல், என்று சாமுவேல் திட்டமாக அறிவித்தார் (1சாமு. 15 : 22,23). தேவனுடைய அடிப்படையின் பிரமாணங்களில் இது ஒன்றாகும் புறம்பான செய்கைகளையல்ல, இருதயத்தின் நிலைமையையே அவர் கண்ணோக்குகிறார் இருதயத்தின் கீழ்ப்படியாமைக்குப் பதிலாக எந்த புண்ணியக் கிரியைக்கும் தேவன் செவிகொடார் அதற்கு ஈடாக தேவனுக்கு முற்றிலும் ஒப்புக்கொடுப்பதே காரியம். எந்த விக்கிரக வணக்கத்தைக் குறித்தும் திடுக்கிடக்கூடிய எத்தனையோ நல்ல கிறிஸ்தவர்கள் உண்டு ஆனால், அவர்களுடைய பிடிவாதமான குணமும், கலக்க சுபாவமும் கடவுள் பார்வையில் ஒரு விக்கிரக வணக்கம் போலவே ஆகாததாய் இருக்கிறது என்பதை கிறிஸ்தவர்கள் கவனிக்க வேண்டும்.

தப்பிதம் செய்தபின் மனிதன் அதற்காக வருத்தப்படுகிறது போல, தேவன் மனஸ்தாபப்படுகிறவர் அல்ல மனம் திரும்புதல் ஒரு மாறுதலை எதிர்பார்க்கிறது. தேவன் கீழ்ப்படிதலுக்கு பலன் அளித்து கீழ்ப்படியாமைக்குத் தண்டிப்பார். எனவே தேவன் மனிதரை நடத்தும்விதம் மாறுபடுகிறது. ஏனென்றால், கீழ்ப்படியாதவர்களை அவர் ஆசீர்வதிக்கமுடியாது. அவர்களுக்கு நன்மை செய்ய எண்ணம் கொண்டிருந்தார். எனினும், அவர்கள் கீழ்ப்படியாதபோது அவர்களை அவர் தண்டிக்க நேரிட்டது. ஒரு துஷ்ட மகனைப் பிறப்பித்ததற்காக ஒரு தகப்பன் மனஸ்தாபப்படுகிறான் ஆனாலும் அப்படிச் செய்ததினால் அவன் பாவம் செய்யவில்லை. தேவ வார்த்தையை சவுல் புறக்கணித்ததால் கடவுளும் சவுலைப் புறக்கணித்துத் தள்ளினார். பொய் சொல்லவும் மனம் மாறவும் தேவன் நிலையற்ற சுபாவம் உள்ளவர் அல்ல. தேவனோடு ஒற்றுமைப் படுவதினாலேயே நாம் அவருடைய ஒத்தாசையைப் பெறுகிறோம். அவர் கீழ்ப்படியாமையை ஆசீர்வதித்தால், அவர் பரிசுத்தமுள்ள தேவனாய் இருக்க முடியாது. சாமுவேல் சவுலோடு சேர்ந்து ஆராதனை செய்வது அரசியல் குழப்பம் வராமல் தடுப்பதற்காகவே அப்படி நடந்து கொண்டார் ஏனென்றால், சவுலுக்குப் பதிலாக நியமிக்கப்படும் ஆளை இன்னும் கர்த்தர் காட்டவில்லை ஆனபடியினால், சாமுவேல் சவுலோடு கூட சேர்ந்து ஆராதனை செய்தபோதிலும், சவுலைக் கர்த்தர் தள்ளிவிட்ட படியினால், தன்னுடைய வார்த்தைக்கு சவுல் கீழ்ப்படியாதபடியினால் மரணம் அடையும் நாள் மட்டும் அப்புறம் சாமுவேல் சவுலைக் கண்டு பேசவில்லை. இஸ்ரவேலின்மேல் சவுலை ராஜாவாக்கினதற்காக கர்த்தர் மனஸ்தாபப்பட்டதினிமித்தம் சாமுவேல் சவுலுக்காக துக்கித்துக் கொண்டிருந்தார் என்று வாசிக்கிறோம். சாமுவேல் சரியான ஒரு தேவனுடைய மனிதன் கர்த்தருக்குக் கீழ்ப்படியாதவர்களோடு ஐக்கியம் வைக்கவோ, பேசவோ, அவர்கள் முகத்தில் விழிக்கவோ அவர் விரும்பவில்லை.

(தொடரும்)

# திரித்துவம் திரியேகத்துவம்

தேவனே உமக்கு ஒப்பானவர் யார்?

மக்களோடு மக்களாய் என்ற முறையில் மக்களைப் படைத்தவராக, படைக்கிறவராக, படைப்பவராக, மீட்டவராக, மீட்கிறவராக, மீட்பவராக, இணைந்தவராக, இணைக்கிறவராக, இணைப்பவராக என்றும் 'ஆள்' என்ற தன்மையுடைய ஒரே கடவுள் என்பதே கிறிஸ்தவ அனுபவ சித்தாந்தம். இதே சமயத்தில் மற்றொரு இந்துக் கொள்கை அதிக மயக்கமுடையதாகும். அது சச்சிதானந்தக் கொள்கை எனப்படும் மூன்று பதங்களையுடைய வார்த்தை சச், சித், ஆனந்தம். சச்சிதானந்தம் சச், சித்ஆனந்தம் என்பது பிரமனின் மூன்று வெளிப்பாடு என்பார்கள். ஆழமற்ற ஒரு கிறிஸ்தவனுக்கு இது கிறிஸ்தவ சித்தாந்தத்திற்கு ஒட்டிய ஒரு சித்தாந்தம் போலத் தோன்றக் கூடும்.

'சச்' கடவுளின் சிருஷ்டிப்பிற்கும், 'சித்' குமரனில் வெளிப்பட்ட வார்த்தைக்கும் ஞானம், அறிவு என்பதற்கும், ஆனந்தம் ஆவியின் கனி அன்பு சந்தோஷம் என்ற முறையில் (யோ 1 : 1- 14 கலா 5 : 22; ரோ. 14 : 18; 1தெச 1 : 6; அப். 13 : 52) பரிசுத்தாவிக்கும் விரைவில் ஒப்பிட்டு கிறிஸ்தவ திரித்துவமும் சச்சிதானந்தக் கோட்பாடும் ஒன்று எனக் கூறி விடுவார்கள் அவ்வாறு கூறுவது கிறிஸ்தவ சித்தாந்தத்திற்கு முற்றிலும் முரண்பாடானதாகும். சச்சிதானந்தக் கோட்பாட்டில் கிறிஸ்தவ சித்தாந்தத்தின் 'ஆள்' என்ற அனுபவம் கிடையாது. சச் சித் ஆனந்தா என்பவை அஃறிணையில் உபயோகப்படுத்தப் பட்டன. சச்சையும், சித்தையும், ஆனந்தத்தையும் உடையவரே எனப் பொருள்படாமல் பிரம்மனே சச், பிரம்மனே சித், பிரம்மனே ஆனந்தம் என்று மாத்திரம் கூறப் பட்டுள்ளது ஆளின் பாகுபாடு சச்சிதானந்தக் கோட்பாட்டுக்கு கிடையாது. சச், சித், ஆனந் இம் மூன்றும் திரித்துவத்தின் மூவர் என்று வெளிப்பாடு போல் ஒன்றுக்கொன்று ஆள் இணைப்பு இல்லை சச் வேறு, சித் வேறு, ஆனந் வேறு சத்தை சித்திலும், சித்தை ஆனந்தத்திலும், ஒன்றை மற்றொன்றிலும் காண்பது கிடையாது. வகுக்கக் கூடாத ஒரே உட்பொருள் போன்றே விளங்கும். பிரம்மனே சத், பிரம்மனே சித், பிரம்மனே ஆனந்தமெனக் கூறும் போது அவரை வணங்கும் மக்களுக்கு அதை அளிக்கிறவராகப் பிரம்மன் காணப்பட முடியாது. ஒன்றை உடையவர் என்ற கோட்பாடு அவரே. அது என்பது மற்றொரு கோட்பாடு உடையவர் ஒருவரே மற்றவருக்கு தன்னிடத்திலுள் ளதைக் கொடுக்கக் கூடும்.

பிரம்மனே சத், சித், ஆனந்தமெனக் கூறும் போது பிரம்மன் தனக்கு புறம்பேயுள்ள ஒருவரைக் குறித்தாவது ஒன்றைக் குறித்தாவது கவலைப்படாமல் இருக்கிற ஒரு பரம்பொருளேயன்றி வேறல்ல என்று அனுமானிக்கப்பட வேண்டும். கிறிஸ்தவ அனுபவத்திலுள்ள நீ, நான் என்ற, (I and the Relationship) ஆளுக்கு ஆள் எனப்படக் கூடிய உயரிய அனுபவம் சச்சிதானந்தக் கோட்பாட்டில் கிடையாது மேலும் இந்து மார்க்கத்தில்

இது தான் இந்து மார்க்கம் எனச்சொல்லத்தக்கதான ஒரு இந்து மார்க்கம் கிடையாது. அப்படி சொன்னால் அது இந்து மார்க்கமல்ல. அதை சனாதன மார்க்கம் எனச் சொல்லுவார்கள். அவனவன் விருப்பப் பிரகாரம் ஜனங்கள் நடந்து கொள்வதே இந்து மார்க்கம். ஆனபடியினால் அது ஒரு தாறுமாறான மதமென்று திட்டமாக அறிந்து கொள்க

புத்தக்கொள்கை: நம் நாட்டில் இது ஓரளவில் பரவியுள்ளது. புத்தமதம் நம் நாட்டில் உற்பத்தியாயினும் இலங்கை பர்மா முதலிய நாடுகளில் அதிகமாக அலைவீசியுள்ளது. நம் நாட்டின் அசோக மன்னர் இந்தக் கொள்கையில் ஈடுபாடு உடையவர். தீங்கிழையாமை என்பது அதின் கொள்கை. இன்றைய உலகத்தில் அகிம்சா எனக் கூறப்படுவது பெரும்பான்மையாருக்கு புத்தக் கோட்பாட்டின் அடிப்படையே ஆகும். சாக்கிய முனிவரை பிறப்பித்த பெருமை இந்தியாவிற்கு உண்டென இந்தியர்கள் பெருமை பாராட்டிக்கொள்வர். ஆதலின் சமயக் கோட்பாடுகளில் கௌதமரின் கோட்பாடு அதிகமாய் பாராட்டப்படுவதுண்டு. அது பற்றியே கிறிஸ்தவ திரித்துவ சித்தாந்த ஆராய்ச்சியிலும் புத்தமதத்தைப் பற்றியே ஒரு சில குறிப்புக்களைப் படிப்பது அவசியம். புத்தமதம் தீங்கிழையாமை என்ற முறையில் உருவான ஓர் அந்தக மார்க்கமெனக் கூறலாம். அதன் லட்சியம் நிர்வாணம் எனப்படும். நிர்வாணம் எனக் கூறும்போது, உலகப்பந்தம் அல்லது கட்டு இதினின்று அடைய வேண்டிய விடுதலையைக் குறிக்கும். சித்தார்த்தன் அடைந்த அதிர்ச்சியான சந்தர்ப்பங்கள் இப்பந்தத்தினின்று நீங்க வேண்டும் என ஒரு எழுச்சியை உண்டாக்கிற்று கிழட்டுத்தன்மை, குஷ்டரோகம், இறப்பு, துறவறம் இத்தகைய காட்சிகள் அவரை அதிகமாக பாதித்தன. இவற்றைச் சகிக்கக் கூடாத சித்தார்த்தன் நிர்வாணத்தை அடைய முயன்றார்.

ஐந்து விதிகள் புத்தமதத்தில் உள்ளன. அவை தீங்கிழையாமை, இச்சியாமை, பொய்யாமை, வெறித்தனம், கறைபடாமை என்பனவையே. இவைகளின் மூலமாக நிர்வாணத்தை அடைய வேண்டும். கிறிஸ்துவத்திற்கும் புத்தமதத்திற்கும் உள்ள பெரும் வித்தியாசம் என்னவென்றால் சாக்கிய முனியின் வாழ விரும்பிய அவாவினின்று புத்தமதம் தோன்றியது கிறிஸ்து மரிக்க விரும்பி, ஒப்புக்கொடுத்தலினின்று கிறிஸ்தவமதம் தோன்றியுள்ளது. கிறிஸ்தவத்தில் காணப்படும் அனுபவம் புத்தமதத்தில் கிடையாது. புத்தமதத்தில் ஒருவன் தன் வாழ்க்கையில் ஒன்றைக் களைந்து, ஒன்றைத் துறந்து, ஒன்றை நீக்கி ஒன்றில் லயித்துப்போகிற வாழ்க்கை சொல்லப் பட்டது. இத்தகைய வாழ்க்கையுடைய ஒரு சாக்கிய முனி புத்தன் எனப்படுவான். புத்தன் என்ற பதத்திற்கு ஒளி பெற்றவன் என்பதே பொருள். தெய்வீகமும் மனுஷீகமும் பொருந்திய கிறிஸ்துவைப் பற்றிய அனுபவம் புத்தமதத்தில் காணக் கிடையாது. பாடுபடுகிற தாசன் என்கிற உயரிய கோட்பாடு புத்தமத்தில் கிடையாது.

இப்போது கிறிஸ்தவர்கள் திரித்துவ சித்தாந்தத்திற்கும் புத்த சமயத்திலுள்ள வேறுபாடு தெளிவாக விளங்கும். திரித்துவ சித்தாந்தத்தில் முதல் அடிப்படையாகிய ஒரே கடவுள் என்ற ஆள் தன்மை பொருந்திய கடவுள் புத்தமதத்தில் கிடையாது. ஒரே தன்மை செயலாற்றும் மூவர் என்ற உண்மையும்

கிடையாது வெளிப்பாடு மேலிருந்து கீழ் உண்டாயிற்று என்ற குறிப்பும் கிடையாது. புத்த மதத்தின் நிர்வாணத்தை தன் ஒழுக்க, ஒடுக்க செயல்களினால் அடைகிறானே யன்றி கடவுளின் அருளினால் அல்ல கிறிஸ்தவம் கிருபையினாலே விசுவாசத்தைக் கொண்டு இரட்சிக்கப்பட்டீர்கள் என்று கூறுகிறது. கிருபை என்ற பொருளின் தன்மை புத்தமதத்திலேயும் விரிவடைந்திருக்கிறது என்று சிலர் விவாதிக்கலாம். அதற்கு ஒரு உதாரணத்தை, திருஷ்டாந்தத்தை கூறியுள்ளார்கள். ஓர் படக்காட்சி; ஒரு பெரிய ஆறு பனிக்கட்டியால் முற்றும் மூடப்பட்டது. மக்கள் அக்கினித் தழலை ஏராளம் அதின் மீது கொட்டி பனிக்கட்டியை போக்க முயன்றனர். ஆனால் எவ்வளவு முயன்றார்களோ, அவ்வளவு அதிகமாயிற்று. பனிக்கட்டியை போக்க முயன்றவர் மூடர் எனப்பட்டனர். மனிதரின் மீட்புக்கும் மனிதர்க்கும் இடையேயுள்ள பனிக்கட்டியைப் போக்குவது புத்தரால் அல்லாமல் வேறு ஒருவராலும் கூடாது என்று விளக்க இப்படி ஒரு கதை சொல்லுகிறார்கள். இத்தகைய திருஷ்டாந் தத்தினால் புத்தமதம் கிறிஸ்தவ மதத்தைப் போல் கிருபையின் மார்க்கம் என்று கூறிவிட முடியாது. திருத்துவ சித்தாந்தத்தில் காணப்படும் கிருபை திரியேக தேவனில் வெளிப்படும்.

திரியேக தேவனில் வெளிப்பாடும் தன்மையும், செயலாற்றலையும் உடையது. புத்தமதத்தில் கிருபை எனப்படுவது, கீழிருந்து மேல் வளர்ந்த ஒரு மனிதனின் கிருபை எனப்படும். கீழ் உள்ள மனிதன் எத்தகைய லட்சியத்தை உடையவனாய் இருந்த போதிலும் மனிதன் மனிதனே. அவனை வணங்கி வழிபடுவது விக்கிர ஆராதனையே புத்த மதத்தாரும் விக்கிரக ஆராதனையே செய்கிறார்கள். கடவுள் சொல்லுகிறார் "என் மகிமையை வேறொருவருக்குக் கொடேன்" என்பது திரியேகத் தேவனின் கூற்றாகும். கிறிஸ்தவம் கிருபையின் மார்க்கம் என்ற பெரிய உண்மை புத்தமதத்தைப்பற்றிச் சொல்ல முடியாது. குறிப்பாக நாசரேத்தூரில் இயேசுவில் வெளிப்பட்ட தெய்வசித்தாந்தம் ஒன்றும் புத்தமதத்தில் காணக்கூடாது. கிறிஸ்தவமதமில்லாத ஏனைய மதத்தை ஆராயும் எவரும் இறுதியில் ஒப்புக்கொள்ளக் கூடியதென்ன, கர்த்தாவே உமக்கு ஒப்பானவர் யார் என்பதாம். தேவனுக்கு ஸ்தோத்திரம்.

"கர்த்தாவே தேவர்களில் உமக்கு ஒப்பானவர் யார்? பரிசுத்தத்தில் மகத்துவமுள்ளவரும், துதிகளில் பயப்படத்தக்கவரும், அற்புதங்களைச் செய்கிறவருமாகிய உமக்கு ஒப்பானவர் யார்?" யாத். 15 : 11.

*(தொடரும்)*

## கர்த்தருக்குள் நித்திரையடைந்தார்கள்

*21-1-2000* அன்று புதிய எருசலேம் சபை கோயம்புத்தூர் கிளை அங்கத்தின ராகிய வி. வீரத்தாய் என்ற யாகேல் அம்மாள் (வயது 112) அவர்கள் கர்த்தருக்குள் நித்திரையடைந்தார்கள்.

இவர்களது பிரிவால் வருத்தத்திலிருக்கும் குடும்பத்தாருக்கும், உற்றார், உறவினருக்கும் இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஆறுதல் கூறுகிறோம்

# பாஷைகள்

பாஷையானது ஒருவருடைய எண்ணங்களையும் சிந்தனைகளையும் கருத்துக்களையும் மற்றவர்களுக்கு தெரியப்படுத்தக்கூடிய முக்கியமான கருவி (medium) யாக இருக்கிறது. பாஷைகள் இல்லாவிட்டால் மனிதர்கள் உண்டாக்கும் குரல்கள் மிருகங்களைப்போல வெறும் சத்தங்களாக இருக்குமேயல்லாமல் அர்த்தமுள்ளவைகளாக இருக்காது. அதினால் பிரயோஜனமில்லை. ஆதியிலே பூமியெங்கும் ஒரே பாஷையும் ஒருவிதமான பேச்சும் இருந்தது (ஆதி11: 1). அப்பொழுது மனிதர்கள் பெருகினது, அவர்கள் தேவசித்தத்தின்படி பூமியெங்கும் சிதறிச் சென்று நிரம்பாதபடி (ஆதி. 1 : 28) ஒரே இடத்தில் கோபுரங்கள் கட்ட ஆரம்பித்தார்கள் அப்பொழுது அவர்களைப் பூமியெங்கும் சிதறிப் போகப் பண்ணும்படி அநேக பாஷைகளை கர்த்தர் ஏற்படுத்தினார் (ஆதி. 11 : 4-9). பாஷைகளை தேவன் ஏற்படுத்தினார் (1கொரி. 12 : 28). எல்லா பாஷைகளும் அர்த்தமுள்ளது தான். ஒன்றும் அர்த்தமில்லாதது அல்ல (1கொரி. 14 : 10) பாஷைகளில் உயர்ந்தது தாழ்ந்தது என்று ஒன்றுமில்லை. எந்த ஒரு பாஷையும் அதிகமான மக்களால் பேசப்படுமானால் அது முக்கியத்துவம் பெறுகிறது. ஆகையினால் பாஷைவெறி யாருக்கும் இருக்கக் கூடாது. அதிகமான பாஷைகளைப் பேசவும் வாசிக்கவும் கற்றுக்கொள்வது நல்லது. அப். பவுல் அநேக பாஷைகளைக் கற்று வைத்திருந்தார் அது அவருடைய ஊழியத்திற்கு மிகவும் உதவியாக இருந்தது (1கொரி14: 18). ஆதியிலே பாஷையின்படியே தேசங்கள் பிரிக்கப்பட்டன (ஆதி. 10 :5) இந்தியாவிலும் பாஷையின்படியே மாநிலங்கள் பிரிக்கப்பட்டுள்ளன. எந்த ஒரு மனிதனுக்கும் தாய் மொழி பற்று இருக்கும். சொந்த மொழியில் பேசும்போது பாசம், நெருக்கம் உண்டாகும்.

வெளி மாநிலத்திலோ வெளி நாட்டிலோ தமிழில் பேசும் ஒருவரை மற்றொரு தமிழர் சந்திப்பாரானால் மிகவும் மகிழ்ச்சியடைவார்கள். இது இயற்கையாக இருக்கிறது. சொந்த மொழியில் பேசும்போதுதான் மனிதர்கள் நன்றாக புரிந்து கொள்கிறார்கள். சத்தியத்தை ஏற்றுக் கொள்கிறார்கள். அப்போஸ்தலனாகிய பவுல் யூத ஜனங்களிடத்தில் பேச வாய்ப்புக் கிடைத்தபோது அவர்களுடைய பாஷையாகிய எபிரேய பாஷையிலே பேசினபோது அவர்கள் அமைதலாயிருந்து கேட்டார்கள் (அப். 22 :2).

ஆகையினாலே எல்லா பாஷைகளையும் மதித்துக் கற்க வாய்ப்புக் கிடைக்கும்போது கற்று தேர்ச்சியடைந்து, கர்த்தருடைய ஊழியத்திற்காக உபயோகப் படுத்த வேண்டும். வெளிநாட்டிலிருந்து வந்த மனிதர்கள் இந்திய பாஷைகளைக் கற்று வேதாகமத்தை மொழிபெயர்த்து நாம் எல்லாரும் இரட்சிக்கப்பட பெரும் பிரயாசப்பட்டிருக்கிறார்கள் என்பதை நாம் அறிய வேண்டும். அவர்களுடைய முயற்சியின் பலனை நாம் அனுபவிக்கிறோம். அதே போல இந்தக் கடைசி காலங்களிலும் கர்த்தரின் வருகையின்

செய்தியை திருச்சபையின் மூலமாக உலகமெங்கும் அறிவிக்க வேண்டியது நம்முடைய கடமையல்லவா? (வெளி. 10 : 11). அநேக பாஷைக்காரர்களை கர்த்தர் சந்திக்கும்படியாக ஜெபிப்போமாக. அநேக மொழிகளில் கர்த்தருடைய செய்தி திருச்சபையின் மூலமாக வானொலி மூலமாகவும் டெலிவிஷன் மூலமாகவும் பத்திரிக்கை மூலமாகவும் அறிவிக்கப்பட ஜெபிப்போம். ஒவ்வொருவரும் தாய் மொழியையாவது நன்றாக எழுத வாசிக்க பேச அறிந்திருக்க வேண்டியது அவசியம். மேற்கொண்டு எவ்வளவு மொழிகளை கற்றுக்கொள்வதும் நல்லது.

## அந்நிய மொழியில் பேசுவது:

தேவனுடைய பிள்ளைகள் பரிசுத்த ஆவியினால் நிரப்பப்படும்போது தாங்கள் அறியாத வேறு பாஷைகளில் பேசுவது ஒரு விசேஷித்த காரியமாகும். ஒருவன் அந்நிய பாஷையில் பேசும்போது அவன் தேவனிடத்தில் பேசுகிறான் என்று வேதம் சொல்கிறது (1கொரி. 14 : 2). தேவனுக்கு எல்லா பாஷைகளும் தெரியும். அந்நிய பாஷையில் பேசும் போது பரிசுத்தாவியினால் கிடைக்கும் கிருபை வரமாக இருக்கிறது (அப். 2 : 4-6 ; 10 :45; 19 : 6). பரிசுத்தாவியைப் பெற்றிருப்பதின் அடையாளமாக இருக்கிறது (1கொரி12 ; 10). இந்நாட்களில் அநேகர் பரிசுத்தாவியில் நிறைந்து அந்நிய பாஷைகளைப் பேசுவதை பரியாசம் செய்கிறார்கள். அது தேவையில்லை என்கிறார்கள். பரிசுத்தாவிக்கு விரோதமாய்ச் செய்யும் தூஷணம் மன்னிக்கப்படுவதில்லை (மத். 12 : 31,32) என்று அறியாமல் செய்கிறார்கள். ஒருவன் அந்நிய பாஷையில் பேசும்போது தேவனுடைய மகத்துவங்களைப் பேசுகிறான் (அப். 2:11). பரிசுத்தாவியானவர் வாக்குக்கடங்காத பெருமூச்சுகளோடு நமக்காக வேண்டுதல் ஜெபம் செய்கிறவராயிருக்கிறார் (ரோம. 8 : 26). அந்நிய பாஷையிலே பாடல்களை கர்த்தர் பாடும்படி செய்கிறார். திருச்சபையிலே இப்படிப்பட்ட அனுபவங்கள் அநேகம் உண்டு. அந்நிய பாஷையிலே பேசும்போது தான் ஆத்துமா இளைப்பாறுதலைப் பெற்றுக் கொள்கிறது (ஏசா. 28 : 11,12). நமக்குக் கஷ்டங்கள், பாரங்கள், கவலைகள், துன்பங்கள், துக்கங்கள் வரும்போது அந்நிய பாஷைபேசி ஆவியில் நிரம்பும்போது இளைப்பாறுதல் உண்டாகும், சமாதானம் உண்டாகும், விடுதலை உண்டாகும்; தேவ ஆசீர்வாதம் உண்டாகும் (யாக். 5 : 13; பிலி. 4 : 6-7).

அப். பவுல் கொரிந்தியர் சபைக்குக் கடிதம் எழுதும்போது சபைமக்கள் சபையின் ஆராதனைகளிலே எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதைப் பற்றி மிகவும் தெளிவாக (1கொரி. 14ம் அதிகாரம்) எழுதி உள்ளார். இந்நாட்களிலே அநேக சபைகளிலே தாறுமாறானபடி நடைமுறைகள் இருக்கிறது. சபையின் ஆராதனையானது ஆவியானவரின் ஆளுகையின்படி, நடத்துகிறவர்களின் நடத்துதலின்படி நடத்தப்பட வேண்டும். ஸ்தோத்திரம் செய்தலும், ஆவியில் நிரம்புதல், பாடல்கள், ஜெபம், பிரசங்கம், தீர்க்கதரிசனம் உரைத்தல், அந்நிய பாஷையில் பேசுதல் யாவும் முறைப்படி செய்யப்பட வேண்டும். மற்றபடி ஒரே கூச்சலும் குழப்பமாக இருக்கும். அதினால் அவர்களுக்கும் மற்றவர்களுக்கும் பிரயோஜனமில்லை.

தனி ஜெபங்களிலே எவ்வளவு நேரமானாலும் ஆவியில் நிறைந்து,

அந்நிய பாஷையில் பேசலாம். பக்தி விருத்தியடையலாம். அதற்குக் கட்டுப்பாடு இல்லை. அநேகர் சபையில் ஜெபம் பண்ணச்சொன்னால் அந்நிய பாஷையில் பேசுகிறதும், பிரசங்கம் பண்ணுகிறதும், தீர்க்கத்தரிசனம் சொல்லுவது போல வசனங்களைச் சொல்லுவதும், குறி சொல்லுதலும் செய்கிறார்கள் இது மாம்சத்தில் செய்தால் பெரும் பாவமாகும். இது தவறான காரியமாகும் தீர்க்கதரிசிகளுடைய ஆவிகள் தீர்க்கதரிசிகளுக்கு அடங்கியிருக்கிறதே (1கொரி 14 : 32) எல்லாம் ஒழுங்கும் கிரமமாய் செய்யப்பட வேண்டும் (1கொரி. 14 : 40).

தூதர்களுக்கு வேறு பாஷை உண்டு (1கொரி 13 : 1) பரலோகத்தில் வேறு பாஷை உண்டு என்று அறிகிறோம் (2கொரி. 12: 3) நாம் பரலோகம் செல்லும்போது அந்த பாஷையைக் கற்றுக்கொண்டு கேரூபீன்கள், சேராபீன்கள், 24 மூப்பர்கள், நான்கு ஜீவன்களோடு எப்பொழுதும் தேவனைத் துதித்துக் கொண்டிருப்போம் (ஏசா. 6:2-3, வெளி.4 :4-11).

தேவனுடைய பிள்ளைகளாகிய நாம் தேவனைப்போல பரந்த மனம் உடையவர்களாய் எல்லா பாஷைக்காரர்களையும் சிநேகித்து, ஏற்றுக் கொண்டு, அவர்கள் பாஷைகளையும் கூடுமானவரை கற்று எல்லாரும் இரட்சிக்கப்படப் பிரயாசப்படுவோமாக! கர்த்தர் நம்முடைய பிரயாசங்களை ஆசீர்வதிப்பாராக! ஆமேன்!

**அந்நிய பாஷைகளைப் பேசுகிறதற்கு தடை பண்ணாதிருங்கள் (1கொரி. 14: 39)**

---

# தேவ ஆராதனை

*"அப்பொழுது இயேசு : அப்பாலே போ சாத்தானே; உன் தேவனாகிய கர்த்தரைப் பணிந்து கொண்டு, அவர் ஒருவருக்கே ஆராதனை செய்வாயாக என்று எழுதியிருக்கிறதே என்றார்" மத். 4 : 10. "இயேசு அவனுக்குப் பிரதியுத்தரமாக: எனக்குப் பின்னாகப் போ சாத்தானே, உன் தேவனாகிய கர்த்தரைப் பணிந்து கொண்டு, அவர் ஒருவருக்கே ஆராதனை செய்வாயாக என்று எழுதியிருக்கிறதே என்றார்" லூக். 4 : 9.*

நாம் தேவனுக்கு ஆராதனை செய்ய வேண்டும். தேவனுக்கு ஆராதனை செய்யும்படியாக, தேவனுக்குள் மகிழ்ச்சியாயிருக்கும்படியாக மனிதன் சிருஷ்டிக்கப்பட்டான். தேவ ஜனங்களை தேவன் அழைத்த நோக்கமே, தேவனுக்கு ஆராதனை செய்யும்படி தான் (யாத். 3 : 1-2; 4 : 23; 8 : 1; 9 : 1). உலகத்தை மீட்டுக் கொள்ளும்படியாக இயேசுவானவர் இந்த உலகத்தில் கடந்து வந்தார். சாத்தானுக்கு ஆதாம் விற்றுப்போட்ட உலகத்தை மறுபடியும் கைப்பற்றும்படியாக இயேசுவானவர் சாத்வீகமாக போராடி, மனித நிலையில் அதைப் பெற்றுக் கொள்ளும்படியாக இந்த உலகத்துக்கு வந்தார். சாத்தான் ஆதாமை தந்திரமாக தன் வசப்படுத்தி ஆதாமின் சுதந்திரத்தை, ஆதாமின் ஆளுகையிலிருந்து இந்த உலகத்தைக் கைப்பற்றிக்கொண்டான் எனவே உலகத்தின் அதிபதி என்று புதிய ஏற்பாட்டிலே அழைக்கப்படுகிறான் ஆதாம் இழந்து போன எல்லாவற்றையும்

திரும்பப் பெற்றுக்கொள்ளும்படியாகவும், ஆதாமை விடுதலையாக்கும்படியாகவும் ஆதாமின் சகல ஆசீர்வாதங்களையும் திரும்பக் கைப்பற்றிக்கொள்ளும் படியாகவும் திரும்பவும் இந்த உலகத்தில் வந்தார். இந்நாட்களில் அநேகர் உலகப்பொருளுக்காக தேவன் மேலுள்ள விசுவாசத்தை விட்டு விட்டு, சாத்தானைப் பின்பற்றுவதைப் பார்க்கிறோம். 'எனக்கு இஷ்டமானவனுக்கு இவைகளைக் கொடுக்கிறேன்' என்று பிசாசு கூறினான் (லூக். 4 : 8); ஆனால் தேவ ஜனங்கள் அறிய வேண்டியது: கர்த்தருடைய ஆசீர்வாதமே ஐசுவரியத்தைத் தரும்; அதனோடே அவர் வேதனையைக் கூட்டார் (நீதி. 10 : 22) உலகத்தார்கள் உலகப்பிரகாரமாக ஐசுவரியத்தைச் சம்பாதிக்கிறார்கள்; அதோடு கூட வேதனையையும் சம்பாதித்துக் கொள்கிறார்கள். அவர்களுக்குப் பலவிதமான பிரச்சனைகளும் கலக்கங்களும் உண்டு 'கர்த்தர் ஆபிரகாமைச் சகல காரியங்களிலும் ஆசீர்வதித்து வந்தார்' (ஆதி 24:1) ;

கடவுள் தமக்குச் சித்தமானவர்களை ஆசீர்வதிக்கிறார்; அதற்கு சாத்தான் குறுக்கிட முடியாது. 'கர்த்தர் யோபின் முன்னிலைமையைப் பார்க்கிலும் அவன் பின்னிலைமையை ஆசீர்வதித்தார்' (யோபு. 42 : 12) கர்த்தர் சாலமோனிடத்தில், 'உனக்கு முன் இருந்த ராஜாக்களுக் காகிலும் உனக்குப் பின் இருக்கும் ராஜாக்களுக்காகிலும் இல்லாத ஐசுவரியத்தையும், சம்பத்தையும் கனத்தையும் உனக்குத் தருவேன்' (2நாளா 1 : 12) என்றார். 'ஆபிராம் மிருகஜீவன்களும் வெள்ளியும் பொன்னுமான ஆஸ்திகளை உடைய சீமானுமாயிருந்தான்' (ஆதி13 : 2).

சாத்தான் மக்களை வஞ்சித்து கர்த்தரை விட்டுத் தன்னிடம் வந்தால் ஆசீர்வதிப்பதாக கூறுகிறான். இதைக் குறித்து தேவஜனங்கள் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். தன்னைக் கொன்று போட்டாலும் அவர் மேல் நம்பிக்கையாயிருப்பேன் என்று யோபு கூறியது போல், தேவன் மீதுள்ள விசுவாசத்தை விட்டு விடாமல் இருக்க வேண்டும். தேவனுக்கு ஆராதனை செய்ய வேண்டும்.

'கர்த்தாவே என் ஆத்துமாவை பாதுகாத்துக் கொள்ளும்' என்று சொல்கிறது ஜெபமாகும். 'கர்த்தாவே என் ஆத்துமாவை பாதுகாத்துக் கொண்டீர், ஆசீர்வதித்தீர்' என்று சொல்வது ஸ்தோத்திரமாகும். 'கர்த்தாவே நீர் எனக்காக இருக்கிறீர்' என்று சொல்லி தொழுது கொள்வது ஆராதனையாகும். நமக்காய் தேவன் இருக்கிறார்; எனவே தேவனை நாம் தொழுது கொள்ள வேண்டும். 'நானும் பிள்ளையாண்டானும் அவ்விடம் மட்டும் போய், தொழுது கொண்டு, உங்களிடத்திற்குத் திரும்பி வருவோம்' (ஆதி. 22 : 5). என்று ஆபிரகாம் தன் வேலைக்காரரை நோக்கிக் கூறினார்.

சூரிய சந்திர நட்சத்திரங்களை மற்றும் எந்த சிருஷ்டியையும் எந்த உருவத்திலும் நாம் தொழுது கொள்ளக் கூடாது. தேவ தூதரை, மனுஷர்களை நாம் தொழுது கொள்ளக் கூடாது. எந்த ஒரு சொரூபத்தையும், யாதொரு விக்கிரகத்தையும் உண்டாக்க வேண்டாம்; நான் எரிச்சலுள்ள தேவனாயிருக்கிறேன் என்று தேவன் கூறியிருக்கிறார் (யாத். 20 : 5). விக்கிரக ஆராதனை செய்கிறவர்கள் தேவனை தூஷிக்கிறார்கள். தேவனை மட்டுமே தொழுது கொள்ள வேண்டும். தேவனால் அனுப்பப்பட்ட மனிதர்களையோ தீர்க்கதரிசிகளையோ தொழுது கொள்ளக் கூடாது.

நாம் பிதாவாகிய தேவனை ஆராதிக்க வேண்டும். தேவன் (பிதாவாகிய தேவன்) ஆவியாயிருக்கிறார் அவரை தொழுது கொள்கிறவர்கள் ஆவியோடும் உண்மையோடும் அவரைத் தொழுது கொள்ள வேண்டும் (யோவா.4 : 24) நமது

உள்ளத்திலே எப்போதும் தேவனுக்கு ஸ்துதியும், ஆராதனையும், நன்றியும் ஏறெடுக்கப்பட்டுக்கொண்டு இருக்க வேண்டும். 'என் பாத்திரம் நிரம்பி வழிகிறது'(சங்.23:5) எனக் கூறப்பட்டிருப்பது போல், நாம் எப்போதும் தேவனுக்கு நன்றி ஏறெடுத்துக் கொண்டிருப்போமானால், நாம் தேவ சமூகத்தில் வரும்போது நம் பாத்திரம் நிரம்பி வழியும். இந்த உலகத்தில், தேவனுக்கு ஆராதனை செய்யும்படியாக நாம் சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறோம். நாம் தேவனுக்கென்று வாழ சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறோம். நாம் பிதாவாகிய தேவனைத் தொழுது கொள்ள வேண்டும்; அவருக்கு ஆராதனை செய்ய வேண்டும். நாம் குமாரனாகிய தேவனைத் தொழுது கொள்ள வேண்டும் (அப். 9 : 14; 1 கொரி. 1: 2); அவருக்கு ஆராதனை செய்ய வேண்டும்; நாம் பரிசுத்தாவியாகிய தேவனைத் தொழுது கொள்ள வேண்டும் என்று எழுதப்படாவிட்டாலும், பரிசுத்த ஆவியானவருக்கு ஆராதனை செய்ய வேண்டும், அவரைத் தொழுது கொள்ள வேண்டும். நம்முடைய தேவைகளுக்காக தேவனைத் தொழுது கொள்வதல்ல ஆராதனை; ஆராதனை எனப்படுவது, தேவன் நமக்கு செய்திருக்கிற, செய்து கொண்டிருக்கிற, மற்றும் இன்னும் செய்யப்போகிற நன்மைகளை எண்ணி, நன்றி ஏறெடுத்துத் தேவனைத் தொழுது கொள்ளுவது தேவ ஆராதனை ஆகும்.

நியாயப்பிரமாணத்தில் முதலாம் கற்பனை தேவனுக்கு ஆராதனை செய்வதாகும். (2சாமு. 7 : 18 - 29) எங்கும் பிதாவை தொழுது கொள்ளும் காலம் வரும் என்று இயேசு சொன்னார் (யோவா. 4 : 21). அந்நிய தேவர்களைப் பணிந்து கொள்ளக்கூடாது; அப்படி செய்கிறவர்கள் மேல் தேவனுடைய எரிச்சல் உண்டாகும் (யாத. 34 : 14). இந்நாட்களில் கிறிஸ்தவர்களில் சிலர், கூடி வந்து தேவனுக்கு ஆராதனை செய்வதை எதிர்க்கிறார்கள். தேவனைக் கூடி ஆராதிக்க வேண்டுவதில்லை; அவரவர் தேவனை தங்கள் இருதயத்தில் விசுவாசித்தால் போதும் என்கிற எண்ணம். இது சாத்தானுடைய தந்திரமாகும் கடவுளை ஆராதிக்கிறவர்களையும், சாத்தானை ஆராதிக்கிறவர்களையும் வேறுபடுத்தி, வெளிப்படுத்தல் ஆகமத்தில் சுட்டிக் காட்டப்படுகிறது (வெளி. 4 :10; வெளி. 9:20,21; 13 :2-4 ; 14:9; 16:2).

தீர்க்கதரிசிகளுக்கு தேவன் தம்மை ஆராதிக்கும்படியான ஒழுங்குகளையும், முறைகளையும் திட்டங்களையும் வெளிப்படுத்தினார். அவர்கள் கூடிவந்து தேவனை ஆராதிக்கும்படியாக இந்த நிச்சயங்கள் ஏற்படுத்தப்பட்டது. தேவனுடைய பிள்ளைகள் தேவனுக்கு ஆராதனை செய்ய வேண்டும். துன்பம், துக்கங்கள், நெருக்கங்கள் மத்தியிலும் தேவனை மகிழ்ச்சியுடன் தொழுது கொள்ள வேண்டும். எந்த பிரச்சனைகளிலும், எந்த நெருக்கடிகளிலும் தேவனுக்கு ஆராதனை செய்ய வேண்டும். ஆராதனை செய்வதே நமக்கு விடுதலையும், ஆசீர்வாதமும். தேவனை ஆராதிப்பதற்கு நமது பாவங்களோ, குறைகளோ எதுவும் தடையாக காணப்படக்கூடாது. உடனே ஆராதனை செய்து எந்த தன்மையையும் சுபாவத்தையும் தேவனுக்கு பலியிட்டு விடவேண்டும். தேவன் அக்கினியினால் அவற்றைச் சுட்டெரித்து நம்மைவிட்டு ஒரு நாள் அகற்றி விடுவார்.

இஸ்ரவேலர்கள் அடிமைத் தனத்தினின்று விடுதலையாகப் போவதை அறிந்து, தேவனை மகிழ்ச்சியுடன் பணிந்து கொண்டார்கள் (யாத். 4:31). ஆனால் வழியில் நெருக்கங்கள் உண்டானபோது மனப்பூர்வமாய் தேவனுக்கு ஆராதனை செய்யவில்லை.

அது அவர்களுடைய பெரிய குறைபாடு இப்படியே அநேகர் தங்களுக்கு ஆசீர்வாதம் வரும்போது தேவனை ஆராதனை செய்கிறார்கள் ஆனால் தங்கள் வாழ்க்கையில் குறைவுகளும் நெருக்கங்களும் வரும் போது ஆராதனையை விட்டுவிடுகிறார்கள். இது ஆபத்தான காரியம் நாம் நமது பிதாவாகிய தேவனை, கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை தொழுதுகொள்ள வேண்டும் (யோ. 9 : 38) பிதாவாகிய தேவனும் குமாரனை நோக்கி, தேவனே என்று அழைத்தார் (எபி. 1 : 8, 9). பிதா எல்லாவற்றிற்கும் ஊற்றாய், மூலமாய் இருக்கிறார் நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்து பிதாவினால் அனுப்பப்பட்டவராய் இருக்கிறார் பரிசுத்த ஆவியானவர் பிதாவிலிருந்தும், குமாரனிலிருந்தும் எப்போதும் புறப்படுகிறவராய், செயலாற்றுகிறவராய் இருக்கிறார் தேவன் மூன்று நபர்களில் வெளிப்படுகிறார் பிதா குமாரன் பரிசுத்தாவியானவரைத் தொழுது கொள்ள வேண்டும். கர்த்தருடைய நாளை ஒரு போதும் அசட்டைப் பண்ணக்கூடாது. சங். 84 : 5,6 - ல் ஆராதனை பற்றிய மேன்மை கூறப் பட்டுள்ளது. தேவனுடைய சமூகத்தில் ஆராதனை செய்யும் போது வல்லமை பெறுகிறோம், ஆவிக்குரிய வெளிச் சத்தைப் பெறுகிறோம், ஆசீர்வாதத்தைப் பெறுகிறோம். உம்முடைய வீட்டில் வாசம் பண்ணுகிறவர்கள் எப்போதும் உம்மைத் துதிப்பார்கள் ( சங். 84 : 4). சாத்தான் தேவனுக்கு ஆராதனை செய்வதை பகைக்கிறான், வெறுக்கிறான். அதை ஜனங்கள் விட்டுவிட சகல காரியமும் செய்கிறான். தேவனுக்கு ஒழுங்காய் ஆராதனை செய்கிறவர்கள் தான் சாத்தானை ஜெயிக்க முடியும்.

தேவனாகிய கர்த்தர் ஒருவருக்கே ஆராதனை செய்ய வேண்டும் உண்மையான ஆராதனை செய்வதை சாத்தான் எதிர்க்கிறான் ஏனெனில், அவன் நோக்கம் மனிதனை வஞ்சித்து, விழத் தள்ளுவது மகிழ்ச்சியோடு கர்த்தருக்கு ஆராதனை செய்யுங்கள் (சங் 100: 1,2). நாம் கூடிவந்து தேவனுக்கு ஆராதனை செய்வதே தேவனுக்குப் பிரியம் (சங் 111: 1 கர்த்தரை முழு இருதயத்தோடு துதிக்க வேண்டும் சுத்த இருதயத்தோடு கர்த்தரை தொழுது கொள்ள வேண்டும் (IIதீமோ. 2 : 22) கர்த்தரை நான் என் வாயினால் துதிப்பேன் (சங். 109 : 30). கர்த்தருக்கு முறையாக ஆராதனை செய்ய வேண்டும். ஒரு நாள் உலகம் முழுவதும் உள்ள ஜாதி ஜனங்கள் தேவனை ஆராதிக்கக் கூடிக் கொள்ளப்போகிறார்கள் (சங். 116 - 17 -19). ஒருமனப்பட்டு ஆராதனை செய்வார்கள் (செப். 3 : 9) நாவுகள் யாவும் அவரை அறிக்கை செய்யும். வானோர், பூதலத்தோர் யாவரின் முழங்காலும் முடங்கும். கர்த்தராகிய இயேசு கிறிஸ்து வரப்போகிறார். இந்த உலகத்தை நியாயந்தீர்க்கப்போகிறார். இப்போது ஆராதிக்கிற நாம் அவரோடு கூட சிங்காசனங்களில் உட்கார்ந்திருக்கப் போகிறோம். இப்போது ஆராதனை செய்யாதவர்களின் முழங்கால்கள் முடங்கப்படும்.

பத்முதீவில் யோவான் கர்த்தருடைய நாளில் ஆவிக்குள்ளானார் (வெளி. 1 : 10). கர்த்தருடைய நாள் என்பது தேவன் உயிர்த்தெழுந்த நாள் தேவனுக்கு ஆராதனை செய்யும்போது தான் பரிசுத்தவான்களுக்கு விடுதலை உண்டானது, சபைக்கு வெற்றி உண்டானது. நாம் பயத்துடன் கர்த்தரை சேவிக்க வேண்டும் (சங். 2 :11). நடுக்கத்துடன் களி கூற வேண்டும். தேவனுக்குப் பிரியமான ஆராதனை செய்ய வேண்டும் (எபிரே. 12 : 28). இப்படி

"தேவனைத் தேடு"

"Seek God"

Regd.No. 040088/84
Postal Regd.No. Tech/47-201/MBI/2000
Tamil Monthly Magazine

செய்கிறவர்கள் தான் பரலோகத்தில் சென்று தேவனை ஆராதிப்பார்கள். தேவனை தொழுது கொள்ளும்போது முழங்காலில் நிற்கவேண்டும் (நெகே. 11 : 17) அப். 12 - ல் பேதுருவுக்காக சபை மக்கள் கூடி ஜெபித்தனர். பரிசுத்த ஆவியானவர் ஆராதனை செய்ய வல்லமை கொடுக்கிறார். தேவனைப் பாடி மகிமைப்படுத்தி, ஸ்தோத்தரித்து, சாட்சி கொடுத்து, பிரசங்கித்து, காணிக்கை செலுத்தித் தேவனை ஆராதனை செய்கிறோம். இப்படிச் செய்வதால் தேவன் தமக்குரிய கன மகிமையைப் பெற்றுக்கொள்கிறார். நாம் ஆசீர்வாதத்தையும், ஞானத்தையும் பெற்றுக்கொள்கிறோம். நாம் கடவுளாகிய தேவனைத் தொழுது கொள்வோம். அவர் உன் ஆண்டவர், ஆதலால் அவரைத் தொழுது கொள். அவருடைய அன்பு ஆசீர்வாதம் நம்மில் நிரம்புகிறது (உன். 2: 45) இப்படி சகல ஆசீர்வாதம் பெற, தேவனை ஆராதனை செய்து, தேவனைத் தொழுது கொள்வோமாக. தேவனுடைய பிள்ளைகள் எந்த ஆபத்திலும் தேவனுக்கு ஆராதனை செய்ய வேண்டும்.

## புதிய எருசலேம் சபையின் ஊழியர் மாநாடு

**தேவனுக்கு மகிமை உண்டாவதாக! 11.5.2000 முதல் 20.5.2000 முடிய புதிய எருசலேம் சபையின் ஊழியர் மாநாடு கொடைக்கானல் - B.L.Shed ஆலயத்தில் நடைபெற இருக்கிறது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம். யாவரும் ஜெபிக்கவும், உதவி செய்யவும் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் கேட்டுக் கொள்கிறோம்.**

**Chief Apostle.N.Lazar**

## அறிவிப்புகள்

**முழு இரவு விழிப்பு ஜெபம்**

*18, செவ்வாய் (ஏபரல் 2000)*
*18, வியாழன் (மே 2000)*

**புதிய எருசலேம் செய்தி பத்திரிக்கை**

ஆண்டு சந்தா Rs. 30.00
வெளிநாடு ஆண்டு சந்தா Rs. 400.00

**அனுப்ப வேண்டிய முகவரி**

**Chief Apostle N.Lazar,**
**"NEW JERUSALEM CHURCH"**
**Church Lane, Tilak Nagar,**
**Darga Cross Road, Sonapur,**
**Bhandup (W), MUMBAI-400 078**

மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா எண்ணைக் குறிப்பிடவும். பழைய சந்தாதாரரா அல்லது புதிய சந்தாதாரரா என்பதையும் குறிப்பிடவும்.

பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதையும் தெளிவாகக் குறிப்பிடவும்.

"புதிய எருசலேம் செய்தி" பத்திரிக்கை வாங்குவோர் ரூ.30 (முப்பது) சந்தாத் தொகையுடன் தங்கள் விலாசத்தையும் தெளிவாகக் கொட்டை எழுத்துகளில் (Capital Letters), M.O. பாரத்தின் செய்திக்காக ஒதுக்கப்பட்ட பகுதியில் (Space for Communication) எழுதிப் பத்திரிகையைப் பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

Edited, Printed and Published by Chief Apostle N LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Darga cross rd Sonapur, Bhandup(W), Mumbai-400 078, India. *Phone 91-22-5605515; Fax:91-22-5681992; e-mail nj @vsnl.com*
Printed at New Jerusalem Press, Tilak Nagar, Bhandup, Mumbai-400 078

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லோரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும் அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும் தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும், சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும்படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது (எபே.4:11-16)

# புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசுகிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும் கட்டளைகளும் 7 (அப்1: 1-3)" எனக்கு காண்பித்து, கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள்:

1 உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் மத்28:18; மாற் 16:15
2 விசுவாசித்து ஏற்றுக்கொள்ளுகிறவர்களை பிதா, குமாரன், பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்- மத் 28:19 (இயேசு மாதிரி (Through Action) செய்து காண்பித்தார்
3 திருச்சபையைக் கட்டி (மத் 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள் - மத்28:20
4 அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள் - யோவான் 20: 23
5 அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள் - யோவான் 21 : 15-17
6 இவைகளை நடப்பிக்கக் காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு - அப் 1 :5-8
7 நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார் - 1கொரி 11 : 23 -26

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு(2) என்கின்றனர் வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன் இயேசுவானவர் பிரதியுத்திரமாக: இல்லை அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி9:1-6) இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும் அதிகாரங்களுமாகும் இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப் 1:1, 10: 40-43)

## இதழின் உள்ளே

# ஆசிரியர் உரை



அருமையான தேவனுடைய பிள்ளைகளுக்கு கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் நாமத்தினால் வாழ்த்துக்கள். தன் பாவங்களை மறைக்கிறவன் வாழ்வடையமாட்டான்; அவைகளை அறிக்கைசெய்து விட்டுவிடுகிறவனோ இரக்கம் பெறுவான் (நீதி.28:13) என்ற வேதவசனத்தை தவறாக அர்த்தப்படுத்தி சத்தியத்தை பகைத்து தேவனுக்கு, தேவனுடைய திட்டத்திற்கு, அவருடைய தீர்மானத்திற்கு விரோதமாக எழும்புகிற அநேகர் உண்டு. தன் பாவங்களை மறைக்கிறவன் வாழ்வடைய மாட்டான் என்று எழுதப்பட்டுள்ளது. மனிதர்கள் எல்லாருமே பாசாங்கக்காரர்களாக இருக்கிறார்கள். மனுஷன் வேஷமாகவே திரிகிறான், விருதாவாகவே பாடுபடுகிறான் என்று வேதத்தில் வாசிக்கிற பிரகாரம் வேஷதாரிகளாகவே இருக்கிறார்கள். மனிதன் பாவத்தை மறைக்கிறது யாரிடத்தில் என்று விளங்கிக்கொண்டால் அறிக்கை செய்கிறதைப் பற்றிய விளக்கம் அவர்களுக்கு கிடைக்கும். தேவனுக்கு ஒருவன் தன்னை மறைக்க முடியாது. இருதயத்தின் சிந்தனைகளையும், நினைவுகளையும், எண்ணங்களையும், எண்ணங்களின் தோற்றுவாய்க்கு முன்பாகவே அவன் செய்யப்போகிறதையும் இறைவன் அறிவார். தேவனுடைய பார்வைக்கு மறைவான சிருஷ்டி ஒன்றுமே இல்லை (எபி. 4:13). அவருக்கு முன்பாக எல்லாமும் நிர்வாணமும் வெளியரங்கமாயுமிருக்கிறது. மனிதன் பாவத்தை மறைக்கிறது மனிதர்களிடத்திலேதான் பாவத்தை மறைக்கிறான். தேவனிடத்தில் யாரும் பாவத்தை மறைக்க முடியாது. ஆனால் பாவம் செய்கிற எல்லாரும் தேவனை ஏமாற்றத்தான் பார்க்கிறார்கள்.

இருதயத்தை ஆராய்கிறவரும், உள்ளிந்திரியங்களை சோதிக்கிறவருமாய் இருக்கிற கர்த்தருக்கு தன்னை மறைத்துக் கொள்கிறவன் யார்? தன்னுடைய கிரியைகளை யார் மறைக்க முடியும்? பாவத்தை மனிதன் மனிதனிடத்திலேதான் மறைக்கிறான், மனிதனைத் தான் ஏமாற்றுகிறான். நீ இதைச் செய்தாயா? என்றால் இல்லை என்று ஊழியர்களிடம் பொய்சொல்லுகிறான். தேவனுடைய அதிகாரம் பெற்ற ஊழியர்களிடத்திலே பொய் சொல்வதே தேவனிடத்தில் பொய் சொல்லுவது, அவர்களுக்கு மறைப்பதே தேவனுக்கு மறைப்பதாகும். அப். 5:1-10-த்தை வாசிக்கிறவர்கள் நன்றாக அறிந்து கொள்ளலாம். எங்கே மறைக்கிறானோ அங்கே வெளிப்படுத்த வேண்டும். எல்லாரிடத்திலேயும் அல்ல; அதிகாரம் பெற்ற ஊழியர் முன்பாக வெளிப்படுத்தி தன்பாவத்திற்கு மன்னிப்பை பெற்றுக்கொள்ள வேண்டும். பாவத்தை மறைக்காமல் அவைகளை அறிக்கை செய்வதின் மூலமாக மனிதன் இரக்கம் பெறுவான். பாவத்திலிருந்து பூரண விடுதலை பெறுவான். கடவுளிடத்தில் அறிக்கை செய்து ஜெபம் பண்ணுவதும் அவசியம், அது ஜெபம் ஆகும்; அது அறிக்கையல்ல. அது ஒத்துக்கொள்கிறது. அறிக்கை என்பது மனிதனுக்குமுன் அறிக்கை செய்கிறதே ஆகும். மறைக்கிறது எங்கே என்று விளங்கிக்கொண்டால் அறிக்கைசெய்கிறது பற்றிய விளக்கமும் மனுமக்களுக்கு தெளிவாய் கிடைக்கும் (1யோ. 1:7-10). ஆனபடியினால் சத்தியத்தை அறியாமல் சத்தியத்தை வெளிப்படுத்துகிற, சொல்லுகிற, அதன் உண்மையைக் காண்பிக்கிற தேவ ஊழியர்களை பகைப்பதும் தூசிக்கிறதுமான துஷ்டதனங்களை செய்யாதபடி தேவனுக்கு கீழ்படியுங்கள். தேவன் இரக்கம் செய்வார், ஆசீர்வதிப்பார்.

கிறிஸ்துவுக்குள்,

தலைமை அப்போஸ்தலர்.என்.லாசர்

# பாவ அறிக்கை செய்

புதிய எருசலேம் சபையிலே தேவன் முதலாவது அப்போஸ்தலரை ஏற்படுத்தி னார். இயேசு உயிர்த்தெழுந்து, தம்முடைய வேலையை பூமியிலே செய்ய தாம் தெரிந்து கொண்ட அப்போஸ்தலரை அனுப்புகையில், அவர்களுக்கு ஜனங்க ளின் பாவங்களை மன்னிக்கவும், மன்னியா திருக்கவும் அதிகாரம் கொடுத்த விதமாய், புதிய எருசலேம் சபையின் அப்போஸ்தலருக்கு இயேசு தரிசனமாகி இந்த அதிகாரத்தைக் கொடுத்தார். தேவ ஜனம் தங்களின் பாவம் போக, கழுவிக்கொள்ள இறைவன் அருளிய உபதேசம் பாவ அறிக்கையின் உபதேசம். இந்த மகிமையான உபதேசத்தை சபையிலே நடைமுறைப் படுத்துகையில், பரிசேயர், சதுசேயர் போன்ற கிறிஸ்தவ தலைவர்கள் எதிர்த்தனர், விரோதமாக எழுதினார்கள், வாக்குவாதம் பண்ணி னார்கள், உபதேசித்தார்கள், துர் உபதேசம் என தூஷித்தார்கள். ஆனாலும் அவர்கள் மேற்கொள்ளவில்லை. ஓய்ந்தார்கள், சத்தியம் நிலைநாட்டப்பட்டது. ஏனெனில் தேவனுடைய அதிகாரத்தை எதிர்த்து ஜெயிக்க முடியுமா?

பழைய ஏற்பாட்டிலும், புதிய ஏற்பாட்டிலும், பாவத்தை மேய்ப்பனின் காது கேட்க, வெளிப்படுத்தி அறிக்கை செய்ய வேண்டும் என ஏராளமான வசன ஆதாரங்கள் உண்டு. ஆனால் கிறிஸ்தவர்கள் போதிக்கப்பட்டிருக்கிற பிரகாரம், "பாவத்தை இரகசியமாய் இயேசுவிடம் சொல்" என்பதற்கு ஒரு வசன ஆதாரமும் கிடையாது. நம்முடைய பாவத்தை அறிக்கை செய்தால், பாவங் களை மன்னித்து, எல்லா அநியாயத்தையும் நீக்கி, நம்மை சுத்திகரிக்க அவர் உண்மையும் நீதியும் உள்ளவராயி ருக்கிறார் (1யோ. 1 : 9).

அறிக்கை (confession) என்றால் என்ன?

ஒரு ஸ்தாபன தலைவர் தமது உள்ளத்தில் உருவான தீர்மானங்களை, தமது ஸ்தாபனத்தில் உள்ள மற்றவர்களும் அறியும்படி பேப்பரில் எழுதி எல்லாருக்கும் தெரிய வரும்படி அனுப்புகிறார். அதன் தலைப்பு சுற்றறிக்கை (circular). ஒரு அரசியல் கட்சிக்காரர் தேர்தல் சமயங்களில் தங்களுக்குள் எடுத்த முடிவுகளை, மேடையில் ஏறி ஜனங்கள் கேட்க அறிவிக்கிறார். அதற்குப் பெயர் தேர்தல் அறிக்கை (election manifesto). ஒரு குற்றவாளி, போலீசாரிடம் பிடிபட்டு விசாரிக்கப்படுகையில், தன் உள்ளத்தில் உள்ளதை வெளிப்படுத்துகிறான். அதை குற்றவாளியின் வாக்குமூலம் என்பர் (Statement of Confession).

உள்ளத்தில் உறுத்துகிற அல்லது மறைந்துகிடக்கிற பாவங்களை வெளிப்படுத்தி அறிக்கை செய்வதுதான், சரியான பாவ அறிக்கையாகும். இதை விளங்காதவர்கள், பாவத்தை மறைக்கி றவன் வாழ்வடையமாட்டான் (நீதி. 28 : 13) என்ற ஞானியின் கூற்றின்படி விளங்காமல் போகட்டும். சுத்திகரிப்பை விரும்புகிற நாமோ இந்தக் கடைசி நாட்களில் கிடைக்கப்பெற்ற இந்த மகிமையான உபதேசத்திற்காய் கர்த்தரை ஸ்தோத்தரிப்போமாக.

சரி, இதை உண்மையென்று ஒப்புக்கொள்கிற நீ, இன்னும் பாவத்தை

மறைத்துவைத்திருப்பதேனோ? வெட்கமா? பெருத்த அவமானம் வருமுன் அறிக்கை செய்துவிடு. புதிய எருசலேம் சரித்திரத்தில் பாவத்தை மறைத்துக் கொண்டு நிலை நிற்கிற ஒருவரும் கிடையாது. நீதிமான்கள் சபையிலே பாவி நிலைத்திருப்பதில்லை. கேடு வருமுன் பாவத்தை அறிக்கை செய்து விட்டுவிட வேண்டும். பாருங்கள், மோசேயுடன் கர்த்தர் நேரடியாகப் பேசினார். இஸ்ரவேலரை எகிப்திலிருந்து மீட்க கட்டளை கொடுத்து, அற்புத அடையாளம் காட்டி அனுப்பவும் செய்தார். தேவ கட்டளைப்படி மோசேயும் தனது குடும்பத்தாருடன், எகிப்தை நோக்கி பிரயாணத்தை தொடங்கினார். எல்லாம் சரிதான், ஆனாலும் அவரிடம் சரி செய்யப்படாத ஒரு மீறுதல் இருந்தது. அது என்னவெனில், கர்த்தர் ஆபிரகாமின் சந்ததியோடே பண்ணின உடன்படிக்கை பிரகாரம், மோசேயின் குமாரனுக்கு எட்டாம் நாளில் விருத்தசேதனம் பண்ணப்படாமல் இருந்ததே (ஆதி. 17 :12). புதைப்பட்டுக்கிடந்த இந்த மீறுதலினிமித்தம், வழியிலே தங்குமிடத்தில் கர்த்தர் மோசேக்கு எதிர்ப்பட்டு அவரைக் கொல்லப்பார்த்தார். உடனே மோசேயின் புத்திரனுக்கு விருத்த சேதனம் பண்ணப்பட்டது. அதன் பின்னர் கர்த்தர் அவரை விட்டு விலகினார் (யாத். 4 :24 -26).

தேவனுடைய பற்பல ஆசீர்வாதங்கள் நமக்குக் கிடைக்கலாம், தேவ தொடர்பு இருக்கலாம், வெளிப்படுத்தல்கள், ஆவிக்குரிய முன்னேற்றங்கள் எல்லாம் இருந்தாலும், அறிக்கை செய்யப்படாத ஏதேனும் பாவம் இருந்தால், அதினிமித்தம் எதிர்பாராமல் திடீரென கேடுவர வாய்ப்பு உண்டு. ஆனபடியால், எவ்வளவு பெரிய பாவமாக இருந்தாலும், இனி மேலும் மறைத்து வைக்காமல் அறிக்கை செய்க.

ஒரு முழு இரவு ஜெபத்தில், போதகர், ஒரு சகோதரன் பரிசுத்தாவி பெற்றுக்கொள்ளும்படி அவனுக்காக ஜெபம் பண்ணி கைகளை வைத்தார். தேவன் பரிசுத்தாவியை அவனுக்கு அருள சித்தமாக இருக்கிறார் எனக் கண்டார். ஆனாலும் தம்மிடம் வேண்டிக் கொள்கிறவர்களுக்கு தேவன் அருளும் இந்த நன்மையை அவன் பெற்றுக் கொள்ளமுடியாமல், அவன் அந்நிய தேவனுக்கு ஏற்கனவே பொருத்தனை பண்ணியுள்ளதான பாவம் தடை செய்கிறதென அறிந்து, பாவ அறிக்கை செய்யச்சொன்னார். அந்த சகோதரன் பாவ அறிக்கை செய்த உடனே, பரிசுத்த ஆவியின் அபிஷேகத்தைப் பெற்றுக் கொண்டார். ஏன் நீங்கள் எதிர் நோக்கும் நன்மை இன்னும் வராமலிருக்கிறது? எரேமியா 5:25 எழுதியிருக்கிறபடி அறிக்கை செய்யப்படாத உங்கள் பாவம் பரத்திலிருந்து வரும் நன்மையை தடுத்துக் கொண்டிருக்கிறது; ஆகையால் அருமையானவர்களே! பாவத்தை தேடி கண்டு பிடித்து, மறைக்காமல் அறிக்கை செய்துவிடு. தேவன் ஆசீர்வதிக்க சித்தமுள்ளவராயிருக்கிறார்.

---

## ஞானஸ்நானம்

10-10-99 அன்று சேலம் புதிய எருசலேம் கிளைசபையில் 20 பேர்களும், 23-1-2000 அன்று நாகர்கோவில் கிளை சபையில் 3 பேர்களும், 15-3-2000 அன்று மூலைக்கரைப்பட்டி கிளை சபையில் 10 பேர்களும், 17-3-2000 அன்று சேலம் கிளை சபையில் 7 பேர்களும், 20-3-2000 அன்று சென்னை கிளை சபையில் 13 பேர்களும், ஆதங்குடி கிளை சபையில் 10 பேர்களும், 30-3-2000 அன்று புதுக்கோட்டை கிளை சபையில் 2 பேர்களும், ஞானஸ்நானம் (திருமுழுக்கு) பெற்று திருச்சபையில் அங்கமானார்கள் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

# வேதபாடம்

*(1 சாமுவேல் 16 : 1 முதல் 1 சாமுவேல் 17 : 58 வரை)*

*தாவீதின் அபிஷேகமும் வெற்றியும்:*

கிபியாவுக்கு சென்றதால் சவுல் தேவனுடைய அதிகாரத்தை அசட்டை செய்தான். ஆகவே சாமுவேல் சவுலுக்குத் தெரியாமல் காரியங்களை நடப்பித்தது சரியான காரியமே. தேவனுக்கு விரோதமானவற்றைத் தவிர (தானி. 3 : 18) ஏனைய விபரங்களில் மேலான அதிகாரமுடையவர்களுக்கு நாம் அடங்கி நடக்க வேண்டும் (ரோ. 13 : 1-7). ஆனால் தெய்வீகக் காரியத்தில் உலக அதிகாரங்கள் தடைச்சட்டங்கள் போட்டால் அதை நாம் எதிர்க்க வேண்டும். எல்லாவற்றிற்கும் மேலான பெரிய அதிகாரம் தேவனுடைய அதிகாரம் அவருடைய கட்டளையே. சாமுவேல் கர்த்தருடைய கட்டளையின் படி பெத்லகேமுக்கு தேவன் காண்பிக்கும் நபரை இராஜாவாக அபிஷேகம் பண்ணும்படியாக செல்கிறார். ஈசாயினுடைய குடும்பத்தாரை பலி விருந்திற்கு அழைக்கிறார். ஈசாயின் குமாரரில் ஒருவரை இராஜாவாக தெரிந்து கொண்டோம் என்று இறைவன் சொல்லியிருந்த போதிலும் யார் என்று சாமுவேலுக்குத் தெரியாது. ஈசாயின் மற்ற குமாரர்களும் கடந்து போகச் செய்த பொழுதே எலிகூவின் (1 நாளா. 27 : 18) சரீர வளர்ச்சியை சாமுவேல் கவனித்தது ஆச்சரியமான காரியம். சவுல் சகல ஜனங்களையும் விட மிகவும் உயரமானவனாக இருந்தான். ஆனால் ஆவிக்குரிய வளர்ச்சியில் அவன் சின்னவனாய் இருந்தான். தாவீது சௌந்தரிய முள்ளவனாகவும் வாலிபராகவும் இருந்தார். ஆனால் அது தடை ஒன்றுமில்லை அவருடைய ஆவிக்குரிய திறமை, தேவனுக்குப் பிரீதியான இருதயமும் அவருக்கு இருந்தது. தன் பாலிய இருதயத்தை ஏதோ ஒரு இடத்தில் கர்த்தருக்கு சமர்ப்பித்து இளவயதின் பாவங்களுக்காக மன்னிப்பைத் தேடி தேவனோடு சமாதானமாய் இருந்த ஒரு இளைஞனாக தாவீது இருந்தார். சாமுவேல் ஈசாயின் பிள்ளைகள் இன்னும் உண்டு என்று கண்டுபிடித்து, தாவீது தனக்கு முன் வந்த பொழுது, கர்த்தருடைய ஆவியானவர் இவன்தான், இவனை அபிஷேகம் பண்ணு என்றார். அப்பொழுது தனித்து அழைத்துப்போய், அவர்கள் குடும்பத்தார் மத்தியில் தாவீதை சாமுவேல் அரசனாக தேவஜனங்களின் மேல் அபிஷேகம் பண்ணினார். அது முதற்கொண்டு தேவனுடைய ஆவி அவர் மேல் வல்லமையாய் இறங்கித் தங்கியிருந்தார்.

தாவீது தேவனோடு நெருங்கி ஜீவித்தது சவுலுக்கு கொஞ்சம் சிலாக்கியமாயிருந்தது. சவுலை அசுத்தாவி தாக்கி உபத்திரவம் உண்டானபோது தாவீது சுர மண்டலம் வாசித்து, சவுலுக்கு ஆறுதலையும் வழிநடத்துதலையும் கொடுத்தார். சவுலுக்கு சுரமண்டலம் வாசித்ததின் மூலமாக சவுலின் ஆவி அமைதலடைந்ததாகப் பார்க்கிறோம். ஆனாலும் சவுல் மெய் மனஸ்தாபம் அடைந்ததாகத் தெரியவில்லை. தாவீது தன் முழு நேரத்தையும் சவுலின் அரண்மனையில் செலவிடவில்லை. தாவீதின் சேவை அவசியமாய் இருக்கும் சமயத்தில் மட்டும் வந்து சென்றதாகப் பார்க்கிறோம்.

ஒரு வேளை அபிஷேகம் பெற்றபின் தாவீது தன் மிகுதியான நேரத்தை சாமுவேலுடன் தீர்க்கத்தரிசிகளின் கலாசாலையில் கழித்திருக்கலாம் (1 சாமு. 17 : 51 - 58). சவுல் விசாரணை செய்தது தாவீதைப் பற்றி செய்தாலும், தாவீதின் குடும்பத்தைப் பற்றி அறிந்து கொள்ளவே. ஏனென்றால், அவனுடைய வாக்குப் பிரகாரம் ஈசாயின் வீட்டிற்கு சர்வமானியம் அளிக்கப்பட வேண்டும். ஆனால் அப்படி சவுல் தன்னுடைய வாக்கை நிறைவேற்றினதாகத் தெரியவில்லை. இஸ்ரவேலர்களில் எல்லாரிலும் சவுலே கோலியாத்தைப் போன்ற பெரிய உருவமுடையவனாக இருந்தான். தாவீதின் தமையனாகிய எலிகூவும் சவுலுக்கு சமானமாயிருந்தான். ஆனால், இவர்கள் ஒருவரும் அந்த கோலியாத் அரக்கனை எதிர்த்துப் போகத் துணியவில்லை.

தேவனுடைய ஆவியினால் நிறைந்து தேவனுடைய காரியத்திற்காக வைராக்கியம் கொண்டிருந்த இளைஞனாகிய தாவீதையே தம் ஜனமாகிய இஸ்ரவேலை விடுவிக்க தேவன் உபயோகித்தார். சிங்கத்தையும், கரடியையும் கொன்றதைக் குறித்து தாவீது அறிவித்த போதிலும், அதற்கு ஒத்தாசை தேவனால் கிடைத்தது என்றும், கோலியாத்தை தன் கையில் தேவன் ஒப்புக்கொடுக்கும்படியாக, அவரையே நோக்கிப் பார்ப்பதாகவும் தாவீது கூறினார். சகலமும் தாவீதுக்கு விரோதமாய் இருந்தது. கோலியாத் பத்து அடி உயரமுள்ளவனாய் இருந்தான். அதற்கு மேலாக ஒரு தலைச்சீராவையும் அணிந்திருந்தான். தன்னைப் பாதுகாக்க சங்கிலிக் கவசமும் தரித்திருந்தான். ஒரு பிரமாண்டமான ஈட்டியையும் அவன் கையில் பிடித்திருந்தான். கேடகம் பிடிக்கிறவன் அவனுக்கு முன்னாக நடந்தான். பெரிய பட்டயமும் அவனுக்கு இருந்தது. தாவீதுக்கு மேய்ப்பனின் தடியும் கவணும் பையுமட்டுமே இருந்தன. அதில் சில கற்கள் இருந்தன. மற்ற சிறுவர் காலத்தை வீணாக கழிக்கையில், தாவீது மந்தையைக் காவல் காத்துக் கொண்டு, தன் கவணை சுழற்றி சுழற்றி தன் கையை நன்றாக பழக்குவித்திருந்தார். இவ்விதமாக குறிதவறாமல் எய்து வீசக்கூடிய பூர்வீக பென்யமீனரைப்போல தாவீது விளங்கினதாகத் தெரிகிறது (நியா. 20 : 16). தாவீது தன் தேவர்களைக் கொண்டு அந்த அரக்கன் சபிக்கையில், வார்த்தையினால் தாவீதை முறியடிக்க அவன் சாபமிட்டான்; பயமுறுத்தினான். ஆனால் தாவீதோ நீ நிந்திக்கிற இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தருடைய நாமத்தினாலே உனக்கு விரோதமாய் வருகிறேன் என்று சொல்லி, ஓடி கவணிலே ஒரு கல்லை வைத்து அரக்கன் நெற்றியில் பட குறிப்பாக எறிந்தார். அந்த இராட்சதனுடைய நெற்றியில் மாத்திரம் சிறிது இடைவெளி தெரிந்தது. அந்த இடத்தில் சரியாக கூழாங்கல் பதிந்தது. அந்த க்ஷணமே அவன் குப்புற விழுந்தான். முடிவாக தாவீது ஓடி அவன் சிரசை வெட்டி தூக்கிவிட்டார். இவை யாவும் மகா சடுதியில் நடைபெற்றபடியினால், தங்கள் தலைவனுக்கு ஒத்தாசை புரிய பெலிஸ்தியர் வரமுடியவில்லை. தோல்வியுற்றோர் வெற்றி பெற்றோருக்கு அடிமைகள் என்ற அறை கூவுதலையும் மறந்து அவர்கள் ஊரை நோக்கி, சிதறி ஓடினர். காத், எக்ரோன் பட்டணங்களின் வாசல் மட்டும் இஸ்ரவேலர்கள் அவர்களைத் துரத்திக்கொண்டு போயினர்.

இந்நாட்களிலேயும் தேவன் தம்முடைய நாமத்திற்காக வைராக்கியம் கொண்ட தேவாவியினால் நிரம்பிய ஒரு தலைவனைக் கொண்டு சாத்தானை முறியடிப்பார். முறையாக அரசபதவியிலிருந்த சவுலோ, சேனாதிபதியான அப்னேரோ, எலியாபோ

அல்லது வேறே பலத்த வீரர்களோ யாரும் அரக்கனை எதிர்க்க முடியவில்லை. பயந்து போயிருந்தார்கள். காரணம் இவர்கள் தேவனுக்குப் பிரியமாயிருக்கவில்லை. அப்படியே இந்த நாட்களிலேயும், வேதகலாசாலையில் படித்து, பட்டம் பதவிகள் பெற்று பெரிய நிலையிலுள்ளவர்கள் சாத்தானோடு எதிர்த்துப் போரிட முடியாமல் அவனால் தாக்கப்பட்டு காயப்படுகிறார்கள். முதுகிலே காயம் ஏற்படுகிறது. ஆனால் தேவன் தெரிந்து கொண்ட தேவனால் அபிஷேகம் பண்ணப்பட்ட தேவாவியினால் நிரம்பி தெரிந்து கொள்ளப்பட்ட தேவனுடைய மனிதர்கள் சாத்தானை முறியடிப்பார்கள். இதுவே இந்த வேத பாகத்தினுடைய முக்கியக் கருத்தாக இருக்கிறது. சவுலின் இராஜவஸ்திரத்தையோ, பட்டயத்தையோ அணிந்து கொண்டு நடந்து பார்த்த பொழுது அந்தப் பயிற்சி தனக்கு இல்லையென்று சொல்லி தாவீது ஒதுக்கி விட்டு தனக்கு இருந்த சிறிய பயிற்சியினாலும், அதே சமயத்தில் தேவனுடைய ஆவியின் வல்லமையினாலும் இராட்சதனை வீழ்த்தினார். மற்ற இராட்சதர்களின் முடிவை அறிய (2 சாமு. 21 : 15- 22) முடிய பார்க்கவும். தாவீதினாலும், தாவீதுடைய சேவகர்கள் மூலமாகவும் இராட்சதர்கள் முற்றிலுமாக பூமியிலிருந்து அழிக்கப்பட்டுப் போனார்கள் என்பதே.

(தொடரும்)

## புதிய எருசலேம் சபையின் கன்வென்ஷன்கள்

*9-3-2000 அன்று கன்னியாகுமரி மாவட்டம் புன்னையடி புதிய எருசலேம் சபையின் வளாகத்தில் மாலை 6 மணிக்கு கன்வென்ஷன் நடைபெற்றது. சபையின் தலைமை அப்போஸ்தலர் அவர்கள் இயேசு கிறிஸ்துவின் வருகையையும் அதின் இரகசியத்தையும் குறித்து செய்தி அளித்து மக்களை ஆசீர்வதித்தார்கள்.*

*10-3-2000 முதல் 12-3-2000 (வெள்ளி முதல் ஞாயிறு) முடிய முழங்குழியில் புதிதாக எழுப்பப்பட்டுள்ள புதிய எருசலேம் சபையின் வளாகத்தில் மூன்று நாட்களும் மாலை 6 மணிக்கு கன்வென்ஷன் நடைபெற்றது. சபையின் தலைமை அப்போஸ்தலர் அவர்கள் தேவ செய்தியளித்தார்கள். தேவன் தமது வல்லமையை வெளிப்படுத்தினார். முதலாம் நாளில் 'மனந்திரும்புதலும் அதன் அவசியத்தைப்பற்றியும், இரண்டாம் நாள் 'தேவன் சிருஷ்டிகளின் மேல் அன்பு கூறுகிறார்' என்பதைப்பற்றியும், மூன்றாம் நாள் 'கிறிஸ்தவத்தின் மேன்மையும், ஆசீர்வாதமும்' என்பதைப் பற்றியும் செய்தியளித்தார்கள். தேவன் வசனத்தை அனுப்பி அவர்களை குணமாக்கினார்.*

*ஒருவனுடைய வழி தேவனுக்குப் பிரியமாயிருந்தால் அவனுடைய சத்துருக்களும் சமாதானமாகும்படி செய்வார் என்றபடி, தேவன் சத்துருக்களைத் தாழ்த்தி சமாதானம் அடையும்படி செய்தார். சத்துருவின் பிடியிலிருந்து மக்களை விடுதலையாக்கி ஆசீர்வதித்தார். பிரசங்கத்தைக் கவனிக்க வந்த அநேக இந்து பெருமக்கள் 3-ம் நாள் கன்வென்ஷன் முடிந்ததும் சபை மக்களிடம் வந்து, தலைமை ஐயாவை இன்னும் இரண்டு நாட்கள் செய்தி கொடுக்கச் சொல்லுங்கள் என்று கேட்டுக் கொண்டார்கள். 14-3-2000 அன்று மாலை 6 மணிக்கு மூலைக்கரைப்பட்டியில் கன்வென்ஷன் நடைபெற்றது. சபையின் தலைமை அப்போஸ்தலர் அவர்கள் தேவ செய்தியளித்து, மக்களை ஆசீர்வதித்தார்கள் என்பதை மிகுந்த மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.* மகிமை

# மிஸ்பா (கர்த்தருக்கு முன்பாக) நியா.20:1

மிஸ்பா என்றால் தேவன் ஒவ்வொரு சம்பவத்தையும், காரியத்தையும் பார்ப்பவராக, நடுநின்று நியாயம் தீர்க்கிற நியாயாதிபதியாக, அந்தக் காரியத்திற்கு சாட்சியாக தேவனே இருக்கிறார் என்று அர்த்தமாகும். மனிதனோ தேவனை விட்டு தூரமாய் போனவனாக தேவன் பாரார், அறியார் என்று எண்ணி பாவஞ் செய்கிறவனாக இருக்கிறான். இப்படிப்பட்ட ஒவ்வொரு மனிதனும் முதலாவது மிஸ்பாவிற்கு (கர்த்தருக்கு முன்பாக) அதாவது தேவன் பார்க்கிறார் என்றும் தம்மைக் கண்காணிக்கிறார் என்றும், தான் செய்கின்ற ஒவ்வொரு காரியத்தையும் நியாயந்தீர்க்கிற நியாயாதிபதியாய் இருக்கிறார் என்றும் அறிய வேண்டும். அப்பொழுது அவன் பயபக்திக்குரியவனாக எந்த தவறும், பாவமும் செய்யாதவனாக தேவன் தன்னைக் காண்கிறார் என்றும், தண்டிக்கிறவராய் இருக்கிறார் என்றும் அறிபவனாக இருக்கிறான்.

*மிஸ்பா:*

1. *சாட்சியாய் நிற்பவர் (ஆதி. 31; 50)*
2. *கண்காணிப்பவர் (ஆதி. 31 : 49)*
3. *நியாயந்தீர்க்கிறவர் (ஆதி. 31 : 53)*

மனிதன் இந்த அனுபவத்தைப் பெற்றுக்கொண்டு இங்கேயிருந்து (மிஸ்பாவில்) (நியா. 11 : 29) வாழ்க்கையை துவங்குவானானால் அது ஜெயமாக, ஆசீர்வாதமாக இருக்கும் (நியா. 11 : 29,32). இப்படிப்பட்ட எண்ணத்தோடு தேவனுக்கு பயந்து வாழ்பவர்களுக்காக தேவனே யுத்தஞ்செய்கிறவராக, தப்புவிக்கிறவராக, விடுதலை அளிக்கிறவராக இருக்கிறார் (1சாமு. 7 : 6,10). இப்படிப்பட்ட அனுபவமுடையவர்களுக்கு தேவனே துணை நிற்பார்; இழந்து போனதை திரும்பத்தருவார் (1சாமு. 7 : 13,14). மனிதர் ஒவ்வொருவரும் இந்த மிஸ்பாவுக்கு (கர்த்தருக்கு முன்பாக) வந்தால் நலமாயிருக்கும். சகோதரனே! சகோதரியே! மிஸ்பாவின் அனுபவம் உனக்கு உண்டா?

## கர்த்தருக்குள் நித்திரையடைந்தார்

தேவ ஊழியர் சகேயு அவர்கள் மனைவியும், பாஸ்டர். சாது சுந்தர் சிங் அவர்களின் இளைய சகோதரியுமான சகோ. எஸ்தர் மேரி 8. 2. 2000 அன்று கர்த்தருக்குள் நித்திரையடைந்தார் என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்கிறோம். அன்னாரின் பிரிவினால் ஆழ்ந்த துயரத்தில் காணப்படும் தேவ ஊழியர், ஊழியர் குடும்பத்தாருக்கும், சகோதரியின் குடும்பத்தாருக்கும் கர்த்தர் ஆறுதல் அருளும்படியாக யாவரும் ஜெபிக்கும்படி கேட்டுக்கொள்கிறோம்.

# திரித்துவம் திரியேகத்துவம்

நாம் திரித்துவத்தைப்பற்றி தியானிக் கும்பொழுதே மற்ற மதங்களிலுள்ள காரியங்களையும் தெளிவாய் அறிந்து கொள்ள வேண்டியது அவசியமாகும். ஆனபடியினால் கவனிக்கவும்:

இஸ்லாம்:

இந்தியக் கிறிஸ்தவன் திரித்துவ ஆராய்ச்சியிலும், அனுபவத்திலும் விழிப்பாயிருக்க வேண்டிய மற்ற மார்க்கம் இஸ்லாம் ஆகும். (இஸ்லாம் என்ற பதம் அரபிக் மொழியில் அடிமைப்பட்டிரு எனப் பொருள்படும்). அல்லா என்பவருக்கு அடிமையாயிருக்க வேண்டும்; அல்லாவுக்கு நிகரான கடவுள் இல்லை; அல்லாவுக்கு எவ்வித துணையுமில்லை; அல்லாவைவிட வேறு எவருக்கும் அறிவில்லை; அல்லாவைவிட வேறு எவருக்கும் சக்தியில்லை; அல்லாவைவிட வேறு எவரும் வணக்கத்துக்குரியவரல்லர்; அல்லாவைத்தவிர வேறு எவரும் நம்பத்தக்கவரல்ல என்பதே இஸ்லாமியக் கோட்பாடு. இவ்வாறு அல்லாவுக்கு துணை நினைப்பது, துணை கூறுவதும் பெரிய பாவம். இஸ்லாம் கடவுளின் ஒருத்துவத்தை வற்புறுத்த எண்ணி இவ்வாறு நிபந்தனைகளை இயற்றியது கடவுள் ஒருவர் என்ற எண்ணிக்கை கோட்பாட்டையே (ஒருத்துவம்) வற்புறுத்தியது. இரண்டு, மூன்று, நான்கு தெய்வங்களில் அல்லா ஒன்று அல்லது முதல்வர் என்பதே அவர்கள் பாடம். கிறிஸ்தவ விசுவாசம் ஒரே தன்மை, ஒரே தன்மையில் மூவர் என்ற உயரிய கோட்பாட்டை உடைத்ததாகும் கிறிஸ்தவம். இதற்கும் இஸ்லாமியக் கோட்பாட்டிற்கும் குறிப்பாய் வித்தியாசம் உண்டு. 'குர் ஆன்' ல் அல்லாவைப் பற்றி கூறும் போது 'நாம்' (WE) என்று உபயோகப்படுத்தப்பட்ட பதத்திற்கும் ஆதியாகமத்தில் "நம்மில் ஒருவரைப் போல் ஆனான்" என்ற வார்த்தையில் உபயோகப்படுத்தப்பட்டிருக்கிற (we) நாம் என்பதற்கும் திரித்துவ ஆராய்ச்சியில் வித்தியாசம் உண்டு. குர் ஆனில் நாம் என்ற பதம் ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு இவர்களுக்கு நான் மேன்பட்டவன் என்ற சர்வாதிகார இராஜரீகத்தை காட்டும் பதமாய் அது இருக்கிறது. கிறிஸ்தவ திரித்துவ சித்தாந்தத்தில் நாம் என்பது மகத்துவத்திற்குரிய ஒரே பதமேயாயினும், கடவுள் தன்மையில் இயங்கவுள்ள திரியேகத் தொடர்பை உண்டாக்கியதாக கடவுள் தன்மையி லேயே அடங்கியுள்ள ஒருவருக்கு மேற்பட்ட திரித்துவ பொருளைக் குறிக்கும் சொல் என்பது கவனிக்கப்பட வேண்டும்.

முகமது கிறிஸ்தவ சித்தாந்தத்தை விளங்கிக்கொள்ள கூடாமல் தன் அடியாரை கிறிஸ்தவர்களின் திரித்துவ கொள்கையைக் குறித்து எச்சரிக்கையாயிருக்க வேண்டும் என்று போதித்தார். திரித்துவம் ஒரே கடவுள் என்ற போதனைக்கு மாறானது என்பது அவர் நினைப்பு. திரித்துவ உபதேசம் அஞ்ஞானிகளுக்குரியது. திரித்துவ உபதேசத்தைக் களைந்து ஒரே கடவுளை ஒப்புக்கொள்ளாவிட்டால் அவர்களுக்கு

ஆக்கினை உண்டு என வன்மையாய் தம் அடியாருக்குப் போதித்தார். கடவுள், தூய கன்னிமரியாள், இயேசு கிறிஸ்து இவர்களே கிறிஸ்தவர்கள் கொள்ளுகிற திரித்துவம் என முகமது நினைத்தார். பரிசுத்தாவியைப் பற்றி குர்ஆனில் மூன்று இடத்தில் மாத்திரம் கூறப்பட்டுள்ளது. காபிரியேல் என்ற பிரதான தூதனோடு சம்பந்தப்பட்டே கூறப்பட்டது.

ஆனால் முகமது மார்க்கத்தாரில் ஒரு சிலர் ஒரு வகை இஸ்லாமியத்தையும் திரித்துவத்தையும் கூறுவர். கடவுள், அவர் நாமம், அவர் குணங்கள் என பிரித்துக் கொள்வர். பரம்பொருள் முகமதுக்கு அல்லாவாகவும் ஏழு குணங்களை உடையவராகவும் தம்மை வெளிப்படுத்தி னார் என்று கூறுவர். கிறிஸ்தவ சித்தாந்தம் கூறும் ஒரே கடவுள், ஒருவரில் மூவர் என்ற ஆள் தன்மையுடைய (not personality but person) அனுபவமும், கடவுளுக்கும், கடவுளின் வெளிப்பாட் டிற்கும் உரியதும், அவ்விருவரில் ஒருவராகவே இணைக்கும் ஆவியின் வெளிப்பாடும், அவ்வெளிப்பாட்டை உலகத்திற்கு உணர்த்தும் ஆவியின் 'ஆள்' அனுபவமும், அவ்வனுபவத்தில் முதல் இருவரும் ஒருவராகவும் மூவராகவும் வெளிப்பட்டுள்ளார் என்ற ஆழ்ந்த போதனை இஸ்லாமியத்திரித்துவத்தை வெறும் பரம்பொருளின் மூன்று இலட்சியம் என விரைவில் நிராகரிக்கின்றது.

இஸ்லாமிய சமயத்தாரில் மற்றொரு சாரார் கடவுள் பரம்பொருள் (Absolute Being), இரண்டாவது அவர் ஒருத்துவர் (Oneness), மூன்றாவது அவர் ஒருவரும் பலருமாய் உள்ளார் (One and the many) எனக் கூறுவர். இது திரித்துவமாகாது. கடவுள் ஒரே தன்மையின், அத்தன்மையில் அமைந்துள்ள மூவகை சம்மந்தத்தைக் காட்டாமல், கடவுளை மூன்று கோணத்திலிருந்து பார்க்கும் ஒரு முக்கோண பார்வையையே இஸ்லாம் காட்டுகிறது. கடவுள் தன்மையைப் பற்றி ஆராயுமிடத்து, இந்து சமய மக்கள் கடவுளுக்கும், மக்களுக்கும், பரமாத்மாவுக்கும், ஜீவாத்மாவுக்கும் பாகுபாடு இல்லாமல் எல்லாம் கடவுள், கடவுள் எல்லாம், நீயே அது, அதுவே நீ என்று இரண்டறக் கலப்பு என்ற போதனையே அதிகம் வற்புறுத்தியுள்ளார்கள்.

இஸ்லாமியர் கடவுளின் அதிதக் கொள்கையையே அதிகம் பாராட்டி, யாவும் அல்லாவின் சித்தத்திற்கு அடிமை என வற்புறுத்துவர். கிறிஸ்தவ சமயம் இரண்டிற்கு மாறாக அதிதக் கடவுள் தூய்மையிலும், அன்பிலும், சிருஷ்டிப் பிலும், பராமரிப்பிலும், சன்மார்க்கத்திலும் மக்களுக்கும் உலகத்திற்கும் கலப்பில்லாமல் சம்மந்தப்படுகிறவர், அனுதாபப் படுகிறவர் என்பதையும் "நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்". என்று மக்களை அறைகூவும் ஆள் எனப்படுகிறவர். அவர் விரும்புவதை மக்கள் நிறைவேற்றுவதற்கு வேண்டும் பெலனை அருளுபவர். அன்பின் பூரணர் என்ற உண்மையையும் நான் உயர்த்தப்பட்டிருக்கும் பொழுது எல்லாரையும் என் அண்டை இழுத்துக்கொள்வேன் என்ற கடந்த காலத்திற்கும், நிகழ் காலத்திற்கும் வருங்காலத்திற்கும் உரிய கடவுள் இராஜ்யத்தை ஸ்தாபித்தவர், ஸ்தாபிக்கிறவர், ஸ்தாபிப்பவர். என்ற உயரிய போதனையையும், தன்னில் உடைத்தாகி எக்காலத்தும் உலகிற்கு ஊட்டுவதான

உயரிய இலட்சியத்தையே வற்புறுத்தும் கிறிஸ்தவர் மேல் விழும் மற்றொரு கடமையும் உண்டு. பிதா, குமாரன், பரிசுத்தாவி என்கிற திரித்துவ ஐக்கியத்தை கிறிஸ்தவ மக்கள் கடவுளின் பரிசுத்தாவியின் மூலம் சுவிகரித்துக் கொள்ளும் அந்நியோந்யத்தை நிருபித்துக் காட்ட வேண்டும்.

திருச்சபை கடவுளின் வீட்டார். கடவுள் வீட்டாரின் இலட்சியம் அந்நியோன்யம் திரித்துவத்தின் அந்நியோன்யம், கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை ஆண்டவரென்று விசுவாசிக் கிற எவனும் திரித்துவத்தைப் பற்றி அனுபவியாமல் இருக்க முடியாது. பரிசுத்தாவியினாலன்றி எவன் இயேசு கிறிஸ்துவை கர்த்தரென்று அறிக்கை செய்வான். பரிசுத்தாவியினால் மாத்திரமே இயேசு கர்த்தரென்று, அப்பா பிதாவே என்று கூப்பிடும் உரிமையும் பெறுவான். பிதாவின் வெளிப்பாட்டை குமாரனிலும், குமாரனின் தெய்வீகக் குமாரத்துவத்தை பரிசுத்தாவியிலும், பரிசுத்தாவியையும் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் ஆவியையும் அனுபவித்துக் கொண்டவனே கிறிஸ்தவன்.

என்னையும் உலகமனைத்தையும் சிருஷ்டித்த தேவனாகிய பிதா, என்னையும் மற்றெல்லா மனிதரையும் மீட்டுக் கொண்ட தேவனாகிய குமாரன், என்னையும் தேவனால் தெரிந்து கொள்ளப்பட்டவர்கள் எல்லாரையும் பரிசுத்தம் செய்கின்ற பரிசுத்தாவி என்ற திரித்துவ விசுவாச அறிக்கையை உள்ளத்தினின்று உரக்கச் சத்தமிட்டு கூறுவான். இஸ்லாமிய மதத்தினர் அதிகமாகப் பாராட்டும் சகோதரத் துவத்தைக் குறித்து, திரித்துவ ஆராய்ச்சியில் கவனமாய் இருக்க வேண்டும். இஸ்லாமிய சகோதரத் துவத்திற்கும் (Brotherhood), கிறிஸ்தவ சகோதரத்துவத்திற்கும் அடிப்படை வித்தியாசம் உண்டு. இஸ்லாமிய சகோதரத்துவம் அடிமைப்பட்டிரு, கீழ்ப் பட்டிரு, கீழ்ப்படி என்ற கோட்பாட்டிலும், ஓர் இனம், ஓர் மதம் என்ற போர் முழக்க ஒருமைப்பாட்டிலும் ஏற்பட்டது. இஸ்லாமிய சகோதரத்துவத்தில் காணப்படும் அன்பு, தெய்வீக அன்பு எனப்படாமல் மனிதனுக்கும், மனிதனுக்குமுரிய பரஸ்பர தொடரையே குறிக்கும். கிறிஸ்தவ சமுதாயத்தின் அடிப்படை, திரித்துவத்தின் ஆழ்ந்துள்ள அன்பு, பிதாவையும் குமாரனையும் பரிசுத்தாவியையும் இணைக்கிற அன்பே (Agape) திரித்துவ சகோதரத்துவத்தின் அடிப்படை. அது இணைக்கிற அன்பாயிராமல் ஜெனிப்பிக் கிறவரும், ஜெனிப்பிக்கப்படுகிறவரும், புறப்படுகிறவருமான ஒரே அன்பையே குறிக்கும்.

வேறு வகையாய்ச் சொல்ல வேண்டுமானால், கிறிஸ்தவ சகோதரத் துவம் கீழிருந்து உண்டாகாமல் உன்னதத்திலிருந்து உண்டாயிற்று. கடவுளே அதின் உற்பத்தி, கடவுளே அதின் விருத்தி, கடவுளே அதின் இறுதி. ஆனபடியினால் திருச்சபையின் மக்கள் சகோதரத்துவத்தில் அந்நியோந்ய ஐக்கியத்தில் இருக்கமாக இணைபட வேண்டும். பரிசுத்தமாய் தெய்வ பயத்தோடு அன்பு கூற வேண்டும். (God is *Agape*. The Good is Agape. *Agape* is the center of Christianity. It sets its mark on everything in Christianity. Without it, nothing that is Christian would be Christian. *Agape* is Christianity's own original basic conception).

(தொடரும்)

"பிதாவாகிய ஒரே தேவன் நமக்குண்டு, அவராலே சகலமும் உண்டாயிருக்கிறது; அவருக்கென்று நாமும் உண்டாயிருக்கிறோம். இயேசு கிறிஸ்து என்னும் ஒரே கர்த்தரும் நமக்குண்டு; அவர் மூலமாய்ச் சகலமும் உண்டாயிருக்கிறது, அவர் மூலமாய் நாமும் உண்டாயிருக்கிறோம்.

ஆகிலும், இந்த அறிவு எல்லாரிடத்திலும் இல்லை. சிலர் இற்றையவரைக்கும் விக்கிரகத்தை ஒரு பொருளென்று எண்ணி, விக்கிரகத்துக்குப் படைக்கப்பட்டதைப் புசிக்கிறார்கள்; அவர்களுடைய மனச்சாட்சி பலவீனமாயிருப்பதால் அசுசிப்படுகிறது. 1கொரிந்தியர். 8 : 6,7.

# தேவன் கொடுத்த அற்புத சுகம்

நான் ஆர்.சி கிறிஸ்தவ குடும்பத்திலிருந்து இரட்சிக்கப்பட்டு, சென்னை புதிய எருசலேம் சபையில் குடும்பமாய் தேவனைத் தொழுதுகொண்டு வருகிறோம். எனது மூத்த மகன் மார்க் (வயது13) என்பவனுக்கு வலது பக்கம் மார்பின் கீழ் கட்டி ஒன்று வந்தது. நான் அருகில் உள்ள மருத்துவமனைக்கு அழைத்துச் சென்றேன். டாக்டர் பார்த்துவிட்டு ஒருவாரம் ஊசியும், மாத்திரையும் கொடுத்தார்கள். ஆனால் கட்டியோ ஒவ்வொன்றாக பெருத்து ஐந்து கட்டிகள் முளைத்தெழும்பிற்று. கட்டி என்றால் சீழ்ப்பிடித்து உடைந்துவிடும். இது அப்படிப் போன்ற கட்டி அல்ல. சரீரத்தின் உள் பகுதியிலிருந்து பெரிய பெரிய கட்டிகள் வந்தது. டாக்டர் சென்னை G.H. பெரிய ஆஸ்பத்திரிக்கு அனுப்பிவிட்டார்கள். அங்குள்ள டாக்டர் குழு பரிசோதித்துவிட்டு, ஊசியும் மருந்தும் கொடுத்து, நான்கு நாள் கழித்து வரச்சொன்னார்கள். மகனுக்கு எந்த வித முன்னேற்றமும் இல்லை. வலியோ அதிகம். படுக்க முடியாத சூழ்நிலை. பிறகு நான்கு நாள் கழித்து அழைத்து சென்றோம். அதே டாக்டர்கள் குழு பரிசோதித்துவிட்டு உடம்பில் உள்ள எல்லா அவயவங்களையும் பரிசோதனை பண்ணினார்கள். பிறகு டாக்டர்கள் ஒரு பெரிய புஸ்தகத்தைப்பார்த்து, இந்த வியாதி வெளி நாட்டில் ஒருவருக்கு இது போன்று வந்தது என்று கூறி, மாத்திரைகள் கொடுத்து இனியும் சரியாகவில்லை என்றால் கட்டியை ஒவ்வொன்றாக அறுத்து எடுக்க வெண்டியதுதான் என்று சொல்லி அனுப்பிவிட்டார்கள்.

இந்த காரியத்தைப்பற்றி சபை போதகர் சாம் இஸ்ரவேல் ஐயாவிடம் கூறினோம். அவர்கள் என் மகனைப் பார்த்துவிட்டு. இது பிசாசினால் உண்டான கட்டி என்று சொல்லி, அவனுக்கு ஜெபம் செய்தார்கள். பிறகு நீயும், உன் மனைவியும் ஒரு நாள் உபவாசித்து தேவ ஆலயத்தில் வந்து ஜெபம் செய்யுங்கள் என்று ஆலோசனை கூறினார்கள். அதன்படி நானும் என் மனைவியும் காலைமுதல் மாலை வரை தேவ ஆலயத்தில் உபவாசித்து எங்களது மகனின் சுகத்திற்காக ஜெபம் செய்தோம். பிறகு நான்கு நாள் கழித்து டாக்டர் சொன்ன தேதியில் கட்டியை ஆப்ரேஷன் செய்வதற்கு அழைத்துச் செல்ல மகனைக் கூப்பிட்டோம். அவன் ஓடி வந்து அப்பா ஆப்பரேஷன் பண்ண டாக்டரிடம் போகவேண்டாம் அந்தக் கட்டி மறைந்து விட்டது. கர்த்தர் எனக்கு சுகம் கொடுத்துவிட்டார் என்று சொன்னான். என்ன ஆச்சரியம்!! சபை போதகர் ஆலோசனையைக் கேட்டு, அதன் மூலமாய் தேவன் கொடுத்த அற்புத

சுகத்திற்காக தேவனுக்கு அதிக அதிகமாக ஸ்தோத்திரம் செலுத்துகிறோம்.

சகோதரர் ஜி. அந்தோணிசாமி,
புதிய எருசலேம் சபை,
மேடவாக்கம், சென்னை கிளை.

# மரண சாதனம் (உயில்)

உலகத்திலே பெரிய மரண சாதனத்தைப்பற்றி வேதம் குறிப்பிடுகிறது. ஆகையால் முதலாம் உடன்படிக்கையின் காலத்தில் நடந்த அக்கிரமங்களை நிவிர்த்தி செய்யும்பொருட்டு அவர் மரணமடைந்து அழைக்கப்பட்டவர்கள், வாக்குத்தத்தம் பண்ணப்பட்ட நித்திய சுதந்திரத்தை அடைந்து கொள்வதற்காக புது உடன்படிக்கையின் மத்தியஸ்தராயிருக்கிறார். ஏனென்றால் எங்கே மரணசாதனம் உண்டோ அங்கே அந்த சாதனத்தை எழுதினவனுடைய மரணமும் உண்டாகவேண்டும். எப்படியெனில் மரணமுண்டான பின்பே மரணசாதனம் உறுதிப்படும்; அதை எழுதினவர் உயிரோடிருக்கையில் அதற்கு பெலனில்லையே (எபி. 9: 15-17). உலகத்தில் மரணசாதனம் (உயில்) அல்லது ஆவனங்களை சேகரித்து, எழுதிவைப்பது என்று சொல்லப்படுவது சுதந்தரத்தைப் பெறவேண்டியவர்களுக்காக சுதந்தரத்தை உடையவர்கள் தங்களுடைய பின் சந்ததிக்காக உயில் எழுதிவைப்பதுண்டு.

**உலகின் பெரிய மரண சாதனம்:**

மரணசாதனம் என்று சொல்லி புதிய உடன்படிக்கையைப்பற்றி எழுதியிருக் கிறது. வேதாகமத்தை பழைய உடன்படிக் கை என்றும் புதிய உன்படிக்கை என்றும் நாம் அழைக்கிறோம். இங்கே கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் மரணத்தைப்பற்றி புதிய உடன்படிக்கை என்று எழுதியிருக்கிறது. அதின் விபரத்தை நாம் புதிய ஏற்பாட்டில் (வேதத்தில்) பார்க்கின்றோம். பொதுவாக உலகத்தில் ஐசுரியவான்கள் உயில் எழுதிவைக்கிறதை நாம் காண்கிறோம். அப்படி எழுதிவைக்கவில்லையென்றால் குடும்பத்தாரில் பலவிதமான குழப்பங்களும் சண்டைகளும் உண்டாகும். ஒரு மனிதன் உயிரோடு இருக்கையில் பல தடவை உயில் எழுதலாம். ஆனால் கடைசியில் எழுதுகிற உயில் முந்திய உயில்களைச் செல்லுபடியாகாதபடிச் செய்யும். அப்படியே முதலாம் உடன்படிக்கை ஒன்றையும் பூரணப்படுத்தாதபடியினால் முதலாம் உடன்படிக்கை தள்ளப்பட்டு புதிய உடன்படிக்கை செய்யப்பட்டதாக இங்கே எழுதப்பட்டுள்ளது (எபி. 1: 19). முந்தின கட்டளை பெலவீனமுள்ளதும் பலனற்றதுமாயிருந்ததினிமித்தம் மாற்றப்பட்டது (எபி. 7 : 18).

இந்த மரணசாதனத்தைக் குறித்து நாம் வாசிக்கும்போது உலகத்திலே மிகப்பெரிய மரணசாதனமாகும். மேலும் தேவன் செய்த கடைசி மரணசாதனம்

என்று சொல்லி புதிய ஏற்பாடு அழைக்கப்படுகிறது. இந்த மரண சாதனத்தை உண்டாக்குகிற சுதந்திரவாளி (சொத்துக்கு உரிமையாளர்). தகப்பனா யிருக்கிறவர் தான் அதைச் செய்ய முடியும். எட்ரிக் என்பவர் நான் என்னுடைய சொத்துக்களையெல்லாம் உயில் மூலம் (மரணசாதனம்) பகிர்ந்து கொடுத்து விட்டேன். ஆனால் கடைசியிலே நான் அவர்களுக்கு கொடுக்கிற சொத்து என்னவென்றால் கிறிஸ்தவ மார்க்கமாகும். இந்த சொத்தை அவர்கள் சுதந்தரித்து கொள்வார்க ளென்றால் உலகத்தை சுதந்தரித்து கொண்டார்களென்று அர்த்தம். அப்படியில்லாமல் உலகத் தையே சுதந்தரித்துக்கொண்டு இதைச் சுதந்தரித்துக் கொள்ளாமல் இருந்தார்க ளென்றால் நான் அவர்களுக்கு வைத்த சொத்து ஒன்றுமில்லை என்று சொன்னார். நாம் எல்லாரும் கிறிஸ்து இயேசுவை விசுவாசித்து சுதந்திரவாளிகளானோம் (1பேது. 1:4,5). வாக்குத்தத்தங்களும் அவைகளினால் நமக்கு அருளப்பட்டி ருக்கிறது (ΠΠேது. 1 :3,4).

இயேசுகிறிஸ்து இரண்டாம் உடன்படிக்கையின் மத்தியஸ்தராயிருக் கிறார்(எபி. 9:15). மரணசாதனம் என்பது தன்னுடைய சுதந்திர உரிமையை பிறருக்கு அதாவது குடும்பத்தாருக்கு மாற்றி அமைப்பதாகும் (கொலோ. 1 : 2-24). மரணசாதனத்தை எழுதியவர் கர்த்தராகிய இயேசுகிறிஸ்து. கர்த்தராகிய இயேசு கிறிஸ்து உலகத்திலிருக்கும்போது 'என்னுடைய சமாதானத்தை என்னுடைய சந்தோஷத்தை உங்களுக்கு' வைத்துப் போகிறேன்' என்னிடத்தில் வாருங்கள் உங்களுக்கு சமாதானம் கிடைக்கும், இளைப்பாறுதல் கிடைக்கும், என்னுடைய சந்தோஷம் நிறைவாயிருக்கும்படி இவைகளை உங்களுக்குச் சொல்லுகிறேன், உங்களுக்காக நான் என்னைப் பரிசுத்தமாக்குகிறேன், நான் போய் உங்களுக்கு பரிசுத்தாவியை அனுப்புவேன். அவர் வந்து உங்களை சகல சத்தியத்திற்குள்ளும் நடத்துவார் என்றும், நான் இன்னும் உங்களுக்கு அநேக காரியங்களைச் சொல்லவேண்டி யிருக்கிறது. அதை நீங்கள் தாங்கிக் கொள்ள மாட்டீர்கள். நான் போன பின்பு பரிசுத்தாவியானவர் உங்களிடத்தில் வருவார். அவர் சகல சத்தியத்திற்குள்ளும் உங்களை நடத்துவார், சகல சத்தியத்தையும் உங்களுக்குப் போதிப்பார். வரப்போகிற காரியங்களை அறிவிப்பார். என்னுடையதிலிருந்து உங்களுக்கு, போதிப்பார் என்ற வாக்குத்தத்தங்களையும் சுதந்திரங்களையும் தம்முடையவர்களுக்கு, அப்போஸ்தலர்களுக்கு அருளினார்.

பெந்தெகோஸ்தே நாளில் பரிசுத்தாவி யானவர் அப்போஸ்தலர்கள் மேல் இறங்கி வந்தார். அதைத் தொடர்ந்து அவர்கள் மூலம் தம்மை, தம்முடைய மரணசாதனத்தை வெளிப்படுத்தினார். அப்.1:1-4 -ல் அவர் மரணமடைந்து அடக்கம்பண்ணப்பட்டு, உயிர்த் தெழுந்தபின்பு நாற்பது நாட்களளவும் அவர் தம்முடைய அப்போஸ்தர்களுக்கு, பரிசுத்தாவி யினாலே கட்டளையிட்டார். அவர்கள் மூலமாக பரிசுத்தாவியானவர் சொல்ல எழுதப்பட்டதே இந்த புதிய ஏற்பாடு ஆகும். ஆகவே, அப்போஸ்தலர் காலத்திலே புதிய ஏற்பாடு (மரணசாதனம்) எழுதப்பட்டு முடிந்தது. ஆகவே ஒரு மனிதன் வேதத்தை வாசித்து, தியானித்து பாவம் இன்னதென்று,

அறிந்து அதை விட்டு விட்டு அதில் எழுதப்பட்டவைகளைக் கைக்கொள்ள வேண்டும். ஒருவன் இந்தத் தீர்க்கதரிசன புஸ்தகத்திலிருந்து, ஒன்றைக் கூட்டினாலோ, தேவன் அவன் மேல் வாதையைக் கூட்டுவார் என்றும், அதிலிருந்து ஒன்றைக் குறைத்தால் அவன் பெயரை ஜீவ புஸ்தகத்திலிருந்து நீக்கிப்போடுவேன் என்றும் எழுதப் பட்டுள்ளது. அதாவது தேவனுடைய வார்த்தையைத் தள்ளிப் போடுவது தேவனைத் தள்ளிப்போடுவது போலவும், அவருடைய உயிலை செல்லாது செய்வது போன்றதாகும். தேவன் புதியஏற்பாட்டின் மூலம் பெலவீனமாயிருந்த நியாயப் பிரமாணத்தை நிறைவேற்ற பூரணமான மாதிரிச்சட்டத்தை எழுதி வைத்துள்ளார். மரணசாதனத்தை எழுதினவர் உயிரோடிருக்கையில் அதற்கு பெலனில்லை. ஆகவே கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் மரணமானது நமக்கு மிகவும் அவசியம். அந்த உயிலை மரண சாதனத்தை எழுதியவர் மரணமடைந்தால் அது செல்லுபடியாகும். அல்லவென்றால் மரண சாதனம் செல்லாது. தேவன் அநேக வாக்குத்தத்தங்களையும், ஆசீர்வாதங் களையும் நமக்கு அருளின போதிலும், கர்த்தராகிய இயேசு கிறிஸ்து மரணமடையாவிட்டால், அது நமக்கு நிறைவேறாது. அது நம்மில் நிறைவேற வேண்டுமென்றால் அவர் மரணமடைய வேண்டும். அதற்காகவே இயேசு மரித்தார். ஆகவே அவருடைய மரணம் நமக்கு ஆசீர்வாதமாக உள்ளது. இது கடைசி மரணசாதனமாக உள்ளது.

சுதந்திரவாளிகள்:-

இந்த உடன்படிக்கையை (மரண சாதனத்தை) ஏற்றுக் கொள்ளுகிறவர்கள் எல்லாரும் அதனுடைய சுதந்திரவாளிகள். இந்த வாக்குத்தத்தம் உங்களுக்கும் இன்னும் தேவன் வரவழைக்கிற தூரத்திலுள்ள யாவருக்கும் உரியது (அப். 2: 39). அதாவது கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவை விசுவாசித்து ஏற்றுக்கொண்டு ஞானஸ்நானம் பெற்று உடன்படிக்கைக்கு உட்படுகின்ற எல்லாருக்கும் செல்லும். கிரேக்கனாயினும், யூதனாயினும், புறஜாதியாயினும் விசுவாசிக்கிறவனெவனோ, அவனுக்கு இரட்சிப்புண்டாக்குகிறது (ரோ. 1 : 16). அந்த குடும்பத்திலுள்ளவர்களுக்கும், விசுவாசிக்கிற எல்லாருக்கும் உரியது. தேவனை இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து, ஞானஸ்நானம் பெற்றுக் கொள்கிற எல்லாரும் சுதந்திரவாளிகள் (யோ. 1 : 12; கலா. 3 : 27). விசுவாசிக்கிறதினால் மாத்திரமல்ல, அதில் எழுதப்பட்டுள்ள கட்டுப்பாட்டிற்கு உட்பட்டு அதைக் கைக்கொள்கிறதினால் மாத்திரம் அது அவர்களுக்கு உரிமையாகும்.

செயல்முறைப் படுத்துகிறவர்கள்:

அதாவது உயிலை எழுதினாலும் அதை நடைமுறைப்படுத்த ஒரு ஆளை, நியமிப்பார்கள். அது ஒரு வக்கீலாக இருக்கலாம், அல்லது பொது மனிதனாக இருக்கலாம். எல்லாரும் நடைமுறைப் படுத்தவோ, சுதந்திரத்தை பகிர்ந்து கொடுக்கவோ முடியாது. அதற்காக தேவனால் நியமிக்கப்பட்டவர்கள், அதிகாரப்படுத்தப்பட்டவர்கள் அதைச் செய்ய முடியும். அவரே மரித்தோரையும், உயிரோடிருக்கிறவரையும் நியாயந் தீர்க்கிறவரென்று உபதேசிக்கவும்

பிரசங்கிக்கவும் அவர் எங்களுக்கு (அப்போஸ்தலருக்கு) கட்டளையிட்டார் (அப். 10: 36,42,43).

கிறிஸ்துவினுடைய சபை பிரிந்து இருக்கின்றது. இயேசுகிறிஸ்துவை விசுவாசித்து அவரவர் முக்திபோகலாம் என்ற பரிதாபநிலை. அப்படி (உயில்) சரத்து வேதாகமத்திலில்லை. அவனவன் தன்தன் விருப்பப்படி நடந்து கொள்ளலாமென்று நாங்கள் உங்களுக்கு பிரசங்கித்த சுவிசேஷசத்தையல்லாமல் வேறொன்றை பிரசங்கித்தால் அவன் தேவ தூதனானாலும் சபிக்கப்பட்டவன் (கலா. 1 : 8,9). ஆகவே இதை நடப்பிக்கும்படியாக, செயல்முறைப்படுத்தும்படியாக தேவன் அப்போஸ்தலர்களை நியமித்து கட்டளையிட்டார். அவர்களே நிறைவேற்றுகிறவர்கள் (மத். 28 : 18-20). இந்த அப்போஸ்தல அதிகாரம் என்பது அவர்களோடு ஐக்கியமாயிருப்பதினால் ஜீவனும், அவர்களை மீறுகிறதினால், எதிர்க்கிறதினாலும், பிரிகிறதினாலும் மரணமும் நிகழும் (IIகொரி. 2 : 15,16). ஆகவே அப்போஸ்தலர்களே சுதந்திரத்தை ஒப்புவிக்கவும், பகிர்ந்து கொடுக்கவும், கையளிக்கவும் முடியும்.

மீறுகிறவர்கள்:

கர்த்தருடைய ஆசீர்வாதங்கள், வாக்குத்தத்தங்கள், இரட்சிப்பு இலவசமானதாயிருந்தாலும்; அது நிபந்தனையோடு கூடியதாகும். அமெரிக்காவில் ஒரு ஸ்திரீ இப்படி உயில் எழுதி வைத்து விட்டு மரித்தார். அதாவது என்னுடைய மரண இறுதி அடக்கத்தை செய்கிறவர்களுக்கு இந்த சொத்து உரியதாகும் என்று எழுதிவைத்தார். அவருடைய உறவினருக்கு அந்தச் சொத்து முழுவதையும் எடுத்துக்கொள்ள வேண்டுமென்கிற ஆசை. அவர்தான் அதற்கு உரிமையானவர். ஆனால் உயிலில் எழுதின பிரகாரம் அடக்க இறுதி ஆராதனை நடத்த அவருக்கு விருப்பமில்லை. அதினிமித்தம் அவர் நீதிமன்றத்தை அணுகினார். அந்த நீதிபதி உயிலைப்படித்து விட்டு முடிவு பண்ணி சொன்னது. "அந்தச் சொத்தை நீர் பெற்றுக்கொள்ள வேண்டுமென்று விரும்பினால், அந்த உயிலில் எழுதியிருக்கிற பிரகாரம் மரண அடக்கத்தைச் செய்ய வேண்டும்" என்று கட்டளையிட்டுவிட்டார். கர்த்தர் வாக்குத்தத்தங்களை ஆசீர்வாதங்களைக் கொடுத்திருக்கிறார். ஆனால் அந்தக் கட்டளையின்படி செய்யாவிட்டால் அது நிறைவேறாது. அது நிறைவேறாமல் போய்விடும். அதை ஏற்றுக்கொண்டு கைக்கொள்ளாமல் போகிறவர்களுக்கு இப்படி நடக்கும் (IIதெச. 1 : 10).

அதின் நன்மைகள்:

மரண சாதனத்தில் எழுதப்பட்ட சொத்துக்கள் கணக்கில் அடங்காததாய், உன்னதமானதாய் இருக்கிறது. கர்த்தர் எதற்காக மரித்தார் என்று வேதத்தில் எழுதியிருக்கிறது. நம்மை பாவத்தி லிருந்து விடுதலையாக்குகிறதற்கு, இந்த உலகத்திலிருந்து விடுதலையாக்கு கிறதற்காக மரித்தார். எல்லாப் பாவங்களிலிருந்தும் நீங்கி சுத்திகரிப்ப தற்காக நம்மை ஒப்புவித்தார். கறைதிறை யற்ற காணிக்கையாக, பூரணப்படுத்தும் படியாக மரித்தார். இவைகளெல்லாம்

நிச்சயமாக நம்மில் நிறைவேறும். சிலர் எண்ணுகிறார்கள் வேதம் அவர்களுக்கு மட்டுமா சொந்தம், நாங்களும் வேதத்தைப் படித்து வியாக்கியானிப் போம், பிரசங்கிப்போம் என்று நினைக்கிறார்கள். இப்படி இதை சுதந்தரித்துக்கொள்ள முடியாது. அப்போஸ்தலர் சொல்லுகிற ஆலோசனைக்கு, வார்த்தைகளுக்கு கீழ்ப்படிய வேண்டும் (1கொரி. 15 : 1-4). ஓநாய்கள் எழும்பி சிலரை (சீஷர்களை) தங்களிடமாய் இழுத்துக்கொள்ளும் படிக்கு இவ்விதமாய் மாறுபாடானவைகளைப் போதிப்பார்கள். ஆனால் நான் உங்களுக்கு போதித்ததை நினைத்துக் கொள்ளுங்கள். நீங்கள் சுதந்திரத்தை அடைய வேண்டுமென்றால் தேவனுக்கும் வெளிப்படுத்தப்பட்ட கிருபையுள்ள வசனத்திற்கும் உங்களை ஒப்புக் கொடுக்கிறேன். அதாவது ஒருவிசை பரிசுத்தவான்களுக்காக ஒப்புவிக்கப்பட்ட விசுவாசத்திற்காக (யூதா 3).

இந்த மரணசாதனமானது நமக்கு எல்லாவித சுதந்திரங்களையும், உரிமைகளையும், ஆசீர்வாதங்களையும், ஜீவனையும், இம்மைக்கும் மறுமைக்கும் நிறைவான பூரணமான ஆசீர்வாதங்களையும் அருளுகிறது. இதை ஏற்றுக் கொள்கிறதும், புறக்கணிப்பதும் நம்முடைய விருப்பத்தைப் பொறுத்தது. தேவன் ஒவ்வொரு மனிதனையும் அழைக்கிறார். அதைப் பெற்றுக் கொள்ளும்படியாக நேரத்தையும், காலத்தையும் கொடுக்கி றார்.எல்லாரும் தம்மண்டை வந்து விசுவாசித்து ஆசீர்வாதத்தைப் பெற்றுக் கொள்ள வேண்டும். அவர் மரணம டைந்து நிறைவேற்றிவிட்டார். ஆகவே நாம் ஒவ்வொருவரும் அதை சுதந்தரித்துக் கொண்டு நம்முடைய குடும்பத்தாருக்கும், பிள்ளைகளுக்கும் கொடுக்க கடமைப் பட்டுள்ளோம். இதுவே முடிவானதும் உலகில் பெரிய சொத்தாகும். எல்லாருக்கும் இதிலே உரிமையுண்டு. ஆசீர்வாதம் பெற விரும்புகிறவர்கள் இதற்கு உட்பட்டு நடைமுறைப்படுத்து கிறவர்களுக்குக் கட்டுப்பட்டு (அப்போஸ் தலருக்கு) சுதந்தரித்துக் கொள்ள வேண்டும்.

இந்த சுதந்திரம் கிறிஸ்தவ மார்க்கமே!

உயில் வேதாகமமே (Bible)

## புதிய எருசலேம் சபையின் புதிய கிளை ஆரம்பம்

10-3-2000 வெள்ளிக்கிழமை அன்று கன்னியாகுமரி மாவட்டம் முழங்குழி என்ற கிராமத்தில் புதிய எருசலேம் சபையின் புதிய கிளைசபை ஒன்று ஆரம்பிக்கப்பட்டது. சரியாக 10 மணிக்கு சபையின் தலைமை அப்போஸ்தலர் அவர்கள் ஆலயத்தை திறந்து வைத்து அதைக் கர்த்தருக்கென்று பிரதிஷ்டை செய்து வைத்தார்கள். தொடர்ந்து பிரதிஷ்டை ஆராதனை நடத்தி மக்களை ஆசீர்வதித்தார்கள். கர்த்தருடைய மகிமை கர்த்தருடைய ஆலயத்தை நிரப்பிற்று என்ற பிரகாரம் தேவ மகிமை இறங்கியது. தேவன் பிரதிஷ்டை ஆராதனையை ஆசீர்வதித்தார் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள்கிறோம்.

## பரிசுத்த விவாகம்

| மணமகன் | மணமகள் | நாள் | இடம் |
|---|---|---|---|
| எஸ். இசக் | என். மேரி | 24-2-2000 | கோயமுத்தூர் |

# சாட்சி

எனது பெயர் வரதராஜன் என்ற டேனியேல். நான் நாமக்கல் மாவட்டத்தில் தூசூர் என்ற கிராமத்தில் ஒரு பக்தியுள்ள இந்துக்குடும்பத்தில் பிறந்து வளர்க்கப்பட்டேன். எனது முன்னோர்கள் திருப்பதி வெங்கடாஜலபதியை குல தெய்வமாக வழிபட்டு வந்தனர். நானும் அதன்படி வளர்ந்து வந்தேன். இப்படிப்பட்ட காலங்களில் எனது 14-வயதில் எனது அண்ணன் அவர்கள் நீலகிரி மாவட்டத்திற்கு என்னை அழைத்துச் சென்றார். அங்கு குந்தா என்ற இடத்தில் வேலை செய்து வந்தேன். அந்த சமயத்தில் சின்னப்பர் என்ற பெரியவர் மூலம் இறைவன் இயேசு கிறிஸ்துவை அறிந்து 1964ல் கிறிஸ்துவை என் சொந்த இரட்சகராக ஏற்றுக்கொண்டு ஞானஸ்நானம் பெற்றுக்கொண்டேன். தொடர்ந்து கிறிஸ்தவ ஆலயங்களுக்கு சென்று இறைவனை வழிபட்டு வந்தேன். சில நாட்கள் சென்றபின் கிறிஸ்தவ சபைகளில் பல பிரிவுகள் காணப்படுவதாக அறிந்தேன். அநேக நாட்களாய் யோசித்து கிறிஸ்து ஒருவரே; அவருக்கு ஏன் இத்தனை சபைகள்,என்றும், ஏன் உலகமெங்கும் ஒரே சபை இருக்கக்கூடாது என்று சிந்தித்து ஜெபித்தும் வேதத்தை ஆராய்ந்து கொண்டும் வந்தேன். நான் சென்று வந்த அநேக சபைகளில், எங்குமே வேதத்தின்படி ஆராதனைகள் நடத்தப்படவோ, மக்களும் அதன்படி நடத்தப்படவில்லை என்று அறிந்தேன்.

அதன்பிறகு, உலகமெங்கும் ஒரே சபை இருக்க வேண்டும் என்று ஜெபித்துவந்தேன். ஒரு நாள் இரவில் ஜெபித்துவிட்டு படுத்திருக்கும் வேளையில், புதிய எருசலேம் சபையின் சேவல் சின்னம் சொப்பனத்தில் காண்பிக்கப்பட்டது. பல ஆண்டுகள் கடந்து சென்றது. பின்பு எனது வேலையின் காரணமாக சேலம் மாற்றலாகி வரநேர்ந்தது. அப்பொழுது ஏதாவது ஒரு பெந்தெகொஸ்தே அனுபவமுள்ள சபையின் அருகில் வீடு எடுத்து குடியிருக்க வேண்டும் என முடிவு செய்து. சேலம் அஸ்தம்பட்டியில், குயவன் காடு என்ற இடத்தில் புதிய எருசலேம் சபையின் அருகில் வீடு ஒன்று வாடகைக்கு எடுத்துக் குடியிருந்தோம். மூன்று மாத காலம் வீட்டிலே ஆராதனை செய்து வந்தோம். அதன் பின்பு சபை ஆராதனைக்கு செல்லாமல் இருப்பது நல்லதல்ல என்று நாங்கள் குடும்பமாய் புதிய எருசலேம் சபையின் ஆராதனைக்கு சென்று வந்தோம். அங்கு சென்று சபையின் சின்னத்தை பார்த்தவுடன் தேவன் தமது சபையைக் குறித்து பல ஆண்டுகளுக்கு முன்னதாகவே வெளிப்படுத்தினார் என்று அறிந்து கொண்டேன். நாங்கள் சபைக்கு வருவதற்கு முன்னே தேவன் எங்களைக் குறித்து வெளிப்படுத்தினார் என்று பாஸ்டர் ஏசுதாஸ் (தீர்க்கதரிசி) ஐயா சொன்னார்கள். பின்பு சபையின் ஊழியர்கள் வீட்டிற்கு வந்து சபைபற்றியும், உபதேசத்தைப் பற்றியும், பாவ அறிக்கையின் உபதேசத்தைப்பற்றியும் விளக்கமாகச் சொன்னார்கள். நாங்கள் உடனே ஏற்றுக்கொண்டு, அன்று முதல் மெய்யான திருச்சபையில் தேவனை ஆராதிக்க கிருபை செய்தார்.

1966 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 4ம் தேதி இரவு சொப்பனத்தில் நீ எனக்கு ஊழியம் செய்வாயா? என்று தேவன் கேட்டார். அடியேனும் உடனே ஆண்டவரின் சத்தத்திற்கு கீழ்ப்படிந்து நான் உமக்கு அடிமை, உம் சித்தம் செய்வேன் என்று ஒப்புக்கொடுத்தேன். அதன்படி 1997 ல் ஜனவரி மாதம் நடந்த புதிய எருசலேம்

"தேவனைத் தேடு"

"Seek God"

Regd.No. 040088/84
Postal Regd.No. Tech/47-201/MBI/2000
Tamil Monthly Magazine

புதிய எருசலேம் கிளை சபையில் உதவி ஊழியராக ஊழியம் செய்ய தேவன் கொடுத்த மாபெரும் பாக்கியத்திற்காக தேவனுக்கு நன்றி செலுத்தி, என்னுடைய சாட்சியை பகிர்ந்து கொள்ள கிருபை செய்த தேவனுக்கு கோடான கோடி ஸ்தோத்திரம் செலுத்துகிறேன்.

Eld.Bro.தானியேல்
சேலம் கிளை

## புதிய எருசலேம் சபையின் 13 வது ஊழியர் மாநாடு

தேவனுக்கு மகிமை உண்டாவதாக! 11.5.2000 முதல் 20.5.2000 முடிய புதிய எருசலேம் சபையின் ஊழியர் மாநாடு கொடைக்கானல் - **B.L.Shed** ஆலயத்தில் நடைபெற இருக்கிறது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம். யாவரும் ஜெபிக்கவும், உதவி செய்யவும் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் கேட்டுக் கொள்கிறோம்.

**Chief Apostle.N.Lazar**

## அறிவிப்புகள்

**முழு இரவு விழிப்பு ஜெபம்**

18, வியாழன் (மே 2000)
16, வெள்ளி (ஜூன் 2000)
17, திங்கள் (ஜூலை 2000)

**புதிய எருசலேம் செய்தி பத்திரிக்கை**

| | |
|---|---|
| ஆண்டு சந்தா | Rs. 30.00 |
| வெளிநாடு ஆண்டு சந்தா | Rs. 400.00 |

**அனுப்ப வேண்டிய முகவரி**

**Chief Apostle N.Lazar,
"NEW JERUSALEM CHURCH"
Church Lane, Tilak Nagar,
Darga Cross Road, Sonapur,
Bhandup (W), MUMBAI-400 078**

மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா எண்ணைக் குறிப்பிடவும். பழைய சந்தாதாரரா அல்லது புதிய சந்தாதாரரா என்பதையும் குறிப்பிடவும்.

பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதையும் தெளிவாகக் குறிப்பிடவும்.

"புதிய எருசலேம் செய்தி" பத்திரிக்கை வாங்குவோர் ரூ.30 (முப்பது) சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தையும் தெளிவாகக் கொட்டை எழுத்துகளில் (Capital Letters), M.O. பாரத்தின் செய்திக்காக ஒதுக்கப்பட்ட பகுதியில் (Space for Communication) எழுதிப் பத்திரிக்கையைப் பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளுகிறோம்.

# புதிய எருசலேம் செய்தி

**PUTHIYA YERUSALEM CHEIDHI**

எக்காளம் 18; சத்தம்: ஜூன்-ஜூலை 2000




*"___வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல் கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்___ விழித்திருங்கள்___ உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லோருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்___"*
*மாற்கு. 13 : 35-37*

EDITOR : CHIEF APOSTLE N.LAZAR

MUMBAI, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும் அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும் தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும், சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும்படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது. (எபே.4:11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசுகிறிஸ்து எனக்கு தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும் கட்டளைகளும் 7 (அப்1: 1-3)" எனக்கு காண்பித்து, கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள்:

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் மத்28:18; மாற். 16:15.
2. விசுவாசித்து ஏற்றுக்கொள்ளுகிறவர்களை பிதா, குமாரன், பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்- மத். 28:19 (இயேசு மாதிரி (Through Action) செய்து காண்பித்தார்
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைகொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள் - மத்28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள் - யோவான் 20: 23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள் - யோவான் 21 : 15-17
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு - அப். 1 :5-8.
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார் - 1கொரி. 11 : 2[illegible]-2[illegible]

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் [illegible] (6) என்கின்றனர். வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன் இயேசுவானவர் பிரதியுத்திரமாக: இல்லை அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும் அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1:1, 10: 40-43).

**Chief Apostle.N.Lazar**

## இதழின் உள்ளே

# ஆசிரியர் உரை



நம்மைச் சுற்றி வெளியேயும், உள்ளேயும் ஒரு ஆவிக்குரிய மண்டலம் இருக்கிறது. காணப்படுகிற உலகத்தை விட அந்தக் காணப்படாத உலகம் மிகவும் உண்மையானதும் நிலைத்திருக்கிறதுமாயிருக்கிறது. வேளா வேளைகளில் அந்தக் காணப்படாத உலகத்திலிருந்து சிலர் வந்து போவதைக் காணுகிறோம். நாமும் சில வேளைகளில் ஆவியில் காண்பதும், கேட்பதும், பேசுவதும் உண்டு. தேவன், பரலோகம், பரலோகத்திலுள்ள ஜீவிகள், வான மண்டலத்திலுள்ள பொல்லாத ஆவிகள் இப்படிப் பல உள்ளன. ஏன், நம்முடைய சரீரத்தினுள்ளும் இதே தோற்றமுள்ள ஒரு ஆத்ம சரீரமுண்டு. மனிதர் மரிக்கும் போது அவர்களில் காணப்படுகிற இந்த மண்ணுக்குரிய சரீரம் அழிந்து மண்ணோடு கலந்து விடுகிறது. அந்த ஆத்ம சரீரத்துடன் தொடர்ந்து அந்த ஆள் இருக்கிறது. நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்து சொன்ன லாசரு, ஐசுவரியவான் சம்பவத்தில் (இது நடந்த சம்பவம்). லாசருவும், ஐசுவரியவானும் மரித்தார்கள் என்று வாசிக்கிறோம். அவர்களுடைய வெளிப்படையான சரீரத்தை இழந்து விட்டார்கள். சரீர உயிர் பிரிந்து விட்டது. ஆனால் ஆத்தும சரீரத்தில் ஒருவர் மகிழ்ச்சியாயிருந்தார்; ஒருவர் தான் வேதனைப் படுவதாகக் கூறினதாகப் பார்க்கிறோம்.

தேவன் ஆள்தத்துவமுடையவர். ஆள் என்றால் சரீரமும், உருவமும் இருக்க வேண்டுமென்று அவசியமில்லை. மாற்கு 5:1-13 ல், அந்த அசுத்த ஆவியினிடத்தில் உன் பேர் என்ன என்று கர்த்தர் கேட்டார். நாங்கள் அனேகராயிருக்கிறபடியினால் என் பேர் லேகியோன் என்றான். பிசாசுகள் ஆள்தத்துவமுடையவைகள். அவைகள் இயேசுவைப் பணிந்து கொண்டன (மாற்5:6); அவரை அறிக்கை செய்தன (மாற்5:7); அவரிடம் பேசின (மாற்.5:8,9), அவரை வேண்டிக் கொண்டன. கர்த்தர் பேசி அதட்டினதும் அந்த ஆவிகளிடமே. ஆனபடியினால் தேவன் ஆள்தத்துவமுடையவர். தேவனும் ஆவியாயிருக்கிறார். தேவதூதர்களில் சேராபீன்கள், கேருபீன்கள், பணிவிடை தூதர்கள், பாதுகாவல் தூதர்கள், தேவ சேனை, மிகாவேல், செய்தி கொண்டு போகிறவர்கள், காபிரியேல், இப்படிப் பல ஆவிக்குரிய ஜீவிகள் இருக்கிறார்கள். நான், என்னுடைய என்று சொல்லக்கூடியவை எல்லாம் ஆள்தத்துவமுடையவையே. இரட்சிக்கப்பட்ட எல்லாம் ஆள்தத்துவமுடையவையே. இரட்சிக்கப்பட்ட எல்லா பக்திக்குரிய மக்களின் வாஞ்சை அந்தப் பரலோகம் போக வேண்டுமென்பதே (பிலி1:23) அந்த உலகத்திற்குப் போக ஜீவனுள்ள தேவனோடு வாழ ஆசைப்படுங்கள்.

*கிறிஸ்துவுக்குள்,*

*தலைமை அப்போஸ்தலர்.என்.லாசர்*

# வெற்றி வாழ்க்கை

"கிறிஸ்து இயேசுவினாலே ஜீவனுடைய ஆவியின் பிரமாணம் என்னைப் பாவம் மரணம் என்பவைகளின் பிரமாணத்தினின்று விடுதலையாக்கிற்றே" ரோமர். 8 : 2.

உலகத்தில் பெரிய பிரச்சனை மனிதனுக்கு பாவம் என்பதே. மனிதன் பாவத்திலிருந்து விடுதலையாகிறதற்காக தேவன் என்ன செய்தார் என்று நாம் அறிந்து கொள்வதின் மூலமாக நமக்கு வெளிச்சம் உண்டாகும். தேவன் மனுமக்களை இரட்சிக்கும்படியாக, பாவத்தை நீக்கும்படியாக பாவத்திலிருந்து மனிதனை விடுதலையாக்கும்படியாக, சாபத்திலிருந்து, மரணத்தினின்று, சாத்தானுடைய அடிமைத்தனத்திலிருந்து, சுயத்திலிருந்து, சகலத்திலிருந்தும் பாவம் பாவத்தைத் தொடர்ந்து சகலவிதமான சாபங்களிலிருந்தும் மரணத்திலிருந்து (இரண்டாம் மரணம்) விடுதலையாக்கும் படியாக தம்முடைய குமாரனாகிய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவை இந்த உலகத்தில் அனுப்பினார்.

அவர் இந்த உலகத்தில் கடந்துவந்து ஒரு குழந்தையாய் ஜெநித்து இந்த உலகத்தில் 33½ வருஷம் சஞ்சரித்தார். அதிலே விசேஷமாய் 3½ வருஷம் அவர் ஊழியம் செய்தார். உலகத்தில் மனிதர்களிலே எவ்வளவோ பேர் மகான்கள் என்றும். தங்களை தெய்வம் என்றும். ரிஷிகள் என்றும் சொல்லிக் கொண்டு வந்தவர்கள் உண்டு. அவர்கள் எத்தனையோ ஆண்டுகளாக எத்தனை யோ காலங்களாக தவமிருந்து பலவிதமானவைகளைப் பெற்று அல்லது அடைந்து, பலவிதமான பணிகளை செய்திருக்கிறார்கள். ஆனால், அவைகளி னாலே அதிகமான நன்மையோ, விடுதலையோ மனிதனுக்கு உண்டாக வில்லை. 3½ வருஷம் கர்த்தராகிய இயேசுகிறிஸ்து செய்த ஊழியமானது, அவர் இந்த உலக அவதாரமாகியதும், அவர் வாழ்க்கையும், அவர் செய்த ஊழியமானது முழு உலகத்தையும் மாற்றியமைக்கிறதாயிருக்கிறது. அதைக் குறித்து ஆயிரமாயிரம் புத்தகங்களும், ஆயிரமாயிரமான மொழிகளிலே ஏராளமான பரிசுத்தவான்களை எழுப்பி அது வெற்றி சிறந்துள்ளது. அவரைப் பற்றிய புத்தகங்கள் எழுதினால் உலகம் கொள்ளாது (யோ21 :25).

சகலத்திற்கும் முடிவு கிறிஸ்து கொண்டு வந்தார் என்று வேதாகமத்தில் நாம் வாசிக்கிறோம். கொலோ.2:14,15ல் நமக்கு எதிரடையாகவும், கட்டளை களால் நமக்கு விரோதமாகவும் இருந்த கையெழுத்தைக் குலைத்து, அதின் நடுவிலிராதபடி எடுத்து, சிலுவையின் மேல் ஆணி அடித்து, துரைத்தனங் களையும், அதிகாரங்களையும் உரிந்து கொண்டு வெளியரங் கமான கோலமாக்கி, அவைகளின் மேல் சிலுவையிலே வெற்றி சிறந்தார் என்பதாம். சிலுவையிலே கர்த்தராகிய இயேசு கிறிஸ்து வெற்றி சிறந்தார் என்று சொல்லி எழுதப்பட் டிருக்கிறது. தேவன் வானத்தையும் பூமியையும் சிருஷ்டித்தார்; மனிதனை

சிருஷ்டித்தார். மனிதன் தன்னை வெளிப்படுத்தும் கருவியாக இருக்கும் படியாக தம்மை மனிதனுக்கு பகிர்ந்தளித்து, மனிதனிலே தாம் வாசம் செய்து, மனிதனை மேன்மைப்படுத்தும்படியாக, மனிதனை தேவன் சிருஷ்டித்தார். தம்முடைய சாயலாகவும் ரூபத்தின்படியும் சிருஷ்டித்தார். ஆனால் மனிதன் விழுந்து போனான். அந்த வீழ்ச்சியுனுடைய பலாபலன்கள் இப்போ ஆயிரமாயிரம், கோடா கோடியாக பாவம் பெருகி, அது நிறைந்து போயிருக்கிறது.

மனிதனை தேவன் சிருஷ்டித்து, அவனை ஏதேன் தோட்டத்திலே கொண்டு வந்து வைத்து, அவனுக்கு முன்பாக ஜீவனையும், மரணத்தையும், ஆசீர்வாதத்தையும் சாபத்தையும் வைத்தார். நன்மை தீமை அறியத் தக்க விருட்சத்தின் கனியைப் புசிக்க வேண்டாம்; நீ அதை புசிக்கும் நாளிலே சாகவே சாவாய் என்று தேவன் கட்டளையிட்டார். இது சாதாரணமான காரியமல்ல, மனிதன் யார்? என்று முதலாவது அறிய வேண்டும். தேவன் தம்முடைய சிருஷ்டிகளிலேயே வானத்தையும், பூமியையும் சர்வ சிருஷ்டிகளையும் சிருஷ்டித்தபொழுது மனிதனை மையமாக சிருஷ்டித்திருந்தார். அவன் ஒரு முக்கியமான பொருள், அவன் (மனிதன்) மிகவும் முக்கியமானவன், விசேஷித்தவன். அவனுக்கு ஆத்துமம் கொடுக்கப்பட்டிருந்தது, சுய சித்தம் அவனுக்கு கொடுக்கப்பட்டிருந்தது. அவன் ஒரு சுயாதீனனாக இருந்தான். அவன் ஒரு பொம்மையைப் போல உருவாக்கப்படவில்லை. அவனை சிருஷ்டித்து ஜீவ சுவாசத்தை ஊதி, அவனுக்கு சுயாதீனத்தை, சுதந்திரத்தைக் கொடுத்தார். ஜீவ விருட்சம் என்று சொன்னால் தேவனை ஜீவனாக அவன் எடுத்துக்கொள்கிறது. அதாவது விருட்சத்தின் கனி என்று சொல்லும் பொழுது, அது உற்பத்தியாக்கும் விதை அதிலே இருக்கிறது. அந்த ஜீவ விருட்சம் அதன் பக்கத்திலே தேவன் நின்றார்; இயேசு கிறிஸ்து நின்றார். மரண விருட்சத்தின் பக்கத்தில் சாத்தான் நின்றான்; மனிதன் தன்னுடைய சுயாதீன சித்தத்தை உபயோகித்து, தன்னுடைய பிதாவுக்கு உண்மையாக கீழ்படிந்து அன்பு கூர்ந்து நடக்கிறானா என்று சொல்லி அவனுக்கு முன்பாக சோதனை வைக்கப்பட்டிருந்தது.

நம் ஒவ்வொருவருக்கும் சோதனை உண்டாகும். சோதனையின் நோக்கம், நாம் தேர்ச்சியடைந்து, வெற்றியடைந்து மேற்படிக்கு ஏறும்படியாக. அவனுக்கு முன்னால் நிறுத்தப்பட்ட இரண்டு மரங்களில் ஒன்றைத் தெரிந்து கொள்கிறதின் மூலமாக ஜீவனையும், தேவனையே தெரிந்து கொண்டு தேவனை தனக்குள் எடுத்துக் கொண்டு அவன் தேவனால் நிரப்பப்பட்டு, தேவன் தன்னை நிரப்புகிற ஒரு கொள்கலமாக, ஒரு பாண்டமாக அவன் ஆகி, அவன் சுகித்திருக்கலாம். அவன் ஆளுகை செய்திருக்கலாம். ஆனால் அவன் சாத்தானை தெரிந்து கொண்டு, மரண கனியை பறித்துப் புசித்து சாத்தானை தனக்குள் எடுத்துக் கொண்டான். சாத்தான் அதற்கு தூண்டுதல் செய்தான் என்று 3-ம் அதிகாரத்திலே வாசிக்கிறோம். இதை நீ

புசிக்கலாம்; அதினாலே உனக்கு நன்மை திமை அறிந்து நீ தெய்வமாகி விடலாம், தேவனை சார்ந்து நீ வாழ வேண்டிய தேவையில்லை. நீயே தேவனாகிவிடுவாய், நீங்கள் தேவர்களாகி விடுவீர்கள் என்று, சொன்னதின் மூலமாக தேவனின்றி இவன் வாழுவதற்காக தீர்மானம் செய்தான். மனித வாழ்க்கையிலே இரட்சிக்கப் பட்டதற்கும் இரட்சிக்கப்படாததற்கு முள்ள வித்தியாசம் என்னவென்றால், இரட்சிக்கப் பட்டவர்கள் தேவனை சார்ந்து தேவனையுடையவர்களாக ஜீவிக்கிறார்கள். இரட்சிக்கப்படாத வர்கள் தேவனின்றி ஜீவித்து இந்த உலகத்தில் வெற்றியடையலாம், பரிசுத்த மடையலாம், முன்னேறலாம், முதிர்ச்சி யடையலாம் தேவனைப்போல் ஆகலா மென்று எண்ணி வீழ்ந்து நரகத்துக்குப் போகிறார்கள்.

மனிதன் ஒரு சிருஷ்டிதான் அவன் சாகும் சிருஷ்டிதான்; சிருஷ்டிக ளெல்லாம் சிருஷ்டிகரை சார்ந்தே ஜீவிக்கும்படியாக சிருஷ்டிக்கப்பட்டன. எல்லாம் அவரை நோக்கி காத்திருக் கின்றன; தங்களுக்கு வேண்டிய ஜீவனுக்காகவும் ஆகாரத்திற்காகவும் என்று வேதாகமத்தில் எழுதியிருக்கிறது. அவன் புத்தியும் அறிவுமுள்ள மனிதன். அவன் தெரிந்தெடுத்தது என்னவென்றால் மரணத்தை தெரிந்தெடுத்தான். அதாவது மரண கனியை புசித்தான் அதன் மூலமாக சாத்தான் அவனுக்குள் வந்தான் என்று தெரிகிறது. ஏனென்றால் மரணத்துக்கு அதிகாரியான பிசாசை தமது மரணத்தினாலே அழிக்கும்படிக்கு அப்படியானார் என்று எபிரேயர் எழுதின நிருபத்தில் வாசிக்கிறதின் மூலமாக மரணம் சகலவிதமான தோல்வி, பயங்கள் எல்லாவிதமான மரணத்தின் அறிகுறிகள் இவையெல்லாவற்றிற்கும் காரணம் சாத்தான் என்றும் அவன் தான் அதற்கு அதிகாரி, அதிபதி என்று சொல்லி, எபிரேயருக்கு எழுதிய நிருபத்திலே (2: 14, 15) நாம் வாசிக்கிறோம். மனிதன் உலகத்தை ஆளும்படியாக, தேவன் சிருஷ்டித்த சிருஷ்டிகள் மேல் ஆளுகை செய்யும்படியாக அவனை சிருஷ்டித்தார். ஆனபடியினால் உலகம் அவனுக்குள் இருக்கிறது, உலகம் அவனோடு சம்பந்தப்பட்டது, பூலோகத்திலுள்ள, வானமண்டலத்திலுள்ள சகலமும் அவனோடு சம்பந்தப்பட்டுள்ளது.

சாத்தான் இறைவனால் சிருஷ்டிக் கப்பட்டவனல்ல, இவன் தேவ தூதனாக சிருஷ்டிக்கப்பட்டான். பிரதான தூதர்களில் ஒருவனாகிய லூசிபர் தேவனுக்கு விரோதமாக கலகம் செய்து, தேவனின்றி தாம் வாழும்படியாக அல்லது தமக்கென்று ஒரு இராஜ்ஜியத்தை அமைக்கும்படியாக தேவன் கொடுத்த ஞானம், அறிவு, வல்லமை இவைகளின் மூலமாக, தானே தேவனைப்போல் விளங்க அவன் நினைத்து வீழ்ச்சியடைந்து அதினிமித்தம் அவன் சாத்தானாய் மாறிப்போனான். அவனோடு கூட அவனைப்பின்பற்றி தூதர்களில் மூன்றில் ஒரு பகுதி விழுந்து போனார்கள். சாத்தான் என்றால் தேவனுடைய சத்துரு என்று அர்த்தம் மனித குலத்தைத் தம்முடைய கட்டுப்பாட்டில், தன்னுடைய ஆளுகையில் கொண்டு வரவும் மனிதனுக்குக் கொடுத்திருக்கிற சுதந்தி

ரத்தை தான் கைப்பற்றிக் கொள்ளவும், அவன் தந்திரமாக மனிதனைத் தூண்டினான் மனிதன் அதற்கு உட்பட்டான். ஆனபடியினால் அது ஒரு துரோகச் செயலாகும். அதன் மூலமாய் சாத்தான் மனித ஜாதிக்குள், மனிதனுக்குள் புகுந்து கொண்டான். அது முதற்கொண்டு மனிதனிலிருந்து அவன் வளருகிறான். எப்படி ஒரு பழத்தை பூமியிலே புதைத்தோமென்றால் அதிலிருந்து முளை கிழம்பி கொஞ்சம் நாளிலே ஒரு செடி உண்டாகும். ஏனென்றால் பழத்திற்குள்ளே விதை இருக்கிறது. அந்த விதை ஜீவனாக இருக்கிறது. அப்படியே இந்த மரண விருட்ஷத்தை அவன் தெரிந்து கொண்டு புசித்தபடியினாலே அவனுக்குள் மரணம் ஆரம்பமாயிற்று.

மூன்று பகுதியாக மனிதன் இருக்கிறான். ஆவி, ஆத்துமா, சரீரம். இந்த சரீரம் ஐம்புலன்களை அடக்கியது. இதன் மூலமாக நாம் வெளி உலகத்தோடு தொடர்பு எடுக்கிறோம். நம் ஆத்துமா வெளி உலகத்தோடும் தொடர்பு எடுக்கும், உள்ளேயும் தொடர்பு எடுக்கும், ஆவிக்குரிய உலகத்தோடும் தொடர் பெடுக்கமுடியும். ஆனால் விசேஷித்த விதமாக ஆவி தான் ஆவிக்குரிய மண்டலத்தோடு தொடர்பெடுக்கக் கூடியதாக இருக்கிறது

மனிதன் நன்மை தீமை அறியதக்க விருட்சத்தின் கனியை புசித்ததின் முதற்கொண்டு சாத்தான் மனிதனுக்குள் புகுந்து கொண்டான். ஆனபடியினால் வெளியே எந்த மத போதனையோ, முயற்சியோ, பயிற்சியோ, யோகாப்பியசமோ இவைகளினால் மனிதன் பாவத்திலிருந்து விடுதலையாக முடியாதுய. சாத்தான் எங்கே இருக்கிறான் என்றால் மனிதன் சரீரத்திலே இருக்கிறான் எப்பொழுதுமே சாத்தானுடைய வேலை வெளியிலிருந்து உள்ளே புகுதலாகும். ஆனால் கடவுளுடைய வேலை உள்ளேயிருந்து வெளிப்படுகிறதாகும். மனிதனும் சாத்தானும் ஒன்றாகிவிட்டார்கள். ரோ. 7:18-20 ல் "என் மாம்சத்தில் நன்மை வாசமாயிருக்கிறதில்லையென்று நான் அறிந்திருக்கிறேன். அப்படியென்றால் நான் விரும்புகிற நன்மையை அல்ல நான் விரும்பாத தீமையை செய்கிறேன்" என்று அப்பவுல் கூறுகிறார்.

"அந்தப்படி நான் விரும்பாததை செய்தால், நான் அல்ல எனக்குள்ளே வாசம் செய்கிற பாவமே அப்படி செய்கிறது. என் மாம்சத்தில் நன்மை வாசமாயிருக்கிறது இல்லை பாவம் வாசமாயிருக்கிறதென்று ரோமர் 7-ம் அதிகாரத்திலே பார்க்கிறோம். சாத்தான் பாவமாக பாவ சுபாவமாக நமக்குள் தங்கியிருக்கிறான். பாவம் ஒரு ஆள்தத்துவமுடையதாக இருக்கிறது. இந்த மாம்சம் இச்சிக்கிறது. "என் மனதின் பிரமாணத்துக்கு விரோதமாய்ப் போராடுகிற வேறொரு பிரமாணத்தை என் அவயவங்களில் இருக்கக் காண்கிறேன்" (ரோமர் 7:23)

எனவே மனிதனுடைய அவய வங்களிலே பாவம் வாசமாயிருக்கிறது, சாத்தான் வாசமாயிருக்கிறான். கிறிஸ்துவை ஏற்றுக் கொள்ளாத எவரும் பாவத்திலிருந்து விடுதலையாக முடியாது

தேவன் ஒரு புதிய சிருஷ்டிப்பை உண்டாக்க வேண்டுமென்றால், பழைய சிருஷ்டிப் புகளுக்கெல்லாம் ஒரு முடிவு கட்டாமல் புதிய சிருஷ்டிப்பை உண்டாக்க முடியாது.

பழைய சிருஷ்டிப்பு:

1. தேவ தூதன், தேவ தூதனின் ஜீவன்.
2. மனிதர்கள் மனிதனின் ஜீவன்
3. சாத்தானும், மனிதனும் ஒன்றாகி விட்டார்கள். ஆனபடியினால் இப்பொழுது மனிதன் சாத்தானுக்காக ஜீவிக்கிறான்
4. அவன் ஒரு இராஜ்ஜியத்தை ஸ்தாபித்தான் அது தான் உலகம்.
5. பாவம்.
6. பாவ சுபாவம்
7. உலகம் (1 யோவா.2:16,17): உலகம் என்று இந்தப் பாகங்களில் வருவது மனிதனுக்கு அவசியமான உணவு, உடை, வாழ்க்கை வசதி, மணவாழ்க்கை ஆகியவைகளை சாத்தான் தன் ஆளுகையில் வைத்து மனிதனை இழுக்கிறான்(எபே. 2 :2). இவைகளெல் லாம் தம்முடைய பிள்ளைகளுக்குத் தேவை என்று தேவன் அறிந்திருக் கிறார். விசுவாசிக்கிற தம் மக்களுக்கு அவைகளை தேவன் அருளுவார் இவைகளுக்காக கவலைப்படக்கூடாது (மத்.6:25-33).
8. மனிதன் சாத்தானுக்காக வாழ்கிறான் அதைத் தொடர்ந்து மரணம் நிகழ்கிறது
9. சுயம்:மனிதனுடைய ஜென்ம சுபாவம் சுயம் என்று சொல்லப்படுகிறது. இது ஒரு வல்லமையுள்ள சக்தி. இது சாத்தானால் உருவாக்கப்பட்டிருக்கிறது. ஆனபடியினால் விழுந்து போன மனிதன் பழைய சிருஷ்டிப்புக்கு மையமாக இருக்கிறான். அவனோடு சகலமும் தொடர்புண்டாயிருக்கிறது. உலகமும் அவனுக்குள் இருக்கிறது. உலகத்துக்கும் அவனுக்கும் தொடர்பு இருக்கிறது.

இந்த நாட்களில் இந்து ஞானிகள், ரிஷிகள், யோகிகள், என்று சொல்லப்படுகிறவர்கள் தங்கள் மத்திய ஆகாயத்திலுள்ள ஆவிகளிலிருந்து தமது சக்தியை, ஞானத்தை, வல்லமையை பெற்றுக் கொள்கிறதாக சொல்லு கிறார்கள். அவர்கள் சொல்லுகிறது சரிதான். மத்திய ஆகாயத்திலுள்ள ஆவிகளோடு அவர்கள் தொடர்பு உண்டாகி அவர்களால் ஆளப்படு கிறார்கள்.

நாமோ உன்னதத்திலுள்ள இறைவனுடைய சந்நிதானத்திலே பரலோகத்திலிருந்து பெற்றுக் கொள் கிறோம். பரலோகத்திலிருந்து அனுப்பப் பட்ட பரிசுத்த ஆவியைப் பெற்றிருக் கிறோம். அந்த ஆவியினாலே நாம் ஊழியம் செய்கிறோம் (1பேது1 :12). இந்த பழைய சிருஷ்டிப்புக்கு ஒரு முடிவு கொண்டுவருவதற்காகவே தேவன் இந்த உலகத்தில் மனிதனானார். மனிதனுடைய மாம்சத்தின் சாயலைத் தரித்துக் கொண்டார். நாம் மிகவும் சந்தோஷப்பட வேண்டிய காரியம் என்னவென்றால் (கொலோ. 2:14,15) எல்லாவற்றையும் சிலுவையில் ஆணியடித்து எல்லாவற்றின் மேலும் சிலுவையில் அவர் வெற்றி சிறந்தார் என்பதாம். இயேசுவின் மரணம் பழைய சிருஷ்டிப்புக்கு முடிவு உண்டாக்கிற்று என்று வேதாகமம் நமக்கு அறிவிக்கிறது (கொலோ. 2 : 14,15).

கர்த்தராகிய இயேசுகிறிஸ்து

மனிதனைத் தெரிந்து கொண்டார். அந்த மனிதனை சிலுவைக்கு கொண்டுபோனார் அந்த மனிதனை சிலுவையில் அடித்து மரணத்தை உண்டாக்கி அந்த மனிதனுக்கு முடிவு கட்டும்படியாக அவனை சிலுவைக்கு கொண்டுபோனார். ஆனால் மனிதனிலுள்ள சுயமோ, பாவமோ, பாவப்பிரமாணமோ கிறிஸ்துவில் இல்லை. அவர் மனித சாயலில் இருந்தாரே ஒழிய அவரில் மாம்சம் இல்லை. (ரோம. 8 : 3) ம் வசனத்தில் அதெப்படியெனில், மாம்சத்தினாலே பலவீனமாயிருந்த நியாயப்பிரமாணம் செய்யக்கூடாததைத் தேவனே செய்யும்படிக்கு தம்முடைய குமாரனைப் பாவ மாம்சத்தின் சாயலாகவும், பாவத்தைப் போக்கும் பலியாகவும் அனுப்பி, மாம்சத்திலே பாவத்தை ஆக்கினைக்குள்ளாகத் தீர்த்தார். பாவ மாம்சத்தின் சாயலாக இருந்தார். மனிதனை தரித்துக்கொண்டிருந்தார். கொஞ்சம் குறைய சாத்தான் இப்பொழுது பிடிப்பட்டான்.

உதாரணம்:- (ஒரு வீட்டிலே எலி அட்டகாசம் பண்ணுகிறது என்றால் அதை நாம் விரட்டுகிறோம். அதை அடிக்கிறோம் அதை அடிக்க முடியாதபோது அது ஓடிப்போய்விடுகிறது. ஆனால் அதற்கு ஒரே ஒரு வழியிருக்கிறது ஒரு பொறி வைத்து அதிலே இறையை வைத்தோமென்றால் அந்த இறையினால் கவர்ச்சிக்கப்பட்டு அந்த இறையை எலி கவ்வும் பொறி மூடிக்கொள்ளும். கொஞ்சம் நேரத்துக்குள் தாம் அகப்பட்டுக் கொண்டோம் என்று எலிக்குத் தெரிய வரும்.)

இப்படி சாத்தான் மனிதனுக்குள் புகுந்துகொண்டபடியினாலே, சாத்தான் மனிதனுக்குள் அடக்கம். அதனால் கடவுள் மனிதனை சிலுவைக்கு கொண்டு போனார். சாத்தானை சிலுவைக்கு கொண்டு போனார். பாவத்தை சிலுவைக்குக் கொண்டுபோனார். உலகத்தை சிலுவைக்குக் கொண்டு போனார். அவருடைய மரணத்தின் மூலமாக சிலுவையிலே மரணத்தின் அதிகாரியாகிய சாத்தானும், மனிதனும் அழிக்கப்படும்படியாக கொண்டு போனார், மாம்சத்தை சிலுவைக்குக் கொண்டு போனார், சுயத்தை சிலுவைக்குக் கொண்டு போனார், சாத்தானின் ஜீவனை சிலுவைக்குக் கொண்டு போனார், மனிதனின் ஜீவனை சிலுவைக்குக் கொண்டு போனார் (கலா. 2: 20) மரித்தேன் ஆனாலும் பிழைத்திருக்கிறேன் நானல்ல கிறிஸ்துவே முன்னால் நான் அல்ல பாவமே அப்படிச் செய்தது (நானல்ல சாத்தானே) என்று சொல்லிய அப். பவுல் இப்பொழுது நானல்ல கிறிஸ்துவே என்னில் என்று சொல்லுகிறார்.

இயேசு கிறிஸ்துவை ஏற்றுக் கொள்கிறோம் என்றுச் சொன்னால் இயேசுவாகிய ஜீவனை நித்திய ஜீவனை பெற்றுக்கொள்கிறோம் (சங். 36 : 9). ஜீவ ஊற்று உம்மிடத்தில் இருக்கிறது. உம்முடைய வெளிச்சத்தில் வெளிச்சம் காண்கிறோம். தேவனை ஜீவ ஊற்று என்று சொல்லி வேதாகமத்திலே நாம் வாசிக்கிறோம். ஜீவனின் ஊற்று அங்கேயிருந்து அது பொங்கி நிறைவடைந்துக் கொண்டிருக்கிறதாக நாம் வாசிக்கிறோம். ஜீவ ஊற்று உம்மிடத்தில் இருக்கிறது. உம்முடைய வெளிச்சத்திலே வெளிச்சம் காண்கிறோம்.

(தொடரும்)

நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவினாலே நமக்கு ஜெயங்கொடுக்கிற தேவனுக்கு ஸ்தோத்திரம் (1 கொரி.15:57)

# வேதபாடம்

## 1 சாமு 18: 1 முதல் 20 : 42 வரை

தாவீதும் யோனத்தானும்:-

சவுலின் பொறாமையினால் அவனுக்கும் தாவீதுக்கும் போராட்டம் ஆரம்பமாயிற்று தகப்பன் தாவீதை பகைத்ததற்கு நேர் விரோதமாய் தாவீதின் மேல் யோனத்தான் சுயவெறுப்பான அன்பு உடையவராய் இருந்தார். தேவனுக்கு கீழ்ப்படியாததினால் யுத்தத்தில் வல்லமை இழந்து போனதுமல்லாமல் சவுல் சகலவித பொல்லாத சக்திகளாலும் பாதிக்கப்பட்டு மகா கேவலமான செய்கைகளுக்கு ஆளானான். நாம் ஆவிக்குரிய ஜீவியத்தில் முன்னேறிக்கொண்டு இருக்கிறோம் அல்லது பின்னிட்டுக்கொண்டிருக்கிறோம். நாம் நின்ற இடத்தில் நிற்கமுடியாது. சவுல் சீர் கெட்டு போனான், தாவீதோ வர வர விருத்தியடைந்தான். அரண்மனையின் உள்ளும், காட்டினுள்ளும் தாவீது அநேக வருடங்களாய் சவுலின் விரோதத்திற்கு தப்பவில்லை. நொடி நேரம் தோன்றி மறையும் சவுலின் மனஸ்தாபத்தை ஒரு போதும் நம்பமுடியாது. இரண்டாம் தடவை சவுலின் ஈட்டிக்கு தப்பினபோது தாவீது ஒருபோதும் அவனை நம்பவில்லை. எனினும் கர்த்தரால் அபிஷேகம் பண்ணப்பட்டவனுக்கு உண்மையுள்ளவராகவும், மன்னிக்கிற ஆவி உள்ளவராகவும் தாவீது விளங்கினார். மனஸ்தாபப்படுகிற ஒருவனுக்கு மன்னிக்கிறது வேறே, அவன் தன்னை நம்பப்படத்தக்கவனாக ரூபிக்கும் முன்னே அவனை நம்புகிறது வேறே.

யோனத்தான் என்றால் "கடவுளால் அருளப்பட்டவன்" என்று அர்த்தமாம். தாவீது என்றால் "நேசிக்கிறவன்" என்று அர்த்தமாம். இவ்விரண்டு பலவான்களுக்குள் இருந்த அன்பு தேவனால் அருளப்பட்டதாகும். தன் தகப்பனுக்கு உண்மையாய் இருக்கவும், தன் ஆத்ம நண்பநோடு நேசமாய் இருக்கவும் யோனத்தான் உட்பட்டதில் எவ்வளவாய் நெருக்கப்பட்டிருப்பார் என்று நாம் உணரலாம். இருவருக்கும் யோனத்தான் உண்மையுள்ளவனாய் இருந்தான். தாவீதுக்காக பரிந்து பேசி, ஆபத்தைக் குறித்து தாவீதை எச்சரித்து அனுப்பிவிட்டான். தன் தகப்பனுடைய நெருக்கடியான சமயங்களில்; தகப்பனை கைவிடாமலும் இருந்தான். சவுல் மனம் சலித்திருந்த வேளைகளில் இராஜாங்க காரியங்களை யோனத்தான் பல தடவைகள் கவனித்திருக்கலாம். கடைசிவரையில் தன் தகப்பனுக்கு ஒத்தாசையாக இருந்து யுத்த காலத்தில் தன் தகப்பன் சமீபத்திலேயே யோனத்தான் மரணமடைந்தான் என்பதை நாம் பார்க்கிறோம். சிநேகிதனிலும், சிநேகிதனின் அன்பு எக்காலத்திலும் உண்டு. கர்த்தராகிய இயேசுவே உடன்பிறந்தாரிலும் உறுதிபூண்ட அன்பராக இருக்கிறார். அவருடைய அன்பு அளவில்லாததாக இருக்கிறது. நாம் அவரிடம் இவ்விதமாக அன்பு கூறுகிறோமா?

1 சாமு 21 : 1; 26 : 25 :-

தாவீது சவுலைவிட்டு ஓடிப்போகையில் கோலியாத்து மேல் வெற்றிக்

கொண்டபடியால் கோலியாத்தின் பட்டயத்தை தன்னுடன் எடுத்துச்சென்றார். தாவீது சமூகத்தப்பங்களை புசித்ததில் தாவீது தப்பிதம் செய்யவில்லை என்று நமது ஆண்டவர் கூறியுள்ளார். (மாற்கு. 2 ; 23 -27) யுத்தமுறையில் ஏமாற்றுவது ஒரு அம்சமாய் இருக்கிறது ஏனையசந்தர்ப்பங்களில் உயிருக்கு ஆபத்து நேரிடுகையில் பொய்சொல்லுவது பெரிய தப்பிதமாய் பாவிக்கப்படாவிடினும் இச்சந்தர்ப்பங்களிலும், இன்னும் சில சமயங்களிலும் தாவீது பொய் சொன்னது சரியில்லை. நெருக்கடியில் அவர் அவ்விதமாய் பொய் சொன்னார். மனைவியையும் பிரதான பிராண சிநேகிதனையும் விட்டு சடிதியில் தப்பி ஓட நேரிட்டபடியினால் தாவீது கலக்கமடைந்திருந்தார் என்று அறிகிறோம். தனது நெருக்கடியினின்று விடுவிக்கப்பட முற்றிலும் கடவுளுடைய வழியை அவர் தேடவில்லை. சங்கீதங்களிலுள்ள அவருடைய மனஸ்தாபமான அறிக்கைகள் ஒருவேளை இப்படிப்பட்ட பாவங்களைப் பற்றியதாய் இருக்கும். தாவீதின் மற்ற இரு சிநேகிதர் அபியத்தா என்ற ஆசாரியன், காத் என்ற தீர்க்கதரிசி ஆகியோர்களைக் காண்கிறோம். தாவீதினுடைய தாழ்விலும், வாழ்விலும் அவர்கள் அவருக்கு உண்மையாய் இருந்தார்கள். இப்பொழுது கிறிஸ்துவுடன் பாடுபடுகிறவர்கள் பிறகு அவரோடு அரசாளுவார்கள்

தோவோக்கு என்ற பொல்லாத மனிதனுடைய நினைவையும், நாவையும் குறித்து ஒரு சித்திரத்தை சங்கீதம் 52 நமக்கு காண்பிக்கிறது. தோவோக்கு முற்றிலும் பொய்யனும், பொல்லாதவனுமாயிருந்து சவுலின் கட்டளையால் ஆசாரியர்களை மனதாரக்கொன்றான். சவுல் கொலைசெய்த ஆசாரியர்கள், அவரது மனைவிகள், பிள்ளைகள், இனத்தார், ஆடு மாடுகள் இவைகளையெல்லாம் பார்க்கும்போது ஒரே மனிதனின் சாட்சியத்தின் பேரில் ஆசாரியனாகிய அகிமெலேக்கைக் கொல்ல சவுலுக்கு ஞாயமில்லை.. சவுல் செய்தது பெரிய தேவ துரோகமான காரியமாகும். ஏபோத்தை பிரயோகிப்பினால் ஆசாரியன் ஒருவன் தேவ சித்தத்தை எவ்வாறு வெளிப்படுத்தினான் என்று நமக்குத்தெரியவில்லை. ஆனால் சவுல் விஷயத்தில் நாம் காண்கிறபடி பொல்லாதவர்களுக்கு ஏபோத் பிரயோஜனப்படவில்லை (1சாமு 28 ; 6). இக்காலத்தில் வேதத்தின் வாயிலாய் தேவ சித்தம் வெளிப்படுத்தப்படுகிறதை நாம் பார்க்கிறோம், குறிகளையும், தரிசனங்களையும் நாம் சற்றும் யோசிக்காமல் சார்ந்து கொள்ளக்கூடாது. அது வேதத்துக்கு ஒத்ததாய் இருந்தால் அதை ஏற்றுக்கொள்ளலாம். தேவனுடைய வசனத்துக்கு விரோதமான யாதொன்றையும் செய்ய ஒருக்காலும் கடவுள் நம்மை நடத்தமாட்டார். நமது சுயசித்தத்தை தாழ்மையோடு அவருக்கு ஒப்புக்கொடுத்து நம்மைப்பற்றிய அவருடைய சித்தத்தை ஜெபத்தில் தேடுவோமானால் நம் உள்ளத்தில் அவர் வெளிச்சம் அருளுவார். புறம்பான நிகழ்ச்சியினால் பலதடைகளினாலும் தம் சித்தத்தைப்பற்றிய குறிப்புக்களை தேவன் அறிவிப்பார். அது எதுவானாலும் சரி அதை செய்ய ஒருவன் விருப்பம் கொண்டால் தேவசித்தத்தை பூரணமாய் அறியலாம், மற்றபடி ஒருவரும் அறியமுடியாது. உதாரணமாக தேவன் சகல கிறிஸ்தவர்களையும் பிரசங்கிக்கிற ஊழியத்திற்கு அழைப்பதில்லை. ஆனால் அந்த மகிமையன சேவைக்கு அழைத்துவிடுவாரோ என்று பயப்படுகிறதினால் அநேகர் தங்களைப் பற்றிய தேவசித்தம் என்னதென்று அறிய தவறுகிறார்கள்.

கடவுளுடைய சித்தத்திற்கு மாறாக சவுல் தன் சுய சித்தத்தை நிறைவேற்ற தீவிரித்தான். ஆனபடியினால் எந்த வகையிலும் அவனோடு பேச தேவன் மறுத்துவிட்டார். நமது சொந்த வழிகளிலும் அதே சமயத்தில் தேவனுடைய வழிகளிலும் நடக்க விரும்பினால் தேவ சித்தத்தை அறியமுடியாது (யோவா. 7 : 17). இரு தடவை தாவீது சவுலின் உயிரைத்தப்புவித்தார். என்கேதி வனாந்திரத்தின் குகையில் சவுல் கால் கழுவிக்கொண்டிருக்கையில் அவனுடைய சால்வையின் தொங்கலை அறுத்துக் கொண்டான். மற்றொரு தடவை இரவில் சவுலின் பாளயத்திற்குள் பிரவேசித்து அவனுடைய ஈட்டியையும், தண்ணீர் செம்பையும் எடுத்துக்கொண்டு சென்றுவிட்டார். சவுல் தாவீதின் மாமனாயிருந்தபடியால் மரியாதைக்கு பாத்திரவானாயிருந்த போதிலும் அதினால் மாத்திரமல்ல அவன் கர்த்தரால் அபிஷேகம் பண்ணப்பட்ட இராஜாவாக இருந்தபடியினாலே தாவீது சவுலை தப்பவிட்டார்.

புதிய ஏற்பாட்டுக் காலத்திற்கு எவ்வளவோ முந்தின நாட்களில் உங்கள் சத்துருக்களில் அன்பு கூறுங்கள், உங்களைப் பகைக்கிறவர்களுக்கு நன்மை செய்யுங்கள் (லூக். 6 : 27) என்ற கட்டளையை தாவீது திருஷ்டாந்தப்படுத்தினார். தன்னைப் பின் சென்றவர்கள் வற்புறுத்தியும் பழிவாங்குதலை தன் கையால் நிறைவேற்ற தாவீது மறுத்துவிட்டார். ஏனென்றால், பழிவாங்குவது என் காரியம் நானே பதிற் செய்வேன் என்று கர்த்தர் சொல்லுகிறார் (ரோம. 12 : 19,20) என்கிறதை தாவீது அறிந்திருந்தார். இருமுறையும் மன எழுச்சியினால் தூண்டப்பட்டவனாய் சவுல் தாவீதின் வேண்டுதலுக்கு செவிகொடுத்தான் ஆனால் நிறந்தரமான மனந்திரும்புதலின்றி திரும்பவும் தாவீதை கொலைசெய்ய பின்தொடர்ந்தான். நமது சித்தத்தின் மாறுதலை வெளிப்படுத்தினால் மட்டுமே நாம் கண்ணீர் சிந்துவதால் யாதாவதொரு பிரயோஜனம் உண்டு.

அபிகாயில் அசினோவாம் என்ற தாவீதின் மனைவியரைப் பற்றி இப்பாகத்தில் அறிகிறோம். அவருக்கு இருந்த மற்ற மனையாட்டிகளைக் குறித்து வேறு பாகங்களில் வாசிக்கிறோம். அக்காலத்து வழக்கத்தை தாவீது அனுசரித்ததாக தெரிகிறது. பழைய ஏற்பாட்டின்படி நாம் இன்று வாழ முடியாது. வேதத்தில் பலதார படைப்பைக் குறித்து அறிவிக்கப்பட்டிருந்தாலும் ஒரு தடவையாவது அது ஆமோதிக்கப்படவில்லை. ஆனால நன்மை விளைந்ததாக எங்கும் கூறப்படவில்லை. அதின் முடிவாக அந்த தீமையான பலனைக்குறித்து பல எடுத்துக்காட்டுகள் உள்ளன. இதைக் குறித்து தாவீதை குற்றம்சாட்ட நாம் முன்வரலாம். நமது மேலான வெளிச்சத்தினிமித்தம் நமக்குக் கிடைத்திருக்கிற அறிவு, வெளிச்சம் இவைகளைப் பார்க்கிறபோது நம்மை எவ்விஷயங்களுக்காக தாவீது குறைகூறக்கூடும் என்பதை ஆராய்வோமானால் நல்லதாக இருக்கும்.

தொடரும்—

## பிழை திருத்தம்

கடந்த 1998 ம் ஆண்டு புதிய எருசலேம் செய்தி ஜூன்-ஜூலை மாதப் பத்திரிக்கையில் பெந்தெகோஸ்தே பண்டிகை என்ற தலைப்பில் வந்த பகுதியில் "நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து மரித்து மறுநாள் தொடங்கி எண்ணி வரும் 50 ம் நாள்" என்று உள்ளதில் "மரித்து" என்ற வார்த்தைக்குப் பதிலாக "உயிர்த்தெழுந்து" என்று திருத்தி வாசித்துக் கொள்ளவும்.

# திரித்துவம், திரியேகத்துவம்

கிறிஸ்தவ அடிப்படை சத்தியங்கள் விசுவாசிக்க வேண்டியவைகளே, ஆராய்ந்து முடிவு கண்டால்தான் விசுவாசிப்பது என்று சொல்வது விசுவாசமல்ல. எழுதப்பட்டிருக்கிற பிரகாரம் தேவன் சொல்லுகிறார் என்கிற விசுவாசம் முதலாவது தேவை. பின்பு அதனுடைய தெளிவை மனிதன் பெறமுடியும். திரித்துவ சித்தாந்த ஆராய்ச்சியில் அடிக்கடி வற்புறுத்தப் படுகிறது. என்னவென்றால் விசுவாச வணக்கம் என்னப்படுவதே ஆகும். ஆராய்ச்சியாளர்களின் கல்வியும், அறிவும், அனுமானமும், ஓரளவுக்கு உரியதே. அவை பூரணமானவைகளல்ல, அவை மட்டுப்படுத்தப்பட்டவை. ஒருவர் உபயோகித்த பதங்களும், உபமானங்களும், மட்டுப்படுத்தப்பட்டவையே, தர்க்கால ஒரு சில வேத சாஸ்திரிகள் கிரகிக்கக்கூடாத ஆழ்ந்த சத்தியத்தை, மனிதனுக்கு எளிதில் விளங்க வைக்க உபயோகிக்கப்பட்ட கதாரூபம் போன்ற பதங்கள் (MYTH) என்றே சொல்லப்பட வேண்டும். அல்லது ஒரு பெரிய மாளிகையை கட்டும்படி உபயோகப்பட்ட சாரம் போன்றவை எனக் கொள்ளலாம். அல்லது ஒரு பெரிய பொருளில் மற்றொன்றில் பிரதிப்பலிக்கப் பட்ட சாயல் போன்றதே எனக்கொள்ள வேண்டும். குறிப்பாய்க் கூற வேண்டுமாயின் திரித்துவ சித்தாந்தத்தை ஆராயும் சீஷன் ஒருவன் எழுந்து சாஷ்டாங்கமாய் விழுந்து, கர்த்தாவே, தேவரீர் மகிமையையும், கனத்தையும், வல்லமையையும் பெற்றுக் கொள்ள பாத்திரராய் இருக்கிறீர் கர்த்தரை என் கண்கள் கண்டன, மகத்துவமும், வல்லமையும் உம்முடை யவைகளே என்று அஞ்சலி செய்து வணங்கவே கடமைப் பட்டிருக்கிறான்.

திரித்துவமும் திவ்விய வணக்கமும், என அழைக்கப்படுவது நியாயமே ஆகும். திரித்துவ சித்தாந்தத்தை ஆராயும் ஒருவன் முதற்கண் கொண்ட சத்தியம், திரித்துவப் பொருள் ஆளற்ற ஒரு பொருளல்ல, அல்லது த்த்துவ சாஸ்திரிகளின் இலட்சியமும் அல்ல. ஆனால், மனுஷனோடு "நீ" 'நான்' என்று பேச கூடியவரும், யுகாயகங்களில் யாக்கோபோடு போராடுகிறவரும் தற்கால வேத சாஸ்திர உலகில், மனித சூழ்நிலையில்

## பெந்தெகோஸ்தே பண்டிகை

ஆண்டுதோறும் புதிய எருசலேம் திருச்சபையில் நம் இரட்சகராம் இயேசு கிறிஸ்து நமக்காக உயிர்த்தெழுந்த நாள் தொடங்கி எண்ணி வரும் 50 வது நாள் ஞாயிற்றுக் கிழமையன்று பெந்தெகோஸ்தே பண்டிகை கொண்டாடப்பட்டு வருகிறது. அவ்வாறே இவ்வாண்டும் 11.6.2000 ஞாயிற்றுக்கிழமையன்று பரிசுத்தாவியனவருக்குப் பண்டிகை தலைமையிலும் எல்லாக் கிளைகளிலும் கொண்டாடப்பட்டது. அந்நாளில் பரிசுத்த ஆவியானவர் வல்லமையாய் எழுந்தருளி சபையை ஆட்கொண்டு ஆசீர்வதித்தார் அவர்தம் அக்கினி இன்னும் தொடர்ந்து பற்றி எரிகிறது அவருக்கே மகிமை உண்டாவதாக! அல்லேலுயா!!

தனிப்பட்டவர் என்ற அனுபவத்திற்கு உரியவரான ஆள் கடவுள் என அறிந்ததும் மனுஷன் அவரை திரித்துத்தை வணங்குவதேயல்லாமல் வேறென்ன செய்யக்கூடும்.

திரித்துவத்தின் அனுபவத்தின் மற்றொரு சத்தியத்தையும் மனுஷன் கண்டு கொள்கிறான். கடவுள் மனிதனுக்கு தூரப்பட அதீதமென்று கொள்ளாமல் (God is not out there) தன் தன்மைக்கு அடிப்படையே கடவுள்தான் என்ற உண்மையையும் அறிந்து கொள்கிறான். கடவுளன்றி கடவுளுக்கப்பால், கடவுளுக்கு புறம்பே மனுஷன் தான் மனுஷன் என அறியக்கூடாதவன். மனிதனை மனிதனாக வெளிப்படுத் துகிறவர் கடவுளே. தேவன் மனுஷனை தன்னுடைய சாயலாக உண்டுபண்ணினார் என்ற வாசகத்தின் சித்தாந்த கருத்து என்ன கடவுளுக்கு புறம்பாக மக்கள், மக்கள் எனப்படாமல், மாக்கள் என்றே அழைக்கப்பட வேண்டும் மாக்களென் றால் மிருகங்கள் எனப் பொருள்.

தனக்கும் கடவுளுக்கும் இருக்கிற சம்பந்த நிலையை அறிந்து கொள்ளுகிறவன், பரிசுத்தாவி மூலம் புத்திர சுவிகாரத்தையும் குமாரன் மூலமாய் பிதாவோடு இணைக்கப்படுகிற ஒப்பற்ற நிலையையும் அறிந்து கொள்ளுகிறான். திரித்துவத்தில் காணப்படும் தெய்வீக மகிமை, அனுபவத்தில் பாடுபடும் தாசனின் மகிமை என்பதை பரிசுத்தாவியின் மூலம் அறிந்து கொள்ளுகிறான். சிருஷ்டிகர் மீட்பர் புனிதமார்க்கத்திலுள்ள திரித்துவ கடவுள் பாடுபடும் ஆண்டவர் என்பதை அறிந்து கொள்கிறான் (மத். 8 : 17). திரித்துவத்தில் மனிதன் மற்றோரு ஆழ்ந்த சத்தியத்தை அறிந்து கொள்ளுகிறான். பூரண அன்பின் மெய்ப்பொருள் திரித்துவத்தில் அறிந்து கொள்ளப்படுகிறது திரித்துவத்தில் ஒருவருக்கொருவர் உரிய இணைப்பு மாத்திரமல்ல, திரியேருக்கும், மக்களுக்குமுள்ள இணைப்பும் அன்பே அத்தகைய அன்பு அது எனப்படாமல் அவர் எனப்பட்டாலும் தவறல்ல. மனிதனின் தன்மையில் மூல அடிப்படை அன்பு, அல்லது அன்பர் என்பதை திரித்துவத்தில் மனிதன் அறிந்து கொள்கிறான். இவ்வித அன்பின் ஆராய்ச்சியில் மனிதன் கடவுளை அவருக்கு அன்னியராக அல்ல, அவருக்கு உரியவனாகவும், அவருடன் உரையாடுகிவனாகவும் அனுபவித்துக் கொள்ளுகிறான். குறிப்பாய்ச் சொல்ல வேண்டுமாயின் திரித்துவ சித்தாந்தத்தின் மூலம் மனிதன் தன்னைப் பற்றியும், தன்னைச் சூழ்ந்த உலகத்ததைப் பற்றியும், கடவுளைப்பற்றியும் புதிதான அனுபவங்களைக் கொள்ளுகிறான்.

இவ்வனுபவத்தின் பயனாக உள்ளம்களித்து தேவனே உம்மை துதிக்கிறோம்; உம்மை கர்த்தரென்று பிரஸ்தாபப்படுத்துகிறோம். நித்திய பிதாவாகிய உம்மை பூமண்டலங் களெல்லாம் வணங்கும் எனப் போற்றுகிறோம். சுவாசமுள்ள யாவும் கர்த்தரை துதிப்பதாக; அல்லேலூயா!! இத்தகைய அனுபவத்தின் மகிழ்ச்சியை திருச்சைபையின் வணக்கத்தில் ஆங்காங்கு இசையிலும், இறை வணக்கத்திலும், இறை இயலிலும் சிந்திகிடப்பதை நாம் காணமுடியும். பரிசுத்தவான்கள் அநேகர் தங்கள் பாடுகளில் பிதா, குமாரன், ஆவியாகிய தேவனை ஸ்தோத்தரித்து பாடியுள் ளார்கள். பிதாவுக்கும், குமாரனுக்கும், பரிசுத்தாவிக்கும் மகிமையுண்டாவதாக என்ற மகிமை கீதத்தை எபிரேய பாமாலை சங்கீதத்தில் காணலாம். திருச்சபையின் ஆராதனையில் திருத்துவத்தின் முக்கிய கருத்துக்கள் வெளிப்பட்டிருப்பதை அறியக்கூடும். காலை, மாலை ஜெபத்தில்

பாவ அறிக்கையிலும், பாவ விமோச்சனத்திலும் சர்வ வல்லமையுள்ள பிதா, கர்த்தராகிய இயேசு கிறிஸ்து இனி தேவ பக்தியுள்ளவர்களாய் நடந்து வர நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் பிதா சர்வ வல்லமையுள்ள தேவன் நம்முடைய பரிசுத்தாவியும் அருளிச் செய்ய வேண்டுமென்று தொடர்கள் வருகின்றன.

ஆராதனை ஆரம்ப பகுதிகளில் பிதா, குமாரன், பரிசுத்தாவிக்கு மகிமை செலுத்தப்படுகிறது. தேவனே உம்மை துதிக்கிறோம் என்ற திரியேகரின் புகழ்ச்சி கீதம் மற்ற கீதமும், திரத்துவத்தின் மாட்சியும், மகிமையும் எடுத்துக்காட்டும். தேவனாகிய பரம பிதாவே, லோக மீட்பராய் இருக்கிற தேவனாகிய குமாரனே, பிதாவில் குமாரனிலிருந்து புறப்படுகிற தேவனாகிய பரிசுத்தாவியே, பரிசுத்தமும், ஆனந்தமும், மகிமையுள்ள திரித்துவமே என்று இறைவணக்கம் பாடப்படுகிறது. திரித்துவத்திலும், திரித்துவ திருநாளென்று பூர்வீக சபைகளிலே கொண்டாடப்படும் அவைகளில் சர்வ வல்லமையுள்ள நித்திய தேவனே மெய்விசுவாசத்தை பற்றிக்கொண்டு, மகிமை பொருந்திய நித்திய திரித்துவத்தை அறிக்கையிடவும், வல்லமை பொருந்திய திவ்விய மக்த்துவத்தை ஏகத்துவமாய் வணங்கவும், உமது அடியாராகிய எங்களுக்கு கிருபை செய்திருக்கிறீரே. இந்த விசுவாசத்திலே எங்களை உறுதிப்படுத்தி, இதற்கு விரோதமான யாவற்றிற்கும் எப்பொழுதும் எங்களை விலக்கி காப்பாற்ற வேண்டுமென்று சதாகாலமும் ஒரே தேவனாக ஜீவித்து அரசாளுகிற உம்மை வேண்டிக்கொள்கிறோம் என்று வருகிறது. தேவரீர் ஒரே தேவனும், ஒரே கர்த்தருமாய் இருக்கிறீர். ஒருவராய் மாத்திரமிராமல் ஒரே தன்மையுடைய மூவராயுமிருக்கிறீர். பிதாவினுடைய மகிமை எத்தன்மையுள்ளதென்று நாங்கள் விசுவாசித்திருக்கிறோமோ குமாரனுடைய மகிமையும், பரிசுத்தாவியினுடைய மகிமையும், யாதொரு வித்தியாசமும், குறைவுமின்றி அத்தன்மையானதென்று விசுவாசிக்கிறோம்.

நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினுடைய கிருபையும், தேவனுடைய அன்பும், பரிசுத்தாவியினுடைய அந்நியோன்னிய ஐக்கியமும் நம் அனைவரோடுங்கூட இருப்பதாக என்று ஆராதனையின் இருதியில் ஆசீர்வாதம் கூறப்படுவதை நாம் கவனிக்க வேண்டும். பரிசுத்த ஞானஸ்நானம், விவாகம், அபிஷேகம், அடக்கம் முதலிய எல்லா ஆராதனையிலும் தேவனாகிய பிதா, குமாரனாகிய தேவன், தேவனாகிய பரிசுத்தாவி என்ற திரியேகத் தொடர் மலிந்து கிடப்பதை பார்க்கலாம். சுருக்க ஜெபங்களில் அம்சம் அதுவே. சர்வ வல்லமையுள்ள தேவனே, உம்மோடும் பரிசுத்தாவியோடும் ஒரே தேவனாக என்றென்றைக்கும் ஜீவித்து அரசாளுகிற எங்கள் இரட்சகராகிய இயேசு கிறிஸ்துவின் மூலமாய், இயேசுவின் நாமத்தினால் தாழ்மையுடன் வேண்டிக் கொள்கிறோம். என்று ஜெபிக்கிறோம்.

மேலும் பூர்வீக சபைகளிலே இவ்விதமான அறிக்கைகள் இடம் பெறுகின்றன. அப்போஸ்தலர்கள் விசுவாச பிரமாணம், நிசையா விசுவாச பிரமாணம், அதனாசி விசுவாச பிரமாணம் எனப் பொதுப்பட அழைக்கப்படுகிற விசுவாசப் பிரமாணங்களில் திரித்துவ சித்தாந்தங்களில் அனுபவ முறையாய் எடுத்துக் கூறப்பட்டுள்ளன. பிதாவாகிய தேவனை விசுவாசிக்கிறேன், அவருடைய ஒரே குமாரனாகிய நம்முடைய நாதர் இயேசு கிறிஸ்துவை விசுவாசிக்கிறேன், பரிசுத்தாவியையும் விசுவாசிக்கிறேன் (அப்போஸ்தல விசுவாச பிரமாணம்)

சர்வ வல்லமையுள்ள பிதாவாகிய ஒரே தேவனை விசுவாசிக்கிறேன். ஒரே கர்த்தருமாய், தேவனுடைய ஒரே பேரான குமாரனுமாயிருக்கிற இயேசுகிறிஸ்துவையும் விசுவாசிக்கிறேன். பிதாவிலும், குமாரனின்று புறப்படுகிறவருமாய் இருக்கிற பரிசுத்தாவியை விசுவாசிக்கிறேன் (நிசேயா விசுவாச பிரமாணம்) பிதாவானவர் ஒருவர், குமாரனானவர் ஒருவர், பரிசுத்தாவி யானவர் ஒருவர் பிதா எப்படிப்பட்டவரோ குமாரனும் அப்படிப்பட்டவர், பரிசுத்தாவியும் அப்படிப்பட்டவர். ஆகிலும் மூன்று தேவர் இல்லை ஒரே தேவன், தேவன் ஒருவரே. திருச்சபை வணக்கத்திலும், விசுவாச அறிக்கையிலும், விவிலிய நூலிலும் மலிந்து கிடக்கும் கிறிஸ்துவத்தின் ஏகத்துவம், ஏகத்தில் திரித்துவம் என்று, திருச்சபையின் அனுபவத்திற்குரிய சான்றுகளை துருவி ஆராய்ந்து நமக்கு பாடமாகவும் அனுபவமாகவும் ஆக்கி கொள்வது, போதகர் யாவர்களின் முதற் கடமையேயாகும்.

மேற்சொன்ன குறிப்புகளை ஆராய்தடத்து, ஒன்று பிரத்தியட்சமாய் காணப்படுகிறது. திரித்துவ சித்தாந்தமானது ஒரு காலத்தில் ஓரிடத்தில் ஒரு மனுஷனால், ஒரு சங்கத்தால் திரட்டி உருவாக்கப்பட்ட ஒரு பொருளல்ல. கடவுளின் வெளிப்பாடும் மனிதனின் அனுபவ செவி கொடுத்தலும், என்ற முறையில் God`s Reveletion and Man's Responsiveness மனிதன் மக்கள் சித்தாந்தக் குறிப்பில் ஷீஷர் எனப்படுவோர் அனுபவித்து, புசித்து, ருசித்த உண்மையே ஆகும். திரித்துவ சித்தாந்தம் கொடுக்கப்படாமலும், உண்டாக்கப்படாமலும் (Neither given nor made) அனுபவத்தினாலே உண்டாயிற்று இந்த தனி அனுபவத்திற்கு முன் மனிதனின் எந்த அறிவும் எந்த விஞ்ஞானமும், எந்த ஆராய்ச்சியும் மேன்மை பாராட்டக் கூடாது. விசுவாசமும் தனி அனுபவமும் Faith and personal Expeience இவை யாவற்றையும் தாண்டிச் செல்லும் மனிதன் விசுவாசத்தில் தாவிக்குதித்து இப்பெரிய உண்மையை நேர் முகமாய் அனுபவித்துக்கொள்கிறான். இவ்வனுபவத்தில் மனிதன் புத்துயிரையும் புத்துணர்வையும் அடைகிறான் இவ்வாராய்ச்சியின் ஆரம்பத்தில் நமக்குத்தோன்றிய, பயமோ, ஐயமோ, எச்சரிப்போ இவையாவும் நீங்கி திரித்துவத்துக்கு முன் வியப்புற்று கிடக்கும் ஒரு பரவச நிலையை நாம் அடைகிறோம். இந்நிலையை உணர்ந்து கொள்ளாதவனே திரித்துவத்தில் ஒன்றை அல்லது ஒருவரை வற்புறுத்த நினைத்து பிதாவின் வணக்கம் வேறு என்றும், குமாரனின் வணக்கம் வேறு என்றும், பரிசுத்தாவியின் வணக்கம் வேறு என திரித்துவத்தை பகுதிபடுத்தி தெய்வ மகத்துவத்தை தூசிக்கிறார்கள் அவ்வாறு தூசிக்கிறவன் விவிலிய முறையில் கூறப்பட்ட ஒரு சில வார்த்தைகளை தன் சந்தர்ப்பத்துக்கேற்றவாறு, விவிலிய சந்தர்ப்பத்தினின்று பிரித்தெடுத்து உபயோகிக்க துணிகிறான்.

திரித்துவ அனுபவமின்றி திரித்துவத்தின் ஒருவரை வணங்கவோ, போதிக்கவோ துணிகிறவன் விக்கிரகாராதனைக்காரன் எனப்படுவான். குறிப்பாக இக்காலங் களில் கிறிஸ்தவ உலகில், இயேசுவின் நாமம், இயேசு கிறிஸ்து நாமமென்று திரித்துவ ஒருமைப் பாட்டையும், வெளிப்பாட்டையும் உணராது கூறுகிறவன் ஓர் மரத்தில் மறைந்திருக்கும் வேரையும், கனிதரும் கொப்பு, கிளை இவற்றை மனதில் கொள்ளாமல் இரண்டிற்கும் இடையிலுள்ள ஒரு நடுப்பகுதியை மாத்திரம் இதுவே மரம் என சாதிக்கும் மையல் கொண்டவனைப் போன்றவன்

(பைத்தியம்) கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை பிதாவாகிய தேவனென்றும், பரிசுத்தாவியாகிய தேவனென்றும் தனிப்படுத்தி போதிப்பவன் கடவுளை மறுதலிக்கிறவ னேயன்றி வேறல்ல. ஆதி திருச்சபையின் கண்டனத்துக்குரியவன். திருச்சபைக்குரிய பொதுவான விஷயம் இது. இதை ஒருவன் உண்மையாய் விசுவாசிக்காவிட்டால் இரட்சிப் படையான், மாம்சத்தின் படி பிறந்தவன். ஆவியின்படி பிறந்தவன் அப்பொழுது துன்பப்படுத்தினது போல இப்பொழுதும் நடந்து வருகிறது. நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் பிதாவாகிய தேவனுக்கு ஸ்தோத்திரம்!! "கொலோ.1:5.

(தொடரும்)

# யோவாபைப்போல் இருக்க வேண்டாம்

தாவீது ராஜாவின் காலத்தில் சேனாதிபதியாக இருந்தவர் யோவாப். தாவீது ராஜாவின் சகோதரியாகிய செருயாளின் குமாரன். இந்த யோவாபின் முடிவு, பொறுப்புள்ள பதவிகளில் இருப்பவர்களுக்கு ஒரு எச்சரிக்கையாக அமைந்துள்ளது. மேலோட்டமாக இவருடைய காரியங்களை கவனித்துப் பார்த்தால் எல்லாம் சரியாகத்தான் செய்திருக்கிறார் என்று எண்ணத்தோன்றும். ஆனால் ஆவிக்குரிய பிரகாரமாக நாம் நிதானித்தால், இந்த யோவாபைக்குறித்து, தாவீது ராஜா கடைசி நாட்களில் தன் குமாரனாகிய சாலமோனுக்கு இட்ட கட்டளை மிகச் சரியானது என விளங்கும்.

தாவீது சவுலுக்குப் பயந்து அதுல்லாம் கெபிக்கு வந்தபோது, அவரோடு சேர்ந்துகொண்டவர்களில் யோவாபும் ஒருவன் 1 சாமு. 22 : 1 திறமையாகப் போர் செய்து, சீயோன் கோட்டையைப் பிடித்ததால் , தாவீதால் சேனாதிபதியாக அங்கிகரிக்கப்பட்டார் 2.சாமு. 8 : 16. அம்மோனியரின் ரப்பா பட்டணத்தைப் பிடிக்கும்போது தன் பெயர் வராதபடிக்கு, தாவீதுக்கு செய்தி அனுப்பி தாவீதுக்கு புகழ்ச்சியுண்டாக நடந்து கொள்கிறார் 2சாமு. 12 : 28. இப்படி புகழ்ச்சிக்குரிய காரியங்கள் யோவாபினிடத்தில் காமப்பட்ட போதிலும் அவருடைய உள்ளான நிலையை சற்று கவனித்துப் பார்த்தால் தன்னைக்குறித்து எண்ண வேண்டியதற்கு மிஞ்சி எண்ணிக் கொள்பவராக இருந்ததை அறியலாம். தன்னுடைய ஸ்தானத்துக்குப் போட்டியாக யாரும் வரக்கூடாது என்று, முறையற்ற விதத்தில் செயல்பட்டதையும் அறிந்து கொள்ளலாம்.

தாவீது ராஜா உயர்த்தப்பட வேண்டிய சமயங்களில், இவர் தன்னுடைய சுயநலத்துக்காக சமாதானக்கேடுகளை உருவாக்கி, தாவீது ராஜா உயர்த்தப்பட வேண்டிய காலத்தில் உயர்த்தப்படாதபடிக்கு கெடுத்துப் போட்டார். சமஸ்த இஸ்ரவேலின் மேலும் தாவீதை ராஜாவாக ஏற்றுக்கொள்ளக் கூடிய சூழ்நிலை உண்டானபோது தாவீதுக்கு தெரியாமல் அப்னேரைத் தந்திரமாய் கொலை

செய்தான் (2சாமு. 3;26). தன் தலைவனுடைய உயர்வைக்காட்டிலும் தன் பதவிக்குப் போட்டியாக யாரும் வந்துவிடக்கூடாது என்று சுயநலமாகச் செயல்பட்டதாக அறிகிறோம். இதே சுயநலத்திற்காக அபசலோமின் படைத்தலைவனாயிருந்த அமாசாவையும் தந்திரமாய் கொலை செய்ததாகப் பார்கிறோம் (2. சாமு. 20:10). தாவீது ராஜாவின் கட்டளையை மீறி அப்சலோமை கொன்றது மல்லாமல் (2சாமு.18:5,14) தன் செயலை நியாயப்படுத்தி தலைவனையே எதிர்க்க துணிகிறான் யோவாப் (2சாமு. 19:7). தன்னுடைய பலம், பதவி இவற்றையே பெரிதாக எண்ணி பெருமை கொண்டதால் அவன் இப்படிப்பட்ட காரியங்களைச் செய்தான். என்று அவருடைய நடவடிக்கைகள் மூலம் விளங்குகிறது. ஆனால் தாவீது ராஜா அரசியல் தலைவராகவும், ஆவிக்குரிய தலைவராகவும் இருந்தபடியால், கர்த்தருடைய ஆலோசனையின்படி நடந்து ஜனங்கள் சிதறி விடாதபடிக்கு பாதுகாத்துக் கொண்டார்.

யோவாப் ஆவிக்குரிய பார்வை இல்லாது அரசியல் பார்வை மட்டும் கொண்டவராக இருந்தபடியால் தாவீது ராஜாவை அறியவேண்டிய பிரகாரமாக அறியவில்லை. ஏனெனில் அரசியலில் உள்ளவர்களின் முதலாவது கொள்கையே தங்கள் ஸ்தானத்தை என்ன விலை கொடுத்தாவது பாதுகாப்பதும், தனக்கு போட்டியாக வருபவர்களை ஒழித்துக் கட்டுவதுமாகும். தற்கால அரசியல் நடவடிக்கைகளை நாம் கூர்ந்து கவனித்தால் இது நன்கு புலப்படும். கடைசிவரை யோவாப் தன்னுடைய தலைவனை சரியாக அறிந்துக் கொள்ளாதபடியினால் அதோனியாவை ராஜாவாக்க முயன்று அழிவைத் தேடிக் கொண்டார் (1ராஜா.2:34). பெரிய பராக்கிரமசாலியாக ஆரம்பித்த அவருடைய வாழ்க்கை மிகவும் பரிதாபமாக முடிந்தது.

ஆகவே தேவனால் அபிஷேகிக்கப் பட்ட ஒரு தேவ மனிதனின் கீழ் பொறுப்புள்ள பதவிகளில் இருப்ப வர்கள் உலக ஆதாயத்தை எதிர் நோக்காது முற்றிலும் தங்கள் தலைவனுக்கு கீழ்படிந்து இருப்பதையே தேவன் விரும்புகிறார். சில நேரங்களில் தங்கள் தலைவனுக்காக வைராக்கியம் காண்பிக்கிறதும், சில நேரங்களில் எதிர்த்து நிற்பதுமாகிய காரியங்களை தேவன் விரும்புகிறதில்லை. ஆகவே, நாம் யோவாபைப் போல் இராதபடி யோசுவா, காலேபைப் போல தேவ மனிதனுக்கு கீழ்ப்படிந்து நற்சாட்சி பெறுவோமாக!! யோவாபின் வாழ்க்கை நமக்கு ஒரு எச்சரிக்கை.

"மாம்ச சிந்தை மரணம்; ஆவியின் சிந்தையோ ஜீவனும் சமாதானமுமாம்"ரோம. 8:6

## பரிசுத்த விவாகம்

| மணமகன் | மணமகள் | நாள் | இடம் |
|---|---|---|---|
| T. டேவிட் | எஸ்தர் | 27-4-200 | கோவிலம்பாடு (A.P) |

## அரபு ஐக்கிய நாடுகளில் புதிய எருசலேம் சபை ஆரம்பம்

பாஸ்டர். S.சுந்தர்ராஜ், பாஸ்டர். S.ஏசுதாசன் ஆகியோர்களை மிஷனரிகளாக அனுப்பி கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் கிருபையினால் சென்ற 7.4.2000 ல், **Sharja, Ras-Al-Khaima, Dubai** ஆகிய அரபு நாடுகளில் சபை ஸ்தாபிக்கப்பட்டது.

Sharja வில் சபை Register செய்யப்பட்டுள்ளது. மற்றும் அங்கு அரசாங்கக் கட்டிடத்தில் புதிய எருசலேம் சபை ஆராதனை நடத்த அனுமதி கிடைத்துள்ளது. இது தேவனுடைய பெரிய அதிசயமான காரியமாகும்.

அனேக மக்கள் தேவனால் தொடப்பட்டு, இழுக்கப்பட்டு புதிய எருசலேமாய் மெய் தேவனைத் தொழுது கொள்கிறார்கள். இன்னும் அருகிலுள்ள நாடுகளிலிருந்தும் பலர் சபைக்கு வந்து செல்கிறார்கள். அல்லேலுயா! ஊழியர்களாக Eld.ஞானசேகரும், Eld.விஜயகுமார் ஜேக்கப்பும் நியமிக்கப்பட்டுள்ளார்கள் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

## ஞானஸ்நானம்

கடந்த 7.4.2000 அன்று, துபாய் புதிய எருசலேம் கிளை சபையில் 4 பேர் ஞானஸ்நானம் பெற்று திருச்சபையின் அங்கத்தினர்களாக சேர்க்கப்பட்டுள்ளார்கள் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

## கர்த்தருக்குள் நித்திரையடைந்தார்கள்

20-4-2000 அன்று புதிய எருசலேம் சபை கோயம்புத்தூர் கிளை சபையின் அங்கத்தினராகிய சகோதரி சாவித்திரி என்ற எலிசபெத் கர்த்தருக்குள் நித்திரையடைந்தார்கள். அன்னாரின் பிரிவால் வருத்தத்திலிருக்கும் கணவன் மற்றும் குழந்தைகள், குடும்பத்தாருக்கும் கர்த்தர் ஆறுதல் அருளுவாராக.

1-5-2000 அன்று புதிய எருசலேம் சபை நாகர்கோவில் கிளையின் அங்கத்தினராகிய சாமிநாதன் அவர்கள் மனைவியும் நான்குநேரி புதிய எருசலேம் சபை பாஸ்டர். எல். ஜெபமணியின் சகோதரியுமான கனகமணி (வயது48) கர்த்தருக்குள் நித்திரையடைந்தார்கள் அன்னாரின் பிரிவால் வருத்தத்தில் இருக்கும் குடும்பத்தாருக்கும்; தேவன் ஆறுதல் அருள்வாராக.

"தேவனைத் தேடு"
"Seek God"

Regd.No. 040088/84
Postal Regd.No. Tech/47-201/MBI/2000
Tamil Monthly Magazine

# 13வது ஊழியர் மாநாடு

11-5-2000 முதல் 20 - 5 - 2000 முடிய புதிய எருசலேம் சபையின் 13 வது ஊழியர் மாநாடு கொடைக்கானல், B.L.Shed ஆலயத்தில் மிகவும் வெற்றிகரமாகவும், ஆசீர்வாதமாகவும் நடந்து முடிந்தது. ஊழியர் மாநாட்டிற்கு இந்தியா, வெளிநாடுகளிலிருந்து வந்து கலந்துகொண்ட எல்லா பரிசுத்தவான்களையும் கர்த்தருடைய பெரிதான வல்லமை ஆட்கொண்டது. தேவனுடைய ஆசீர்வாதம் எல்லோர்மேலும் இறங்கிற்று; தேவ ஞானம் வெளிப்பட்டது. சிக்கலான அநேக காரியங்களுக்கு முடிவு காணப்பட்டது. தேவன் சபையை மேன்மைப்படுத்தினார். தேவனுக்கே மகிமை உண்டாவதாக! மநாட்டிற்காக ஜெபித்த, உதவின கரங்களைக் கர்த்தர் ஆசீர்வதிப்பாராக! நன்றி!!

*CHIEF APOSTLE. N. LAZAR*

## அறிவிப்புகள்

### முழு இரவு விழிப்பு ஜெபம்

*17, திங்கள் (ஜூலை 2000)*
*15, செவ்வாய் (ஆகஸ்ட் 2000)*

### புதிய எருசலேம் செய்தி பத்திரிக்கை

| | |
|---|---|
| ஆண்டு சந்தா | Rs. 30.00 |
| வெளிநாடு ஆண்டு சந்தா | Rs.400.00 |

### அனுப்ப வேண்டிய முகவரி

Chief Apostle N.Lazar,
"NEW JERUSALEM CHURCH"
Church Lane, Tilak Nagar,
Darga Cross Road, Sonapur,
Bhandup (W), MUMBAI-400 078

மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா எண்ணைக் குறிப்பிடவும். பழைய சந்தாதாரரா அல்லது புதிய சந்தாதாரரா என்பதையும் குறிப்பிடவும்.

பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதையும் தெளிவாகக் குறிப்பிடவும்.
"புதிய எருசலேம் செய்தி" பத்திரிக்கை வாங்குவோர் ரூ.30 (முப்பது) சந்தா தொகையுடன் தங்கள விலாசத்தையும் தெளிவாகக் கொட்டை எழுத்துகளில் (Capital Letters), M.O. பாரத்தின் செய்திக்காக ஒதுக்கப்பட்ட பகுதியில் (Space for Communication) எழுதிப் பத்திரிகையைப பெற்றுக கொள்ளும்படி கேட்டுக்கொளளப்படுகிறீர்கள.

Edited, Printed and Published by Chief Apostle N.LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Darga cross rd Sonapur, Bhandup(W), Mumbai-400 078, India. *Phone 91-22-5605515. Fax 91-22-5681992, e-mail njc@vsnl.com*
Printed at New Jerusalem Press, Tilak Nagar, Bhandup, Mumbai-400 078

# புதிய எருசலேம் செய்தி

# PUTHIYA YERUSALEM CHEIDHI

எக்காளம் 18; சத்தம்: ஆகஸ்ட் 2000




"___வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, [illegible] சேவல் கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது [illegible] நீங்கள் அறியீர்கள்___ விழித்திருங்கள்___ உங்களுக்குச் [illegible] சொல்லுகிறேன் விழித்திருங்கள்___" [illegible] 13: [illegible]

EDITOR: CHIEF APOSTLE N. LAZAR

MUMBAI, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும் அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும் தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும், சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும்படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது. (எபே.4:11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசுகிறிஸ்து எனக்கு தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும் கட்டளைகளும் 7 (அப்.1: 1-3)" எனக்கு காண்பித்து, கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள்:

1 உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் மத்.28:18; மாற். 16:15
2 விசுவாசித்து ஏற்றுக்கொள்ளுகிறவர்களை பிதா, குமாரன், பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்- மத். 28:19 (இயேசு மாதிரி (Through Action) செய்து காண்பித்தார்
3 திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள் - மத்.28:20
4 அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள் - யோவான் 20: 23
5 அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள் - யோவான் 21 : 15-17
6 இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு - அப் 1 :5-8
7 நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார் - 1கொரி 11 : 23 26

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு(2) என்கின்றனர் வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே அதெப்படி? என்றேன் இயேசுவானவர் பிரதியுத்தரமாக: இல்லை அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி 9:1-6) இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும் அதிகாரங்களுமாகும் இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1:1, 10: 40-43)

**- Chief Apostle.N.Lazar**

## இதழின் உள்ளே

# ஆசிரியர் உரை



யுத்தம் ஆரம்பமாகிவிட்டது தேவ ஜனங்கள் ஊக்கமாக ஜெபிக்கவும். சத்துருவை எதிர்க்கவும் அணிஅணியாய் திரளவேண்டும். இது கடைசிக் காலமாக இருக்கிறது ஆனபடியினால் சபையானது வேகமாக ஆயத்தப்பட வேண்டும். உலகத்திலே பஞ்சங்களும் கொள்ளை நோய்களும் மாத்திரமல்ல, ஜாதிக்கு ஜாதி விரோதமாக எழும்பும். இவைகளெல்லாம் வேதனைக்கு ஆரம்பம் என்று கர்த்தராகிய இயேசு கிறிஸ்து தீர்க்கதரிசனமாய் சொன்ன வார்த்தைகள் நிறைவேறிக் கொண்டிருக்கின்றன. ஆனால் தேவ ஜனங்களுக்கு பாதுகாப்பு உண்டு; திருச்சபையார் தைரியமாக இருக்கலாம்: உலகத்தில் உங்களுக்கு உபத்திரவம் உண்டு, ஆனாலும் நான் உலகத்தை ஜெயித்தேன் என்று திருவுளம் பற்றினார் கர்த்தர்; நாமும் ஜெயங்கொள்வோம். இந்தக் கடைசிக்காலத்தில் தனித்து நின்று எந்த மனிதனும் யுத்தம் செய்து போராடி ஜெயிக்க முடியாது, சேனையாக மாற வேண்டும்.

புதிய எருசலேம் சபையில் "புதிய எருசலேம் பிரார்த்தனா சேனை" ஆரம்பமாகியிருக்கிறது. அது சபை முழுவதும் பரவும், உலகமுழுவதும் பரவும், தேவ ஜனங்கள் எல்லோரும் அதில் கலந்து கொள்வார்கள். மனிதனுடைய வாழ்க்கையிலே இரண்டு இறக்கைகள் அவன் பறந்து செல்லத் தேவை. ஒன்று ஜெபம்; இன்னொன்று கிரியை. இந்த இரண்டு இறக்கைகளும் சம அளவாக இருக்க வேண்டும். ஜெபம் நீண்டு கிரியை குறைந்து விடக்கூடாது. கிரியை செய்து கொண்டு ஜெபத்தைக் குறைய விடக்கூடாது. இந்த இரண்டும் சமமாயிருந்தால் தான் எந்தப் பறவையும், விமானமும் வானத்தில் எழும்பும். இப்படி ஜெபம் பண்ணுவதும், கர்த்தர் கட்டளையிடுகிறதை செய்கிறதும் தேவனுடைய கட்டளையை நிறைவேற்றுவதுமே தேவ ஜனங்களுடைய நோக்கமாயிருப்பதாக. சாத்தான் தன்னுடைய சேனையை ஆயத்தப்படுத்திவிட்டு நான் யுத்தத்திற்கு தயார் என்று சொல்லுகிறான் தேவ ஜனங்களே, எங்கேயிருக்கிறீர்கள்?

***கிறிஸ்துவுக்குள்,***

ஜெபம்
இன்னொன்று
கிரியை.

***தலைமை அப்போஸ்தலர்.என்.லாசர்***

# கர்த்தர் ராஜரீகம் பண்ணுகிறார்

"கர்த்தர் வானங்களில் தமது சிங்காசனத்தை ஸ்தாபித்திருக்கிறார்; அவருடைய ராஜரீகம் சர்வத்தையும் ஆளுகிறது" (சங். 103 : 19). கர்த்தர் ராஜரீகம் பண்ணுகிறார் (சங். 99: 1). கிறிஸ்தவ உபதேசங்களில் முக்கியமானதொன்று தேவனுடைய பராமரிப்பு அல்லது தேவனுடைய ஆளுகை என்று சொல்லலாம்

தேவனைப்பற்றிய அறிவு: -

தேவன் சகல சிருஷ்டிகளையும் சிருஷ்டித்து அவைகளை ஆண்டு நடத்துகிறார். அவருடைய கட்டுப் பாட்டுக்குள் அவர் சிருஷ்டித்தது இருக்கிறது. அவைகளை பராமரித்து வருகிறார். விசேஷமாக தம்முடைய பரிசுத்தவான்களை காப்பாற்றுகிறார், அவர்களைப் பராமரிக்கிறார். தேவன் சிருஷ்டிப்புக்களை தம்முடைய கட்டுப் பாட்டுக்குள் நடத்துகிறார் (தானி. 4 : 35).

சத்திய வேதாகமத்தில் தேவனைப் பற்றிய அறிவானது நமக்கு மிகுந்த நம்பிக்கையையும், பூரணத்துவத்தையும், சகலத்தையும் அருளுகிறதாக இருக்கிறது. "அவர் இரக்கங்கள் அவருடைய எல்லா கிரியைகளின் மேலுமுள்ளது" (சங் 145 : 9,10). 'கர்த்தாவே மனுஷரையும் மிருகங்களை யும் காப்பாற்றுகிறீர்' (சங்36:9) நம்முடைய தேவன் மிகவும் இரக்கமுள்ளவராகவும், உருக்கமுள்ளவராகவும் இருக்கிறார். தம்முடைய சிருஷ்டியை நேசிக்கிற வராகவும் இருக்கிறார். இரட்சிப்புக்கு அடுத்த விஷயத்தில் அவர் சிருஷ்டிகர் மாத்திரமல்ல; நம்முடைய இரட்சகராக வும் இருக்கிறார். தேவன் தமது சிருஷ்டிக்கு வேண்டியவைகளை கொடுக் கிறார் (சங். 104: 21 ; நெகே. 9:6). 'மாம்சதேகமுள்ள யாவுக்கும் ஆகாரங் கொடுக்கிறவரைத் துதியுங்கள்' (சங். 136 : 25). அவர் மிருக ஜீவன்களுக்கும், கூப்பிடுகிற காக்கை குஞ்சுகளுக்கும் ஆகாரங்கொடுக்கிறார். (சங் 147: 9, யோபு 38:41). வருங்காலத்திற்காக நாம் கவலைப் படக்கூடாது. அப்படி கவலைப்பட்டால் தேவனை நாம் அற்பமாய் எண்ணுகிறவர் களாவோம். கவலைப்படுவது பாவம்

தேவனுடைய பிள்ளைகள் மிகுந்த நம்பிக்கையுடையவர்களாக இருக்க வேண்டும் (சங். 91 : 11). ஆண்டவராகிய கர்த்தாவே என் இரட்சிப்பின் பெலனே, யுத்தநாளில் என் தலையை மூடினீர் (சங். 140 : 7). அவர் நம்மை காத்து தப்பப் பண்ணுகிறவராயிருக்கிறார் (சங். 91: 3 ; ஏசா 31 : 5). கர்த்தர் வழி நடத்துகிறதிலும் தம்முடைய பராமரிப்பை காண்பிக்கிறார் (உபா 8 : 12-18 ; ஏசா. 63 : 12). கர்த்தர் ராஜரீகம் பண்ணுகிறார். அவருடைய ராஜரீகம் சர்வத்தையும் ஆளுகிறது. அவருடைய சிங்காசனத்தை பரலோகத்தில் ஸ்தாபித்திருக்கிறார் அவருடைய ஆளுகை சர்வசிருஷ்டியின் மேலும் இருக்கிறது

தேவன் தம்முடைய வார்த்தையை நிறைவேற்றுகிறவர்: -

"கடவுள் ஒன்று சொல்லுகிறார் என்றால் அதை செய்கிறார் என்று

# கர்த்தர் ராஜரீகம் பண்ணுகிறார்

"கர்த்தர் வானங்களில் தமது சிங்காசனத்தை ஸ்தாபித்திருக்கிறார்; அவருடைய ராஜரீகம் சர்வத்தையும் ஆளுகிறது" (சங். 103 : 19). கர்த்தர் ராஜரீகம் பண்ணுகிறார் (சங். 99: 1). கிறிஸ்தவ உபதேசங்களில் முக்கியமானதொன்று தேவனுடைய பாரமரிப்பு அல்லது தேவனுடைய ஆளுகை என்று சொல்லலாம்.

தேவனைப்பற்றிய அறிவு: -

தேவன் சகல சிருஷ்டிகளையும் சிருஷ்டித்து அவைகளை ஆண்டு நடத்துகிறார் அவருடைய கட்டுப் பாட்டுக்குள் அவர் சிருஷ்டித்தது இருக்கிறது. அவைகளை பாரமரித்து வருகிறார். விசேஷமாக தம்முடைய பரிசுத்தவான்களை காப்பாற்றுகிறார், அவர்களைப் பாரமரிக்கிறார். தேவன் சிருஷ்டிப்புக்களை தம்முடைய கட்டுப் பாட்டுக்குள் நடத்துகிறார் (தானி 4 : 35)

சத்திய வேதாகமத்தில் தேவனைப் பற்றிய அறிவானது நமக்கு மிகுந்த நம்பிக்கையையும், பூரணத்துவத்தையும், சகலத்தையும் அருளுகிறதாக இருக்கிறது "அவர் இரக்கங்கள் அவருடைய எல்லா கிரியைகளின் மேலுமுள்ளது" (சங் 145 : 9,10). 'கர்த்தாவே மனுஷரையும் மிருகங்களை யும் காப்பாற்றுகிறீர்' (சங்36:9). நம்முடைய தேவன் மிகவும் இரக்கமுள்ளவராகவும், உருக்கமுள்ளவராகவும் இருக்கிறார் தம்முடைய சிருஷ்டியை நேசிக்கிற வராகவும் இருக்கிறார் இரட்சிப்புக்கு அடுத்த விஷயத்தில் அவர் சிருஷ்டிகர் மாத்திரமல்ல; நம்முடைய இரட்சகராக வும் இருக்கிறார். தேவன் தமது சிருஷ்டிக்கு வேண்டியவைகளை கொடுக் கிறார் (சங். 104: 21 ; நெகே. 9:6) 'மாம்சதேகமுள்ள யாவுக்கும் ஆகாரங் கொடுக்கிறவரைத் துதியுங்கள்' (சங் 136 : 25). அவர் மிருக ஜீவன்களுக்கும், கூப்பிடுகிற காக்கை குஞ்சுகளுக்கும் ஆகாரங்கொடுக்கிறார். (சங். 147: 9, யோபு 38:41). வருங்காலத்திற்காக நாம் கவலைப் படக்கூடாது. அப்படி கவலைப்பட்டால் தேவனை நாம் அற்பமாய் எண்ணுகிறவர் களாவோம். கவலைப்படுவது பாவம்.

தேவனுடைய பிள்ளைகள் மிகுந்த நம்பிக்கையுடையவர்களாக இருக்க வேண்டும் (சங். 91 : 11). ஆண்டவராகிய கர்த்தாவே என் இரட்சிப்பின் பெலனே, யுத்தநாளில் என் தலையை மூடினீர் (சங் 140 : 7). அவர் நம்மை காத்து தப்பப் பண்ணுகிறவராயிருக்கிறார் (சங் 91: 3 ; ஏசா. 31 : 5). கர்த்தர் வழி நடத்துகிறதிலும் தம்முடைய பாரமரிப்பை காண்பிக்கிறார் (உபா 8 : 12-18 ; ஏசா. 63 : 12) கர்த்தர் ராஜரீகம் பண்ணுகிறார் அவருடைய ராஜரீகம் சர்வத்தையும் ஆளுகிறது. அவருடைய சிங்காசனத்தை பரலோகத்தில் ஸ்தாபித்திருக்கிறார் அவருடைய ஆளுகை சர்வசிருஷ்டியின் மேலும் இருக்கிறது.

தேவன் தம்முடைய வார்த்தையை நிறைவேற்றுகிறவர்: -

"கடவுள் ஒன்று சொல்லுகிறார் என்றால் அதை செய்கிறார் என்று

அர்த்தம்". பழைய ஏற்பாட்டில் நம்முடைய முற்பிதாக்களுக்கு தேவன் வாக்கருளினார் என்றால், அதை நிறைவேற்றி முடித்தார் என்பதை பழைய ஏற்பாட்டின் சாட்சியாயிருக்கிறது. கர்த்தர் இஸ்ரவேல் குடும்பத்தாருக்குச் சொல்லியிருந்த நல்வார்த்தைகளிலெல்லாம் ஒரு வார்த்தையும் தவறிப்போகவில்லை (யோசு. 21:45; எண். 26:65) )

கர்த்தர் தம்முடைய வார்த்தைகளில் ஒன்றையாவது தவறி விழ விடவில்லை. பேதுருவை தேவன் நீ மறுதலிப்பாய் என்று சொன்னார். மறுதலித்தார்; ஆனாலும் அவரை நிலைநாட்டினார் (லூக். 22: 32,33). மனுஷருடைய வழிகளின் வழிநடத்துதலில் கர்த்தருடைய பாரமரிப்பை பார்க்கிறோம். நாம் ஒரு காரியத்தை நிறைவேற்றி முடிக்க கர்த்தருடைய ஆசீர்வாதம் வேண்டும் ஆலோசிக்க, திட்டமிட நாம் செய்யலாம்; ஆனால் நிறைவேற்றுவது கர்த்தரால் மட்டுமே முடியும். ."அவனுடைய நடைகளை உறுதிப்படுத்துகிறவரோ கர்த்தர் (நீதி 16: 9; 19:20; 29:24). மனிதன் தன்னுடைய வழிகளை நடத்தி வெற்றியடைய முடியாது. தேவனே, அவனை நடத்தி ஆசீர்வதிக்கமுடியும். இவைகளில் தேவன் தம்முடைய ஆளுகையை காண்பிக்கிறார்

<u>தேவன் மனிதனுடைய சூழ்நிலையை நியமிக்கிறதில் கவனமாயிருக்கிறார்:</u>

('கிழக்கிலும் மேற்கிலும் வனாந்தர திசையிலுமிருந்து ஜெயம் வராது' (சங் 75:6). ஜெயம் வடக்கிலிருந்து வரும் தேவ சந்நிதானத்திலிருந்து வரும். என் காலங்கள் உமது கரத்திலிருக்கிறது (சங் 31:15). மனிதன் ஒவ்வொருவருடைய காலங்களையும் தேவன் தம் கரத்தில் மறைத்து வைத்திருக்கிறார். தேவையானபோது அதை பரிசுத்தவான்களுக்கு வெளிப்படுத்துவார். அநேக பரிசுத்தவான்கள் தங்களுடைய மரண வேளைக்கு முன்பாக தங்களுடைய மரண வேளையை அறிந்து ஒழுங்கு படுத்த வேண்டிய காரியங்களை முன்கூட்டியே ஒழுங்குபடுத்தி, சரி செய்துவிட்டு, ஆசீர்வதித்துவிட்டு பரலோகத்திற்குச் சென்றுள்ளனர். மனிதனுடைய காலங்களையும், சூழ்நிலைகளையும் நியமிக்கிறதில் தேவன் தம்முடைய ஆளுகையை காண்பிக்கிறார். உலகத்தில் தற்செயல் என்று ஒன்றும் கிடையாது, எல்லாமே தேவ செயல் தான்.)

<u>மனிதனுடைய ஜீவிய நாட்களை நியமித்து மனிதனை நடத்துவதில் தேவன் கவனமாயிருக்கிறார்:</u>

("நான் ஒருக்காலும் அசைக்கப்படுவதில்லையென்று, என் வாழ்விலே சொன்னேன்" (சங். 30:6). மனுஷ ஜாதியான சகல ஜனங்களையும் அவர் ஒரே இரத்தத்தினாலே தோன்றப்பண்ணி, பூமியின் மீதெங்கும் குடியிருக்கச்செய்து, முன் தீர்மானிக்கப்பட்ட காலங்களையும் அவர்கள் குடியிருப்பின் எல்லைகளையும் குறித்திருக்கிறார் (அப். 17:26). இந்த உலகத்தில் துன்மார்க்கர் அவர்கள் நினைப்பதெல்லாம் நடக்கும், தாங்கள் எல்லாம் சாதித்துவிடலாம் என்று எண்ணுகிறார்கள். ஆனால், துன்மார்க்கருடைய ஆலோசனையை அவமாக்குவதில் தேவன் தம்முடைய ஆளுகையை செலுத்துகிறார் "தொடருவேன், பிடிப்

பேன், கொள்ளையாடிப் பங்கிடுவேன், என் ஆசை அவர்களிடத்தில் திருப்தியாகும், என் பட்டயத்தை உருவுவேன், என் கை அவர்களைச் சங்கரிக்கும் என்று பகைஞன் சொன்னான் உம்முடைய காற்றை வீசப்பண்ணினீர், கடல் அவர்களை மூடிக்கொண்டது; திரளான தண்ணீர்களில் ஈயம் போல அமிழ்ந்து போனார்கள் (யாத். 15: 9,10,11). )

(கர்த்தர் அப்சலோமின்மேல் பொல்லாப்பை வாப்பண்ணும் பொருட்டு, அகித்தோப்பேலின் நல்ல ஆலோசனையை அபத்தமாக்குகிறதற்குக் கர்த்தர் கட்டளையிட்டார் (IIசாமு. 17: 14,15). ஜாதிகள் கொந்தளித்து ஜனங்கள் விருதாக்காரியத்தைச் சிந்திப்பானேன்? கர்த்தருக்கு விரோதமாகவும், அவர் அபிஷேகம் பண்ணினவருக்கு விரோதமாகவும், பூமியின் ராஜாக்கள் எழும்பி நின்று, அதிகாரிகள் ஏகமாய் ஆலோசனை பண்ணி (சங்2:1-5); நீங்கள் எனக்குத் தீமைசெய்ய நினைத்தீர்கள்; தேவனோ, இப்பொழுது நடந்துவருகிறபடியே, வெகு ஜனங்களை உயிரோடே காக்கும்படிக்கு, அதை நன்மையாக முடியப்பண்ணினார் (ஆதி. 50: 20) கர்த்தர் நல்லவர், அவர் கிருபை என்றுமுள்ளது தனி மனிதனோ, கூட்டமோ, ராஜ்யமோ தேவனுடைய மனிதர்களுக்கு விரோதமாக எழும்பலாம், திட்டமிடலாம் ஆனால் அவர்கள் நினைக்கிற பிரகாரம் எதுவும் நடக்காது கர்த்தருடைய ஆலோசனை எதுவோ அதுவே நடைபெறும் கர்த்தரின் சித்தமில்லாமல் தலையிலுள்ள ஒரு முடி கூட உதிர்ந்து போவதில்லை என்று தேவ ஜனமாகிய நாம் திட்டமாக உணர்ந்து கொள்ள வேண்டும். கர்த்தருடைய பராமரிப்பு, கர்த்தருடைய ஆளுகை, கர்த்தருடைய பாதுகாப்பு. சகல சிருஷ்டிகளையும் போஷித்து காப்பாற்றுகிறவர் விசேஷித்தவர்களாகிய நம்மை, தம்முடைய பரிசுத்தவான்களை போஷித்து காப்பாற்றுவது அதிக நிச்சயமல்லவா. நம்முடைய தேவனைக் குறித்து வேதாகமத்தில் வாசிக்கும்போது மிகுந்த நம்பிக்கை, மிகுந்த மகிழ்ச்சி, திடசித்தமும் உண்டாகிறது. )

(நடக்கிறதெல்லாம் நன்மைக் காக அல்ல. ஆனால் எது நடந்தாலும் அதை நமக்கு நன்மையாக மாற்ற அவர் வல்லவராயிருக்கிறார் "சகலமும் நன்மைக்கு ஏதுவாக நடக்கிறதென்று அறிந்திருக்கிறோம்" (ரோம. 8:28). ஒரு சந்தோஷமான காரியம் நமக்கு ஆசீர்வாதத்தை கொண்டு வருவதைக் காட்டிலும், ஒரு துன்பம், துக்கம், வீழ்ச்சிமூலம் நாம் அநேக காரியங்களை கற்றுக்கொண்டு, இறைவனிடம் கிட்டிச் சேர்ந்து அதிகமான ஆசீர்வாதம் பெறுகிறோம் எந்தவிதமான துன்பமான காரியமும் நாம் இறைவனிடம் கடந்து செல்ல காரணமாக காணப்படுகிறது. ஆனால், அநேகர் சோதனை வேளையில் முறுமுறுத்து சோர்வடைந்து அதில் வீழ்ந்து போகிறார்கள். அப்போஸ்தலனாகிய பவுல் சொல்கிறார் எனக்குச் சம்பவித்தவைகள் சுவிசேஷம் பிரபலமாகும்படிக்கு ஏதுவாயிற்றென்று நீங்கள் அறிய மனதாயிருக்கிறேன் (பிலி 1:12) சில பரிசுத்தவான்கள் சகித்த பாடுகளினால் அநேகர் இரட்சிக்கப்பட ஏதுவாக இருந்தது. உலக சிருஷ்டிகள் மேல்

தேவனுடைய கருணை இவ்வளவு அதிகம் இருக்கும்போது நம்மேல் தேவனுடைய கிருபை எவ்வளவு அதிகம் இருக்கிறது என்பதை நாம் உணர்ந்து கொள்ளலாம்

இயற்கை தன்மைகளை காப்பாற்றுவதில், நடத்துவதில் தேவனுடைய ஆளுகை (தேவனுடைய காம்):

"அவர் அவைகளுக்குக் கட்டளை யிடுகிற யாவையும், அவைகள் பூச்சக்காத்தில் நடப்பிக்கும்படி, அவர் அவைகளைத் தம்முடைய ஞான ஆலோசனைகளின் படியே சுற்றித் திரியப்பண்ணுகிறார், ஒன்றில் தண்டனையாகவும், ஒன்றில் தம்முடைய பூமிக்கு உபயோகமாகவும், ஒன்றில் கிருபையாகவும், அவைகளை வாப்பண்ணுகிறார்"(யோபு37: 11,12; 26:10)

சகல சிருஷ்டிப்பும் அவருடைய ஆளுகையில் இருக்கிறது. கர்த்தர் கடலிலே கொந்தளிப்பை வரப்பண்ணினார்; யோனாவை தூக்கி கடலிலே போட்டதும் அந்த கொந்தளிப்பு அமர்ந்தது. கர்த்தர் மீனுக்கு கட்டளை யிட்டார், அது யோனாவை விழுங்கி வைத்தது. கடிக்கவில்லை, கொல்லவில்லை; மீண்டும் மீனுக்கு கட்டளை யிட்டார் கரையிலே மூன்றாவது நாளில் கக்கும்படி; யோனாவை தேவன் எங்கு ஊழியம் செய்யச் சொன்னாரோ அங்கே மீன் யோனாவை கக்கிப் போட்டது. தேவன் தம்முடைய சர்வ வல்லமையால் சர்வத்தையும் தடுத்து ஆட்கொள்கிறார் "அவைகள் திரும்பவும் வந்து பூமியை மூடிக்கொள்ளாதபடி கடவாதிருக்கும் எல்லையை அவைகளுக்கு ஏற்படுத்தினீர்" (சங். 104: 5-9).

சகல சம்பவங்களையும் தேவன் நிர்வாகிக்கிறார்: (யோசு. 7 : 14)

"இப்போதும் நீங்கள் ஒரு புது வண்டில் செய்து, நுகம்பூட்டாதிருக்கிற இரண்டு கறவைப்பசுக்களைப் பிடித்து, அவைகளை வண்டியிலே கட்டி, அவைகளின் கன்றுக் குட்டிகளை அவைகளுக்குப் பின்னாகப் போக விடாமல், வீட்டிலே கொண்டுவந்து விட்டு" (1 சாமு. 6 : 7). கன்றுக்குட்டி வீட்டி லிருக்கும்போது கன்றை விட்டு விட்டு அது போகாது திரும்பதான் செய்யும். ஆனால், இந்த ஆக்கினை கர்த்தரால் வந்ததா? என்று அறியும்படி செய்தார்கள். அது அப்படியே ஆயிற்று சாமுவேல் மூலமாக சில அடையாளங்கள் சொல்லப்பட்டது; அப்படியே சவுலுக்கு நேரிட்டது (1சாமு. 10 : 9).

இறைவன் சொன்னதை நிறைவேற்றுகிறவர். வேதத்திலுள்ள எந்த தீர்க்கதரிசனமும் நிறைவேறாமல் ஒழிவதில்லை அது நிறைவேறியே தீரும் கர்த்தர் ராஜரீகம் பண்ணுகிறார். சகலமும் அவருடைய கட்டுப்பாட்டுக்குள் இருக்கிறது. நாம் பயப்படக்கூடாது அப்படி நாம் பயந்தால் அவிசுவாசிகளாக இருக்கிறோம் கர்த்தர் அறிவிக்கிறது நிறைவேறும் (ஏசா 44 : 7) கர்த்தர் தமது சித்தமான பிரகாரம் சகல சிருஷ்டிகளையும் நடத்துகிறார் (ஏசா. 50: 2) அற்பக்காரியங்களிலேயும் தேவன் கட்டளையிடுகிறதில் கவனமாயிருக்கிறார் (மத். 10: 28,29 ; லூக். 21 :18)

கர்த்தரின் பராமரிப்பும் ஆளுகையும்:-

தேவன் சகலத்தையும் ஆளுகிறார் நாம் ஒருபோதும் கவலைப்படக் கூடாது தேவன் அற்பசந்துக்களை போஷிக்கிற விதம் அதிசயமாக இருக்கிறது. நாம் கர்த்தரின் பராமரிப்பை நம்ப வேண்டும்

(சங். 16: 8) 'அங்கேயும் உமது கை என்னை நடத்தும், உமது வலதுகரம் என்னைப் பிடிக்கும்' (சங். 139:10). இருண்ட நாட்களாயிருந்தாலும், நாம் எல்லோராலும் கைவிடப்பட்டாலும் நாம் நம்பிக்கையோடு இருந்து தேவனை துதித்துக் கொண்டு இருக்க வேண்டும். 'தேவன் நமக்கு கரம் கொடுப்பார். தாவீது தன் தேவனாகிய கர்த்தருக்குள்ளே தன்னை திடப்படுத்திக் கொண்டான்' (1சாமு. 30: 6).

தேவ சித்தமில்லாமல் எதுவும் நடக்காது. நாம் சந்தோஷமாயிருப்பதை சாத்தான் விரும்பமாட்டான். சீஷர்களை தேவன் அதிசயமாக வழிநடத்தி பாதுகாத்து போஷித்தார் (லூக். 22 : 35). நமக்கு ஒரு சோதனை வரப்போவதாக தேவன் தரிசனம் கொடுத்தால் நாம் அதற்காக ஜெபித்து அதை மேற்கொள்ள வேண்டும். சாத்தான் இப்படி செய்யப் போகிறான் என்று தேவன் நமக்கு காட்டியுள்ளார். ஆனால் அந்தகாரியம் அப்படியே நடக்கும், நடக்கவேண்டும் என்று அர்த்தமல்ல. அந்த காரியத்தை நிகழவிடாமல் நாம் ஜெபத்தால் தடுக்க வேண்டும் என்பதற்காக தேவன் முன் கூட்டியே நமக்கு காட்டுகிறார். எந்த சூழ்நிலையிலும் நாம் அமைதியாக இருக்கவேண்டும். நம்முடைய பிதா ராஜரீகம் பண்ணுகிறார். அவருடைய சித்தமில்லாமல் ஒன்றும் நடக்காது. எந்த சூழ்நிலையிலும் நாம் கர்த்தரை விசுவாசிக்க வேண்டும். அவர் சகலத்தையும் ஆளுகிறார் எந்த சமயத்திலும், எந்த காரியத்தை யும் தடுக்க அவர் வல்லவர். அவர் சிருஷ்டிகர் மாத்திரமல்ல, இரட்சகரும், போஷிக்கிறவருமாய் இருக்கிறார்.

பரிசுத்தவான்களின் சுகத்தை விரும்புகிறார், ஆபத்து, நெருக்கடி உண்டாகும் போது தேவ வசனத்தை கொண்டு முறியடிக்க வேண்டும். நாம் நம்புகிற தேவனுடைய வார்த்தைகளை வாயைத் திறந்து சொல்ல வேண்டும். அப்போது பெரிய வெற்றி உண்டாகும். வாயினால் அறிக்கை பண்ண வேண்டும். விசுவாசத்தினால் நெருக்கடி நேரங்களில் தக்க ஏற்புள்ள வசனங்களைக் கையாட வேண்டும். இது "வெற்றிக்குரிய ஆயுதமாகும்". கர்த்தருடைய நாமத்தினாலே வருகிறேன் என்று தாவீது கோலியாத்தை தேவனுடைய வார்த்தையினால் முதலாவது தாக்கி முறியடித்தார். அவருடைய வார்த்தையை உபயோகிக்கும் போது கடவுளும் சேர்ந்து அதில் இடை படுகிறார். நாம் ஜெபத்தினால் சூழ்நிலைகளை கட்டுப்படுத்தலாம். தேவன் நமக்கு அதிகாரம் கொடுத்துள்ளார், உரிமை கொடுத்துள்ளார். நானும் என் பிள்ளைகளும் சேர்ந்து என்று சொல்லியுள்ளார். "மேலும், நீங்கள் விசுவாசமுள்ளவர்களாய் ஜெபத்திலே எவைகளைக் கேட்பீர்களோ அவைகளையெல்லாம் பெறுவீர்கள் என்றார்" (மத். 21 : 22). ஜெபத்திலே கேட்கிறதை தேவன் செய்கிறார்.

## பரிசுத்த விவாகம்

| மணமகன் | மணமகள் | இடம் | நாள் |
|---|---|---|---|
| Bro.Y.ரசல் ராஜ் | Sis.S.பிரேமா | வள்ளியூர் | 15-6-2000 |
| Bro.M.தேவதாசன் | Sis.R.ஜெயாராணி | துரைசாமிபுரம் | 22-6-2000 |

# வேதபாடம்

(1சாமு. 27:1 முதல் - 30:31 முடிய)

## தாவீது அரசனின் இருண்ட நாட்கள்:-

பலவித உபத்திரவங்களினால் நெருக்கப்பட்டவராய் தாவீது பெலிஸ்தரின் தேசத்திற்கு ஓடிப்போனார். ஜெபத்தைக் குறித்தாவது கடவுளுடைய நடத்துதலைக் குறித்தாவது தேவனைத் தேடுவதைக் குறித்து இந்நாட்களில் தாவீதினுடைய ஜீவியத்திலே நாம் யாதொரு குறிப்பையும் பார்க்கிறதில்லை. விசுவாசமில்லாமல் தாவீது நான் ஏதாகிலும் ஓர் நாளில் சவுலின் கையினால் மடிந்துபோவது நிச்சயமென்று கூறி தன் இஷ்டமாக காரியங்களை ஒழுங்கு செய்ததாக பார்க்கிறோம். பெலிஸ்தரின் தேசத்திலே போய் ஆகீஸ் அரசரின் தயவை தந்திரமாக பெற்றுக்கொண்டதாகத் தெரிகிறது. அது மாத்திரமல்ல ஆகீசை ஏமாற்றினதாகவும் பார்க்கிறோம். பெலிஸ்தரின் தேசங்களிலே வெவ்வேறு பாகங்களிலே கொள்ளையடித்து இரத்தம் சிந்தி திரும்பவந்து ஆகீசினிடத்திலே யூதாவின் வெவ்வேறு பாகங்களிலே போய் கொள்ளையடித்தேன் என்று சொன்னதாக தெரிகிறது. அக்காலத்திலிருந்து நாடோடி தலைவர்களான எந்த தலைவனும் செய்கிற பிரகாரமாகவே தாவீதும் செய்தார். பெலிஸ்தர் சவுலோடு யுத்தம் செய்யப் புறப்பட்ட வேளையிலே தாவீது ஒரு இடுக்கமான நிலையிலே அகப்பட்டார்.

தன் சுய ஜனத்திற்கு விரோதமாய் போராடவேண்டும் அல்லது தன்னை மோசக்காரனென்று பெலிஸ்தர் வெளியாக்க வேண்டும். இந்த சிக்கலிலிருந்து தேவாதீனமாக தாவீது தப்புவிக்கப்படுகிறார். பெலிஸ்தரின் அதிபதிகள் தாவீதின் மீது சந்தேகப்பட்டு தாவீதை திரும்பிப் போகும்படியாக சொல்லுகிறார்கள். அப்படியே அவர்கள் திரும்பி சிக்லாக் வந்த போது அமலேக்கியர்(சவுல் நிர்மூலமாக்கியிருக்க வேண்டியவர்கள்) வந்து சிக்லாக்கையும், தாவீதுடைய மனைவி பிள்ளைகளையும், இன்னும் அவருடைய உடன் ஆட்கள் மனைவி பிள்ளைகள் இவைகள் எல்லாவற்றையும் சொத்துக்களையும் சிறைபிடித்துக்கொண்டு போய்விட்டார்கள். சகலத்தையும் இழந்துவிட்ட ஒரு நிலையாய் தோன்றுகிறது. தாவீதோடு இருந்த உதவியாட்கள் இப்படி ஒரு இக்கட்டான நிலை ஏற்பட்டபடியினால்; தாவீது மீது குற்றம் சாட்டி தாவீதை கல்லெறிய யோசனை பண்ணினார்கள். இந்த நெருக்கடியான வேளையிலே தாவீது தேவனிடத்தில் ஓடினதாகப் பார்க்கிறோம். திரும்பவும் கடவுளுடைய முகத்தை தாவீது தேடினார். அபியத்தார் மூலமாக தேவசித்தம் இன்னதென்பதை அறிந்து கொள்ளப் பிரயாசப்பட்டார். இதன் மூலமாக பாவமன்னிப்பைப் பற்றி உறுதிப்படுத்தி கொண்டு தீவிரமாய் நடபடிகளில் ஈடுபட்டார் என்று தெரிகிறது. இவர் ஒரு தலைவன் ஆனபடியினால் தன்னுடைய நெருக்கடியான நேரத்திலும் தன் தேவனாகிய கர்த்தருக்குள் தாவீது தன்னை திடப்படுத்திக்கொண்டார் என்று 30 அதிகாரம் 6ம் வசனத்தில் வாசிக்கிறோம். தன்னுடைய ஆட்களை யுத்தத்திற்காக ஆயத்தப்படுத்தி எதிரிகளைப்

பின்பற்றி தொடர்ந்து போய் அவர்களை முறியடித்தார். சத்துருக்கள் தோல்வியுற்று ஓடிப்போனார்கள். சிறைப்பிடிக்கப்பட்டவர்களையும் அவர்களுடைய உடமைகளையும் ஒரு சிறு பொருளும் பாக்கியில்லாமல் தாவீது திருப்பிக்கொண்டார் அது மாத்திரமல்ல ஏராளமான கொள்ளையையும் பெற்றுக்கொண்டதாகப் பார்க்கிறோம். இனி தாவீதின் தலைமையைப் பற்றிய கேள்விக்கு இடமில்லாமல் போயிற்று கஷ்டத்துக்குள்ளாக இருந்த நண்பர்களுக்கும் ஆங்காங்கு தயாளமாக நன்கொடைகளை ஈவுகளைக் கொடுத்ததால் அவருடைய காரியம் மேலும் ஸ்திரப்பட்டது. அது முதல் தாவீது பெலத்தின் மேல் பெலனடையத் தொடங்கினார். தேவனிடம் திரும்பினது அவருக்கு தேவ ஆசீர்வாதத்தையும், தேவனுடைய அங்கீகாரத்தையும் அளித்தது.

மனிதன் தேவனைத் தேடாமலிருக்கிற நாட்கள் மட்டும் தேவனுடைய சித்தத்தை அறியவோ; தேவன் அவர்களோடு இடைபடவோ, தேவ சித்தம் செய்யவோ முடியாது அதினால் பல குழப்பங்களும் நெருக்கடிகளும் ஏற்படும். தேவனுடைய மனிதர்கள் தேவனைத் தேடின போதெல்லாம். தேவன் அவர்களுக்கு வழிகாட்டினார் தேடாதவர்களுக்கு தேவசத்தம் இல்லாமலிருந்தது. இது நமக்கு எச்சரிப்புத்தான் எல்லாக் காரியங்களுக்கும் தேவனுடைய சித்தத்தை நாம் நாடுவோமாக. தாவீதினால் ஆதரிக்கப்பட்ட அவரோடிருந்த போர்வீரர்கள் அறுநூறு பேர்களும் நெருக்கடி நிலையிலே தாவீதின் மேல் குற்றம் சாட்டி கல்லெறிய வேண்டும் என்று எண்ணினது மகா துரோகமான செயலாகும் ஆனாலும் தாவீது அதையெல்லாம் பொறுத்துக்கொண்டார் தேவ தயவினால் எல்லாவற்றையும் தாவீது திரும்பப் பெற்றுக் கொண்டார். அப்படியே நம்முடைய கர்த்தாகிய இயேசுகிறிஸ்துவாகிய நல்ல தாவீது அவருடையவைகள் எல்லாவற்றையும் மீட்டுக்கொள்வார் அதற்கு அவர் வல்லவராக இருக்கிறார். 28-ம் அதிகாரம் நமக்கு நல்லதொரு பாடத்தை காண்பிக்கிறது. தேவ சித்தத்தை தேடுகிறவர்கள் தேவனுக்குப் பிரியமானவர்களாக இருக்க வேண்டும். தவறு செய்தாலும் உடனே தேவனண்டை திரும்பவேண்டும். வேற்று தெய்வங்களையோ, குறிசொல்லுதலையோ, மந்திரவாதியையோ, ஜோசியக்காரர்களையோ தேடக்கூடாது அது அவர்களுக்கு தகாதமுடிவு ஏற்பட வழிதிறக்கும்

சவுலின் சஞ்சலமான முடிவு 31 ம் அதி 1 - 13 :-

மனந்திரும்புதல் இல்லை

சவுல் தேவனால் கைவிடப்பட்டவனாயிருந்தான் மனந்திரும்பாதபடிக்கு அந்தகாரத்தின் மூலம் வெளிச்சத்தை நாடினான் அப்படிக்கொத்தயாதொரு ஆள் வருவதை எதிர்பாராதபடியினால் குறிசொல்லும் ஸ்திரீயானவள் சாமுவேலைக் கண்டு நடுக்கமுற்றதாகத் தெரிகிறது அந்த ஸ்திரீக்கு மரித்தோரிலிருந்து யாதொரு பரிசுத்தவானை எழும்பயாதொரு வல்லமையும் கிடையாது. சவுலுக்கு வரும் நாசத்தைப் பற்றிய செய்தியை அவள் கேட்க தேவன் இதற்கு இடங்கொடுத்தார். மந்திரம், வசீகரம். குறி சொல்லுதல் முதலியவைகள் கிறிஸ்தவர்களுக்கு முற்றிலும் தகாதவைகள் ஆனால்

இந்நாட்களிலே பேர்கிறிஸ்தவர்கள் அநேகர் இதிலே சிக்கியிருக்கிறார்கள். அந்த சபையின் தலைவர்கள் இவைகளைக் குறித்து எச்சரிக்கிறதில்லை. வேதம் இவ்விதமான காரியங்களைக் குறித்து எச்சரிப்புக்கொடுக்கிறது (லேவி. 19: 26,31; உபா. 18: 9-14; 11இரா 23: 24 ; ஏசா 8: 19; 1கொரி. 10 :21). ஆகாகைக் கொல்லாமல் சவுலின் கலக சுபாவம் மிஞ்சிப்போனதால் கர்த்தர் சவுலை முற்றிலுமாய் புறக்கணித்தார் என அறிவிக்கப்பட்டது (1சாமு. 15:22,23ச 1நாளா. 10: 13,14). தன் பிடிவாதத்திற்காக அவன் மெய்மனஸ்தாபப்படவேயில்லை. மற்றபடி அவன் இரக்கம் பெற்றிருப்பான் முடிவான ஆக்கினையை எதிர்நோக்குகையிலும் அவன் மனந்திரும்பி தேவனுடைய கருணையைப் பற்றிக்கொள்ளவில்லை. தேவனிடம் மன்றாடியிருந்தால் ஒரு கால் அவன் அக்கினியில் அகப்பட்டு தப்பின கொள்ளியைப்போல இரட்சிக்கப்பட்டிருப்பான். பாவம் வஞ்சனையுள்ளது அது ஒருவனுடைய இருதயத்தைக் கடினப்படுத்துவதால் அவன் மனந்திரும்புதலை விரும்பாமற்போகிறான். எந்தநிலையிலும் மனஸ்தாபப்பட்டு தேவனைத் தேடினால் தேவன் மன்னிக்க கருணை பொருந்தியவராய் இருக்கிறார்.

சத்துருக்களால் நெருக்கப்பட்டும் சிம்சோனைக் கொடுமையாக நடத்தினதுபோல் தனக்கும் நேரிடுமென்று பயந்து (நியா 16:21,25) வெட்டுண்டு கிடந்த தன் ஜனத்தார் மத்தியில் இறுதிபாகத்தில் தன் உயிரை மாய்த்துக்கொண்டதாகப் பார்க்கிறோம். அந்தோ! சவுலின் பரிதாபமான முடிவு. கடவுளுக்கு கீழ்ப்படியாமையும் தாவீதுக்கு கொடுத்த வாக்கை மீண்டும் மீண்டும் மீறி ஆசாரியர்களைக் கொலைசெய்து முடிவில் பொல்லாத ஆவிகளிடம் ஒத்தாசை தேடி இவனுக்கு வந்த நியாயமான முடிவைப் பாருங்கள். கர்த்தருடைய ஆவி இறங்கினதினால் புதிய மனிதனானவனும் சத்துருக்களை முறியடித்து இஸ்ரவேலரை விடுவித்தவனும் தமது ஜனத்தை வழிநடத்தும்படியாய் தேவனால் அபிஷேகம் செய்யப்பட்டவனுமாகிய இவனுக்கு வந்த முடிவு என்ன பரிதாபமானது. நிற்கிறதாக எண்ணுகிறவன் விழாதபடி ஜாக்கிறதையாய் இருக்கக்கடவன் 1கொ 10:12 எவ்வளவுதான் வரம்பெற்றிருந்தாலும் வெகு நம்பிக்கையூட்டுவதாயிருந்தும் ஒரு மனிதனுடைய வாழ்க்கையில் பிடிவாத சிந்தையானது அவனை நிர்மூலமாக்கிவிட முடியும்.

சவுலின் கீழ்ப்படியாமையின் முதல்படியானது அவ்வளவு முக்கியம் வாய்ந்ததாகத் தோன்றாவிடினும் அவன் சாமுவேலின் எச்சரிப்பை ஏற்றுக்கொள்ளவில்லை (1சாமு 13: 8,14) மேலும் மேலும் கீழ்ப்படியாமையைக் காட்டினான். ஒருவன் தேவனை விட்டு விலக ஆரம்பித்தால் அவன் எவ்வளவு தூரம் அலைந்து திரிவானென்று ஒருவனும் சொல்லமுடியாது. ஆகவே எக்காலத்திலும் கடவுளின் சித்தத்தை சிரமேற்கொண்டு நடக்க சவுலின் மூலம் கற்றுக்கொள்வோமாக.

கீழ்ப்படியாத இஸ்ரவேலர் ஆசனின் மரணத்தோடும் சத்துருக்களின் ஆதிக்கத்துக்கும் திரும்பவும் ஜனங்கள் உட்பட்டவர்களாயும் சாமுவேலின் முதலாம் ஆகமம் முற்றுப் பெறுகிறது. அவர்கள் விரும்பிக் கேட்ட இராஜனால் அவர்கள் விடுவிக்கப்பட முடியவில்லை ஆனால் தேவன் அவர்களுக்காக கிரியை நடப்பித்தார் பரிசோதிக்கப்பட்டும் பக்குவப்பட்டும் திரும்பவும் கடவுளுடைய ஐக்கியத்திற்குட்பட்டு

மிகுந்த தேவனால் அபிஷேகம்பண்ணப்பட்ட தாவீது தேவமக்களுக்காக அவருடைய சித்தத்தை நிறைவேற்ற ஆயத்தமாக இருந்தார். தங்கள் சொந்த வாழ்க்கையைப் பற்றி தேவன் கொண்டிருக்கும் மேலான நோக்கத்தை மனிதர் கெடுத்துவிடக்கூடும்; ஆனால் சிருஷ்டிப்பைக்குறித்து அவருடைய முடிவான ஆலோசனையை அவர்கள் நாசமாக்க முடியாது. இறுதியில் அவரே வெற்றி சிறப்பார். அவரோடு ஒத்துழைப்பவர்களுக்கு மகிமையும் கனமும் சமாதானமும், நித்திய ஜீவனும் உண்டு. அவருக்கு எதிர்த்து நிற்பவர்களுக்கோ உக்கிரகோபாக்கினையும் உபத்திரவமும் வியாகுலமும் வரும் (ரோ. 2: 6-11).

I சாமுவேலின் புஸ்தகம் முடிந்தது.
கடவுள் உங்களை ஆசீர்வதிப்பாராக!

**"அப்படியே சவுல் கர்த்தருடைய வார்த்தையைக் கைக்கொள்ளாமல், கர்த்தருக்குச் செய்த தன் துரோகத்தினிமித்தமும், அவன் கர்த்தரைத் தேடாமல் அஞ்சனம் பார்க்கிறவர்களைக் கேட்கும்படிக்குத் தேடினதினிமித்தமும் செத்துப்போனான். அதற்காக அவர் அவனைக் கொன்று, ராஜ்யபாரத்தை ஈசாயின் குமாரனாகிய தாவீது வசமாகத் திருப்பினார்" (1நாளா.10:13,14).**

(தொடரும்)

# திரித்துவம் திரியேகத்துவம்

கடவுள் இயேசுகிறிஸ்து சேனாதிபதியாய் நமக்கு முன் நிற்கிறார் ஆமென்!!

எழுந்து நிற்கவும் திரித்துவம் திரியேகத்துவம் கிறிஸ்தவ வணக்கம் ஒருவரில் தன் அறையிலோ, ஆலயத்திலோ நிறைவேற்றப்படுவதில் நின்றுவிடாமல் இருதயத்தில் விசுவாசிப்பதை வாயினால் அறிக்கை செய்வதும், வாயினால் அறிக்கை செய்வதை வாழ்க்கையிலே அனுபவிப்பதும், வாழ்க்கையிலே அனுபவிப்பதை வெளியுலகில் மற்றவரோடு அப்பியாசிக்க வேண்டும் என்ற குறிப்பிற்கு இணங்க வான் அலை போல் விரிந்து கொண்டே போக வேண்டும் வணக்கத்திற்கும் உள் வாழ்க்கைக்கும் புறநடை வாழ்க்கைக்கும் சம்பந்தம் உண்டு. முந்திய அத்தியாயத்தில் திரித்துவ அனுபவத்தையுடைய ஒரு மனுஷன் கூட்டு சமுதாயம் ஒரு சபை எவ்வளவில் தன்னை அடக்கிக் கொள்ளக்கூடாதவாறு இசையிலும் இறைவணக்கத்திலும் தோகை விரித்து பறப்பதுபோல் அல்லது பூவிரித்து நறுமலர் ஆனதை படித்துள்ளோம்.

இப்பகுதியில் அத்தகைய பூந்தோட்டத்தில் ஒருவன் லயித்து அல்லது மயங்கி நின்றுவிடாமல் அல்லது இங்கே இருக்கிறது நல்லது எனக் கூடாரம் போடாமல் எழும்பிப் பிரகாசித்து காலூன்றி நிற்கவே

அழைக்கப்படுகிறான். திரித்துவத்தை ஆராய ஒருவன் கண்டுகொள்வது திரித்துவம் அவனின் முழு ஆள்தத்து வத்தை குறிப்பாய் சொல்ல வேண்டுமா யின் அவன் முழுத்தன்மையும் பாதித்துள் ளது என்ற உண்மையே.

திரித்துவம் ஒரு மனிதனின் லட்சியக் கொள்கையாய் மாத்திரம் இருந்து விடாமல் அவனின் வாழ்க்கைக்குரியதாய் அவனை மின் இயக்கத்தைப்போல் இயக்குகின்றது. அவனின் அறிவின்மை அசதி, அலட்சியம், நிர்விசாரம் ஒருக்கால் மார்க்க அனுபவ மயக்கம் இவற்றினின்று அவனை துடிதுடிக்கத் தட்டி எழுப்புகிறது. திரித்துவ அனுபவத்தை உடையவன் செய்ய வேண்டிய முதற்பணி மக்களுக்கு திரித்துவ சித்தாந்தத்தை அந்நபரின் வாழ்க்கையோடு சம்மந்தப்படுத்தி பகுத்தறிவு ஊட்ட வேண்டும். கிறிஸ்துவின் புத்திர சுவிகாரத்தின் மூலம் கிறிஸ்தவ வாழ்க்கையில் திரியேகக் கடவுள் சம்மந்தப்பட்டுள்ளார் என்ற உண்மையை எடுத்துக் காட்ட வேண்டும். நாம் புத்திரராய் இருக்கிறபடியினால் அப்பா பிதாவே என்று கூப்பிடத்தக்கதாக நம்முடைய குமாரனுடைய ஆவியை நம்மில் அனுப்பிக்கொடுத்த பிதாவை ஸ்தோத்தரிக்க வேண்டும் (கலா 4:6) திரித்துவ சித்தாந்தத்தை போதிப்பவரும் போதிக்கப்படுகிறவரும் தம் வாழ்க்கை யோடு சம்பந்தப்படுத்தாமல் வாழ்க்கை யின் புறநடையாக மாத்திரம் அதைக் கொள்ளும்போது அது ஒருக்கால் அறிவுக்கெட்டாததாயும் வாழ்க்கைக்கு அவசியமற்றதாயும் புறக்கணிக்கப்படக் கூடும் மனிதன் கட்டி எழுப்பப்பட வேண்டும். அவன் தம்மிலுள்ள தெய்வீக தீப்பொறி கொளுந்து விட்டு எரிய அனல் மூட்டப்படவேண்டும். திரித்துவத்தின் உண்மையை அறிந்து தன்மையில் அதின் அடிப்படையின் வெளிப்பாட்டில் அதின் பெலத்தில் கிரியை ஆற்ற வேண்டும்.

திரித்துவ அனுபவம் திரித்துவ அனுபவமுடையவனை செயலாற்றத் தூண்டுகிறது. கடவுள் அன்பு எனக் கூறும் போது அன்பு என்ற அத்தெய்வீகப் பதத்திலேயே திரித்துவத்தின் செயல் அடங்கியுள்ளது அன்பின் (Agape) அடிப்படையில் அன்பின் பூரணமும் திரியேகத்தின் ஆள் என்ற பதத்தின் மூலம் வெளிப்பாடாயிற்று. தேவன் அன்பாகவே இருக்கிறார் என்பது அவருடைய தன்மையாக இருக்கிறது. தேவன் அன்பாகவே இருக்கிறார், இருந்தார், இருப்பார். தன்னில்தான் அன்பு கூறுவது தன்னயமாகும். தேவனில் குமாரன் இருக்கிறபடியினால், தேவன் குமாரனில் அன்பாயிருந்தார். குமாரன் பிதாவில் அன்பாயிருந்தார். குமாரனும் பிதாவில் அன்பாயிருந்தார். குமாரனும் பிதாவும் பரிசுத்தாவியில் அன்பாயிருந்தார்கள் பரிசுத்தாவியும் குமாரனிலும், பிதாவிலும் அன்பாயிருந்தார் என்றே பார்க்கிறோம். மற்றப்படி தேவன் அன்பாகவே இருக்கிறார் என்று சொல்வது எப்படி ஆனபடியினால் ஆதியிலே தேவனில் திரித்துவம் இருக்கிறது. திரித்துவத்தின் மூவரும் ஒருவரிலொருவர் அன்பு கூறுகிறவராயும் ஒருவர் செயலில் மூவர் செயலாற்றுபவராயும் நாம் விசுவாசிக் கிறோம், நாம் அறிகிறோம், நாம் அனுபவிக்கிறோம், நாம் அறிக்கையிடு

கிறோம்.

இச்செயலாற்றும் முறையில் மற்றொரு சிறப்புக் குறிப்பு இங்கே கவனிக்க வேண்டும். கடவுள் அன்பினிமித்தமாக அன்பை அனுபவிப்பதற்கு உலகத்தை சிருஷ்டித்தார் என்று சொற்கொள்ளாமல் உலக சிருஷ்டிப்பின் வாயிலாய் கடவுள் அன்பு என்ற உன்னதக் குறிப்பை உலகம் அறிந்து கொண்டதென கூறுவதே உண்மையான அனுபவமாகும் கடவுள் அன்பாய் இருக்கிறபடியினால் சிருஷ்டித்துக் கொண்டிருக்கிறார். கடவுள் அன்பு என்ற அடிப்படையில் அன்புச் செயல் திரித்துவத்தின் ஒரே தன்மையை பிதா, குமாரன், பரிசுத்தாவி என்ற மூவரின் உள்தன்மையிலேயே சிருஷ்டிப்பிற்கு முன்னும் சிருஷ்டிப்பிலும், சிருஷ்டிப்பிற்குப் பின்னும் இந்நிமிஷம் வரையிலும் அன்பு செயலாற்றப்பட்டது, ஆற்றப்படுகிறது, ஆற்றப்படும் என்றே நாம் கொள்ள வேண்டும். தூய பவுல் கிறிஸ்து இயேசுவுக்குள் சகலமும் கூட்டிச் சேர்க்கப்படும் என்ற கூற்றின் அனுபவமும் அதுவே. இவ்வனுபவத்தை தமக்கு தமஸ்குவின் காட்சிக்குப்பின் அனுப வாயிலாக பவுல் அறிந்து கொண்டார்.

கடவுள் அன்பின் வெளிப்பாட்டை சர்வ சிருஷ்டிப்பிலும் ஆண்டவாகிய இயேசு சுவாமியின் முழு வாழ்க்கையிலும், பரிசுத்தாவியின் கிரியையிலும் திரியேக அனுபவத்தை திருச்சபை கூடுதலிலும் அப்பம் புசிப்பதிலும் அந்நியோன் யத்திலும் அப்பா பிதாவே என்று கூப்பிடுகிற புத்திர சுவிகாரத்திலும் கிறிஸ்துவே என்ற அனுபவத்திலும் இனி நானல்ல என்ற அனுபவத்திலும் அறிந்த பின்னரே எழுந்து காலுன்றி நின்று அந்தப் பாம தரிசனத்திற்கு கீழ்ப்படிந்து செயலாற்ற துணிந்தார். இத்திரித்துவ அனுபவத்தின் பயனாலே கிறிஸ்துவின் அன்பை விட்டு நம்மை பிரிப்பவன் யார்? என முழங்கி கெர்ச்சிக்கிறார். திரித்துவ சித்தாந்தத்தை தியானிக்கிற எவரும்; திரித்துவத்தின் மாட்சிமையைக் கண்டு களிக்கவும் யாவரும் தூய பவுலைப் போல துணிந்து செயலாற்றி; அச்செயலில் திரித்துவ அனுபவத்தை புத்தறிவோடும், புத்துணர்வோடும், மறுமலர்ச்சியோடும் பெற்று செயலின் மத்தியில் கர்த்தாகிய இயேசுகிறிஸ்து வின் கிருபையையும் தேவனுடைய அன்பையும் பரிசுத்தாவியானவருடைய ஐக்கியத்தையும் கண்டு கொள்ளலாம்

திரித்துவ அனுபவத்தில் காலூன்றி நிற்கும் ஒருவன் ஒரு கடிகாரத்தின் இருசில் சுற்றும் சக்கரத்தைப் போல சக்காம் சுழன்றும் தன் இருசோடு ஒட்டப்பட்டிருப்பதைப் போல திரித்துவ அனுபவத்தில் செயலாற்றும் ஒருவன் செயலின் மூலமும் செயலாற்றுவதின் மூலமும் மறுமலர்ச்சியுடன் திரும்பவும் திரித்துவத்திற்கு நோாக இழுத்துக் கொள்ளப்படுகிறான்.

விவிலிய நூலை ஆராய்ந்து படிக்கும் திருச்சேவை ஆற்றிய தீர்க்கன், திருமக்கள் யாவரும் காட்சி பெற்றே செயலாற்றினர் என்பது விளங்கும் திரித்துவ சித்தாந்த ஆராய்ச்சிக்கு ஏற்றக் காட்சி மோசேயின் முட்செடி காட்சி முட்செடி எரிந்து பிரகாசித்தது எரிந்தும் வெந்து போகவில்லை திரித்துவத்தின் மாட்சிமைக்கும் மகிமைக்

கும் ஒரு ஒப்பனையாக இது இருக்கிறது அதீதமான கடவுள் தம்மை வெளியாக்கியதும் சிருஷ்டியான மனுஷன் உம் நாமம் என்ன என்று கேட்கிறான் இருக்கிறவ ராக இருக்கிறேன் என்ற திரியேக முழக்கத்தை கேட்கிறான்.

ஆம் திரித்துவ தரிசனத்தை அடைய ஒருவன் நிற்கும் பூமி பரிசுத்த பூமி அவனுடைய வாழ்க்கையின் பாதரட்சையைக் கழற்றிப் போட வேண்டும். வாழ்க்கையின் பாதரட்சையைக் கழற்றிய பின் கடவுளின் சேவைக்குரிய ஆணை யைப் பெறுகிறான் பார்வோனிடம் போக வேண்டும் என் ஜனங்களை என்னை ஆராதிக்க விடு என்று அறைகூவ வேண்டும் திரித்துவ அனுபவ காட்சி பெற்ற ஒவ்வொருவனும் மோசேயைப் போன்ற வனே உயரமும் உன்னதமான சிங்காசனத் தின் மேல் வீற்றிருக்கிறவரைக் கண்ட ஏசாவைப் போல் திரித்துவக் காட்சியைக் கண்டவன். இதோ அடியேன் இருக்கிறேன் என்னை அனுப்பும் என்று சொல்லவே கடமைப்பட்டிருக்கிறான் தமஸ்குவின் வழியில் இயேசு சுவாமியின் காட்சியைப் பெற்றவன் அந்தப் பரமதரிசனத்திற்கு நான் கீழ்ப்படியாதிருக்க முடியவில்லை என்றே கூற வேண்டும்.

உன் தேவனாகிய கர்த்தரிடத்தில் உன் முழு இருதயத் தோடும் உன் முழு மனதோடும் உன் முழு பெலத்தோடும் அன்பு கூறுவாயாக என்ற திரித்துவ காட்சியின் வாழ்க்கை அனுபவம் நீ உன்னிடத்தில் அன்பு கூறுவது போல் பிறனிடத்திலும் அன்பு கூறுவாயாக என்ற திரித்துவ வாழ்க்கையில் தொடர் பகுதியிலே பூரணப்பட வேண்டும். ஒரு ஆக்கியோன் கூறுவது போல கடவுள் என்ற சித்தாந்தத்தில் இந்த சிறியரில் ஒருவன் என்ற சித்தாந்தத்தையும் சம்மந் தப்படுத்தி வாழ்க்கை சேவை ஆரம்பிப் பதே திரித்துவ வாழ்க்கை சேவை எனப் படும். கடவுள் கிரியை செய்து முடித்து ஓர் காலத்திற்கு முன் ஒய்ந்து விட்டார் எனக் கூறுவது சித்தாந்த அனுபவம் அன்று. பிதாவின் கிரியைகளையே

குமாரன் நிறைவேற்றினார் (யோ9:4) குமாரனின் கிரியையே பரிசுத்தாவி நிறைவேற்றி வருகிறார் (யோ 14: 26) இத்திரியேகத் தொடர்ச்சியின் கிரியை இன்னும் திரித்துவ அனுபவத்திற்குள் வசீகரிக்கப்பட்டு திருச்சபை மூலம் திருப்பணிவிடைமூலம் தொடர்ந்து நிறைவேற்றப்பட்டு வருகிறதென்ற அனுபவமே உண்மை எங்கு திரித்துவ அனுபவமில்லையோ அங்கு ஒருவனும் கிரியை செய்யக்கூடாத இராக்காலம் வரக்கூடும் தனிமனுஷனின் கிரியையல்ல திருச்சபையின் கிரியையே திரித்துவத்தின் கிரியை என்பதாம்.

(தொடரும்)

# வெற்றி வாழ்க்கை

(சென்ற இதழின் தொடர்ச்சி)

இயேசு கிறிஸ்துவை தள்ளிப் போடுகிறதென்றால் சாத்தானை தெரிந்து கொள்ளுகிறது, மரணத்தை , மரணத்தின் அதிகாரியாகிய சாத்தானை தெரிந்து கொள்ளுகிறது என்பதாகும் அது நாம் நன்மையோ, தீமையோ செய்யும்படியாக முயற்சித்துக் கொண்டிருக்கிறோம் என்பது பிரச்சினை அல்ல, நாம்

கிறிஸ்துவை ஜீவனாகக் கொண்டிருக்கிறோமா இல்லையா என்பதுதான் முக்கியம்.

இயேசு கிறிஸ்துவினுடைய சிலுவை பழைய சிருஷ்டிப்புகளுக்கெல்லாம் முடிவைக் கொண்டு வந்தது (கொலோ. 1:20,21) சிலுவை மிகவும் முக்கியமாகக் காணப்படுகிறது. சாத்தான் மனிதனை தன்னுடைய குடியிருப்பாகத் தெரிந்து கொண்டபடியினால், தேவன் மனிதனையே தன்னுடைய குடியிருப்பாகத் தெரிந்து கொண்டு இயேசு என்கிற மனிதனில் தேவன் திருவுருகொண்டார்; உலகத்திலே அவர் வாசம் செய்தார். அவர் சிலுவையிலே ஏற்றப்பட்டபொழுது மனிதனையும் சிலுவையிலே ஏற்றினார்; பாவத்தை சிலுவையில் ஏற்றினார்; சர்வலோகத்தின் பாவங்களும் அவர்மேல் சுமத்தப்பட்டது சாபங்களும் சுமத்தப் பட்டது. மரணத்தை ஏற்றுக் கொண்டார். சாத்தானும் சிறைபிடிக்கப் பட்டவனாக அங்கே அவருடைய சரீரத்தில் இருக்கிறான். அவர் சர்ப்பமல்ல; சர்ப்பத்தின் சாயலாக உயர்த்தப்பட்ட வெண்கல சர்ப்பத்தைப் போல அவர் பாவ மாம்சத்தின் சாயலாக இருந்தாரேயொழிய பாவ மாம்சம் அவரிலே இல்லை. அவரில் பாவம் இல்லை. என்வே நம்முடைய பாவங்களெல்லாம் அவர் மீது சுமத்தப்பட்டது (1பேது. 2:24; ஏசா 53:6) சகல சிருஷ்டிப்பும் அவருக்குள் அடக்கப்பட்டது ஏனென்றால் மனிதனுக்குள்ளே பழைய சிருஷ்டிப் பெல்லாம் அடக்கம். சகல சிருஷ்டிப்பும் சிலுவையில் முடிவுகட்டப்பட்டது. அவர் அடக்கம் பண்ணப்பட்டார். அடக்கம் பண்ணப்படுதல் மிகவும் முக்கியமான தாகும் மூன்றாம் நாள் உயிரோடு எழுந்தார் உயிரோடு எழுந்தபோது பாவமற்ற, பரிசுத்தமான மனிதனை அவர் உயிரோடு எழுப்பினார். உயிர்த்தெழுந்ததினால் அவர் தேவனுடைய குமாரனென்று பரிசுத்தாவியானவர் திட்டமாக சாட்சியிடுகிறார்.

இப்பொழுது நாம் கிறிஸ்துவை ஏற்றுக்கொள்ளுகிறதின் மூலமாக உயிர்த்தெழுதலின் ஜீவன், உயிர்த்தெழுந்த மனிதன், உயிர்த்தெழுந்த கர்த்தர் நம்மிலே தரித்திருக்கிறார். இது ஒரு பெரிய ஆசீர்வாதம். நமக்குள் இப்பொழுது ஆவியிலே கிறிஸ்து இருக்கிறார், பிதாவாகிய தேவன் இருக்கிறார், பரிசுத்தாவியானவர் இருக்கிறார் எபே.2:7ல் கிறிஸ்துவின் உயிர்த்தெழுதலைப்பற்றி சொல்லப்படுகிறது பழைய மனிதன் அல்ல; புதிய மனிதனாய், புதிய சிருஷ்டியாய், பாவமற்ற சரீரமுடைய ஒருவராய் இயேசு கிறிஸ்து பழைய சிருஷ்டிப்புக்கு முடிவு உண்டாக்கி புது சிருஷ்டியாய் உயிர்த்தெழுந்தார் அவர் ஆவியாயிருக்கிறார் (1கொரி. 15:43).

கிறிஸ்து எப்பொழுது மரித்தாரோ அப்பொழுது நாம் மரித்தோம். கிறிஸ்து எப்பொழுது உயிர்த்தெழுந்தாரோ அப்பொழுது நாம் உயிர்த்தெழுந்தோம் ஆனபடியால் நாம் இரட்சிக்கப்பட்ட நாள் எது என்றால்; அது கிறிஸ்து நமக்காக மரித்து உயிர்த்தெழுந்த நாளேயாகும். இயேசுகிறிஸ்து மனிதனைத் தரித்து கொண்டார், மனிதனை சிலுவைக்கு கொண்டு போனார், அந்த பாவ மனிதனை சிலுவையில் அறைந்தார் எலி எலிப்பொறிக்குள் சிக்கிக்

கொண்டது போல, சாத்தானும் சிலுவையில் அறையப் பட்டான். ஏனென்றால் சிலுவையில் சகலத்துக்கும் ஒரு முடிவு உண்டாயிற்று இப்பொழுது புதிய சிருஷ்டிப்பாக, புதிய மனிதனாக இயேசு கிறிஸ்து உயிரோடு எழுந்தார். அந்த புதிய மனிதனை நாம் தரித்துக் கொண்டிருக்கிறோம். (எபேசி. 4:24)

இயேசு கிறிஸ்து உயிரோடு எழுந்தபோது மனிதன் உயிரோடு எழுந்தான். இயேசு கிறிஸ்து உன்னதத்திற்கு எழுந்தருளிப்போன போது நாமும் எழுந்தருளிப்போனோம் இயேசு கிறிஸ்து சிங்காசனத்தில் அமர்ந்தபோது நாமும் அமர்ந்தோம். கிறிஸ்துவினுடைய அவதாரம், கிறிஸ்துவினுடைய பாடுகள் நிறைந்த ஜீவியம் கிறிஸ்துவினுடைய வல்லமையான வீரியமான மரணம், கிறிஸ்துவினுடைய அடக்கம், கிறிஸ்துவினுடைய உயிர்த்தெழுதல் கிறிஸ்துவின் பரமேருதல், கிறிஸ்து சிங்காசனத்தில் அமருதல் இந்த ஏழு உட்பொருட்களோடு கிறிஸ்துவானவர் நமக்குள்ளே வந்து தங்கியிருக்கிறார். இப்பொழுது நாம் இயேசுவோடு தொடர்பு எடுப்பதின் மூலமாக இவைகள் நம்மில் நடைமுறைக்கு வெற்றிகரமாக வரும். பாவத்தின் மேல் நமக்கு ஜெயம் உண்டாகும் (ரோம. 6 : 14) நாம் ஆவியோடு ஜீவிக்கும்போது பாவத்தின் மேல் வெற்றி அடைவோம் நீங்கள் நியாயப்பிரமாணத்திற்கு கீழ்ப்பட்டிராமல் கிருபைக்கு கீழ்ப்பட்டிருக்கிறபடியால், பாவம் உங்களை மேற்கொள்ள மாட்டாது.

பாவம் உங்களை முன்னால் ஆண்டு கொண்டது நாம் எப்போதும் சிலுவையில் கூட இருக்க வேண்டும் கர்த்தர் சொல்லும் போது என்னைப் பின்பற்றுங்கள். தன் சிலுவையை எடுத்துக் கொண்டு என்னைப் பின்பற்றக்கடவன் ஒருவன் எனக்கு சிஷனாயிருக்க விரும்பினால் அவன் எல்லாவற்றையும் வெறுத்து விட்டு சிலுவையை எடுத்துக்கொண்டு என்னை பின்பற்ற வேண்டும். ஆவியில் இருக்கிற இயேசுவோடு தொடர்பு எடுத்து அவரை பின்பற்றவேண்டும். நம்முடைய மாம்சத்தை சிலுவையின் மேல் வைப்பது. நாம் சிந்திக்கிற, பேசுகிற ஒவ்வொரு வார்த்தையையும் சிலுவையில் வைத்து பார்க்கவேண்டும். ஆவியின் பிரமாணம் பாவம், மரணம் என்பவைகளின் பிரமாணத்திலிருந்து என்னை விடுதலையாக்கிற்று என்று அப்பவுல் சொல்லுகிறார். இப்போது கிறிஸ்து எனக்குள்ளே வந்திருக்கிறார் கிறிஸ்து பரிசுத்தமானவர், அவர் வல்லமையுள்ளவர். பாவம் பெருகின இடத்தில் கிருபை அதிகமாக பெருகிற்று (ரோம 5:20). கர்த்தராகிய இயேசுகிறிஸ்து உலகத்தில் மனிதனாய் அவதரித்து பழைய சிருஷ்டிப்புக்கு முடிவு கொண்டுவந்தார்

பழைய சிருஷ்டிப்பு எது என்றால் சாத்தான், அவனுடைய இராஜ்யம், சாத்தானும் மனிதனும் கலந்த பாவமனிதன், பாவ மாம்சம், சுய உலகம் அவனுடைய இராஜ்யம், அவனுடைய சகலவிதமான காரியங்களும் பன்னிரெண்டு விதமான பொருட்கள் அதில் இருக்கின்றன. அதை சிலுவையில் ஆணியடித்து வெற்றி சிறந்தார் நாம் இப்பொழுது கிறிஸ்தவர்களாக இருக்கிறோம் நாம் கிறிஸ்துவை பெற்றிருக்கிறோம் கிறிஸ்தவர்களில் அநேகர்

சிலுவையோடு ஐக்கியம் இல்லாதவர்களாய் இருக்கிறார்கள். சிலுவை என்பது துன்பம், துக்கம், மாணம் என்று அர்த்தமாகும்.

கிறிஸ்து ஆவியாக இருக்கிறார். ஆவியோடு கூட நாம் தொடர்பெடுத்து ஆவியிலே பயிற்சிசெய்து, ஆவியிலே நாம் ஜீவிக்க வேண்டும். நாம் ஆவியாய் இருக்கிறபடியினால் மற்றவர்களுடைய சிந்தனைகளை அறிய முடியும், உலகத்தில் நடக்கிற சம்பவங்களை அறிய முடியம், இங்கே இருந்து கொண்டே உலகம் முழுவதையும் தொடர்பு எடுக்க முடியும் காரணம் என்னவென்றால் நாம் ஆவியே; தேவனும் ஆவியே முக்கிய காரணம் நாம் தேவ ஆவியைப் பெற்று இருக்கிறோம், தேவ ஆவியிலே கிறிஸ்து வாசம் பண்ணுகிறார். "நான் திராட்சை செடி நீங்கள் கொடிகள் நீங்கள் என்னில் நிலைத்திருந்தால் கனி கொடுப்பீர்கள் என்னில் நிலைத்திராவிட்டால் கனி கொடுக்கமுடியாது. என்னில் நிலைத் திராதவன் வெட்டுண்டு அக்கினியிலே போடப்படுவான். கனி கொடுக்காதவர்கள் வெட்டுண்டு அக்கினியிலே போடப் படுவார்கள். இரட்சிக்கப்பட்டும், ஞானஸ்நானம் பெற்றும், பரிசுத்தாவியின் அபிஷேகம் பெற்றும் கிறிஸ்துவினால் ஆளப்படாமல், ஆவியினால் ஆளப்படா மல், மாம்சத்தினால் ஊழியம் செய்வதோ, நன்மை செய்வதோ ஆபத்தான காரியம்.

உயிர்த்தெழுந்த பின்பே அப்பேரஸ் தலர்களாக அவர்களை அதிகாரப்படுத்தி அனுப்பினார். அதற்கு முன்னால் அவர்களை தெரிந்து கொண்டு அப்போஸ்தலர்கள் என்று பேரிட்ட போதிலும் அவர்களை பயிற்சியிலே தான் வைத்திருந்தார். அப்பொழுது அவர்களுக்கு கொடுத்த ஊழியத்தைத் தான் இப்போது எல்லோரும் செய்கிறார்கள் போங்கள் சுவிசேஷத்தை அறிவியுங்கள், இலவசமாய் பெற்று இலவசமாய் கொடுங்கள், வியாதியுள்ள வர்களை சுகமாக்குங்கள், மரித்தோரை எழுப்புங் கள், பிசாசுகளைத் துரத்துங்கள் என்று சொன்னார். அந்த ஊழியத்தை யூதாசும் செய்தான். அவனோ தன்னை ஒரு அப்போஸ்தலன் என்றுச் சொல்லிக் கொண்டான் ஆனால் அவனுக்கும் கிறிஸ்துவுக்கும் எந்த சம்பந்தமும் இல்லாமல் இருந்தது. இந்நாட்களிலே அநேகர் இந்தவிதமான ஊழியத்தைத் தான் செய்கிறார்கள். அது புதிய ஏற்பாட்டின் ஊழியமல்ல.

புதிய ஏற்பாட்டின் ஊழியம் பெந்தேகோஸ்தே நாள் முதற்கொண்டு ஆரம்பமாகிறது. கர்த்தர் உயிர்த்தெழுந்த பின்பே அப்போஸ்தலர்களுக்கு கட்டளைக்கொடுத்தார். உயிர்தெழுந்த அன்று சாயங்காலம் முதலாவது கட்டளையும்; அதிகாரமும் கொடுத்தார். உங்களுக்கு சமாதானம் உண்டாவதாக; பிதா என்னை அனுப்பினது போல நானும் உங்களை அனுப்புகிறேன். பிதா என்னை அதிகாரமும், பாவ மன்னிப்பு அதிகாரமுடையவராய் அனுப்புகிறது போல நான் உங்களை அனுப்புகிறேன் ஊதி பரிசுத்தாவியைப் பெற்றுக் கொள்ளுங்கள் எவர்களுடைய பாவங் களை நீங்கள் மன்னிக்கிறீர்களோ அவைகள் அவர்களுக்கு மன்னிக்கப்படும். எவர்களுடைய பாவங்களை மன்னியாதி ருக்கிறீர்களோ, அவைகள் அவர்களுக்கு மன்னிக்கப்படாதிருக்கும் என்றார்

(யோவா 20:21-23)

(உயிர்த்தெழுந்த கர்த்தர், உயிர்த்தெழுந்த நாளிலே முதலாவது கொடுத்த அதிகாரமும், கட்டளையும், பாவ மன்னிப்பின் அதிகாரமாகும் இந்த அதிகாரம் தான் முதலாவது அப்போஸ்தலர்களுக்கு கொடுக்கப் பட்டது ஆனால் இந்நாட்களிலே கிறிஸ்தவர்கள் என்ன பிரசங்கிக்கிறார்கள் என்றால் மனந்திரும்புங்கள் என்று பிரசங்கிக்கிறதும், ஞானஸ்நானம் கொடுப்பதும், பரிசுத்தாவி பெற்றுக் கொள்வதும், சபைக்கட்டுவதைப் பற்றியும் பேசிக்கொண்டு இருக்கிறார்கள் அது 40 (நாற்பது) நாள் கழித்து ஒலிவமலை யிலிருந்து பாலோகத்துக்கு எழுந்தருளும் போது சீஷர்களைக் கூடிவாச் செய்து அப்பொழுது சொன்னார் வானத்திலும், பூமியிலும் சகல அதிகாரமும் எனக்கு கொடுக்கப் பட்டிருக்கிறது புறப்பட்டுப் போய் சகல ஜாதிகளுக்கும், சிருஷ்டிகளுக்கும் சுவிசேஷத்தை அறிவித்து சீஷராக்கும் கள், ஞானஸ்நானம் கொடுங்கள், சபையை கட்டுங்கள் நான் கட்டளையிட்ட எல்லாவற்றையும் உபதேசம் பண்ணுங்கள் என்று சொன்னது கடைசியில் சொன்ன கட்டளையாகும் இந்த முதலாவது கட்டளையும் அதிகாரமும் தெரியாதவர்கள் இயேசு கிறிஸ்துவைப் பற்றியோ, இருச்சபையைப் பற்றியோ ஒன்றுமே அறியமாட்டார்கள்.)

(ஏனென்றால் (அப் 1:1-3) தெயோப்பிலுவே. இயேசுவானவர் தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினாலே அப்போஸ்தலர்களுக்குக் கட்டளையிட்டார் அப்போஸ்தலர்களுக்குத்தான் பிரசங்கிக்கவும், சபையைக் கட்டவும் கட்டளையிட்டார் அப்போஸ்தலர்களைத் தான் சபையிலும் முதன்மையாக கர்த்தர் வைத்தார். மற்றவர்கள் சபை கட்டக் கூடாது, சபை எழுப்பக்கூடாது அவர்கள் சாட்சி கொடுக்கலாம், சுவிசேஷத்தை அறிவிக்கலாம் எல்லா விசுவாசிகளும் செய்யலாம் ஊழியர்கள் தான் செய்ய வேண்டும் என்ற கட்டாயம் கிடையாது பொதுவாக ஜெபம் பண்ணுகிறது எல்லாரும் ஜெபம் பண்ண வேண்டும் ஆனால், ஜெபம் பண்ணுகிறது ஒரு ஊழியமாக அப்போஸ்தலருக்கு ஒப்படைக்கப்பட்டன(அப் 6:4) எல்லோரும் ஜெபம் பண்ணுகிறது நல்லது உங்களுடைய ஜெபத்தைக் கேட்க்கா விட்டாலும் அப்போஸ்தலர் ஜெபம் பண்ணினால் கர்த்தர் அந்த காரியத்தை உடனே கேட்ப்பார் ஏனென்றால் இதற்காக இவர்கள் நியமிக்கப் பட்டவர்கள் அப்படியே சபை மக்களும் ஜெபிப்பார்கள், காரியங்கள் நடக்கும், ஊழியர்கள் ஜெபிப்பார்கள் காரியங்கள் நடக்கும் சில காரியங்கள் நடக்காமல் இருக்கும் ஆனால் சபைக்குத் தெரிவிக்கும் போது அப்போஸ்தலர் ஜெபிக்கும் போது அந்த காரியம் நடக்கும் ஏனென்றால் நாங்களோ ஜெபம் பண்ணுவதிலும் தேவ வசனத்தைப் போதிக்கிற ஊழியத்திலும் இடைவிடாமல் தரித்திருப்போம் என்றார்கள் (அப் 6:4) அப்போஸ்தலருடைய ஊழியத்தில் ஐக்கியம் வைத்துக் கொள்ளுங்கள் அப்போஸ்தலருடைய ஆலோசனையைக் கேளுங்கள்; வெற்றி வாழ்க்கையுண்டாகும் (அப் 2:42) இயேசு கிறிஸ்து நமக்கு கொடுக்கப் பட்டிருக்கிறார்:-

"தேவனைத் தேடு"
"Seek God"

Regd.No. 040088/84
Postal Regd.No. Tech 47-201 MBI 2000
Tamil Monthly Magazine

அவருடைய மாரணம், அடக்கம் பண்ணப்படுதல், உயிர்த்தெழுதல், அவருடைய நீதி, அவருடைய பரிசுத்தம், அவருடைய ஞானம், அவருடைய வல்லமை, அவருடைய வாக்கு வல்லமை ஆகியவைகள். அவருடையதை நாம் எடுத்துக் கொள்ள வேண்டும் உள்ளேயிருக்கிற கிறிஸ்துவிலிருந்தும் பெற்றுக்கொள்ள வேண்டும்
இதுவே வெற்றி வாழ்க்கைக்கு அடிப்படை ஆகும்.

## புதிய எருசலேம் சபையின்
## 32-வது ஆண்டு விழா(8-8-1968—8-8-2000)

*"கர்த்தர் எருசலேமைக் கட்டுகிறார்" (சங். 142: 2)*

**நம்முடைய திருச்சபையின் 32-வது ஆண்டு விழாவை வருகின்ற 8-8-2000 செவ்வாய்க்கிழமையன்று வெகு சிறப்பாய்க் கொண்டாடி தேவனை மகிமைப்படுத்துங்கள்.**

**கர்த்தர் புதிய எருசலேமை ஒரே சரீரமாய் உலமெங்கும் கட்டுகிறார். அதற்காக தேவனை ஸ்தோத்தரிக்கிறேன். அல்லேலூயா**

CHIEF APOSTLE. N. LAZAR

## அறிவிப்புகள்

**முழு இரவு விழிப்பு ஜெபம்**

*15, செவ்வாய் (ஆகஸ்ட் 2000)*
*14, வியாழன் (செப்டம்பர் 2000)*
*13, வெள்ளி (அக்டோபர் 2000)*

**புதிய எருசலேம் செய்தி பத்திரிக்கை**

| | |
|---|---|
| ஆண்டு சந்தா | Rs 30 00 |
| வெளிநாடு ஆண்டு சந்தா | Rs. 400 00 |

**அனுப்ப வேண்டிய முகவரி**

Chief Apostle N.Lazar,
"NEW JERUSALEM CHURCH"
Church Lane, Tilak Nagar,
Darga Cross Road, Sonapur,
Bhandup (W), MUMBAI-400 078

மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா எண்ணையும் குறிப்பிடவும். பழைய சந்தாதாரரா அல்லது புதிய சந்தாதாரரா என்பதையும் குறிப்பிடவும்.

பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதையும் தெளிவாகக் குறிப்பிடவும்.

"புதிய எருசலேம் செய்தி" பத்திரிகை வாங்குவோர் ரூ.30 (முப்பது) சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தையும் தெளிவாகப் பெரிய எழுத்துகளில் (Capital Letters), M.O பாரத்தின் செய்திக்காக ஒதுக்கப்பட்ட பகுதியில் (Space for Communication) எழுதி பத்திரிகையைப் பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.

Edited, Printed and Published by Chief Apostle N.LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Darga cross rd. Sonapur, Bhandup(W), Mumbai-400 078, India. Phone: 91-22-5605515, Fax:91-22-5681992; e-mail: njc@vsnl.com
Printed at New Jerusalem Press, Tilak Nagar, Bhandup, Mumbai-400 078.

# புதிய எருசலேம் செய்தி

## PUTHIYA YERUSALEM CHEIDHI

எக்காளம் 18; சத்தம்: செப்டம்பர் 2000




“___வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல் கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்____ விழித்திருங்கள்____ உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லோருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்___”

மாற்கு. 13 : 35-37

EDITOR : CHIEF APOSTLE N.LAZAR

MUMBAI, INDIA

## ஆசிரியர் உரை



அன்பான தேவனுடைய பிள்ளைகளே, வாழ்க்கை என்பது முக்கியமான காரியமாகும். வாழ்க்கையில் எல்லா காரியங்களுக்கும், சூழ்நிலைகளுக்கும், சந்தர்ப்பங்களுக்கும் சத்திய வேதாகமாகிய **Bible** வழிகாட்டுகிறது.

வாழ்க்கையின் சந்தர்ப்பங்களில் மனிதனுடைய வழி ஒன்று உண்டு; தேவனுடைய வழி என்று ஒன்று உண்டு. மனிதனுடைய வழி சறுக்கலானது; கடைசியில் அது வேதனையைக் கொண்டு வரும். தேவனுடைய வழி மனிதனுக்கு சரியானதும், திருப்தியையும் ஆசீர்வாதத்தையும் கொண்டு வருகிறதாயிருக்கிறது. எனவே ஒவ்வொரு காரியத்திலும் தேவனுடைய வழி என்ன என்று கண்டு கொள்ள வேதாகமத்தை சரியாய் வாசிக்கவும், ஆராய்ச்சி பண்ணவும் வேண்டும். வேத ஆராய்ச்சியின் மூலமும், வெளிப்படுத்தல் மூலமும் நாம் தேவனுடைய சித்தத்தை அறிந்து கொள்ளலாம். உன் வாழ்க்கையில் அந்த பிரச்சினைக்கு தேவனுடைய வழி என்னவென்று பார். உங்களுக்கு சமாதானமுண்டாகும்.

*கிறிஸ்துவுக்குள்,*

உன் வாழ்க்கையில்
அந்த பிரச்சினைக்கு
தேவனுடைய வழி
என்னவென்று பார்
உங்களுக்கு
சமாதானமுண்டாகும்.

*தலைமை அப்போஸ்தலர்.என்.லாசர்*

# கிறிஸ்துவின் பாவப் பிராயச்சித்தம்

நாம் நம் முன்னோர்களால் பாரம்பரியமாய் அனுசரித்து வந்த வீணான நடக்கைகளினாலே அழிவுள்ள வஸ்துக்களாகிய பொன்னினாலும், வெள்ளியினாலும் மீட்கப்படாமல் குற்றமில்லாத மாசற்ற ஆட்டுக் குட்டியாகிய விலையேறப்பெற்ற இரத்தத் தினாலே மீட்கப்பட்டீர்கள் என்று அறிந்திருக்கிறீர்களே என்பதே.

கிறிஸ்துவின் பிராயச்சித்த பணி யைக் குறித்து இந்த வேதவாக்கியங்கள் நமக்கு அறிவிக்கின்றன. நாம் வேதாகமத் திலே அதிகமாக இரத்தம் என்கிற வார்த்தையை வாசிக்கிறோம். இவர் சிலுவையில் சிந்தின இரத்தத்தினாலே சமாதானத்தை உண்டாக்கி பரலோகத் திலுள்ள, பூலோகத்திலுள்ள எல்லாமும் தேவனோடு ஒப்புரவாக்கிக் கொள்ள தேவனுக்கு பிரியமாயிற்று என்று கொலோசேயரில் எழுதப்பட்டுள்ளது. இரத்தம் வேதாகமத்தின் உயிராக ஜீவனாக இருக்கிறது. இரத்தம் என்கிற வார்த்தையை வேதாகமத்தில் எடுத்து விட்டால் வெறும் செத்த புஸ்தகமாக, அது வெறும் சரித்திரமாக, எந்த அர்த்தமும் இல்லாததாக காணப்படும்.

இரத்தமில்லாமல் பாவமன்னிப் பில்லை, சமாதானமில்லை, சந்தோஷ மில்லை, விடுதலையில்லை, தேவ கிருபையில்லை, பரிசுத்தமாக்கப்படுகிற தில்லை, ஒப்புரவாகுதலில்லை, நீதிமானாக்கப்படுகிறதில்லை. அதாவது இயேசு கிறிஸ்துவினுடைய இரத்தத்தி னாலே நமக்கு ஏராளமான ஆசீர்வாதங்கள் நடந்து கொண்டிருக் கிறது என்று சொல்லி நம்முடைய அனுபவமும் அறிவிக்கிறது. நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து நம்முடைய பாவங்களுக்காகப் பிராயச்சித்தம் செலுத் தினார் (1 யோ. 2ம் அதிகாரம்). அவர் கிருபாதார பலியாயிருக்கிறார் நம்முடைய பாவங்களை மாத்திரமல்ல, சர்வலோகத்தின் பாவங்களை நிவர்த்தி செய்கிற கிருபாதார பலியாக இருக்கிறார். ஒன்று நேரடியாக இரத்தத்தைக் குறித்தோ, அல்லது இரத்தத்தை சம்பந்தப்பட்டதை குறித்தோ அல்லது அதற்கு ஆதாரமான காரியங்களை குறித்தோ வேதாகமத்திலே எழுதப்பட்டிருக்கிறது (1 கொரி. 15 ; 3).

நம்முடைய இரட்சகராகிய இயேசு கிறிஸ்து வேதவாக்கியங்களின்படி நம்முடைய பாவங்களுக்காக மரித்து என்று எழுதப்பட்டிருக்கிறது. கிறிஸ்து வானவர் வேதவாக்கியங்களின் படி நமது பாவங்களுக்காக மரித்து என்று சொல்லி எழுதியிருக்கிறது. பொதுவாக மக்கள் சட்டத்துக்கு பயப்படுகிறதில்லை. தண்டனைக்குத் தான் பயப்படுகிறார்கள். தேவன் மனிதனுக்குச் சட்டத்தை கொடுத்தாலும் உலகத்திலுள்ள எல்லா மரங்களின் கனிகளையும் புசிக்கலாம். ஆனால், நன்மை தீமை அறியத்தக்க மரத்தின் கனியை மாத்திரம் நீ புசிக்கக்கூடாது; அதை நீ புசிக்கும் நாளிலே சாகவே சாவாய் என்று தண்டனையை அறிவித்தார். இவ்வித மாக தேவன் சட்டத்தையும், சட்டத்தினால் உண்டான தண்டனை யையும் அவனுக்கு வெளிப்படுத்தினார். பாவத்துக்குக் கொடுக்கப் பட்ட தண்டனையை ஆதாம் அனுபவித்திரா விட்டால், ஆதாம் சந்ததி அனுபவித்திரா விட்டால் தேவன் சொன்னது பொய்யாக

ஆகிவிடும். அதிலிருந்து நிவாரணம் பிராயச்சித்தம் ஆகும். அந்த தண்டனைக்கு வேறே யாராவது ஒருவர் பிராயச்சித்தம் செலுத்தினால், அதற்கு சரி செய்தால் விடுதலை உண்டு. பழைய ஏற்பாட்டிலே அறிவிக்கப்படுகிற எல்லா பலிகள் மற்றும் சகலவிதமான காணிக்கைகளும் அதையே அறிவித்து நிற்கிறது. பஸ்கா ஆட்டுக்குட்டியினுடைய இரத்தம் அதைதான் அறிவிக்கிறது. அதினுடைய இரத்தம் சிந்தப்பட வேண்டும், அதினுடைய மாம்சம் புசிக்ககப்பட வேண்டும். அப்பொழுது அவர்களுக்கு விடுதலை உண்டாகும்.

சிலுவையைப் பற்றிய காரியம் இந்த உலகத்திலே மறைக்கப்பட்டதாய் சரியாய் விளங்காததாய் இருக்கிறது. கல்வாரியில் நீதியும், கருணையும் ஒன்றை ஒன்று சந்தித்ததாகப் பார்க்கிறோம். நாலாயிரம் ஆண்டுகளுக்குப் பின்பாக கல்வாரியிலே இயேசு கிறிஸ்து மரித்தார். இயேசு கிறிஸ்துவினால் நிவாரணம் உண்டா யிற்று என்று மாத்திரம் நாம் எண்ண வேண்டாம். ஆதாம் பாவம் செய்தது முதற்கொண்டு பலி செலுத்தப்பட்டு வந்தது. அது வரப்போகிற மெய்யான பூரணபலிக்கு முன் அடையாளமாக இருந்தது, இவ்விதமாக நீதியும், கருணையும் அந்தப் பலி ஆடு எங்கே என்று கேட்டது. அப்பொழுது சொல்லப்பட்ட பதில்: "இதோ சிலுவையை சுமந்து கொண்டு மலையின் மேல் ஏறி வருகிறார் பார்"; இதை முதலாவது அறிவித்தவர் யோவான் ஸ்நானகன் என்று வாசிக்கிறோம் (யோவா. 1 : 29). இதோ, உலகத்தின் பாவத்தைச் சுமந்து தீர்க்கிற தேவ ஆட்டுக்குட்டி என்று இயேசுவைக் கண்டவுடனே யோவான்ஸ்நானகன் அறிவித்தார்.

பொதுவாக இந்து மத தத்துவவாதிகளுக்கு இவ்விதமான ஒரு கேள்வி இருக்கிறது. ஒருவர் செய்த பாவத்திற்கு அல்லது ஒருவர் பட்ட கடனை இன்னொருவர் எப்படி தீர்க்க முடியும். இன்னொருவர் அந்த பாவத்திற்கு எப்படி நிவாரணம் செய்ய முடியும் என்பதாகும் இந்தக் கேள்விக்கு தேவனுடைய ஞானம் சகலத்திற்கும் போதுமானதாய் அடக்கப்பட்டதாகும் சிலுவை. ஒரு விதவையான ஒரு ஸ்திரீக்கு நிறைய கடன்களும், பிரச்சனைகளும் இருக்கிறது. அந்த கடனை முறைப்படி சட்டப்பிரகாரம் வேறொருவர் அடைக்க முன் வந்தால் அது ஒரு இரக்க செயல் என்று சொல்லலாம். ஆனால் சட்டப்படி அவர் அடைக்கிறதற்கு அவருக்கு உரிமை கிடையாது. அந்த ஸ்திரீக்கு நிம்மதி கிடையாது, விடுதலை கிடையாது, பூரணமான ஒரு பாதுகாப்பு இல்லை. ஆனால் அந்த ஸ்திரியை ஒரு ஐசுரியவான் விவாகம் முடித்து அந்த ஸ்திரிக்காக அவர் இடை படும்போது சட்டப் பிரகாரம் அவளுடைய கடன்கள் பிரச்சனைகள் சகலத்தையும். அடைக்க அவருக்கு உரிமை இருக்கிறது. அப்படியே கிறிஸ்துவானவர் விழுந்து போன மனித ஜாதியை அல்லது உங்களை, என்னை விவாகம் முடித்துக்கொண்டார். அவருடைய சரீரத்தினால் அடைந்த மரணத்தினாலே இவ்விதமாக நாம் பழைய புருஷனை விட்டு விட்டு, இவ்விதமாக ஒரு புதிய விவாகத்திற்கு உட்பட்டோம் என்று வாசிக்கிறோம் (ரோம. 7 : 4). கிறிஸ்து என்னும் வேறொருடையவர்களானோம் என்று எழுதியிருக்கிறது. மேலும் ஸ்திரியைப் பற்றிய விவரம் எழுதிக் கொண்டே வருகிறார்; ஸ்திரி உயிரோடு இருக்கும் போது வேறொரு புருஷனை விவாகம் முடித்தால் விபச்சாரம், ஆனால் அவன் மரித்தப் பின்பு விவாகம் முடிக்க விடுதலைப் பெற்று இருக்கிறாள் அப்படி மரித்துப் பின்பு வேறொரு புருஷனை

விவாகம் பண்ணினாலும் அவள் விபச்சாரி இல்லை (ரோம. 7 :3).
அப்படிப்போல மரித்தோரி லிருந்து கிறிஸ்து என்னும் வேறொருவருடையவர் களாகி தேவனுக்கென்று கிறிஸ்துவின் சரீரத்தினால நியாயப்பிரமாணத்திற்கு மரித்தவர்களானீர்கள். நியாயப் பிரமாணம், அல்லது பாவம், அல்லது தண்டனை, இவைகள் சகலத்திலிருந்தும் நாம் விடுதலையாகும்படியாக கிறிஸ்து வானவர் மனித ஜாதியைத் தம்முடைய சரீரத்தின் மேல் ஏற்றுக் கொண்டு அதை மரணத்திற்குள்ளாக்கினார்; அல்லது அவர் சிலுவையிலே கிடத்தப்பட்டு ஆணி கடாவப்படும்போது காணப்படாத நம்முடைய கண்களுக்குத் தெரியாத விதமாய் நியாயப்பிரமாணத்தை தம்முடைய கரத்திலே அவர் விரித்தவராக அவர் படுத்திருந்தார். அவ்விதமாக சிலுவையோடு ஆணி அடித்து அவரை கொலை செய்யும்படியாய் தூக்கி நிறுத்தின போது நியாயப்பிரமாணமும் ஆணியில் அடிக்கப்பட்டு அதுவும் கிழிக்கப்பட்டது; அது முடிவுற்றது; அது ரத்து செய்யப்பட்டது. நியாயப் பிரமாணம் மனிதனை ஆண்டுவந்தது. மனிதன் சட்டத்தை மீறினதினாலே தண்டனைக்குள்ளானான். ஆனால், கர்த்தர் நியாயப்பிரமாணத்தையும் சிலுவையில் அறைந்து அதை கிழித்துப்போட்டார். அந்த தண்டனை யையும் ஏற்றுக் கொண்டார் (1பேது. 2 : 24). அவர் தாமே தமது சரீரத்திலே நம்முடைய பாவங்களைச் சிலுவையின் மேல் சுமந்தார் (1கொரி. 15 : 3). வேதவாக்கியங்களின்படி கிறிஸ்து வானவர் நம்முடைய பாவங்களுக்காக மரித்தார். லேவி 25-ம் அதிகாரத்திலே ஏற்கனவே இரத்த சம்பந்தமான ஒருவன் ஒருவனுக்காக இடைப்பட்டு அவனை மீட்டுவிடலாம் என்று எழுதியிருக்கிறது. எனவே கிறிஸ்துவானவர் மாம்சமும், இரத்தமும், உடையவராய் இந்த உலகத்திலே தோன்றினார். அவர் நமக்கு பதிலாக அவர் நம்முடைய இடத்திலே அவர் நமக்குப் பதிலாக பிராயச்சித்தம் செலுத்தினார். அல்லது நமது கடனை அடைத்தார் நம்முடைய சகல பாவத்திற்கான நிவாரணத்தைச் செலுத்தினார்.

எப்படியென்றால் ஒரு ஆடோ, ஒரு மாடோ, ஒரு மிருகமோ பலியிடப்படும்போது, அந்த மிருகம் பலியாகிறது தன்னுடைய ஜீவனுக் காகவே என்கிற உணர்வு அந்த பலியிடுகிறவனுக்கு எப்பொழுதுமே இருந்தது. அவ்விதமாக இயேசுவானவர் சிலுவையிலே மரித்த சம்பவமானது எனக்காக, உனக்காக என்பதை நாம் திட்டமாக அறிந்திருக்கிறோம் (II கொரி 5 : 21). பாவம் அறியாத அவரை நமக்காக பாவமாக்கினார். நம்முடைய பாவங் களை தமது சரீரத்திலே சிலுவையில் சுமந்தார். ஏசாயா 53 -ல் தேவனோ நம்முடைய எல்லாருடைய அக்கிரமத் தையும் அவர் மேல் சுமத்தினார். அவர் நம்மை விவாகம் செய்து கொண்ட படியினால் நமக்கு அவர் சட்டப் பிரகாரமான பதிலாளியாக எல்லா கடனையும் அடைக்க அவர் உரிமை உடையவராக ஆனார். நம்முடைய பாவங்களை மாத்திரமல்ல, சர்வ லோகத்தின் பாவங்களையும் நிவிர்த்தி செய்கிற பலியாயிருக்கிறார். ஆனால் மக்களில் அநேகர் இரட்சிக்கப்படாமல் போகிறதற்கு காரணம், தேவனுடைய நிபந்தனைக்கு கீழ்ப்படியாததே. அவர்கள் நரகத்திற்கு போகப்போகிறது பாவத்தினிமித்தம் அல்ல, இயேசு கிறிஸ்துவை விசுவாசித்துப் பெற்றுக் கொள்ளாததின் நிமித்தமே. மனுமக்கள் முழுவதும் இரட்சிக்கிறதற்காக தேவனுடைய ஞானத்திட்டம் சிலுவை யிலே நிறேவேறினது. ஆனால் நம்மை

மீட்டுக்கொள்கிறதற்கு மாத்திரமல்ல சகல மிருக ஜீவன்களையும், இந்த உலகத்திலுள்ள சிருஷ்டிகளெல்லாவற்றையும் மீட்டுக் கொள்கிறதற்கும், பூமியையும் மீட்டுக் கொள்கிறதற்கும் அவர் சிலுவையிலே பிராயச்சித்தம் செலுத்தினார். மிருகங்கள் ஒன்றுக் கொன்று விரோதமாக இருந்து செயல்படுகிறதை நாம் காண்கிறோம். மிருகங்கள், சில விஷப்பூச்சிகள் மனிதனுக்கு விரோதமாக இருந்து மனிதனை தாக்குவதையும் நாம் பார்க்கிறோம்.

கிறிஸ்துவினுடைய நிவாரணம், அந்த பிராயச்சித்தமானது நமக்காக மாத்திரமல்ல, சகல சிருஷ்டிக்காகவும் என்று சொல்லி வேதத்தில் வாசிக்கிறோம். (ரோம. 8 : 19-23) சர்வ சிருஷ்டியும் வேதனைப்பட்டு இவ்விதமாக தவித்துக்கொண்டு இருக்கிறது என்று நாம் பார்க்கிறோம். இயேசு கிறிஸ்துவினுடைய அந்த பிராயச்சித்த பலியானது, நிவாரணமானது மனிதர்களும், பிராணிகள்யாவும் ஒரு பெரிய சமாதானம் அடையவும், அவைகள் சிருஷ்டிக்கப்பட்ட நோக்கம் நிலைக்கும் மறுபடியும் வரப்போகிறது. (ஏசா. 11 : 6-9) தேவனுடைய பிள்ளைகள் அந்த விடுதலையை பூரணமாய்ப் பெற்றுக் கொள்ளும்போது பிராணிகள் எல்லாம் அடிமைத்தனத்திலிருந்து மீட்கப்படப்போகிறது. இப்படியாய் சர்வ சிருஷ்டியும் மனிதனை தொடர்ந்து சாபத்திற்குள்ளாய், அடிமைத்தனத்திற்குள்ளாய் இருக்கின்றன. "ஆவியின் முதற்பலன்களை பெற்ற நாமும் கூட நம்முடைய சரீர மீட்பாகிய புத்திர சுவிகாரம் வருகிறதற்காக நமக்குள்ளே காத்திருந்து தவிக்கிறோம். அந்த நம்பிக்கையினால் இரட்சிக்கப் பட்டிருக்கிறோம் (ரோ. 8 : 23). கடவுள் தம்முடைய மீட்பின் முடிவை நிறைவேற்றும் நாளானது மரித்துப்போன பரிசுத்தவான்கள் மகிமையோடு உயிர்த்தெழும் நாளானது உயிரோடு இருக்கும் பரிசுத்தவான்கள் மறுரூப மடைகிற அந்த நாளானது எவ்வளவு மகிமையான, மகிழ்ச்சியான நாளாக இருக்கப்போகிறது! இதைக் குறித்து அப்-பவுல் சொன்னது பலவீனமுள்ளதாய் விதைக்கப்படும் பெலமுள்ளதாய் எழுந்திருக்கும். அழிவுள்ளதாய் விதைக்கப்படும், அழிவில்லாததாய் எழுந்திருக்கும். பூரண அழகுள்ளவர்களாக, பூரண அங்க அவயவங்கள் உள்ளவர்களாக, பூரண பெலனும், வல்லமையுடையவர்களாக, பூரண நிலையிலே மனிதனுடைய சரீரம் உயிர்த்தெழுப்பப்படப்போகிறது, மறுரூபமடையப் போகிறது. பூமியும் மறுரூபப்படுத்தப்படப் போகிறது. இப்போது பூமி பூரணமான பலனை கொடுக்கிறதில்லை. இது சுத்திகரிக்கப் பட்டு, சுத்தப்படுத்தப்பட்டு புதிய வானம், புதிய பூமியாக மாறப் போகிறது. ஏராளமான ஆசீர்வாதங்களும், ஏராளமான விளைச்சல்களும், ஏராளமான நிறைவும் உடையதாக, மகிமை உள்ளதாக, அந்த அக்கினியானது மூளும். செடிகளும், குறுக்குகளும் இல்லாதபடி எரித்துப்போடப்பட்டதாக வரம் போகிறது.

பாவத்தை குறித்து ஐந்து விதமான குறிப்புகள் பழைய ஏற்பாட்டிலும், புதிய ஏற்பாட்டிலும் பார்க்கிறோம். நியாயப் பிரமாணத்தை மீறுவதே பாவமாகும். இது சட்டத்தை மீறுகிறதாகும். ஒருவன் நன்மை செய்ய அறிந்தவனாயிருந்தும், அந்த நன்மையை செய்யாமல் போனால் அது பாவம். நன்மை செய்ய வேண்டிய சமயத்தில் நன்மை செய்யாதது; தீய நோக்கம் பாவமாம். இச்சையோடு ஒருவன் ஸ்திரீயை பார்த்தாலே அது பாவமாகிறது. அதாவது இது உள்ளத்தை சார்ந்ததாய், இருதயத்தின் நிறைவாக,

இருதயத்திலிருந்து இவ்விதமான பாவங்கள் வெளிப்படுமென்று கர்த்தராகிய இயேசுகிறிஸ்து சொன்னார். நாம் பாவத்தைக் குறித்து பல இடங்களிலே, பல குறிப்புகளை பார்க்கிறோம். இவை ஒவ்வொன்றும் வேவ்வேறு அர்த்தத்தோடு காணப்படுகிறது.

இந்த உலகம் முழுவதும் பாவத்துக்குள்ளாக இருக்கிறதையும் பாவத்தின் ஆளுகையிலே இருக்கிறதையும் நாம் பார்க்கிறோம். பரிசுத்தவான்கள் கூட பாவத்தினுடைய வல்லமையிலிருந்து விடுதலையான போதிலும், பாவத்தின் பிரசன்னத்திலிருந்து அதனுடைய சூழ்நிலையிலிருந்து விடுதலையாகவில்லை. கர்த்தராகிய இயேசு கிறிஸ்து வந்து விடுதலை அளிக்கும்வரை பாவத்திலிருந்து பூரண விடுதலையடைய முடியாது என்று தெரிகிறது. காலையிலே கிழக்கு வெளுத்து வரும்போது வீட்டிலுள்ள பெரிய பொருட்களெல்லாம் தெரியும் மத்தியானம் போல் ஒளிக்கிரகணம் உள்ளே வந்ததென்றால் உள்ளே இருக்கிற தூசி முதற்கொண்டு, சுவரில் அங்கே, இங்கே ஒட்டிக் கொண்டு இருக்கிறது முதற் கொண்டு நமது கண்ணுக்குத் தெரிய வரும். அது போல பாவம், அதனுடைய பிரசன்னத்திலிருந்து மனிதன் இன்னும் விடுதலை பெறாத நிலையிலே இருக்கிறான். நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து வந்து இவைகளெல்லா வற்றிலுமிருந்து அவனை பூரணமாக விடுதலையாக்கப் போகிறார் (எபி9: 26,28). அப்படியிருந்த தானால், உலகமுண்டானது முதற்கொண்டு அவர் அநேகந் தரம் பாடுபட வேண்டியதாயிருக்குமே; அப்படியல்ல, அவர் தம்மைத் தாமே பலியிடுகிற தினாலே பாவங்களை நீக்கும் பொருட்டாக இந்தக் கடைசிக் காலத்தில் ஒரே தரம் வெளிப்பட்டார்.

கிறிஸ்துவும் அநேகருடைய பாவங்களைச் சுமந்து தீர்க்கும்படி ஒரேதரம் பலியிடப்பட்டு, தமக்காக காத்துக்கொண்டிருக்கிறவர்களுக்கு இரட்சிப்பை அருளும்படி இரண்டாந் தரம் பாவமில்லாமல் தரிசன மாவார். இயேசுவை விசுவாசிக்கிறவன் அவன் நீதிமானாக ஆகிவிட்டான். உதாரண மாக இலங்கையில் யுத்தம் நடந்து கொண்டிருக்கிறது. யுத்தம் அதிகமாய் நடக்கிறது. வட பாகத்தில் யாழ்ப்பாண பாகத்தில் நடைபெறுகிறுது. பொதுவாக அரசாங்கம் ஒரு அறிவிப்பு கொடுக்கிறது என்று வைத்துக்கொள்வோம், இப்படி கலகம் பண்ணினவர்களுக்கெல்லாம் பொது மன்னிப்பு நான் கொடுக்கிறேன் வவுனியா எல்லைக் கோட்டைத் தாண்டி இந்த பக்கம் வந்துவிட்டால் அவர்களுக்கு பொது மன்னிப்பு அரசாங்கம் வெளிப்படுத்துகிறது என்று ஒரு செய்தி அறிவிக்கப்படுகிறது என்று வைத்துக்கொள்ளுங்கள். ஒரு மனிதன் இரவோடு இரவாக புறப்பட்டு நடந்து வருகிறான். வவுனியா எல்லைக் கோட்டைத் தாண்டுகிறான் என்று வைத்துக்கொள்ளுங்கள். இரவு வேளையில் 12 மணிக்கு அந்தக் கோட்டைத் தாண்டியிருப்பான். ஆனால்

## ஞானஸ்நானம்

4.8.2000 அன்று B.L.Shed (Kodaikanal) கிளை சபையில் 10 பேர் ஞானஸ்நானம் பெற்று திருச்சபையில் அங்கமானார்கள் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

அவன் அந்த கோட்டைத்தாண்டி வந்துக் கொண்டு இருக்கிறான் என்று அவனுக்குத் தெரியாது ஆனால் விடியும் போது இன்னும் கொஞ்சம் தெற்கே வந்துவிட்டான். வந்த பிறகு அது உறுதியாகிறது. எல்லைக் கோட்டை தாண்டிவந்து விட்டோம், நமக்கு பொது மன்னிப்பு, இனி நமக்கு தண்டனை இல்லையென்று தெரிகிறது. அப்படியே ஒருவன் இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து ஏற்றுக்கொண்டவுடனே அவன் நீதிமானாகிறான், அவன் விடுதலையாக்கப் படுகிறான். ஆனால் அவன் அந்த விடுதலையை, அந்த சமாதானத்தை, தாம் இரட்சிக்கப்பட்டோம் என்று உணருகிறதற்கு கொஞ்சகாலம் ஆகலாம். குமாரனிடத்தில் விசுவாசமாயிருக்கிறவன் ஆக்கினைத் தீர்ப்புக்கு உட்படான். அவன் விடுதலையாகிவிட்டான். அல்லது குமாரனிடத்தில் விசுவாசமாயிருக்கிறவன், நித்திய ஜீவனை உடையவனாய் இருக்கிறான் (யோ. 3 : 18,36).

இன்றைக்கு உலகம் முழுவதற்குமான தீர்ப்பு இதுதான். மனிதனுடைய பாவத்திற்காக நிவாரணம், பிராயச்சித்தம் இயேசு கிறிஸ்து செலுத்தினார். அவர்தான் இரட்சகர் அவர் ஒருவரே மனிதனை பாவத்திலிருந்தும், பாவத்தின் வல்லமையிலிருந்தும் விடுதலையாக்க முடியும். அவரே மனிதனை பாவத்தின் பிரசன்னத்திலிருந்து விடுதலையாக்கிவிட முடியும். வேறே ஒருவராலும் விடுதலையாக்க முடியாது. நம்முடைய அனுபவமும் இதுவே. சத்தியமும் தேவனுடைய மெய் மார்க்கமும் காண்பிக்கிற வழி என்னவென்றால், இயேசுகிறிஸ்துவை உண்மையாய் விசுவாசித்தவுடனே அவன் நீதிமானாக்கப் படுகிறான். (ரோம. 5 : 1) நாம் விசுவாசத் தினாலே தேவனோடு ஒப்புரவானோம், நீதிமானானோம், சமாதானம் பெற்றோம் என்றுச் சொல்லி எழுதியிருக்கிறது. இது உடனே நிகழ்கிற ஒரு சம்பவமாகும். ஆனால், சிலருக்கு உணர்வு இருக்கலாம், சிலர் உணராமல் இருக்கலாம் ஆனால் எப்படியும் கிறிஸ்துவை ஏற்றுக் கொண்டவுடனே அவர்களுக்கு ஒரு மெய் சமாதானம் தோன்றும். அவருக்கு ஒப்புக்கொடுத்தவுடனே அவர்களிலே ஒரு தெளிவு உண்டாகும். ஆனால் அவர்கள் தொடர்ந்து அவர்கள் வளரும்போது, ஒரு நாள் உறுதிப்பட்டு அவர்களுக்குத் தெளிவு உண்டாகும். விசுவாசத்தினாலே நீதிமானாக்கப் பட்டிருக்கிறோம்.

தேவன் தம்முடைய குமாரனை நமக்கு முன்பாக நிறுத்தி விசுவாச மார்க்கத்தை நமக்குக் காண்பித்தார். அவரை விசுவாசிக்கிறது தான் கட்டளை இது தான் நாம் கீழ்ப்படிய வேண்டிய காரியமாய் இருக்கிறது (ரோ. 5 :9) -ல் இப்படி நாம் அவருடைய இரத்தத்தினாலே நீதிமான்களாக்கப் பட்டிருக்க கோபாக்கினைக்கு நீங்கலாக அவராலே நாம் இரட்சிக்கப்படுவது அதிக நிச்சயமாமே. வேதாகமம் முழுவதிலேயும் இரத்தத்தைப் பற்றி நாம் வாசிக்கிறோம். ஆனால் நாலாயிரம் ஆண்டுகளாய் செலுத்தப்பட்ட பலியினுடைய நிறைவாக கடைசியாக எதற்காக எதை நோக்கமாக கொண்டு செய்யப்பட்டதோ அதை நிறைவேற்றும் படியாக கிறிஸ்து உலகத்தில் வந்தார். நாம் சவால் விடுகிறது என்னவென்றால், இயேசு கிறிஸ்துவினால் அன்றி பாவத்திலிருந்து, பாவத்தின் வல்லமை யிலிருந்து, அதன் பிரசன்னத்திலிருந்து ஒருவனாலும் தப்ப முடியாது என்பதாம். நாம் விடுதலையாக்கப் பட்டிருக்கிறோம், நாம் பாவத்தின் வல்லமையிலிருந்தே விடுதலையாக்கப்பட்டிருக்கிறோம் ஆனால், அதனுடைய பிரசன்னம் இந்த உலகத்திலே இருந்துக் கொண்டிருக்கிறது.

நம்முடைய பிரயாசத்தினால் நாம்

பூரணப்பட முடியாது பாவத்திற்கு எவ்வளவு வல்லமையிருந்தாலும், நாம் பயத்தோடும், நடுக்கத்தோடும் இந்த உலக வாழ்க்கையில் கர்த்தராகிய இயேசுவுக்கு கீழ்ப்படியும்போது தேவனே தம்முடைய தயவுள்ள சித்தத்தியன்படி, விருப்பத்தையும், செய்கைகளையும் நம்மில் உண்டாக்குகிறார் (பிலி. 2: 12,13). இப்படியே நம்முடைய இரட்சிப்பு நிறைவேற நாம் பிரயாசப்படவேண்டும். நான் எதற்காக பிடிக்கப்பட்டேனோ அதை அடைந்து கொள்ளும்படியாய் அதை தொடருகிறேன், முன்னேறுகிறேன், தொடர்ந்து பிரயாசப்படுகிறேன். நான் ஆயிற்று என்று சொல்லவில்லை. நான் தேறினவனானேன் என்று எண்ணுகிறதில்லை. அதைப் பிடித்துக் கொண்டேன் என்று நான் சொல்லுகிறதில்லை. ஆனால் நான் எந்த அளவுக்கு தேறியிருக்கிறேனோ, அதிலிருந்து இன்னும் மேலே தேர்ச்சியடையும்படியாய் பூரண இரட்சிப்பு அடையும்படியாய், அல்லது வெற்றி அடையும்படியாய், ஜெயம் அடையும்படியாய் முன்னேறி கொண்டிருக்கிறேன் என்று பவுல் சொல்லுகிறார் (பிலி. 3 : 12-14). இது தான் கிறிஸ்துவ வாழ்க்கையினுடைய இரகசியம். அதாவது இரட்சிக்கப்பட்டோம், இரட்சிக்கப்பட்டுக்கொண்டிருக்கிறோம், இரட்சிக்கப்படுவோம். இரட்சிக்கப்பட்டுக்கொண்டே இருக்கிறோம்.

நாமெல்லாரும் ஆடுகளைப்போல வழி தப்பித் திரிந்து, அவனவன் தன் தன் வழியிலே போனோம்; கர்த்தரோ நம்மெல்லாருடைய அக்கிரமத்தையும் அவர்மேல் விழப்பண்ணினார் - ஏசாயா 53:5

---

# வேதபாடம்

(2 சாமுவேல் 1 வது அதிகாரம் முதல் 7 வது அதிகாரம் வரை)

---

சாமுவேலின் புஸ்தகம் இரண்டும் சேர்ந்ததே சாமுவேலின் புஸ்தகமாகும். 1சாமுவேலின் தொடர்ச்சியே 2 சாமுவேல் ஆகும். சவுலினுடைய வீழ்ச்சியைத் தொடர்ந்து தாவீதை இராஜாவாக அமர்ந்ததும் தாவீதின் சிங்காசனம் ஸ்திரப்பட்டதும் கர்த்தருடைய பெட்டி எருசலேமுக்கு கொண்டுவரப்பட்டதையும் 2 சாமுவேல் விவரிக்கிறது.

இந்த புஸ்தகத்தின் இரண்டு முக்கியமான பொருள்கள்:-

1. தாவீதின் வெற்றி அதிகாரம் 1- 10
2. தாவீதின் உபத்திரவம் அதிகாரம் 11 - 24

தாவீது ஜாதிகளின் மேல் வெற்றியடைந்தாலும் பாவத்தினால் ஜெயம் சஞ்சலமாக மாறினது இதன் முக்கிய பகுதிகளாகும்.

1. புறச்சத்துரு, உட்சத்துரு இவைகளின் மேல் வெற்றி
2. தேவனுடைய பெட்டி எருசலேமுக்கு கொண்டுவரப்பட்டு தேவாலயத்தின் தொழுகை ஆரம்பமானது.
3. தீர்க்கதரிசிகளின் செல்வாக்கு.
4. பாவத்தின் பிரதிபலன்.
5. தாவீதுக்கு தேவன் அருளிய வாக்குத்தத்தங்கள் நிறைவேறுதலாகும்.

## 2 சாமு அதி 1- 4; 12 முடிய:-

பட்டயத்தின்மேல் விழுந்த பின் சவுல் உயிரோடிருப்பது கூடாதகாரியம் தான். ஆனால் மாண்டுபோன இராஜாவின் முடியையும், அஸ்தகடகத்தையும் அமலேக்கியன் உரிந்து கொண்டபின் தாவீதின் தயவை சம்பாதிக்கிறதற்காக தான் சவுலின் தலையை வெட்டி அந்தப்பொருள்களைக் கொண்டுவந்ததாக கற்பனையாகச் சொன்னான் என்று அறிகிறோம். இஸ்போசேத்தைக் கொன்றவர்களுக்கு தாவீது செய்த பிரகாரமாய் இவனை உடனே மரண ஆக்கினைக்கு உட்படுத்தினார். தகாத முறையில் தாவீது சிங்காசனத்தைப் பெறமாட்டார். மேலும் சவுலின் குடும்பத்தைப் பாதுகாக்க தாவீது வாக்களித்திருந்தார். தேசமக்களுக்கு பெரிய இடுக்கண் நேரிட்டதால் தாவீது கர்த்தருடைய ஜனங்களுக்காகவும், சவுல், யோனத்தானுக்காகவும் புலம்பினதாகப் பார்க்கிறோம்; புலம்பல் பாடினார். சவுலின் மரணத்தினிமித்தம் பெருமிதம் கொள்ளாமல், அவனுடைய நற்குணங்களை நினைவு கூர்ந்து மன்னிக்கும் சிந்தையோடு சவுலுக்காக தாவீது புலம்பினார். தாவீது சவுலுக்கு செய்த பிரகாரமாய் நாம் நமது சத்துருக்கள் விஷயத்தில் பட்சதாபப்படவேண்டும். யோவாப், அப்னேர் என்று இருவருடைய சுபாவத்திற்கு நேர்விரோதமாய் தாவீதின் குணலட்சணம் சிறந்து விளங்குகிறது. அவர்களிருவரும் சதி ஆலோசனையும், சம்சயமும், பேராசையும் குடிகொண்ட பொல்லாதவர்களாய் இருந்தனர். சவுலின் சிறிய தகப்பன் மகனான அப்னேர் வெகுகாலத்திற்கு முன்பே வடக்கோத்திரங்களை தாவீதினிடம் ஒப்படைத்திருக்கலாம். அதற்குப் பதிலாக தேசத்தை உள் நாட்டு யுத்தத்திற்கு அப்னேர் உட்படுத்தினான். எப்புரோன் அடைக்கலப்பட்டணமாயிருந்த படியினால் எப்பிரோனில் வைத்து யோவாப் அப்னேரைக் கொன்றது நியாயமாகாது. கடவுளுடைய நோக்கத்திற்கு தாவீது காத்திருந்தார். தனக்கு சொந்தமான யூதாகோத்திரத்தை சேர்ந்த எப்பிரோனுக்கும் கூட தேவ நடத்துதலை விசாரியாமல் தாவீது செல்லவில்லை அக்காலத்தில் பெயர்பெற்றவர்களான வீரர்கள் அநேகர் இருந்தாலும் வெகுசில பக்திமான்களே நாம் காணமுடிகிறது.

## 11சாமு 5:1-10; 19:-

11சாமு 5:1-16 -இஸ்போசேத்தும் மடிந்துவிட்டான். அப்னேரும் மடிந்துவிட்டான். இப்போது கலக்கத்திற்குள்ளான இஸ்ரவேல் ஜனங்கள் எல்லோரும் எப்ரோனிலே தாவீதினிடத்திற்கு வந்து தாவீதினிடம் முந்தின நாட்களில் கொண்டிருந்த இராஜபக்தியை திரும்பவும் காட்டுகிறார்கள். எனவே இச்சமயத்தில் மூன்றாம் தடவையாக இஸ்ரவேல் அனைத்திற்கும் இராஜாவாக தாவீது அபிஷேகம்

பண்ணப்பட்டார். கடவுளின் சமூகம் தாவீதோடு இருந்ததே அம்மேன்மை அதிகரித்ததற்கு காரணமாக இருந்தது; தனக்காக அல்ல, தம்முடைய ஜனங்களின் நிமித்தமாகவே தேவன் தன்னை உயர்த்துகிறார் என்பதை தாவீது கண்டு கொண்டார். இராஜ்யத்தின் தற்காப்புக்காக மேலும் கடவுளுடைய வழிநடத்துதலை தாழ்மையோடு தாவீது தொடர்ந்து தேடினார். இக்காலத்தில் தாவீது ஒரு தேர்ச்சி பெற்ற படைத்தலைவனாயிருந்தும் தன் சாமர்த்தியத்தையும் தனது அனுபவமுள்ள இராணுவத்தையும் நம்பாமல் கடவுளையே சார்ந்தவராயிருந்தார். இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தர் தனக்கு வழிகாட்டியாய் இருக்கிறதை அவர் நிருபிக்கிறார். தேசத்தின் நடுவில் தேவன் பெரிய வெற்றிகளைத் தாவீதிற்கு கொடுக்க ஏற்பாடுகளைச் செய்தார்.

*2 சாமு. 5:17-25: -*

தேசத்தின் நடுமையத்திற்குள் எருசலேமுக்கு மிகவும் அருகாமையிலே பெலிஸ்தியர் பிரவேசித்த வேளையில் அவர்களை, எப்படி தாக்கவேண்டுமென்று தாவீதிற்கு தேவன் கட்டளையிட்டார். அப்படியே அவர்களை முறியடித்து விரட்டிவிட்டபோதிலும் அவர்கள் திரும்ப வந்தபோது முந்தின முறையே கையாடும்படியாக தாவீது துணிவுகொள்ளாமல் தேவனுடன் மறுபடியும் விசாரித்தார். யுத்தம் செய்ய தேவன் மற்றொரு உபாயத்தைக் காட்டினார். தாவீதிற்கு பெரிய வெற்றியுண்டாயிற்று. பெலிஸ்தரின் இந்தத் தோல்விக்குப்பின்பு அவர்கள் ஒருக்காலும் தேசத்தில் ஆதிக்கம் பெறவில்லை. தாவீதினுடைய காரியம் ஜெயமாயிற்று. தாக்கப்படக்கூடாத மையஸ்தானமாகிய எருசலேம் தேசத்திற்கு தலைநகரமாக்கப்பட்டது. ஆரம்பத்தில் நகரத்தில் சூழ்ந்திருந்த பாகங்கள் பிடிப்பட்டன. ஆனால் எபூசியர் தங்களுக்கு இருந்த உட்கோட்டையை ஒருவரும் அசைக்கமுடியாது என்று பாவித்து பரியாசமாய் தங்கள் குருடரும் சப்பாணிகளும் அதைப் பாதுகாக்ககூடும் என்றனர். இன்றையவரைக்கும் நாற்பது அடி ஆழமான ஒரு சுரங்கமும், சுவருக்கு புறம்பே ஒரு ஊற்றும் செல்லும் தரைக்கு கீழான அந்தரங்க வழியும் எருசலேம் கோட்டை வெளிப்புறத்திலே காணப்படுகின்றன. யோவாப் இம்மார்க்கமாய்ச் சென்று தன் படை கோட்டையை பிடிக்கும்படியாக உள்ளேயிருந்து கோட்டைக் கதவை திறந்துவிட்டான். குருடர் சப்பாணி போன்ற வார்த்தையானது ஒரு பழமொழியாயிற்று. ஒன்றும் அசாத்தியமானது அல்ல என்பது அதன் பொருளாம். யோவாப் எருசலேமை பிடித்தபடியினாலே படைத்தளபதியாக நியமிக்கப்பட்டான்.

*2 சாமுவேல் 6: 1-10:*

சத்துருக்களை அடக்கி தன் நகரத்தை ஸ்திரப்படுத்தினபின்பு தாவீது மேட்டிமை கொள்ளாமல் நீண்டகாலமாய் நெகிழவிடப்பட்டிருந்த தேவ ஆராதனையை நிலைநாட்ட முயற்சித்தார். பெலிஸ்தியரால் திருப்பியனுப்பப்பட்டதிலிருந்து சுமார் 80 வருடங்களாக பாலயூதா வென்றும் கீரியாத்யாரீம் என்றும் அழைக்கப்படுகின்ற இடத்திலேயே உடன்படிக்கைப் பெட்டி இருந்தது. லேவியரான ஒரு குழுவினர் பெட்டகத்திற்கு பொருப்பாளிகளாய் இருந்தனர். அதை எடுத்துச் செல்வது எப்படி

என்பதை அவர்கள் நன்கு அறிந்திருக்க வேண்டும். எண்ணாகமம் 4-ம் அதிகாரத்தில் பெட்டகத்தை சுமந்து கொண்டு போகும் விதம் வெகு தெளிவாய் விவரிக்கப்பட்டிருக்கிறது. அவர்கள் சாகாதபடிக்கு பரிசுத்தமானவைகளைப் பாராமலும் அதைத் தொடாமலும் இருக்கும்படியாக லேவியர் மூன்றுதடவை எச்சரிக்கப்பட்டிருந்தனர். அவர்கள் பெட்டகத்தை ஒரு வண்டியில் ஏற்றிக் கொண்டுபோனது ஒன்றுமறியாத பெலிஸ்தரைப் பின்பற்றினதாகும். இந்த நாட்களிலேயும் கடவுளை அறியாத விக்கிரக ஆராதனைக் காரர்களுடைய வழிபாடுகளை தங்களை கிறிஸ்தவர்கள் என்று எண்ணிக்கொள்கிற சிலர் செய்கிறார்கள். சிலைகளை சப்பரத்தில் வைத்து இழுத்துக் கொண்டு போகிறார்கள். அல்லது ஒட்டிக் கொண்டு போகிறார்கள். பெட்டகம் கடவுளுடைய சமூகம் அவர்களோடு இருப்பதற்கு புறம்பான ஒரு அடையாளமாய் விளங்கின இது மேன்மையாக மதிக்கப்பட தேவன் அவர்களுக்கு போதிக்க வேண்டும்.

ஊசாவின் மரணம்: ஊசா ஒரு லேவியனானதால் இச்சட்டதிட்டங்களை அறிந்தவனாக இருந்திருக்க முடியும். கடவுளின் ஆசீர்வாதத்தைப் பெற அவருடைய சேவையை அவர் வகுக்கும் முறையில் நாம் செய்ய வேண்டும். அற்பமான கீழ்ப்படியாமையையும் தேவன் மிகவும் பிரதானமாகப் பாவிக்கிறார்.

தாவீது பயமும் சினமும் கொண்டவனாய் ஓபேத் ஏதோம் என்ற லேவியனின் வீட்டில் பெட்டகத்தை நிறுத்திவைத்தான். நல்லகாரியம் தானே செய்தோம், இப்படியாகிவிட்டதே என்ற வருத்தம் தாவீதுக்கு உண்டாயிற்று. அப்படியே நாம் ஊழியம் செய்கிறதிலேயும் நல்லது தானே செய்கிறோம் என்று நம்முடைய விருப்பப் பிரகாரம் சுய ஆவியினால் தூண்டப்பட்டு ஊழியம் செய்யாமல் தேவனுடைய வசனத்தின்படி நாம் நம்முடைய பணிவிடைகளைச் செய்ய வேண்டும். ஊழியத்தை நிறைவேற்ற வேண்டும். அற்பமான கீழ்ப்படியாமையையும், தேவன் பிரதானமாய் பாவிக்கிறார் (IIசாமு. II: 12).

*2 சாமு. 6: 13-23*

ஓபேத் ஏதோம் என்ற லேவியன் வீட்டில் பெட்டகத்தை மூன்றுமாதமாக விட்டிருந்தார்கள். மூன்று மாதங்களாய் அங்கிருந்த காலத்தில் நாசத்தையல்ல, ஆசீர்வாதத்தையே அது கொண்டுவந்தது. கர்த்தர் ஓபேத் ஏதோமையும்,அவன் குடும்பத்தாரையும் ஆசீர்வதித்தார். அதைக் குறித்து முழு விபரம் Iநாளா. 26: 4-8-ல் எழுதப்பட்டிருக்கிறது. அதைக் கண்டு கர்த்தருடைய உத்திரவின்படியே பெட்டகத்தை நகரத்திற்கு கொண்டுவர தாவீது ஏற்பாடு செய்தார். பாடகர் வாத்தியக்கருவிகள் வாசிப்போர்களெல்லாம் சூழ்ந்துவர ஆபத்தின்றி பவனி ஆனது மகா மகிழ்ச்சியோடும் ஆர்ப்பரிப்போடும் எருசலேமுக்குள் பிரவேசித்தது. Iநாளா. 15-ல் தாவீதே அக்குழுவினரை வழிநடத்தினதாகத் தெரிகிறது. ஆட்சிபீடத்தில் தலைவனாக சகலமக்களுக்கும் கீழ்ப்படிதல், தேவதாபக்தி இவற்றிற்கு ஒரு சிறந்த மாதிரியாக தாவீது விளங்கினார். சங்கீதங்கள் 15,25,68,96,105,106,108,132 இவைகள் அநேகமாக இந்த சந்தர்ப்பத்தில் பாடப்பட்டிருக்கலாம். இவ்விசேஷ சமயத்திற்காக இந்த சங்கீதங்கள் ஒரு வேளை தொகுக்கப்பட்டு வரிசை கிரமமாக சொல்லப்பட்டிருக்கலாம். குதுகலமான இவ்வூர்வலத்தை நடத்துகையில் தாவீது தன் இராஜவஸ்திரத்தை களைந்து போட்டார்.

அவர் செய்ததில் தவறு ஒன்றுமில்லை. வேடிக்கையாக இதைச் செய்யாததால் தன் பக்தியின் ஆனந்த பரவசத்தை அவர் வெளிப்படுத்துவது நியாயமான காரியம்தான். வெளியரங்கமான எந்த செயலையும் ஆட்சேபிக்கிற மீகாளைப் போன்ற சிலர் எக்காலத்தும் இருக்கவே இருக்கிறார்கள். ஒருவன் எவ்வளவு மேலே குதித்தெழும்பினாலும் தான் அதற்காக கவலைப்படுவதில்லையென்றும் அவன் தாழ வந்தபின் சீராக நடந்தால் அதுவே போதுமென்றும் D.L. மூடி என்ற பக்தன் பகர்ந்தார். ஆம் வெறும் உணர்ச்சி ததும்பும் மார்க்க சூழ்நிலையை தோற்றுவிப்பதிலும் உத்தம கிறிஸ்தவ நடத்தையே பிரதானம் என்று அதனுடைய அர்த்தமாகும். ஓபேத் IIசாமு 6:11,12 கர்த்தர் ஓபேத் ஏதோமின் வீட்டாரை ஆசீர்வதித்தார். தேவனுடைய பெட்டியை ஓபேத் ஏதோமின் வீட்டில் வைத்தபோது நாசத்தையல்ல ஆசீர்வாதத்தையே கொண்டுவந்தது. இதன் விபரம் 1நாளா. 26;4-8-ல் எழுதப்பட்டிருக்கிறது.

## IIசாமு 7-ம் அதிகாரம்:

பெட்டகத்தைக் கொண்டுவந்து சேர்த்து அதற்கு போடப்பட்ட கூடாரத்தில் அதை வைத்த பின்பு கடவுளுக்கு ஒரு வீட்டைக் கட்ட வேண்டுமென்று தன் அவாவை வெளியிட்டார். தேவன் தாவீதின் வீட்டை நிலைநிறுத்துவதாக வாக்களித்தார். அதாவது தாவீதினுடைய இராஜவம்சம் ஸ்திரப்பட்டிருக்குமென்பதே அதுவாகும். மனிதன் ஆயத்தப்படும்படியாக எத்தனை சமயங்களில் தேவ வெளிப்படுத்துதல் காத்து நிற்கிறது. வரப்போகிற இரட்சகைரைக் குறித்த அறிவிப்பில் தாவீதின் உடன்படிக்கையானது பிரதானமாக விளங்கினது தெரிந்து கொள்ளப்பட்ட வம்சம் என்பது முதலாவது ஆபிரகாம் பிறகு யூதா இச்சமயம் தாவீது ஆகும். இது நிபந்தனையற்றதும் முக்கியமானதுமான ஒரு உடன்படிக்கையாய் இருந்தது. ஏனென்றால் கீழ்ப்படியாமையினால் ஆசீர்வாதத்தை தடுக்கக்கூடாதவராயிருந்த கிறிஸ்துவில் அது நிறைவேற்றப்படுகிறது. அதாவ்து எல்லாக்காரியங்களிலும் பிதாவுக்கு கீழ்ப்படிந்து ஆசீர்வாதத்தை கிறிஸ்து சுதந்தரித்துக் கொண்டார். சிட்சையினிமித்தம் இஸ்ரவேலின் சிங்காசனம் இன்று இருப்பது போல வெறுமையாக இருக்கலாம். ஆனால் ஒருபோதும் அதில் வீற்றிருக்க உரிமையுள்ள ஒருவர் இராமல் போகமாட்டார்.

பல நூற்றாண்டுகளாய் யூத ஜாதி அழியாமல் நிலைத்திருப்பது சரித்திர சம்மந்தமான ஒரு அற்புதமேயாகும். இவ்வுடன்படிக்கையைக் குறித்து மேலும் கூறப்படுவதைக் கவனிக்க ஏசா. 9:6-7 ; எரே. 33:14-22; எசே. 37:24,25 ; ஓசியா. 3:4,5; லூக். 1: 31,32; அப். 2: 30-32 ஆகிய வசனங்களை வாசிக்கவும். அந்த சந்தர்ப்பத்தில் தாவீது 89-ம் சங்கீதத்தை எழுதியிருக்கலாம். மூவாயிரம் வருடங்களுக்கு முன் தாவீதுக்கு அருளப்பட்ட வாக்கானது திரும்ப அரசாளும்படியாய் கிறிஸ்து வருகையில் நிறைவேறும். இந்த வாக்கைப் பெற்ற நாள் தாவீதுக்கு அருளப்பட்ட வாக்கானது திரும்ப அரசாளும்படியாய் கிறிஸ்து வருகையில் நிறைவேறும். இந்த வாக்கைப் பெற்ற நாள் தாவீதுக்கு எவ்வளவு மகத்துவமான நாளாயிருந்தது. ஆம் முடிவில்லாத ஒரு இராஜ்யத்தைக் குறித்து வாக்கு பண்ணுவதற்கு ஒருவனை கண்டடைந்த நாள் தேவனுக்கும் எவ்வளவு மகிமையான நாளாய் இருந்தது!

(தொடரும்)

கர்த்தர் உனக்கு வீட்டை உண்டு பண்ணுவார் - 2 சாமுவேல் 7:11

# திரித்துவம், திரியேகத்துவம்

திரித்துவ சித்தாந்தத்தைப் படிக்கபடிக்க அதன் ஆழம் மாத்திரமன்று அதன் இனிமையும் அதின் அகிலலோக அவசியமும் அதிகமாய் தோன்றும். கிறிஸ்தவ சித்தாந்தத்தில் திருத்துவத்தின் காந்திக்கு மறைவானது ஒன்றுமில்லை என்று சொல்லப்படுவது போல்; வாழ்க்கையின் அனுபவத்தில் திரித்துவத்தின் சித்தாந்தத்திற்கு தப்பினது ஒன்றுமில்லை. வேறுவகையாய் கூறவேண்டுமாயின் தனிமனிதன் தனிசமுதாயம் தனிசபை இவைகளுக்கு எங்ஙனம் திரித்துவ சித்தாந்தம் உதாரணமாயிற்றோ அங்ஙனமே உலகத்திற்கு நிவாரணம் திரித்துவ சித்தாந்த அனுபவமே.

உலகத்தின் சர்வ நிலைக்கும் குறிப்பாக பிளவுபட்ட உலகத்திற்கும் கறைப்பட்ட உலகத்திற்கும் மாறுபட்ட உலகத்திற்கும் நிவாரணம் ஆமென் என்பவரே. ஆமென் என்றபதம் உண்மை எனவும், முடிவு எனவும், அங்கிகாரம் எனவும் பொருள்படும். சத்தியம் என்று அழைக்கப்பட வேண்டிய திரித்துவமும் எல்லாவற்றிற்கும் முடிவு அல்லது நிவாரணம் இருக்கிறவராக இருக்கிற ஆமென் என்பவராகிய பரிசுத்த திரித்துவமும் எல்லாவற்றிற்கும் ஆமென் எனக்கூடிய அங்கீகரிப்பின் ஒரே அதிகாரமுடைய பரிசுத்த திரித்துவமுமே அல்லாமல் உலகிற்கு வேறு நிவாரணம் இல்லை என்பது முடிவு. கிறிஸ்துவே உலக இரட்சகர் கிறிஸ்துவே நிவாரணம். கிறிஸ்துவே ஒளி, கிறிஸ்துவே விடுதலை என்ற தற்கால அகிலலோக மண்டலங்களின் கோஷமும் ஆமென் என்பவரின் தத்துவமும் ஒன்றே. ஆள்த்தத்துவத்தின் ஒருமைப்பாடும் அதின் நிறைவும் அதின் சாராம்சமும் இப்பகுதிக்கு நன்கு பயன் படக்கூடியதாயிருக்கிறது. மனிதன் கடவுளின் சாயலில் உண்டாக்கப்பட்ட நிமித்தம் நான் நானே என்ற ஆள்தத்துவம் அவனுக்கு கடவுளிலிருந்தே உண்டாயிற்று. ஆனால் கடவுளிலிருந்து உண்டாயிருந்த காரணம் பற்றியே அது கடவுளின் ஆள்த்தத்துவத்தினின்று வேறுபட்ட ஆள்த்தத்துவமும் ஆயிற்று. திரித்துவ கடவுள் சித்தம், அறிவு என்பவற்றிலும் அன்பின் தன்னுள்ளேயே சம்மந்தப்பட்டபடியினால் ஏற்பட்டுள்ள அவனின் ஆள்த்தத்துவம், அவரின் சாயலில் சிருஷ்டிக்கப்பட்ட மனுஷனிலும் உண்டாயிற்று. தேவ சாயலில் சிருஷ்டிக்கப்பட்ட மனுஷனிலும் உண்டாயிற்று.

தேவசாயலில் சிருஷ்டிக்கப்பட்டதி னிமித்தம் மனிதன் கடவுளின் அன்பிற்கு செவிகொடுக்கிறவனாகவும் அதை பிரதிபலிக்கிறவனாகவும் காணப்படுகிறான். வெளிப்படுத்தப்பட்ட வார்த்தையாகிய கிறிஸ்துவில் மனிதன் தன் அன்பின் ஒருமைப்பாட்டை உணரக்கடமைப்பட்டான். கடவுளிலிருந்து அன்பைப்பெற்று கடவுளுக்கு அதைச் செலுத்த கடமைப்பட்டவன். கடவுள் அன்பிற்கு உரியவரேயாயினும் திரித்துவ அன்பின் தன்மையோடு தன்னை அவன் ஒப்பிடமுடியாது. அவ்விதம் ஒப்பிடத் துணியும் போது பிரதிபிம்பிப்பது பிரதி பிம்பத்தின் மூலப்பொருளை எதிர்த்து பெருமை கொள்வதே ஒத்ததாகும். மனிதன் நான் நானே என்பது கடவுளின்

மகத்துவத்தோடு சமமாக எண்ணக் கூடாது. கடவுளின் நான் என்பது வேறு மனிதனின் நான் என்பது வேறு. இந்தவேறுபாடு இல்லையாயின் திரித்துவ சித்தாந்தத்தின் அடிப்படையும் மனித சித்தாந்தத்தின் அடிப்படையும் ஒன்றுக் கொன்று முரண்படும். அந்நிலையில் மனிதனின் நான் என்பது மாமிசசிந்தையென அழைக்கப்படும் அது தேவனுக்கு விரோதமான பகை (ரோ8:7). இந்த உண்மை ஏதேனில் ஆதாம் ஏவாள் வாழ்க்கையில் திருஷ்டாந்தப் படுத்தப்பட்டது. கடவுள் இந்த உலகத்தை சிருஷ்டித்தது நல்லது என்று கண்டு ஏதேனை அமைத்து மனிதனை உருவாக்கி ஏதேனில் அவனை மகிழச்செய்தார். சிருஷ்டிப்பின் சாயலும் ஜீவ சுவாசத்தின் தன்மையும் மனிதனை ஏனைய சிருஷ்டிப்பிலிருந்து பிரதிபடுத்திற்று. நீ, நான் என்ற சம்பந்தநிலையை கடவுளின் நான் நானே என்ற ஆள்த்தத்துவ முறையில் மனிதனும் நான் நானே என்ற சார்ந்துள்ள அல்லது அடுத்துள்ள ஆள்த்தத்துவத்தில் சிருஷ்டிக்கப்பட்டான். ஆனால் அனுபவத்தில் மனிதனை எது ஏனைய சிருஷ்டிகளிலிருந்து சிறப்புடைய வனாக்கியதோ அதுவே. மனிதனை கடவுளினின்று அப்புறப் படுத்தும் ஏதுவும் ஆயிற்று.

மனிதன் அவனுக்கு கிடைத்த நான் நானே என்பதின் மூலம் ஏதேனுக்குள் இருக்கக்கூடாமல் கடவுளின் நான், நானே என்பதோடு மாறுபட்டு ஏதேனின் வாழ்க்கைக்கு தன்னை புறம்பாக்கிக் கொண்டான். மனிதனின் நான் நானே என்பது தனக்குள்ளே பிளவுபட்டு மனிதனுக்கும் கடவுளுக்கும் உள்ள சம்பந்தம் குறுகி விகாரப்பட்டு சிதைவுபட்டு அதன் பலனாக மனிதஉள்ள மனிதன், உள்ளமும் மனித உள்ளம் எனப்படுகிற உலகமும் சிதையுண்டது. கடவுள் சாயலில் உண்டாக்கப்பட்ட மனிதன் சிதைந்துபோனான். கடவுளின் வார்த்தையில் உண்டாக்கப்பட்ட உலகம் சிதைந்து போயிற்று. சிதைவுள்ள மனிதன் சிதைப்பட்ட உலகம் சீர்படுமாயின் திரித்துவ சித்தாந்தத்தின் அடிப்படையினிமித்தம் திரித்துவ சித்தாந்தத்தின் நிபந்தனையினிமித்தமும் சுயம்புவாய் சிருஷ்டித்த கடவுள் ஒருவராலேயே அங்ஙனம் ஆக்க முடியும் வேறு எவராலும் சீர்படுத்த முடியாது.

வார்த்தை மாமிசமானார் என்ற யேகோவாவின் வார்த்தையும் கடைசிகால வரை குமாரனின் மூலமாய் என்ற எபிரேய நிருபத்தின் கூற்றும், ஒப்புரவாக்கினார் என்ற பவுலின் கூற்றும் இந்த உண்மையை புதிய ஏற்பாட்டின் குறிப்பில் நன்கு விளக்கிக் கூறப்படுகிறது. ஒப்புரவாக்கப்பட்ட உலகமும் ஆயினும் மனிதன் நான் நானே என்ற ஆள்த்தத்துவத்தினிமித்தம் விகாரப்பட்ட சுயாதீனத்தினிமித்தமும் கண்கள் திறக்கப்படும் தேவர்களைப்போல் இருப்பீர்கள் என்ற உள்ளும் புறம்புமான பகைவனினிமித்தம் உலகம் ஒப்புரவாக்கப் பட்டதிலிருந்து வழிவிலகி இன்றும் சிதைவுற்றிருப்பதை நாம் அறியலாம். உலகம் தீயது என்று கூற முடியாது. திரித்துவ சித்தாந்தத்தின் அடிப்படைக்கு அது மாறானது. ஆனால் சிதைவுபட்ட உலகம் ஆவியின் ஒருமைப்பாட்டினின்று பிரிந்த உலகம் என்று கூறுவோமானால் அது சரியே.

(தொடரும்)

## பரிசுத்த விவாகம்

| மணமகன் | மணமகள் | இடம் | நாள் |
|---|---|---|---|
| V. ஆபேல் | V. பியூலா | புன்னையடி | 10.8.2000 |

# வாருங்கள் போவோம் யோசேப்பினிடத்திற்கு

மக்களுக்கு ஒரே அபிமானம், பெருமை, தங்களுக்கு குறைவு, பற்றாக்குறை இருந்தபோதிலும் வெளிக்காட்டிக் கொள்ளாத அகந்தை. ஒரு வேளை போஜனத்திற்கு கூட வழியில்லாத வருமை இருந்தபோதிலும் பகட்டான ஆடைகளை உடுத்திக் கொண்டு உண்மையை வெளிக் காட்டிக்கொள்ளாத உலகம். இதோ பாருங்கள் ஒரு குடும்பம்: தங்களுக்கு ஆகாரக்குறைவு ஏற்பட்ட வுடனே தன் பிள்ளைகளை தானியம் கொள்ள எகிப்திற்கு அனுப்பும் தாழ்மை சுபாவம்.

எகிப்திலே தானியம் உண்டென்று யாக்கோபு அறிந்து தன் குமாரரை நோக்கி நீங்கள் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக்கொண்டிருப்பது என்ன? எகிப்திலே தானியம் உண்டென்று கேள்விப்படுகிறேன். நாம் சாகாமல் உயிரோடிருக்கும்படி நீங்கள் அவ்விடத்திறக்குப் போய் நமக்காக தானியம் கொள்ளுங்கள் என்றான் ஆதி. 42:1,2. பெரிய குடும்பம், விசுவாசத்தின் தகப்பனாகிய ஆபிரகாமின் சந்ததி. இருந்தாலும் தங்கள் கோத்திரத்தின் பெருமையை காட்டிக்கொள்ளாமல் தானியம் கொள்ள யோசேப்பிடத்திற்கு தம்முடைய பிள்ளைகளை அனுப்புகிறார்.

வசனத்தினுடைய தெளிவான விளக்கம் கிடைக்ககூடாத, ஆவிக்குரிய பஞ்சநிலைமை காணப்படும் காலம். சௌந்தரிய முள்ள கன்னிகைகளும், வாலிபரும் தாகத்தினால் சோர்ந்திருக்கும் சமயம் ஆமோ. 8:11-13. ஒரு சமுத்திரம் தாண்டி மற்ற சமுத்திரத்தண்டை சென்றாலும் உண்மையான வெளிப்படுத்தல் கிடைக்காத கடைசிக் காலத்தில் இருக்கிறோம். ஆகையால் பரிசுத்தாவியானவர் கூறுகிறார்: நீங்கள் ஆவிக்குரிய பஞ்சகாலத்தில் ஒருவர் முகம் ஒருவர் பார்த்துக் கொண்டிருக்கிற தென்ன? தாழ்மைப்பட்டு எகிப்திலுள்ள யோசேப்பினிடத்திற்குச் செல்லுங்கள். பஞ்சகாலத்தில் மக்களை உயிரோடே இரட்சிக்கும்படி அவரை ஏற்படுத்தியிருக்கிறேன். தானியங்களுக்கோ குறைவில்லை என்கிறார். ஆனாலும் மக்களுக்கு தங்களுடைய ஆவிக்குரிய ஈனநிலைமையை ஒத்துக்கொள்ளக் கூடாத அகம்பாவம். நாம் என்ன அவரிடத்திற்கு செல்வது. அவர் நேற்று வந்தவர்தானே? அது இப்பொழுது வந்த சபைதானே? யோசேப்பும் நமக்கும் தெரிந்தவர்தானே என்கிறார்கள்.

· C த வ ன ா ல்

தெரிந்துகொள்ளப்பட்ட திருச்சபையிலே வசன வெளிப்படுத்தலும், புதிய புதிய ஆவிக்குரிய உணவுகளும் நிறைவாக காணப்படுகிறது. தம்மால் தெரிந்து கொள்ளப்பட்ட அப்போஸ் தலரை ஏற்படுத்தி ஆவிக்குரிய போதனைகளை நிறைவாய் அள்ளியருளு கிறார். ஆனாலும், மக்களுக்கு தாழ்மைப் பட்டு அங்கு போக மனமில்லை. நாங்கள் மரித்தாலும் பரவாயில்லை. இருந்த இடத்திலேயே இருப்போம் என்கின்றனர். எங்கள் சபை எத்தனை பழமையான சபை? வீழ்ச்சி ஏற்பட்டிருப்பதைக் கண்ணாரக்கண்டாலும் கர்த்தர் எல்லாவற்றையும் மன்னிப்பார். நாங்கள் தான் மணவாட்டி, நாங்கள்தான் கர்த்தருடைய வருகைக்கு போவோம் என்கின்றனர்.

வாருங்கள் யோசேப்பினிடத்திற்கு: கர்த்தர் அங்கு உங்களை உச்சிதமான

கன்மலையின் தேனினால் திருப்தியாவீர்கள் சங். 81:16. பன்னிரண்டு வயது இயேசுவையும், அவருடைய ஞானத்தையும் கண்டும் ஆவிக்குரிய கண்கள் திறவாமலிருக்கும் குருட்டாட்டம். இவன் தச்சன் அல்லவா? மரியாளுடைய குமாரன் அல்லவா? யாக்கோபு, யோசே, யூதா, சீமோன் என்பவர்களுடைய சகோதரன் அல்லவா? இவன் சகோதரிகளும் இங்கே நம்மிடத்தில் இருக்கிறார்கள் அல்லவா? என்று சொல்லி இடறுகிற பரிசேய, சதுசேயர் அநேகருண்டு மாற். 6:3. குழந்தை இயேசுவின் ஞானத்தையும், பேச்சையும் தேவாலயத்தில் வேதசாஸ்திரி களோடு விராதிக்கிற அறிவையும் கண்டும் கேட்டும் பற்றிக்கொள்ளக் கூடாத தன்மை மக்களிடம் காணப்படுகிறது.

பஞ்சம் மிகவும் கொடியதாயிருக்கிறது. தேசமெங்கும் ஆகாரம் கிடையாமல் போகிறது ஆதி. 47:13. தவறான வெளிப்படுத்தல்களும், கள்ளத்தீர்க்கதரிசனமும், பொய்யான வசன வியாக்கியங்களும் மலிந்துகிடக்கிற கொடிய ஆவிக்குரிய பஞ்சமான காலம். ஆனால் தேவன் சீயோனிலிருந்து வேதத்தையும், எருசலேமிலிருந்து அவருடைய வசனத்தையும் வெளிப்படுத்தி கொண்டுவருகிறார். தெரிந்துகொள்ளப்பட்ட ஜனங்கள் திரள்கூட்டமாய் அவருடைய திருச்சபையை நோக்கி வருகின்றனர் ஏசா. 2:2-3. தேவனுடைய வருகையைக் குறித்தும், மற்றக் காரியங்களைக் குறித்தும் திட்டவட்டமாய் போதித்து தேவன் தம் சரீரமாய் திருச்சபையில் வெளிப்பட்டுக்கொண்டிருக்கிறார். ஆதி. 50:24 யோசேப்பு தம் அந்திய காலத்தைக் குறித்து திட்டவட்டமாய் தீர்க்கதரிசனமாய் அறிவித்து சொன்னது போல தேவன் திட்டவட்டமாய் தம்முடைய காரியங்களை போதித்துக் கொண்டு வருகிறார்.

கண்திறக்கப்படாத குருடராயிருக்கிறவர்களுக்கு வேறு வழியில்லை. அழிவே அவர்களுக்கு நியமிக்கப்பட்டிருக்கிறது. அவர்களுடைய தரித்திரம் வழிப்போக்கனைப் போலவும், அவர்களுடைய வறுமை ஆயுதமணிந்தவனைப் போலவும் வரும் நீதி. 6:11. அவர்கள் புத்திமதிகளை தள்ளினார்கள். ஆகையால் தரித்திரத்தையும் இலச்சையும் அடைவார்கள் நீதி 13:18. அவர்களுடைய ஆவிக்குரிய கண் திறக்கப்பட்டால் ஆகாரத்தால் திருப்தியாவார்கள் நீதி. 20:13. யோசேப்பினிடத்திலிருந்து தானியத்தைப் பெற்று தன் நிலத்தைப் பயிரிடுகிறவர்கள் ஆகாரத்தால் திருப்தியாவார்கள். வீணரைப் பின்பற்றுகிறவர்களோ வறுமையால் நிறைந்திருப்பார்கள் (நீதி. 28:19).

யோசேப்பு என்றால் ஜனங்களை சேர்க்கிறவன் (He shall add) என்று அர்த்தமாம். ஆவிக்குரிய யோசேப்போடு மக்கள் திரள்கூட்டமாய் சேருவார்கள். யோசேப்பினுடைய சந்ததி தன் தகப்பனுடைய சேஷ்டபுத்திரபாகத்தை (Birthright) சுதந்தரித்து கொண்டது போல; ஆவிக்குரிய யோசேப்பை சேர்ந்து கொள்ளுகிறவர்கள் பரம கானானை, விசேஷித்த ஆசீர்வாதத்தை சுதந்தரித்துக் கொள்வார்கள்.

திரளான ஜனங்கள் புறப்பட்டு வந்து: நாம் கர்த்தரின் பர்வதத்துக்கும், யாக்கோபின் தேவனுடைய ஆலயத்துக்கும் போவோம் வாருங்கள்; அவர் தமது வழிகளை நமக்குப் போதிப்பார், நாம் அவர் பாதைகளில் நடப்போம் என்பார்கள்; ஏனெனில் சீயோனிலிருந்து வேதமும், எருசலேமிலிருந்து கர்த்தரின் வசனமும் வெளிப்படும் - (ஏசாயா 2:3)

கன்மலையின் தேனினால் திருப்தியாவீர்கள் சங். 81:16. பன்னிரண்டு வயது இயேசுவையும், அவருடைய ஞானத்தையும் கண்டும் ஆவிக்குரிய கண்கள் திறவாமலிருக்கும் குருட்டாட்டம். இவன் தச்சன் அல்லவா? மரியாளுடைய குமாரன் அல்லவா? யாக்கோபு, யோசே, யூதா, சீமோன் என்பவர்களுடைய சகோதரன் அல்லவா? இவன் சகோதரிகளும் இங்கே நம்மிடத்தில் இருக்கிறார்கள் அல்லவா? என்று சொல்லி இடறுகிற பரிசேய, சதுசேயர் அநேகருண்டு மாற். 6:3. குழந்தை இயேசுவின் ஞானத்தையும், பேச்சையும் தேவாலயத்தில் வேதசாஸ்திரி களோடு விராதிக்கிற அறிவையும் கண்டும் கேட்டும் பற்றிக்கொள்ளக் கூடாத தன்மை மக்களிடம் காணப்படுகிறது.

பஞ்சம் மிகவும் கொடியதாயிருக்கிறது. தேசமெங்கும் ஆகாரம் கிடையாமல் போகிறது ஆதி. 47:13. தவறான வெளிப்படுத்தல்களும், கள்ளத்தீர்க்கதரிசனமும், பொய்யான வசன வியாக்கியங்களும் மலிந்துகிடக்கிற கொடிய ஆவிக்குரிய பஞ்சமான காலம். ஆனால் தேவன் சீயோனிலிருந்து வேதத்தையும், எருசலேமிலிருந்து அவருடைய வசனத்தையும் வெளிப்படுத்தி கொண்டுவருகிறார். தெரிந்து கொள்ளப்பட்ட ஜனங்கள் திரள்கூட்டமாய் அவருடைய திருச்சபையை நோக்கி வருகின்றனர் ஏசா. 2:2-3. தேவனுடைய வருகையைக் குறித்தும், மற்றக் காரியங்களைக் குறித்தும் திட்டவட்டமாய் போதித்து தேவன் தம் சரீரமாய் திருச்சபையில் வெளிப்பட்டுக் கொண்டிருக்கிறார். ஆதி. 50:24 யோசேப்பு தம் அந்திய காலத்தைக் குறித்து திட்டவட்டமாய் தீர்க்கதரிசனமாய் அறிவித்து சொன்னது போல தேவன் திட்டவட்டமாய் தம்முடைய காரியங்களை போதித்துக் கொண்டு வருகிறார்.

கண்திறக்கப்படாத குருடராயிருக்கிறவர்களுக்கு வேறு வழியில்லை. அழிவே அவர்களுக்கு நியமிக்கப்பட்டிருக்கிறது. அவர்களுடைய தரித்திரம் வழிப்போக்கனைப் போலவும், அவர்களுடைய வறுமை ஆயுதமணிந்தவனைப் போலவும் வரும் நீதி. 6:11. அவர்கள் புத்திமதிகளை தள்ளினார்கள். ஆகையால் தரித்திரத்தையும் இலச்சையும் அடைவார்கள் நீதி 13:18. அவர்களுடைய ஆவிக்குரிய கண் திறக்கப்பட்டால் ஆகாரத்தால் திருப்தியாவார்கள் நீதி. 20:13. யோசேப்பினிடத்திலிருந்து தானியத்தைப் பெற்று தன் நிலத்தைப் பயிரிடுகிறவர்கள் ஆகாரத்தால் திருப்தியாவார்கள். வீணரைப் பின்பற்றுகிறவர்களோ வறுமையால் நிறைந்திருப்பார்கள் (நீதி. 28:19).

யோசேப்பு என்றால் ஜனங்களை சேர்க்கிறவன் (He shall add) என்று அர்த்தமாம். ஆவிக்குரிய யோசேப்போடு மக்கள் திரள்கூட்டமாய் சேருவார்கள். யோசேப்பினுடைய சந்ததி தன் தகப்பனுடைய சேஷ்டபுத்திரபாகத்தை (Birthright) சுதந்தரித்து கொண்டது போல; ஆவிக்குரிய யோசேப்பை சேர்ந்து கொள்ளுகிறவர்கள் பரம கானானை, விசேஷித்த ஆசீர்வாதத்தை சுதந்தரித்துக் கொள்வார்கள்.

திரளான ஜனங்கள் புறப்பட்டு வந்து: நாம் கர்த்தரின் பர்வதத்துக்கும், யாக்கோபின் தேவனுடைய ஆலயத்துக்கும் போவோம் வாருங்கள்; அவர் தமது வழிகளை நமக்குப் போதிப்பார், நாம் அவர் பாதைகளில் நடப்போம் என்பார்கள்; ஏனெனில் சீயோனிலிருந்து வேதமும், எருசலேமிலிருந்து கர்த்தரின் வசனமும் வெளிப்படும் - (ஏசாயா 2:3)

# எண்ணங்கள்

எந்த ஒரு மனிதனையும் உருவாக்குவதிலும், அழிப்பதிலும் எண்ணங்கள் அடிப்படைக் காரணமாக அமைகின்றன. நாம் ஒரு செயலையும் செய்வதற்கு எண்ணங்கள் தான் காரணியாக செயல்படுகின்றன. அதாவது, தூண்டுகோலாக அமைகின்றன. மனிதன் தன்னை எதற்கு ஒப்புக்கொடுக்கிறானோ; அதற்கு அடிமையாகக் காணப்படுகிறான் என்று திருவசனம் திருவுளம் பற்றுகிற பிரகாரமாக எந்த ஒரு எண்ணத்தையும் திரும்ப திரும்ப நினைத்துக்கொண்டேயிருக்கும் போது அந்த எண்ணத்திற்கு ஒரு வலு உண்டாகிறது. அது செயல்வடிவம் பெறுகிறது. மந்திர தந்திர சக்திகளுக்கும் மூல காரணி எண்ணங்களே. இதை உருப்போடுதல் என்று சொல்வார்கள்.

பொதுவாக ஒரு செயலை செய்யக்கூடாது என்று சொன்னால்; மனம் அதையே எண்ணிக் கொண்டிருக்கும். மனிதனின் அடிப்படை இயல்பு அவ்வாறாகக் காணப்படுகிறது. ஆதி பெற்றோராகிய ஆதாமுக்கும் ஏவாளுக்கும் கொடுக்கப்பட்ட இரண்டு கட்டளைகளில் நன்மை தீமை அறியத்தக்க விருட்சத்தின் கனியை புசிக்கக் கூடாது என்பதும் ஒன்று. அங்கு ஒரு செயலை செய்வதற்கு கட்டுப்பாடு விதிக்கப்படுகின்றது. இப்படி ஒரு கட்டுப்பாடு விதிக்கப்பட்டவுடன் ஏவாளின் மனமானது புசிக்கக்கூடாது என்று சொன்ன கனியைப் புசித்தால் என்னவாகும் என்று அதைப்பற்றியே எண்ணிக் கொண்டிருந்ததாகத் தெரிகிறது. அந்த எண்ணத்திற்கு ஏற்றாற் போல் அது செயல் வடிவம் பெறுவதற்கு ஏதுவாக ஒரு சூழ்நிலை உண்டாகிறது. ஏவாளுக்கும் சர்ப்பத்துக்கும் இடையே சம்பாஷனை நடைபெறுகிறது. தேவ கட்டளை மீறப்படுகிறது. அதனால் மிகப்பெரிய சாபம் உண்டாகிறது. ஆகவே நாம் தேவனுடைய கட்டளைப் பற்றியோ, பரிசுத்தவான்களின் ஆலோசனையைப் பற்றியோ, மறுபரிசிலனை என்ற எண்ணத்திற்கோ; அதை மீறுவதற்கோ இடம் கொடுக்கக் கூடாது. அப்படி இடம் கொடுப்போமானால் சாத்தான் அதற்கேற்றாற் போல் சூழ்நிலைகளை உருவாக்கி நம்முடைய எண்ணங்கள் சரியானதுதான் என்று அதற்குரிய விளக்கமும் கொடுத்து மிகப்பெரிய பாதிப்பை ஏற்படுத்திவிடும் போது தான் உண்மை புரியும்.

ஆனால் எப்பொழுதும் நல்ல எண்ணங்களை சிந்திப்பவர்களும் தேவனுடைய ஆலோசனைக்கு அப்படியே கீழ்ப்படிந்து நடப்பவர்களும் எந்த ஒரு சூழ்நிலையிலும் பாதுகாக்கப் படுகிறார்கள் என்பதற்கு பக்தனாகிய யோசேப்பு மிகச் சிறந்த உதாரணமானவர். அவருடைய எண்ணமெல்லாம் எப்பொழுதும் தேவனை பிரியப்படுத்த வேண்டுமென்பதே. அவர் பாவம் செய்யும்படியான ஒரு சூழ்நிலையை சாத்தான் உண்டாக்கினான். யோசேப்பின் எஜமாட்டி தன்னுடைய இச்சைக்கு இணங்கும்படி அவரை தினந்தோறும் வற்புறுத்தியும், அவளுடைய கெட்ட எண்ணங்கள் தன் மனதிற்குள் புகாதபடி எப்பொழுதும் தேவனுக்குப் பிரியமான எண்ணங்களை சிந்தித்துக் கொண்டிருந்தார். சூழ்நிலை மிகவும் மோசமாகி அவர் பலவந்தப்படுத்தப்பட்ட பொழுது அந்த இடத்தை விட்டு ஓடிப் போய்

Regd.No. 040088/84
Postal Regd.No. Tech/47-201/MBI/2000
Tamil Monthly Magazine

விட்டார். வரவிருந்த தீமையினின்று இரட்சிக்கப் பட்டார் என்று காண்கிறோம். ஆகவே தேவனுக்குப் பிரியமான எண்ணங்களை உடையவர்கள் எந்த ஒரு சூழ்நிலையிலும் பாவம் செய்யாதபடிக்கு தேவனால் பாதுகாக்கப்படுகிறார்கள் என்பது திண்ணம்.

ஆகவே நாம் நல்ல எண்ணங்களை உருவாக்கி கொள்வது அவசியம். அதிகாலையில் எழுந்து தேவனைப் பாடி மகிமைப்படுத்துகிறோம். வேத வசனங்களை வாசித்து இருதயத்தில் பதிக்கிறோம். தேவனுக்குப் பிரியமாய் ஜெபிக்கிறோம். இப்படி மனமானது அதிகாலையிலேயே பாட்டு, வேதவாசிப்பு, ஜெபம் என்று தேவனுக்குப் பிரியமான எண்ணங்களால் நிரப்பப்படும் பொழுது அந்த நாள் முழுவதும் தேவனுக்குப் பிரியமாய் கழிக்க முடிகிறது. ஆகவே கிறிஸ்தவர்களாகிய நாம் நம்முடைய மனதில் நல்ல எண்ணங்களை உருவாக்கவும், சிந்திக்கவும், செயல்படுத்தவும் முயற்சி செய்து வெற்றியுள்ள கிறிஸ்தவ ஜீவியம் செய்வோமாக.

"சகல எண்ணங்களையும், சகல செய்கைகளையும் நியாயந்தீர்க்கும் காலம் இனி இருக்கிறது." பிர. 3:17.



## அறிவிப்புகள்

**முழு இரவு விழிப்பு ஜெபம்**

*14, வியாழன் (செப்டம்பர் 2000)*
*13, வெள்ளி (அக்டோபர் 2000)*

**புதிய எருசலேம் செய்தி பத்திரிக்கை**

| | |
|---|---|
| ஆண்டு சந்தா | Rs. 30.00 |
| வெளிநாடு ஆண்டு சந்தா | Rs. 400.00 |

**அனுப்ப வேண்டிய முகவரி**

Chief Apostle N.Lazar,
"NEW JERUSALEM CHURCH"
Church Lane, Tilak Nagar,
Darga Cross Road, Sonapur,
Bhandup (W), MUMBAI-400 078

மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா எண்ணைக் குறிப்பிடவும். பழைய சந்தாதாரரா அல்லது புதிய சந்தாதாரரா என்பதையும் குறிப்பிடவும்.

பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதையும் தெளிவாகக் குறிப்பிடவும்.

"புதிய எருசலேம் செய்தி" பத்திரிகை வாங்குவோர் ரூ30 (முப்பது) சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தையும் தெளிவாக கொட்டை எழுத்துகளில் (Capital Letters), M.O. பாரத்தின் செய்திக்காக ஒதுக்கப்பட்ட பகுதியில் (Space for Communication) எழுதிப் பத்திரிகையைப் பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.

Edited, Printed and Published by Chief Apostle N.LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Darga cross rd. Sonapur, Bhandup(W), Mumbai-400 078, India. *Phone: 91-22-5605515; Fax:91-22-5681992; e-mail: njc@vsnl.com*
Printed at New Jerusalem Press, Tilak Nagar, Bhandup, Mumbai-400 078.

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும் அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும் தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும், சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும்படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது (எபே.4:11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசுகிறிஸ்து எனக்கு தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும் கட்டளைகளும் 7 (அப்1: 1-3)" எனக்கு காண்பித்து, கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள்:

1 உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் மத்28:18; மாற். 16:15
2 விசுவாசித்து ஏற்றுக்கொள்ளுகிறவர்களை பிதா, குமாரன், பரிசுத்தாவியின் நாமத்தில் ஞானஸ்நானப்படுத்துங்கள்- மத். 28:19 (இயேசு மாதிரி (Through Action) செய்து காண்பித்தார்
3 திருச்சபையைக் கட்டி (மத் 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள் - மத்28:20
4 அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள் - யோவான் 20: 23
5 அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள் - யோவான். 21 : 15-17
6 இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு - அப் 1 :5-8.
7 நான் வருகிற வரையிலும் என்னை நினைவு கூறும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார் - 1கொரி. 11 : 23 -26

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு(2) என்கின்றனர். வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன். இயேசுவானவர் பிரதியுத்திரமாக: இல்லை அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும் அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப் 1:1, 10: 40-43)

**- Chief Apostle.N.Lazar**

## இதழின் உள்ளே

## ஆசிரியர் உரை



தேவனால் எல்லாம் ஆகும். நம்முடைய இரட்சிப்பு தேவனுடைய கிருபையே. நம்முடைய பரிசுத்தம் தேவனுடைய கிருபையே. நம்முடைய வளர்ச்சி தேவனுடையே கிருபையே. நாம் நிலைநிற்பதும், பூரணமடைவதும், எடுத்துக் கொள்ளப் படுவதும் தேவனுடையக் கிருபையே. தனக்குப் பயந்து தமது கிருபைக்குக் காத்திருக்கிறவர்கள் மேல் தேவன் பிரியமாயிருக்கிறார் என்று சங். 147:11ல் வாசிக்கிறோம். எல்லாம் தேவ கிருபையே. கிருபையின்றி எதையும் நாம் கிறிஸ்துவத்தில் பெற்றுக்கொள்ளமுடியாது, அடைய முடியாது.

கர்த்தருக்கு ஸ்தோத்திரம். தேவன் கிருபையாய் இருக்கிறார். ஒரு தகப்பன் தன் பிள்ளைக்கு இரங்குகிறான். அவன் தவறு செய்து மன்னிப்பு கேட்க்கும் போது எப்போதும் மன்னிக்க ஆயத்தமாயிருக்கிறார். அப்படியே நம்முடைய பரம தகப்பனும் நாம் மன்னிப்பு கேட்கும்போது நம்மை மன்னிக்கவும், இரங்கவும், ஆசீர்வதிக்கவும் ஆயத்தமாக இருக்கிறார். அவர் நம்முடைய பிதா. தேவ கிருபையானது ஏராளமாக பெருகுகிறது. பாவம் பெருகின இடத்திலே கிருபையும் அதிகமதிகமாகப் பெருகிற்று. நாம் கிருபைக்குக் கீழ்ப்பட்டிருக்கிறபடியால் பாவம் நம்மை மேற்கொள்ள மாட்டாது. கிருபை உங்களை நிரப்புவதாக ஆமென்.

*கிறிஸ்துவுக்குள்,*

ஆண்டவரே கிருபையால் நிரப்பும் -

*தலைமை அப்போஸ்தலர்.என்.லாசர்*

# கர்த்தருடைய பட்டயம்

இஸ்ரவேல் மக்களை நியாயம் விசாரித்த நியாயாதிபதிகளில் ஒருவர் பெயர் கிதியோன். இவருக்கு "யெருபகால்" (நியா. 6:32) என்றும், "எருப்பேசேத்" (IIசாமு. 11:21) என்றும் மறு பெயர்கள் உண்டு. இவருடைய காலத்தில் இஸ்ரவேல் மக்கள் பாகால் தேவதையை வணங்கி வந்தார்கள். இதினிமித்தம் மீதியானியரும் அமலேக்கியரும், கிழக்கத்தி புத்திரர் யாவரும் இஸ்ரவேலரை நெருக்கினார்கள் (நியா. 6:33).

இந்நாட்களில் கர்த்தருடைய தூதனானவர் (நியா. 6:12) இஸ்ரவேல் மக்களுக்கு விரோதமாய்க் கூடிவந்த ஜனங்களை மடங்கடித்து, இஸ்ரவேல் ஜனங்களை எதிராளிகளுடைய கரத்திலிருந்து மீட்டு இரட்சிக்கும் படியாகத் தேவனாகிய கர்த்தர் கிதியோனை அனுப்புகிறார். "உன்னை அனுப்புகிறது நான் அல்லவா (நியா. 6: 14) என்று தேவனாகிய கர்த்தர் கூறுகிறார். தேவனாகிய கர்த்தர் தம்முடைய ஜனமாகிய இஸ்ரவேலரைப் பகைவர் களிடமிருந்து மீட்கவும், பாவத்திலிருந்து மீட்டு இரட்சிக்கவும் காலாகாலங்களில் தம்முடைய பக்தர்களை அழைத்து அனுப்பியிருக்கிறார் என்று பார்க்கிறோம்.

அந்தப்படியே தேவனாகிய கர்த்தர் தம்முடைய தாசனாகிய மோசேயை எகிப்துவுக்கு அனுப்பும்பொழுது: "எகிப்திலிருக்கிற என் ஜனத்தின் உபத்திரவத்தை நான் பார்க்கவே பார்த்து, ஆளோட்டிகளினிமித்தம் அவர்கள் இடுகிற கூக்குரலைக் கேட்டேன். அவர்கள் படும் வேதனையையும் அறிந்திருக்கிறேன். நீ இஸ்ரவேல் புத்திரராகிய என் ஜனத்தை எகிப்தி லிருந்து அழைத்து வரும்படி உன்னைப் பார்வோனிடத்திற்கு அனுப்புவேன் வா" (யாத். 3:7-10) என்று கூறினார்.

மேலும் அப்போஸ்தலனாகிய பரிசுத்த பவுலைத் தேவன் தம்முடைய சேவைக்காக அழைத்த போது: "உன் சுய ஜனத்தாரிடத்திினின்றும், அந்நிய ஜனத்தாரிடத்தினின்றும் உன்னை விடுதலையாக்கி, அவர்கள் என்னைப் பற்றும் விசுவாசத்தினாலே பாவ மன்னிப்பையும், பரிசுத்தமாக்கப் பட்டவர்களுக்குரிய சுதந்தரத்தையும் பெற்றுக்கொள்ளும்படியாக, அவர்களைவிட்டு ஒளியினிடத்துக்கும், சாத்தானுடைய அதிகாரத்தைவிட்டு தேவனிடத்துக்கும் திரும்பும்படிக்கு நீ அவர்களுடைய கண்களை திறக்கும் பொருட்டு, இப்பொழுது உன்னை அவர்களிடத்துக்கு அனுப்புகிறேன் என்றார்" (அப். 26: 17–18) என்று வாசிக்கிறோம்.

இப்படியே இந்தக் கடைசி நாட்களிலும், தேவனுடைய ஜனங்க ளோடு போராடுகிற பொல்லாத ஆவியின் சேனைகளோடு (எபே. 6: 12) போராடி யுத்தம் செய்து, தேவனுடைய ஜனங்களை விடுதலைப்பண்ணி, தேவனுடைய ராஜ்யத்தில் சேர்ப்பதற்

காகத் தேவனாகிய கர்த்தர் கிதியோனைப் போன்ற ஒரு பரிசுத்தவானை எழுப்ப வேண்டியது அவசியமாய் இருக்கிறது. இதைக் குறித்து ஏசாயா கூறும்போது: "ஊராய்ஞ்சுகிற ஒரு பட்சியைக் கிழக்கிலிருந்தும், என் ஆலோசனையை நிறைவேற்றும் மனுஷனைத் தூர தேசத்திலிருந்தும் வரவழைக்கிறவராய் இருக்கிறேன்; அதைச் சொன்னேன், அதை நிறைவேற்றுவேன், அதைத்திட்டம் பண்ணினேன், அதைச் செய்து முடிப்பேன்" (ஏசா. 46: 11) என்று கூறுகிறார். தேவனாகிய கர்த்தர் கிதியோனைக் கொண்டு இஸ்ரவேல் மக்களுக்கு இரட்சிப்பை அளிக்க விரும்பின பொழுது இஸ்ரவேலின் சேனைகளுக்குள்: "என்னுடைய கையே என்னை இரட்சித்தது" என்று கூறக்கூடிய பெருமையுள்ளவர்களையும் யுத்தத்தைக் கண்டு பயப்படுகிறவர்களையும் கிதியோனைவிட்டுப் பிரித்துவிடுகிறார் (நியா. 7:2-3).

கிதியோனோடு யுத்தத்துக்குச் செல்லக் கூடியர்களுக்குத் தேவனாகிய கர்த்தர் ஒரு பரீட்சை வைக்கிறார். யுத்த வீரர்களையெல்லாம் தண்ணீரண்டைக்கு இறங்கிப் போகப் பண்ணினார்; அப்பொழுது கர்த்தர் கிதியோனை நோக்கி: தண்ணீரை ஒரு நாய் நக்கும் பிரகாரமாக அதைத் தன் நாவினால் நக்குகிறவன் எவனோ அவனைத் தனியேயும், குடிக்கிறதற்கு முழங்கால் ஊன்றிக் குடிக்கிறவன் எவனோ அவனைத் தனியேயும் நிறுத்து என்றார். தங்கள் கையால் அள்ளி தங்கள் வாய்க்கெடுத்து, நக்கிக்கொண்டவர்களின் லக்கம் முந்நூறு பேர்; மற்ற ஜனங்களெல்லாரும் தண்ணீர் குடிக்கிற தற்கு முழங்கால் ஊன்றிக் குடித்தார்கள். அப்பொழுது கர்த்தர் கிதியோனை நோக்கி: "நக்கிக் குடித்த அந்த முந்நூறு பேராலே நான் உங்களை இரட்சித்து, மீதியானியரை உன் கையில் ஒப்புக்கொடுப்பேன், மற்ற ஜனங்களைத் தங்கள் தங்கள் இடத்துக்கு போகவிடு என்றார்" (நியா. 7: 4-7).

ஏசாயா சொல்லும் பொழுது: "திரளான ஜனங்களுக்கொத்த வெகு கூட்டத்தின் இரைச்சலும், கூட்டப்பட்ட ஜாதிகளுடைய ராஜ்யங்களின் அமளியான இரைச்சலும் மலைகளிலே கேட்கப்படுகிறது; சேனைகளின் கர்த்தர் யுத்த ராணுவத்தை இலக்கம் பார்க்கிறார்" (ஏசா. 13:4) என்று கூறுகிறார்.

தண்ணீரை கையிலே அள்ளி தங்கள் வாய்க்கெடுத்து நக்கிக் கொண்டவர்களின் லக்கம் முந்நூறுபேர். இந்த சிறு கூட்டத்தைக் கொண்டு தேவனாகிய கர்த்தர் மீதியானியரின் பெரிய சேனையை முறிய அடிக்கிறார். இந்த நக்கிக் குடிக்கும் அனுபவம் என்னவென்றால்; இவ்வுலகத்தை அனுபவிக்கிறவர்கள் அதைத் தகாத விதமாய் அனுபவியாதவர்கள் போலவும் இருக்க வேண்டும்" (1கொரி. 7:31) என்று பரிசுத்த பவுல் கூறுகிறார். மேலும் பந்தயத்துக்கு போராடுகிற யாவரும் எல்லாவற்றிலேயும் இச்சையடக்கமுள்ள வர்களாயிருப்பார்கள்" (1கொரி. 9:25) என்றும் பவுல் கூறுகிறார். தண்ணீரைக் கண்டதும் அதின் மேல் ஆசை (விருப்பம்) உண்டாகி முழங்கால் ஊன்றி மண்டியிட்டுக் குடித்தவர்களை யுத்த ராணுவத்தைவிட்டு வெளியே

தள்ளிவிடும்படி கிதியோனிடம் தேவனாகிய கர்த்தர் கூறுகிறார். "தோமா இப்பிரபஞ்சத்தின் மேல் ஆசை வைத்து என்னைவிட்டுப் பிரிந்து போய்விட்டான்" (IIதீமோ. 4:10) என்று பவுலும் கூறுகிறார்.

மேலும் கிதியோன் தன்னோடு சேர்த்துக்கொள்ளப்பட்ட முந்நூறு வீரர்களுக்கும் சில ஆயுதங்களைக் கொடுத்ததாகப் பார்க்கிறோம். "அந்த முந்நூறுபேரை மூன்று படையாக வகுத்து, அவர்கள் ஒவ்வொருவன் கையிலும்; ஒரு எக்காளத்தையும், வெறும்பானையையும், அந்த பானைக்குள் வைக்கும் தீவெட்டிடையயும் கொடுத்தான்" (நியா. 7:16).

எக்காளம்:- இது எதைக்குறிப்பிடுகிற தென்றால், "சத்தமிட்டுக் கூப்பிடு, அடக்கிக் கொள்ளாதே, எக்காளத்தைப் போல் உன் சத்தத்தை உயர்த்தி, என் ஜனத்திற்கு அவர்கள் மீறுதல்களையும், யாக்கோபின் வம்சத்தாருக்கு அவர்கள் பாவங்களையும் தெரிவி" (ஏசா. 8:1) என்று தேவனாகிய கர்த்தர் கூறுகிறார். இன்னும் ஓசியா கூறும் போது, "உன் வாயிலே எக்காளத்தை வை; அவர்கள் என் உடன்படிக்கையை மீறி, என் நியாயப் பிரமாணத்துக்கு விரோதமாய் துரோகம் பண்ணினபடியால், கர்த்தருடைய வீட்டின்மேல் சத்துரு கழுகைப்போல் பறந்து வருகிறான்" (ஓசி. 8:1) என்று கூறுகிறார்.

தேவனுடைய ஜனங்கள் தேவனுடைய கற்பனைகளை மீறிப் பாவம் செய்யும் பொழுது 'சத்துரு தேவ ஜனங்களைத் தாக்குகிறான். ஆகையால் தேவ ஜனங்களின் பாவங்களைக் கண்டும் காணாதவர்கள் போலிராமல்; எக்காளத்தைப் போல் உரத்த சத்தமாய் தேவஜனங்களுக்கு அவர்களுடைய பாவங்களைத் தெரிவித்து அவர்களை பாவ வாழ்க்கையினின்று விடுதலை செய்ய வேண்டும். இதுவே கையில் எக்காளம் வைத்திருக்கும் அனுபவமாகும்.

வெறும்பானை:- "இந்தப் பொக்கிஷத்தை மண்பாண்டங்களில் பெற்றிருக்கிறோம்" (IIகொரி. 4:7) என்று பரிசுத்த பவுல் கூறுகிறார். மண்பாண்டம் அல்லது வெறும்பானை என்பது மனிதனுடைய சரீரத்தைக் குறிப்பிடுகிறது. "இப்படியிருக்க சகோதரரே, நீங்கள் உங்கள் சரீரங்களைப் பரிசுத்தமும், தேவனுக்குப் பிரியமுமான ஜீவ பலியாக ஒப்புக்கொடுக்க வேண்டுமென்று தேவனுடைய இரக்கங்களை முன்னிட்டு வேண்டிக் கொள்கிறேன்" (ரோ. 12:1) என்றும் பவுல் கூறுகிறார். மேலும் பவுல் கூறும் போது: "சாவுக்கேதுவான உங்கள் சரீரத்திலே பாவம் ஆளாதிருப்பதாக" (ரோம. 6:12) என்றும் கூறுகிறார். பாவம் செய்கிறவர்கள் பாவத்துக்கு (பிசாசுக்கு) அடிமைகளாய் இருக்கிறார்கள். அடிமையானவன் தன்னுடைய எஜமானுடன் போராடி ஜெயிக்க முடியாதே. ஆதலால் "இந்த உலகத்தின் அதிபதி வருகிறான், அவனுக்கு என்னிடத்தில் ஒன்றுமில்லை" (யோ14: 30) என்று நமது கர்த்தரும் கூறுகிறார். ஆகையால் வெறும்பானை என்பது சரீரத்தில் பாவம் இல்லாத ஓர் அனுபவமாகும். பாவம் இல்லாத பரிசுத்தவான்களே சாத்தானை ஜெயிப்பார்கள் என்று காண்கிறோம்.

தீவெட்டி:- "சீயோனிமித்தமும், எருசலேமினிமித்தமும் நான் மவுனமாயிராமலும் அதன் நீதி பிரகாசத்தைப் போலவும், அதின் இரட்சிப்பு எரிகிற தீவெட்டியைப் போலவும் வெளிப்படும் மட்டும் அமராமலும் இருப்பேன்" (ஏசா. 62:1) என்று கர்த்தர் கூறுகிறார். தீவெட்டி வெளியரங்கமாய் எரிகிறது போல; விசுவாசிகள், ஊழியர்களுடைய வாழ்க்கைகளும் வெளியேயும் தூய்மையாய் காணப்பட வேண்டும். உள்ளான ஆத்தும இரட்சிப்பு மட்டுமல்ல, ஆவி, ஆத்துமா, சரீரம் முற்றிலும் குற்றமற்றதாய்க் காக்கப்பட வேண்டும் (1தெச. 5:23).

அடுத்து கிதியோன் தன்னுடனுள்ள முந்நூறு பேர்களுக்கும் எப்படி யுத்தம் பண்ண வேண்டுமென்று ஆலோசனைக் கொடுக்கிறார். "நான் செய்வதைப் பார்த்து அப்படியே நீங்களும் செய்யுங்கள். இதோ நான் பாளையத்தின் முன்னணியில் வந்திருக்கும்போது நான் எப்படி செய்கிறேனோ நீங்களும் அப்படியே செய்ய வேண்டும்" (நியா. 7:17) என்று கூறுகிறார். நான் கிறிஸ்துவை பின்பற்றுவது போல நீங்களும் என்னைப் பின்பற்றுங்கள் என்று பவுலடியார் கூறுவதுபோல் இருக்கிறது (1கொ. 11:1). அப்போஸ்தலனாகிய யோவான் கூறும்பொழுது: "நீங்களும் எங்களோடே ஐக்கியமுள்ளவர்களாக வேண்டும். எங்களுடைய ஐக்கியம் பிதாவோடும், அவருடைய குமாரனாகிய இயேசு கிறிஸ்துவோடும் இருக்கிறது; (1யோ. 1: 3) என்று கூறுகிறார். தேவனுடைய மனிதன் என்றால் அவன் தன் தேவனைப் பின்பற்றுகிறவனாய், தேவனோடு ஐக்கியமுள்ளவனாய் இருக்க வேண்டும். அப்பொழுதுதான் அவரைப் பின்பற்றுகிறவர்களும் அவரைப் போல தேவனைப் பின்பற்றுவார்கள் (1கொ. 11:1). ஆனால் இந்நாட்களில் அநேகர் வேறு விதமாக நடக்கிறார்கள்; அவர்கள் கிறிஸ்துவின் சிலுவைக்குப் பகைஞர் என்று கண்ணீரோடு சொல்கிறேன் (பிலி. 3:18) என்று பரிசுத்த பவுல் கூறுகிறார்.

கிதியோன் தன்னுடன் இருந்த முந்நூறுபேரைப் போல இவரும் கையில் எக்காளம், வெறும்பானை, பானைக்குள் வைக்கும் தீவெட்டி ஆகியவைகளோடு காணப்படுகிறார். ஆகையினால் தான் நான் செய்வதுபோல் நீங்களும் செய்யுங்கள் என்று புத்தி சொல்லுகிறார். "நானும் என்னோடே இருக்கும் சகலமானபேரும் எக்காளம் ஊதும்போது நீங்களும் பாளயத்தைச் சுற்றி எங்கும் எக்காளங்களை ஊதுங்கள்" (நியா. 7: 18) என்று கூறுகிறார். இங்கே "எக்காளம் ஊதும் போது" என்றிருப்பது தேவ ஜனங்களை தைரியப்படுத்தி யுத்தத்துக்கு ஆயத்தப்படுத்துகிற ஓர் அனுபவமாகும். அதோடு எதிரிகளின் கூட்டம் பயந்து சிதறி ஓடுவதற்காக ஊதுகிற எக்காளமாகும். தீர்க்கதரிசியாகிய யோவேல் கூறும்பொழுது: "கர்த்தர் தமது சேனைக்குமுன் சத்தமிடுவார்" (யோவே. 2: 11) என்று கூறுகிறார்.

பின்னும் கிதியோன்: "கர்த்தருடைய பட்டயம் கிதியோனுடைய பட்டயம் என்பீர்களாக" (நியா. 7:18) என்றும் கூறுகிறார். இஸ்ரவேல் மக்கள் யுத்தத்துக்குப் போகுமுன்

ஆசாரியர்கள் அவர்களைப் பெலப்படுத்தி அனுப்ப வேண்டும். "நீங்கள் யுத்தஞ்செய்யத் தொடங்கும்போது, ஆசாரியன் சேர்ந்து வந்து ஜனங்களிடத்தில் பேசி: இஸ்ரவேலரே கேளுங்கள்; இன்று உங்கள் சத்துருக்களோடு யுத்தம் செய்யப் போகிறீர்கள்; உங்கள் இருதயம் துவள வேண்டாம், நீங்கள் அவளைப் பார்த்து பயப்படவும், கலங்கவும், தத்தளிக்கவும் வேண்டாம். உங்களுக்காக உங்கள் சத்துருக்களோடே யுத்தம் பண்ணவும், உங்களை இரட்சிக்கவும் உங்களோடே கூடப் போகிறவர் உங்கள் தேவனாகிய கர்த்தர் என்று சொல்ல வேண்டும்" (உபா. 20: 2-4) என்று மோசேயும் கூறுகிறார்.

"நான் பரிசுத்தமாக்கினவர்களுக்கு கட்டளை கொடுத்தேன்; என் கோபத்தை நிறைவேற்ற என் பராக்கிரமசாலிகளை அழைத்தும் இருக்கிறேன். அவர்கள் என் மகத்துவத்தினாலே களிகூறுகிறவர்கள் என்கிறார்" (ஏசா. 13: 3) என்று ஏசாயா கூறுகிறார். தேவனாகிய கர்த்தர் காலாகாலங்களில் தம்முடைய யுத்தங்களை நடத்துவதற்கு, தாம் பரிசுத்தமாக்கின பராக்கிரமசாலிகளையே பயன்படுத்தி இருக்கிறார். அவர்களைத் தம்முடைய பட்டயம் என்றும் கூறுகிறார். "கர்த்தர் வருகிறார்; அவருடைய கோபத்தின் ஆயுதங்களும் தேசத்தை யெல்லாம் அழிக்க, வானங்கவிழ்ந்த கடையாந்திர தேசத்திலிருந்து வருகிறது" (ஏசா. 13: 5) என்று ஏசாயா கூறுகிறார். இந்த இரகசியத்தை கிதியோன் அறிந்திருந்தபடியினாலும், "உனக்கிருக்கிற இந்த பெலத்தோடே போ; நீ இஸ்ரவேலரை மீதியானியரின் கைக்கு நீங்கலாக்கி இரட்சிப்பாய்; உன்னை அனுப்புகிறது நான் அல்லவா" (நியா. 6:14) என்று தேவன் தனக்குச் சொல்லியிருப்பதினாலும்; தேவன் தனக்கு அதிகாரமும், வல்லமையும் கொடுத்திருப்பதை கிதியோன் அறிந்து கொண்டபடியாலும்; "கர்த்தருடைய பட்டயம்" என்று சொல்லும்படியாக தம்முடைய வீரர்களுக்கு கட்டளை கொடுக்கிறார்.

அடுத்தப்படியாக கிதியோனும், அவரோடிருந்த நூறுபேர்களும் தங்கள் கைகளிலிருந்த வெறும்பானையை உடைத்தார்கள். இந்த வெறும் பானையை உடைக்கிற அனுபவம் ஒரு மேலான அனுபவமாகும். பானை உடைந்து போனபிறகு அது ஒன்றுக்கும் உதவாது. அதுபோல தங்கள் வாழ்க்கையை அல்லது சரீரத்தை பரிசுத்தமாய் காத்துக்கொள்வது மட்டுமல்ல, தன்னுடைய வாழ்க்கையை முற்றிலும் தாழ்த்துகிற, தன்னில் ஒன்றும் இல்லை, தன்னால் ஒன்றும் இயலாது. என்று தங்களை நொறுக்கிப் பலிபீடத்தில் வைக்கிற ஓர் அனுபவமாகும். பலிபீடத்தில் வைக்கும் பலி மிருகத்தின் உடல், தோல் உரிக்கப்பட்டு, குடல்கள், குண்டிக்காய் களெல்லாம் வெளியே எடுத்துவிட்டு தூய்மையாக கழுவினாலும், அதன் உடல் சந்து சந்தாக வெட்டப்பட்டு ஒரு உருவமாய் தெரியாதபடி துண்டித்து பலிபீடத்தில் வைக்க வேண்டும். அந்தப் பலியின் மேல் கர்த்தருடைய அக்கினி இறங்கும் (யாத். 29: 17-18; 1இரா. 18:33) "மோவாபின் ராஜாவோடு யுத்தம்பண்ண, இஸ்ரவேலின் ராஜாவும், யூதாவின்

ராஜாவும், ஏதோமின் ராஜாவும் சேர்ந்து போனார்கள்" (IIஇரா. 3:9) இந்த மூன்று ராஜாக்களும் சேர்ந்து மோவாபோடே யுத்தம் செய்து அந்நாட்டு மக்களைக் கொன்று குவிக்கும் பொழுது யுத்தம் மும்முரமாகிறது என்று மோவாபின் ராஜா அறிந்து, "தன் ஸ்தானத்தில் ராஜாவாகப்போகிற தன் ஜேஷ்ட புத்திரனைப் பிடித்து, அலங்கத்தின் மேல் அவனை சர்வாங்கத்தகன பலியிட்டான்; அப்பொழுது இஸ்ரவேலர்மேல் கடுங்கோபம் மூண்டதினால் அவர்கள் அவனைவிட்டுப் புறப்பட்டு தங்கள் தேசத்துக்குப் போய்விட்டார்கள்" (IIஇரா. 3:26-27).

இங்கே இந்த மோவாபின் ராஜா தன் சேஷ்டபுத்திரனைப் பலிசெலுத்து கிறான் தேவனாகிய கர்த்தர் நரபலியை விரும்புகிறவரல்ல. இந்த மோவாபின் ராஜா தன்னைத் தாழ்த்துகிறான். தன் மேன்மையை அழிக்கிறான். இதினிமித்தம் தேவனிடம் இரக்கம் கிடைக்கவும், எதிரிகளின் மேல் கர்த்தருக்கு கடுங்கோபம் உருவாகவும் ஏதுவாகிறது. "கர்த்தருக்கு முன்பாக தாழ்மைப்படுங்கள் அவர் உங்களை உயர்த்துவார்" (யாக். 4:10) என்று யாக்கோபுவும் கூறுகிறார். கிதியோனும் அவரோடிருந்த நூறு பேர்களும் தங்கள் பானைகளை உடைத்ததுபோல மற்ற வீரர்களும் தங்கள் பானைகளை உடைத்து பானைக்குள் வைத்திருந்த தீவெட்டிகளைத் தங்கள் இடது கையிலும் ஊதும் எக்காளங்களை வலது கையிலும் பிடித்துக் கொண்டு "கர்த்தருடைய பட்டயம் கிதியோனுடைய பட்டயம் என்று சத்தமிட்டு அவரவர் தங்கள் நிலையில் நின்றார்கள் அப்பொழுது மீதியானியரின் சேனைகள் சிதறி கூக்குரலிட்டுக்கொண்டு ஓடிப்போனார்கள். அது மட்டுமல்ல, மீதியானியர்: ஒருவர் பட்டயத்தினால் ஒருவரை வெட்டி இப்படியே அவர்களுக்குள் பெரிய அழிவுகள் உண்டாகிவிட்டது (நியா. 7: 19-22).

பானையை உடைத்ததும், இடதுகையிலே தீவெட்டியைப் பிடித்திருந்தார்கள். "எழும்பிப்பிரகாசி; உன் ஒளி வந்தது, கர்த்தருடைய மகிமை உன்மேல் உதித்தது. இதோ, இருள் பூமியையும், காரிருள் ஜனங்களையும் மூடும்; ஆனால் உன்மேல் கர்த்தர் உதிப்பார்; அவருடைய மகிமை உன்மேல் காணப்படும்" (ஏசா. 60:1-2) என்று ஏசாயா கூறுவது போல், பானை உடைக்கப்பட்டதும், மாமிசம் அழிக்கப் பட்டதும் தேவ மகிமை அவனில் வெளிப்படுகிறது. இருள் பூமியை மூடுகிறது. தேவ மகிமை தேவ மக்களை நிரப்புகிறது. இந்த ஒளியைக் கண்டு, தேவ மகிமையைக் கண்டு, இருள் பறந்து போய்விடுகிறது. கிதியோனும் அவருடைய ஆட்களும் தீவெட்டிகளைப் பிடித்துக்கொண்டு, எக்காளத்தை ஊதிக் கொண்டு தங்கள் நிலைகளிலே நிற்கிறார்கள். இவர்களில் வெளிப்படுகிற வெளிச்சமானது, தேவ மகிமையானது, இருளை துரத்துகிறது. பகைவர்கள் சிதறடிக்கப்படுகிறார்கள். அவர்களே ஒருவரையொருவர் அழித்துக் கொள்கி றார்கள். "ஒருவன் ஆயிரம்பேரைத் துரத்துவான்; இரண்டுபேர் பதினாயிரம் பேரை துரத்துவார்கள் என்றும், "ஐந்துபேர் நூறுபேரை துரத்துவார்கள்,

உங்களில் நூறுபேர் பதினாயிரம்பேரை துரத்துவார்கள்; உங்கள் சத்துருக்கள் உங்களுக்கு முன்பாக பட்டயத்தால் விழுவார்கள் (உபா. 32: 10, லேவி. 26:78) என்றும் கர்த்தருடைய வார்த்தை கூறுகிறது.

இப்படியே இந்தக்கடைசி காலத்திலும், "மாம்சத்தோடும் இரத்தத்தோடுமல்ல, துரைத்தனங்களோடும், அதிகாரங்களோடும், இப்பிரபஞ்சத்தின் அந்தகார லோகாதிபதியோடும், வான மண்டலத்திலுள்ள பொல்லாத ஆவிகளின் சேனைகளோடும் நமக்குப் போராட்டம் உண்டு" (எபே. 6:12) என்று வேதம் கூறுகிறது. இந்நாட்களிலும் தேவன் தாம் பரிசுத்தமாக்கின ஒருவரை எழுப்பி அவருடன் ஒரு கூட்டம் பரிசுத்தவான்களையும் எழுப்பி; தேவ ஜனங்களுக்கு விரோதமாய் எழும்பும் போராட்டங்களில் யுத்தம் செய்து தேவ ஜனங்களைப் பாதுகாக்கத் தேவன் விரும்புகிறார். "நான் பரிசுத்தமாக்கினவர்களுக்குக் கட்டளை கொடுத்தேன்; என் கோபத்தை நிறைவேற்ற என் பராக்கிரமசாலிகளை அழைத்துமிருக்கிறேன்" (ஏசா. 13:3) என்று தேவனாகிய கர்த்தர் கூறுகிறார்.

"வான மண்டலத்திலுள்ள பொல்லாத ஆவிகளின் சேனைகளோடு நமக்குப் போராட்டம் உண்டு" என்று பவுல் கூறுகிறார். "வானத்திலே யுத்தம் உண்டாயிற்று; மிகாவேலும் அவனைச் சேர்ந்த தூதர்களும் வலுசர்ப்பத்தோடே யுத்தம் பண்ணுகிறார்கள்; வலுசர்ப்பமும் அதைச் சேர்ந்த தூதர்களும் யுத்தம் பண்ணியும் ஜெயங்கொள்ளவில்லை, வானத்திலே அவர்கள் இருந்த இடம் காணப்படாமற்போயிற்று" (வெளி. 12: 7-8) என்று அப்போஸ்தலனாகிய யோவான் கூறுகிறார். இங்கேயும் கிதியோனைப் போன்ற ஒரு பரிசுத்தவானையும், அவரோடே சேர்ந்த ஒரு கூட்ட பரிசுத்தவான்களையும் கொண்டு வான மண்டலத்தில் ஓர் யுத்தம் நடைபெறவிருக்கிறது. சேனைகளின் கர்த்தர் யுத்த ராணுவத்தை லக்கம் பார்க்கிறார் (ஏசா. 13: 4).

கர்த்தருடைய பட்டயம் கிதியோனைப் பயன்படுத்தினதுபோல் இந்தக் கடைசி நாட்களிலும் தேவனாகிய கர்த்தர் ஒரு பரிசுத்தவானைத் தமது பட்டயமாக எடுத்துப் பயன்படுத்தப் போகிறார். இந்தப் பட்டயமே வான மண்டலத்திலுள்ள பொல்லாத ஆவிகளுடன் யுத்தம் பண்ணி அவைகளைக் கீழே விழத்தள்ளப் போகிறது. "வானங்களிலே என் பட்டயம் வெறி கொண்டது" (ஏசா. 34:5) என்று சேனைகளின் கர்த்தர் கூறுகிறார். "கர்த்தருடைய பட்டயம் கிதியோனுடைய பட்டயம்" (நியா. 7:18) என்று கூறின முந்நூறு பேர்களைப் போல், ஒருமனமுள்ள பரிசுத்தவான்களைத் தேவன் எழுப்பி, தேவ ஜனங்களுக்கு விரோதமாய் போராடுகிற எல்லாத் தீமைகளையும் கர்த்தர் அழித்து, தேவ ஜனங்களைத் தேவனுடைய ராஜ்யத்தில் கொண்டு சேர்க்கப் போகிறார். அல்லேலுயா!!



# வேத பாடம்

(2 சாமுவேல் 8 வது அதிகாரம் முதல் 12 வது அதிகாரம் வரை)

*2 சாமுவேல் (8:1 முதல் 10:19 முடிய)*

தாவீது சென்ற இடமெல்லாம் கர்த்தர் அவனுக்கு வெற்றி தந்தார் என்று இந்நிருபத்தில் எழுதப்பட்டுள்ளது. உலக முழுவதற்கும் ஆசீர்வாதமாக விளங்கக்கூடிய ஜனத்தாரைப் பாதுகாக்கும்படி சத்துருக்களுடன் தாவீது சண்டைபண்ண நேரிட்டது. தம் ஜனம் அனைத்துக்கும் நியாயமும் நீதியும் செய்தார் என்று தாவீதைக் குறித்து சொல்லப்பட்டுள்ளது. தாவீது வாழ்ந்த அந்த இருண்ட காலத்தில் தாவீது தெய்வீகத்தில் முன்னேறுகிறதைக் காண்கிறோம். தாவீதின் சிநேகிதனாகிய யோனத்தானின் மகன் மேவிபோசேத்துக்கு அவன் காட்டின கருணையானது, பாவிகளுக்கு தேவன் காட்டும் கிருபைக்கு அழகான எடுத்துக்காட்டாக இருக்கிறது. 'தேவன் நிமித்தம் நான் சவுலின் குடும்பத்தாருக்குத் தயை செய்யும்படி அவன் வீட்டாரில் யாதொருவன் இன்னும் மீதியாய் இருக்கிறானா?' என்று, தாவீது கேட்ட கேள்வியானது, கிறிஸ்துவினிமித்தம், தயை செய்வதற்கு இன்னும் விழுந்து போன ஆதாமின் சந்ததியில் யாராவது உண்டா என்று தேவன் கேட்பதற்கு ஒப்பாக இருக்கிறது. சுவிசேஷ செய்திக்கு இது ஒரு அருமையான எடுத்துக்காட்டாகக் காணப்படுகிறது. புகழ்பெற்ற வேந்தனாகத் திகழும் வேளைகளிலும் தாவீது பல யுத்தங்களில் ஈடுபட நேரிட்டது.

இனி சத்துரு யுத்தம் செய்யாமல் விட்டுவிடுவான் என்று கிறிஸ்தவன் ஒரு போதும் எதிர்பார்த்தல் கூடாது. 'மோட்ச பிரயாணம்' என்ற புஸ்தகத்தில் கிறிஸ்தியான் என்பவர் உச்சித பட்டணத்திற்கு சமீபித்து வந்தபின்பும் ஆபத்துக்குள்ளாகக் கூடியவராக இருந்தார். சிலர் நம்மைப் பார்த்து சிரித்துவிடக்கூடாது. அவர்கள் கோபம் கொண்டால் நமக்கு யோகம் அடிக்கிறது. சத்துருவுக்கு விரோதமாக எப்போதும் நாம் யுத்தம் செய்கிறவர்களாகக் காணப்படவேண்டும்.

*2 சாமுவேல் 11:1 முதல் 12:31 முடிய (தாவீதின் பாவமும் மனந்திரும்புதலும்):-*

அனுபவமுள்ள விசுவாசிகள், போதகர்மார்கள், கிறிஸ்தவ தலைவர்கள், இவர்களெல்லாரையும் பயங்கரமான பாவம் தொடக்கூடும் என்று இந்த வேதபாகம் எச்சரிப்பாக எழுதப்பட்டுள்ளது. வேதம் உண்மையுள்ள சரித்திரமாக இருப்பதால், தாவீதின் பாவத்தை மறைக்காமல் அதை வெளிப்படுத்துகிறது. ஏனைய மன்னர் இப்படிப்பட்ட காரியங்கள் எத்தனையோ செய்திருக்கின்றனர். தாவீதை சாத்தான் யுத்தத்தில் தோல்வியுற செய்யக்கூடாமல்போனபடியால் அவனை மாம்ச இச்சைக்குட்படுத்திக் கெடுத்தான் என்று இதன் மூலம் அறிகிறோம். இப்பாவத்திற்கு சாக்குப்போக்கு யாதுமில்லை. தாவீதுக்கு மறுமனையாட்டிகள் இருந்தும், பத்சேபாள் மற்றொருவன் மனைவி என்று அறிந்தும் அவளைப் படைத்துக் கொண்டது முறையல்ல. தாவீதை பத்சேபாள் வீழ்த்தினாள் என்று நம்பலாம். தாவீது ஒரு நாள் தூங்கிய பின்பு சோம்பலாக வீட்டு மாடியின் மேல் உலாவி கொண்டிருந்தார் அவர் யுத்தத்தில் தன்

படையோடு இருக்க வேண்டிய வேளையாகும். அப்படியல்லாமல் சோம்பலாக இருந்ததினால் அரண்மனைப்பக்கத்தில் தாவீது காணும்வண்ணமாக ஒரு ஸ்திரீ அரை ஆடையில் குளித்துக் கொண்டிருந்ததினால் தாவீது கவர்ச்சிக்கப்பட்டு, அவளை அழைத்து தன்னுடைய மனைவியாக எடுத்துக் கொண்டதாகத் தெரிகிறது. ஏனென்றால் அவள் தாவீதினிடம் சேரும்பொழுது தாவீதினிடமிருந்து சில வாக்குகளையும் வாங்கிக் கொண்டாள் என்று அறிகிறோம். அந்த ஸ்திரீ கர்ப்பம் தரித்து, தான் கர்ப்பவதி என்று தாவீதுக்கு அறிவக்கும்படி ஆள் அனுப்பினாள் (2சாமு. 11:15). தாவீதுக்குப் பின்பு ராஜாவை ஏற்படுத்த வேண்டும் என்ற நிலமை உண்டான போது பத்சேபாள் உட்பிரவேசித்து 'என் ஆண்டவனே, எனக்குப் பின் உன் குமாரனாகிய சாலமோன் ராஜாவாகி, அவனே என் சிங்காசனத்தின் மேல் வீற்றிருப்பான் என்று நீர் உம்முடைய தேவனாகிய கர்த்தரைக் கொண்டு, உமது அடியாளுக்கு ஆணையிட்டீரே' என்று சொல்லுகிறாள். எனவே தனக்குப் பிறக்கும் பிள்ளையை ராஜாவாக்க வேண்டும் என்று ஒரு ஒப்பந்தமும் பண்ணியிருந்ததாக நாம் இதன் மூலம் அறிந்து கொள்கிறோம்.

அநேக பரிசுத்தவான்கள் இவ்விதமாக ஸ்திரீகளால் விழத்தள்ளப்பட்டதாகக் காணப்படுகிறது. தாவீதின் பாவத்துக்கு பத்சேபாளும் காரணம் என்பதை மறந்து விடக் கூடாது. அடிக்கடி பரிசுத்தவான்களிடத்தில் போய் நெருங்கி பழகி அவ்விதமாக வீழ்ச்சி உண்டாக ஸ்திரீகள் நடக்கலாம். துறவிகளாயிருக்கிற ஊழியர் அநேகர் வீழ்ந்து போவது இப்படியே. துறவிகள் இருக்கிற இடத்திலே கன்னியாஸ்திரீகளையும், பெண்களையும் வைப்பதினால் தவறுண்டாகும். அதனால் கர்த்தருடைய மார்க்கம் தூஷிக்கப்படும். தூஷிக்கப்பட்டும் வருகிறது; நாம் எச்சரிக்கையாக இருப்போமாக.

தேசத்தலைவனைப் பார்க்கிலும் உரியாவுக்கு கடமை உணர்ச்சி அதிகமாக இருந்தது. உரியா ஒரு உண்மையான வீரன். தன் நோக்கம் கைகூடும் படியாக தாவீது வெகு சாமர்த்தியமாக காரியங்களை நடப்பித்தான். பத்சேபாள் அவனுடைய மனைவியானாள். ஒரு பாவம் மற்றொரு பாவத்தைப் பிறப்பிக்கிறது. அவனது முதல் பொல்லாப்பை மறைக்க முயற்சித்ததில் தாவீது ஒரு கொலைக்குற்றம் செய்ய நேர்ந்தது. ஆனால், தாவீது செய்த காரியம் கர்த்தருடைய பார்வையில் குற்றமாக எண்ணப்பட்டது. அந்நாட்களில் தாவீதின் இருதயம் எப்படியிருந்தது என்பதை சங்கீதம் 32:3,4 புலப்படுத்துகிறது. தன்னிஷ்டப்பிரகாரமாகவே தாவீது நடந்தார். ஆனால் தன் மனச்சாட்சியின் சத்தத்துக்கு செவி கொடாமற்போனதினால் இரட்சிப்பின் சந்தோஷத்தை இழந்துவிட்டார். தீர்க்கத்தரிசியாகிய நாத்தானோ அரசனின் பாவத்தைக் கண்டிக்கப் பயப்படவில்லை. இதன் மூலம் தாவீது முழு இருதயத்தோடும் மனந்திரும்பினார். தன் பாவத்தை ஒத்துக்கொண்டார். பாவ மன்னிப்புக்காகக் கெஞ்சினார். தேவ சிட்சையைத் தாழ்மையோடு தாங்கிக்கொண்டார். சபை சிட்சை நடந்தால் தன் குற்றத்தை ஒத்துக்கொண்டு தங்களுக்கு .விதிக்கப்பட்ட தண்டனை நியாயம் என்று ஏற்றுக்கொள்கிறவர்கள் ஆசீர்வதிக்கப்படுவார்கள்; நீடித்த நாளாய் சபையிலே இருப்பார்கள். மற்றவர்கள் மனந்திரும்புவதில்லை; இரட்சிப்பின் சந்தோஷத்தை அடையக்கூடாமற் போகிறார்கள்.

சங் 51ல் தாவீதின் இருதயம் வெளியரங்கமாவதும், தேவாசீர்வாதம் திரும்ப அவருக்கு அருளப்படுவதுமாகத் தென்படுகிறது. பாவத்தில் விழாதவர்கள் விழிப்பாயிருக்கும்படியும், பாவம் செய்தவர்கள் நம்பிக்கை இழக்காதபடிக்கும் தாவீதின் வீழ்ச்சியானது உதவும் என்று அனேக நூற்றாண்டுகளுக்கு முன் பரி.அகஸ்டின் உரைத்தார். பாவங்களை தேவன் நமக்கு மன்னிப்பதானது, மீண்டும் நம்மை அவருடன் ஐக்கியப்படச் செய்கிறது.

பரம தகப்பனாகிய கடவுளுடன் பிரத்தியட்சமாகச் சேர்வதை ஒருவரும் தடுக்க முடியாது. ஆனால் நமது மீறுதல்களின் புறம்பான பலாபலன்கள் அதனால் ஒழிந்து போவதில்லை. பெரும்பாலும் அவற்றை நாம் அனுபவிக்க நேரிடும். தன் தாய்க்குக் கீழ்ப்படியாமல் மரத்தில் ஏறும் சிறுவன் கீழே விழுந்து காலை ஒடித்துக் கொள்கிறான். பின் தன் தாயின் மடியில் சார்ந்து மனஸ்தாபக் கண்ணீர் சொரிகிறான். அவனுடன் சேர்ந்து வேதனைப்படுபவளாக அவள் உடனே குற்றத்தை மன்னிக்கிறாள். ஆனால் அவனுடைய காயங்களால் திரும்பவும் அவன் விளையாட வெகுநாள் செல்கிறது. அந்த விபத்தின் காரணமாய் ஒரு வேளை தன் ஜீவியக்காலமெல்லாம் நொண்டியாகக்கூடும். கீழ்ப்படியாமை சீக்கிரம் மன்னிக்கப்பட்டாலும் சரீரத்தின் விளைவு நிரந்தரமாக இருக்கிறது. இப்பாவத்தினிமித்தமாய் தாவீது தனது குடும்பத்திலும் ஜனங்கள் மத்தியிலும் அனுபவித்த பலாபலன்களை நாம் சீக்கிரத்தில் காண்போம். இப்பொல்லாப்பினிமித்தம் விரோதிகள் இன்றையவரைக்கும் தேவனைத் தூஷிக்கிறார்கள்.

# திரித்துவம், திரியேகத்துவம்

யோவான் சுவிசேஷத்தில் நமது ஆண்டவரின் மகா பிரதான ஆசாரிய மன்றாட்டில், 'நீர் எனக்குத் தந்தவர்கள் நம்மைப்போல் ஒன்றாயிருக்கும்படிக்கு' (யோ. 17:11) என்று கூறப்பட்ட வார்த்தைகள் மகா ஆழமானவை. சீஷர்களின் ஒருமைப்பாடு கடவுளின் ஒருமைப்பாட்டைப் பொருத்ததே. கடவுளில் ஒருமைப்பாடு இல்லா விட்டால், மனிதனில் ஒருமைப்பாடு பூரணமடையாது மனிதனில் ஒருமைப் பாடு இல்லாவிட்டால் குடும்பத்தில் ஒருமைப்பாடு கிடையாது. குடும்பத்தில் ஒருமைப்பாடு இல்லாவிட்டால் சமூகத்தில் ஒருமைப்பாடு இல்லை. சமூகத்தில் ஒருமைப்பாடு இல்லா விட்டால் உலகத்தில் ஒருமைப்பாடு முடியாது. ஆகையால் உலகின் ஒருமைப்பாடு கடவுளின் ஒருமைப்பாட்டி லேயே வெளியாக வேண்டும். அவ்வெளிப்பாட்டிலே கட்டப்பட வேண்டும். அவ்வெளிப்பாட்டிலே வளர வேண்டும். திரித்துவ ஒருமைப்பாட்டின் வெளிப்பாடே மற்றெல்லா ஒருமைப்

பாட்டிற்கும் லட்சிய மூலம்.

இக்காலத்தில் பிளவுபட்ட உலகத்தின் தீமையை அறிந்ததின் பலனாக யாவும் உலக நோக்கு என்ற முறையில் நிறைவேற்ற முயற்சி எடுக்கப்படுகிறதை நாம் காண்கிறோம். அகில லோக முயற்சி, அகில லோக சபை, அகில லோக மாநாடு என யாவும் விரிந்த நோக்கோடு நிறைவேற்றப்படுகின்றன. அகிலலோக நோக்கு என்ற தொடரின் மூல அடிப்படைப் பதம், மக்களால் நிறைந்த பூமி (The inhabited earth) என்றே கூறப்படும். அப்பொருளுக்கு தெய்வீக அடிப்படை: தேவனாகிய பிதா, தேவனாகிய குமாரன், தேவனாகிய பரிசுத்தாவி என்ற திரியேக சித்தாந்த அனுபவமே.

ஊன்றிப்படிக்குங்கால், வாழ்க்கை எனப்படுவது, கிறிஸ்தவ வாழ்க்கையாயினும், ஏனைய எத்தகைய வாழ்க்கையும் திரித்துவ சித்தாந்தத்திற்கு உட்பட்டனவே. இதற்கு மாறான கிறிஸ்தவமும், கிறிஸ்தவம் எனப்படாது. இதற்கு மாறான எந்தப் போதனையும் போதனை எனப்படாது. திரித்துவத்தில் இணைந்து, பொதிந்து, மறைந்த அனுபவத்தில் மாத்திரமே வெளிப்பட்டு காணப்படுவது அன்பு எனப்படும். திரித்துவ சித்தாந்தத்தில் அன்பர் என்று சொல்லப்பட்டால் அது மிகையாகாது. அந்த அன்பு, அன்பரே உலகத்தில் ஆதியும் அந்தமும், அல்பாவும், ஒமேகாவும், இருந்தவராகவும், இருக்கிறவராகவும், வந்தவராகவும், வருபவராகவும் காணப்படுகிறார். பிதாவையும், குமாரனையும், பரிசுத்தாவியாகிய தேவனையும் ஆராதிக்கிறோம். தேவனே உம்மைத் துதிக்கிறோம். உம்மைக் கர்த்தர் என்று பிரஸ்தாபப்படுத்துகிறோம். பிதாவாகிய உம்மை பூமண்டலங்களெல்லாம் வணங்கும். பிதாவாகிய தேவனுடைய அன்பும், கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் கிருபையும், பரிசுத்த ஆவியின் ஐக்கியமும் நம் அனைவரோடு கூட எப்போதும் இருப்பதாக.

திரித்துவ உபதேசத்தை ஏற்றுக் கொள்ளாதவர்களுக்குப் பரிசுத்தம் உண்டாகாது. திரித்துவ உபதேசத்தை மறுக்கிறவர்கள் இந்நாட்களில் முழுக்க முழுக்க பாவத்தில் இருப்பதைப் பார்க்கிறோம். ஒரு சித்தாந்தம், ஒரு கொள்கை மனிதனிலே என்ன நடப்பிக்கிறது என்பது தான் முக்கியம். இயேசுவின் நாமம், இயேசுவின் நாமம் என்று சொல்லிக் கொண்டு, ஏசுகிற நாமமாக அனேகர் அலைகிறார்கள். பிறரை ஏசுகிறதில் அவர்கள் தீவிரமாக ஈடுபடுவதை நாம் பார்க்கிறோம். அது ஒரு அசுத்த ஆவியே. ஒருவன் சொல்வது உண்மை, சத்தியம் என்றாலும் அதை அன்போடு, பணிவோடு சத்தியத்தைத் தான் சொல்லவேண்டும்; அதை மறுப்பவர்களை தூஷிப்பது அசுத்த ஆவியே. நாமோ பிதாவைத் தொழுது கொள்கிறோம், குமாரனைத் தொழுது கொள்கிறோம், பரிசுத்த ஆவியைத் தொழுது கொள்கிறோம். ஞானஸ்நானத்தின் போது பிதாவுக்கும், குமாரனுக்கும், பரிசுத்த ஆவியானவருக்கும் ஒரு ஆத்துமாவை ஒப்புக் கொடுக்கிறோம் ஒரு ஆத்துமாவின் இரட்சிப்பிலேயும், வளர்ச்சிலேயும், பரிசுத்தத்திலேயும் பிதாவும், குமாரனும், பரிசுத்தாவியானவரும் இடைபடுகிறார்

கள் பிதா, குமாரன், பரிசுத்தாவியின் நாமத்தினாலே ஞானஸ்நானம் கொடுங்கள். கர்த்தர் நம்மெல்லாரோடும் கூட இருப்பாராக. திரித்துவம், திரியேகத்துவம் இத்துடன் நிறுத்தப்படுகிறது. தேவையான பொழுது திரும்பவும் இதை நாம் தியானிப்போமாக. தேவ கிருபை நம் அனைவரோடு கூட இருப்பதாக ஆமென்!!

# வாலிபர் எழுந்து சிலம்பம் பண்ணட்டும்

வாலிபக் காலம் ஒவ்வொருவர் வாழ்க்கையிலும் மிக முக்கியமான பங்கு வகிக்கிறது. உலகத்தைக் கலக்கிய மாவீரர்களாகட்டும், ஆவிக்குரிய மண்டலத்தை அதிரவைத்த பரிசுத்தவான்களாகட்டும், அவர்களெல்லாரும் தங்களுடைய வாலிப காலத்தில் சந்தித்த சோதனைகளும், சாதித்த சாதனைகளும் ஏராளம், ஏராளம். தங்களுடைய பாதையில் எத்தனை தடைகள் வந்தாலும் அத்தனையையும் உடைத்தெறிந்து வெற்றி ஏன்ற இலக்கை அடையும் எண்ணத் துணிவு உள்ள காலம் தான் வாலிபக்காலம். இமயமலை சிகரத்தை எட்டிப்பிடிக்க வேண்டுமோ, இந்துமாக் கடலை நீந்திக்கடக்க வேண்டுமோ என்று எல்லாவற்றையும் சாதிக்கத் துடிப்பது தான் வாலிபக்காலம். சாதனைகளைப் படைக்கவும், சாதனைகளை முறியடிக்கவும், எல்லா சாதனைகளையும் தானே செய்திட வேண்டும் என்கிற ஏற்றமிகு எண்ணங்களும் உருவாகும் காலம் தான் வாலிபக்காலம். இப்படிப்பட்ட வலிமையான வாலிப காலத்துக்குள்ளாய் கடந்து வரும் அருமையான வாலிபர்களை ஆவிக்குரிய பாதையில் திருப்பி விட்டால் இந்த உலகமென்ன, இதைப் போல ஈரேழு உலகங்கள் இருந்தாலும் அவற்றையெல்லாம் இயேசு கிறிஸ்துவின் பக்கம் திருப்பிக்காட்டுவார்கள் வாலிபர்கள்.

இந்திய தேசத்தில் வாலிபர்களின் நிலை மிகவும் கவலைக்கிடமாக மாத்திரமல்ல கேள்விக்குறியாகவும் உள்ளது. ஏனெனில் ஆவிக்குரிய பார்வையற்றவர்களாய் உலகக் காரியங்களுக்காய் தங்கள் முழு பலத்தையும் செலவழித்து, அதிலும் திருப்தி ஏற்படாத திரிசங்கு நிலையில் உள்ளார்கள். மீட்டாத வீணை, மணம் தராத மல்லிகை, பாடாத குயில் இருந்து என்ன பிரயோஜனம். அப்படியே தேவனுக்கு பிரயோஜனம் இல்லாத வாலிபக்காலமும் வீணே. கிறிஸ்தவப் பெற்றோர்களும் தங்கள் பிள்ளைகளை சரியானபடி கிறிஸ்துவுக்குள் வழி நடத்தாமல் பின்னாளில் பெரும் இன்னல்களுக்கு உள்ளாகிறார்கள். கழுவப்பட்ட பன்றி சேற்றில் புரள்வது போல அநேக கிறிஸ்தவ வாலிபர்கள் இன்று அரசியல் என்ற சாக்கடையில் சின்னாபின்னமாகிக் கொண்டிருக்கி

றார்கள். மனிதர்கள் இறைவனைக் கண்டு கொள்ளும்படியாக பலவிதமான மார்க்கங்களை பின்பற்றுகிறவர்களாகக் காணப்படுகின்றனர். ஆனால் கிறிஸ்துவ மார்க்கத்தைத் தவிர மற்ற மதங்களில் உள்ளவர்கள் எந்த ஒரு நம்பிக்கையும் இல்லாதவர்களாக காணப்படுகின்றனர். கிறிஸ்தவர்கள் இறைவனாகிய இயேசு கிறிஸ்துவின் இரண்டாம் வருகையில் எடுத்துக் கொள்ளப்படுவோம் என்னும் விசேஷித்த நம்பிக்கையோடு காணப் படுகின்றனர். வேதாகமம் இதைக்குறித்து திட்டமும் தெளிவுமாய் அதை ஆராய்ந்து பார்க்கும் ஒவ்வொருவருக்கும் வெளிப் படுத்துகிறது.

தேவ மனிதனாகிய ஏனோக்கின் வாழ்க்கையை நாம் கவனித்துப் பார்ப்போமானால் கர்த்தர் அவருக்குக் கொடுத்த ஊழியத்தையும், அவருக்குக் கொடுத்த வாக்குத்தத்தத்தையும் நிறைவேற்றியதையும் காணலாம். கர்த்தருடைய வருகையைக் குறித்து முதன் முதலாகப் பிரசங்கித்தவர் ஏனோக்கு, தமது ஆயிரமாயிரமான பரிசுத்த தூதர்களோடுங்கூட கர்த்தர் வருகிறார் என்று முன்னறிவித்து ஊழியம் செய்தார் (யூதா 15ம் வசனம்). இவ்விதமாக அவர் தம்முடைய ஊழியத்தை நிறைவேற்றிய பின்பு உயிரோடு கூட பரலோகத்துக்கு எடுத்துக்கொள்ளப்பட்டார் (ஆதி. 5:24). தேவன் அவருக்குக் கொடுத்த வாக்குத்தத்தத்தைக் குறித்து எபிரேய நிருபகர்த்தா எழுதியுள்ளார். விசுவாசத்தி னாலே ஏனோக்கு மரணத்தைக் காணாதபடிக்கு எடுத்துக் கொள்ளப்பட்டான் (எபி. 11:5) என்று எழுதியிருக்கிறது. விசுவாசத்தி னாலே என்று இங்கு அழுத்தமாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. விசுவாசம் கேள்வியினாலே வரும் (ரோ. 10:17) என்று சொல்லியிருக்கிறபடியே கேள்விப்படாமல் விசுவாசிக்க முடியாது. ஆகவே கர்த்தர் ஏனோக்குக்கு வாக்குத்தத்தம் பண்ணியிருந்தார். அதை அவர் விசுவாசித்தார். அதனால் உயிரோடு கூட பரலோகத்துக்கு எடுத்துக்கொள்ளப்பட்டார் என்று பார்க்கிறோம். முதன் முதலாக

## ஞானஸ்நானம்

1-8-2000 அன்று புதிதாக ஆரம்பிக்கப்பட்ட விருதுநகர் புதிய எருசலேம் கிளை சபையில் 6 பேர் ஞானஸ்நானம் பெற்று திருச்சபையில் அங்கமானார்கள் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள்கிறோம்.

## பரிசுத்த விவாகம்

| மணமகன் | மணமகள் | இடம் | நாள் |
|---|---|---|---|
| T. குமார் | J.மார்த்தாள் | குமாரபாளையம் | 17-8-2000 |
| P. ஸ்டீபன் | L. மரியாள் | குமாரபாளையம் | 30-8-2000 |
| S. ராஜசோழன் (எ) ரூபன் | P. புனிதவதி | பாண்டுப், மும்பை | 7-9-2000 |

பரலோகத்துக்கு எடுத்துக்கொள்ளப் பட்டவர் பரிசுத்தவானாகிய ஏனோக்கு.

ஏனோக்கைப் போன்று உயிரோடு பரலோகத்துக்கு எடுத்துக் கொள்ளப்பட்டவர் தீர்க்கத்தரிசியாகிய எலியா. ஆனால் இவருக்கு இப்படிப் பட்ட வாக்குத்தத்தம் இவருடைய ஊழியத்தின் பின்னாட்களில் கொடுக்கப்பட்டதாக அறிகிறோம். ஏனெனில் ஆகாப் ராஜாவின் மனைவியாகிய யேசபேலுக்குப் பயந்து எலியா தீர்க்கத்தரிசி தான் சாகவேண்டும் என்று கர்த்தரிடம் விண்ணப்பிக்கிறார். ஆகவே உயிரோடு கூட எடுத்துக்கொள்ளப்படுவதைக் குறித்து அவருக்கு அப்பொழுது வாக்குத்தத்தம் கொடுக்கப்படவில்லையென்று அறிந்து கொள்ளலாம். அப்பொழுது தேவன் அவரைப் பலப்படுத்தி அவர் இன்னும் செய்ய வேண்டிய வேலைகளை எல்லாம் கட்டளையிடுகிறார். அவருடைய ஊழியம் நிறைவேறுகிற சமயத்தில் கர்த்தருடைய வாக்குத்தத்தம் கொடுக்கப்படுகிறது. அந்த வாக்கு தத்தத்தை அறிந்திருந்தபடியால் தான் அவர் எலிசாவை சோதிக்கும்படியாக பெத்தேலுக்கும், எரிகோவுக்கும் பின்பு யோர்தானுக்கும் கடந்து செல்கிறார். எலியாவுடன் இருந்த தீர்க்கத்தரிசிகளின் புத்திரருக்கும் எலியாவுக்கும் கொடுக்கப் பட்ட வாக்குதத்தத்தைக் குறித்து வெளிப்படுத்தல் உண்டானதைக் குறித்துக் காண்கிறோம் (2இரா. 2:3,5). பின்னர் எலியா சுழல் காற்றினாலே பரலோகத்துக்கு ஏறிப்போனார் (2இரா. 2:11). கர்த்தருடைய வாக்குத்தத்தம் நிறைவேறிற்று.

புதிய ஏற்பாட்டு சபையின் காலத்தில் அப்.பவுலுக்கு ஒரு வெளிப்படுத்தல் உண்டானது. இவ்விதமாக அப்போஸ்தலனும் அவரைச் சார்ந்த சபையாரும் கர்த்தருடைய வருகையில் உயிரோடு கூட பரலோகத்துக்கு எடுத்துக்கொள்ளப் படுவார்கள் என்ற வெளிப்படுத்தல் உண்டானதைக் காண்கிறோம் (1கொ. 15:51; 1தெச. 4: 17). மேலும் அவர் மூன்றாம் வானமாகிய பரதீசு வரைக்கும் ஒரு சமயம் எடுத்துக்கொள்ளப் பட்டதாகக் காண்கிறோம் (2 கொரி. 12: 2,3). ஆகவே அவருக்கு வெளிப்படுத்தல் உண்டான போது அந்த வெளிப்படுத்தல் ஆதி சபைக்குக் கொடுக்கப்பட்ட வாக்கு தத்தமாகவே எண்ணியிருந்தார். ஆனால் ஆதிச் சபைக்கு அந்த வாக்குத்தத்தம் கொடுக்கப்படவில்லை என்று ஆதிச்சபையின் சரித்திரம் மூலமாக அறிந்து கொள்ளலாம். அப்.பவுலும் இரத்த சாட்சியாய் மரித்தது நாம் எல்லோரும் அறிந்ததே. அப். பவுலுக்கு கொடுக்கப்பட்ட வெளிப்படுத்தலானது கடைசி நாட்களில் கர்த்தர் அனுப்பியிருக்கிற அப்போஸ்தலருக்கும் அவரைச் சார்ந்த சபையாருக்கும் உரியது என்பதை ஆவிக்குரிய கண்களால் கண்டுகொள்ளலாம்.

இவ்விதமாக கடைசி கால திருச்சபையைக் குறித்ததான வாக்கு தத்தங்கள் வேதத்தில் ஆங்காங்கு எழுதி வைக்கப்பட்டுள்ளது. உதாரணமாக கர்த்தர் பேதுருவை நோக்கி இந்தக் கல்லின் மேல் என் சபையைக் கட்டுவேன்; பாதாளத்தின் வாசல்கள் அதை மேற்கொள்வதில்லை (மத். 16:18)

என்று வாக்குத்தத்தம் பண்ணினார். ஆனால் ஆதி சபையானது அப்போஸ்தலர்கள் காலத்திற்கு பின்பு மறைந்து போயிற்று. வானமும், பூமியும் ஒழிந்துபோம்; என்வார்த்தைகளோ ஒழிந்து போவதில்லை (மாற். 13:31) என்று சொல்லியிருக்கிறபடி கர்த்தருடைய வார்த்தைகள் எப்பொழுதும் நிறைவேறுகிறதாகக் காண்கிறோம். ஆகவே அப்.பேதுருவுக்குக் கொடுக்கப் பட்ட வாக்குத்தத்தமானது கடைசி நாட்களில் எழும்பியிருக்கிற திருச்சபைக்கே சொந்தமானது என்று அந்த வசனங்களை தியானிப்பதின் மூலம் அறிந்து கொள்ளலாம்.

ஆனால் இந்நாட்களில் கிறிஸ்தவர்கள் கர்த்தர் வருவார், ஒவ்வொருவரையும் பரிசுத்தப்படுத்தி எடுத்துக்கொள்வார் என்று நினைக் கிறார்கள். ஆனால் கர்த்தர் அவ்விதமாக செய்யப்போவதில்லை. அதற்கான வசன ஆதாரமும் இல்லை. கர்த்தர் எப்பொழுதும் தம்முடைய சித்தத்தை தம்மால் தெரிந்து கொள்ளப்பட்ட பிரதிநிதியின் மூலமாகவே நிறைவேற்று கிறவர் என்று வேதத்தில் தெளிவாக விவரிக்கப்பட்டுள்ளது. மோசே முதல் பவுல் வரை, ஒவ்வொரு காலக்கட்டத் திலும் கர்த்தர் தம்முடைய பிரதிநிதியை அனுப்பி, தம்முடைய சித்தத்தை நிறைவேற்றியுள்ளார் என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை. அப்.பவுலுக்குக் கொடுக்கப்பட்ட வெளிப்படுத்தலை வாக்குத்தத்தமாகக் கொடுத்து கர்த்தர் தம்முடைய அப்போஸ்தலரை அனுப்பியிருக்கிறார். அவர் மூலமாய் பாதாளத்தின் வாசல்கள் அதை மேற்கொள்வதில்லை என்ற தீர்க்கதரிசனத்தின் நிறைவேறுதலாக புதிய எருசலேம் சபையை எழுப்பியிருக்கிறார். பரிசுத்தவான் களாகிய ஏனோக்கு மற்றும் எலியாவைப் போன்று மேலான வாக்குத்தத்தத்தை சுதந்தரித்துக் கொள்ள திருச்சபையாம் புதிய எருசலேமுக்கு சேர்ந்து ஆயத்தப்பட உங்களையும் அழைக்கி றோம்.

"ஆனாலும் ஞானமானது அதன் பிள்ளைகள் எல்லோராலும் நீதியுள்ளதென்று ஒப்புக்கொள்ளப்படும் என்றார்" (லூக். 7:35)

---

கர்த்தருக்குள் நித்திரையடைந்தார்

18-5-2000அன்று சேலம் கிளைசபை (வைகுந்தம்) விசுவாசி சகோ.வி.சின்னு (எ) சிம்சோனின் மகன் தேவராஜன் அவர்கள் கர்த்தருக்குள் நித்திரையடைந்தார் என்பதை தெரிவித்துக் கொள்கிறோம். மகனின் மறைவினால் வருந்தும் அவரது பெற்றோர்களுக்கும், குடும்பத்தார்களுக்கும் கர்த்தர் ஆறுதல் செய்ய ஜெபிக்க வேண்டுகிறோம்.

# ஒரு நதியுண்டு

ஒரு நதியுண்டு, அதின் நீர்க் கால்கள் தேவனுடைய நகரத்தையும், அன்னதமானவர் வாசம் செய்யும் பரிசுத்த ஸ்தலத்தையும் சந்தோஷிப்பிக்கும் (சங் 46:4)

ஒரு நதியுண்டு அது ஆதிபர்வதங் களிலிருந்து உற்பத்தியாகி பூர்வகாலத்தி லிருந்து மக்களுக்கு நன்மையை அளித்துக்கொண்டு வருகிறது. அது மகிழ்ச்சியின் தோட்டமாகிய ஏதேனிலிருந்து புறப்படுகிறதாயிருக்கிறது. அது செல்லுமிடமெங்கும் பொன்னும், பிதொலாகும், கோமேதகக்கல்லும் விளைவிக்கக் கூடியதாயிருக்கிறது. அது மக்களை மகிழ்விக்கிறதாகவும், நன்மையானவைகளை விளைவிக்கக் கூடியதாகவும் இருக்கிறது.

அது குழந்தை மோசே அடங்கிய நாணற்பெட்டியை கரையண்டை ஒதுக்கும் நதியாகயிருக்கிறது. அது புஷ்டியான ஏழு பசுக்களை பிறப்பிக்கிற பார்வோனின் சொப்பனத்தில் வந்த நதியாயிருக்கிறது. நன்மை செய்வதே அதன் வேலை. அது தன் கரையண்டை வருகிற மக்களின் ஆத்மீக தாகத்தை தீர்க்கும் புண்ணிய நதியாக இருக்கிறது. அது மக்களுடைய தாகத்தை அவ்வப்போது தீர்க்கும் பேரின்ப நதியாயிருக்கிறது. (சங். 36:8)

அது வனாந்தரத்தில் 40 வருடம் நடந்து வந்த இஸ்ரவேல் மக்களில் தாகத்தை தீர்க்கும் கன்மலையாம் இயேசுவிலிருந்து புறப்படுகிற நதியாயிருக்கிறது. அது மக்களுக்கு சமாதானத்தை அருளும் நதியாயிருக் கிறது (ஏசா. 66:12). அது ஞானஸ் நானத்தின் மூலமாய் மக்களின் பாவத்தைப் போக்கும் புண்ணிய நதியாம் யோர்தானைப் போலிருக்கிறது (மத். 3:5). அது பஞ்சகாலத்தில் பக்தனாகிய எலியாவின் தாகத்தை தீர்க்கும் கேரீத்தின் ஆறாயிருக்கிறது. அது எசேக்கியேல் தரிசனத்தில கண்ட நதியாயிருக்கிறது. இந்த நதி போகுமிடமெங்கும் சஞ்சரிக்கும் ஜீவ பிராணிகள் யாவும் பிழைக்கும். இந்தத் தண்ணீர் அங்கே வந்த படியினால் வெகு ஏராளமான மச்சங்களும் உண்டாயிருக்கும் (வெகு ஏராளமான ஆத்துமாக்கள் தப்புவிக்கப்படுவர்). இந்த நதி போகுமிடமெங்குமுள்ள யாவும் ஆரோக்கியப்படும், பிழைக்கும் (எசே. 47:9)

அது ஆதி பக்தர்களும், புதிய ஏற்பாட்டு ஊழியக்காரர்களும் தேவனுடைய ஊழியத்திற்காக சிந்திய கண்ணீரால் நிறைந்த நதியாயிருக்கிறது (சங். 56:8, வெளி. 21:4). அதின் தண்ணீர்கள் பளிங்கைப்போல் வெண்மையாயிருக்கிறது அதுதான் தேவனுடைய சபையாம் புதிய எருசலேம். புதிய எருசலேம் எங்கு ஆரம்பிக்கப் பட்டதோ ஆங்கு புதிய ஆசீர்வாதம் பெருகும். மக்களின் சாபங்கள் மாற்றப்பட்டு புது பெலனடைவர். மக்கள் இதை ஏற்றுக்கொள்ளவேண்டும்.

Regd.No. 040088/84
Postal Regd No. Tech/47-204/MBI/2000
Tamil Monthly Magazine

இதை ஏற்றுக் கொள்ளாமல் புதிய எருசலேம் தான் யோர்தான் போன்று புண்ணிய நதியோ? நாங்கள் ஸ்நானம் பண்ணி சுத்தமாகிறதற்கு இஸ்ரவேலின் தண்ணீர்கள் எல்லாவற்றைப் பார்க்கிலும் தமஸ்குவின் நதிகளாகிய அப்னாவும் பர்பாரும் நல்லதல்லவோ? என்று சொல்லக்கூடும் (2இராஜா. 5:12). ஆனால், அவர்கள் பாவ நோய் நீக்கப்படமாட்டார்கள். நாகமான் யோர்தானில் ஏழுதரம் மூழ்கி சிறு பிள்ளையைப்போல மாம்சமுள்ளவனானான். நீயும் சிறுபிள்ளையைப்போல் பரிசுத்தத்தை அடைய எருசலேமை நாடு. புதிய எருசலேமின் அங்கமாக மாறி புத்துயிர்பெறு. அல்லேலூயா!!

## புதிய எருசலேம் செய்தி INTERNET ல்

புதிய எருசலேம் செய்தி இப்பொழுது **http://www.tamilnews.org/** என்ற இன்டர்னெட் தளத்திலிருந்து வெளிவருகிறது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம். ஏற்கனவே 120 க்கும் அதிகமான நாடுகளில் உள்ள தேவ பிள்ளைகளுக்கு உற்ற ஆத்மீக நண்பனாக விளங்கும் 60 க்கும் அதிகமான பரிசுகளை பெற்ற புதிய எருசலேம் சபையின் ஆங்கில பத்திக்கையான **New Jerusalem News** ன் இன்டர்னெட் தளங்களாவன:

**http://www.njchurch.org/** **http://www.truths.org/**
**http://www.trumpetcall.org/** **http://www.prowebserv.com/**

## அறிவிப்புகள்

முழு இரவு விழிப்பு ஜெபம்

*13, வெள்ளி (அக்டோபர் 2000)*
*13, திங்கள் (நவம்பர் 2000)*

புதிய எருசலேம் செய்தி பத்திரிக்கை

| | |
|---|---|
| ஆண்டு சந்தா | Rs. 30.00 |
| வெளிநாடு ஆண்டு சந்தா | Rs. 400.00 |

அனுப்ப வேண்டிய முகவரி

Chief Apostle N.Lazar,
"NEW JERUSALEM CHURCH"
Church Lane, Tilak Nagar,
Darga Cross Road, Sonapur,
Bhandup (W), MUMBAI-400 078

மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா எண்ணைக் குறிப்பிடவும். பழைய சந்தாதாரரா அல்லது புதிய சந்தாதாரரா என்பதையும் குறிப்பிடவும்.

பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதையும் தெளிவாகக் குறிப்பிடவும்.

"புதிய எருசலேம் செய்தி" பத்திரிக்கை வாங்குவோர் ரூ.30 (முப்பது) சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தையும் தெளிவாகக் கொட்டை GÕ |ºLÕ Å Capital Letters), M.O. பாரத்தின் செய்திக்காக ஒதுக்கப்பட்ட பகுதியில் (Space for Communication) எழுதிப் பத்திரிகையைப் பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.

Edited, Printed and Published by Chief Apostle N.LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Darga cross rd Sonapur, Bhandup(W), Mumbai-400 078, India. *Phone 91-22-5605515, Fax 91-22-5681992 e-mail* [illegible]
Printed at New Jerusalem Press, Tilak Nagar, Bhandup, Mumbai-400 078.

# புதிய எருசலேம் செய்தி

# PUTHIYA YERUSALEM CHEIDHI

எக்காளம் 18; சத்தம்: செப்டம்பர் 2000

நவம்பர்




"—வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல் கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்—— விழித்திருங்கள்—— உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லோருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்——"

மாற்கு. 13 : 35-37

EDITOR : CHIEF APOSTLE N. LAZAR

# ஆசிரியர் உரை



கர்த்தரிடத்தில் மாத்திரம் நீதியும் வல்லமையும் உண்டென்று அவனவன் சொல்லி அவரிடத்திற்கு வந்து சேருவான் அவருக்கு விரோதமாய் எரிச்சல் கொண்டிருக்கிற யாவரும் வெட்கப்படுவார்கள் (ஏசா 45: 24)

இது கடைசிகாலமாயிருக்கிறது தேவனுடைய நீதியும் வல்லமையும் வெளிப்படும் காலமாக இருக்கிறது காலாகால சரித்திரங்களின் மூலம் தேவனுக்கு விரோதமாய், தேவ ஜனங்களுக்கு விரோதமாய் எழும்பின துன்மார்க்க அரசர்களும், அரசாங்கங்களும், மனிதர்களும் முறியடிக்கப்பட்டு தோல்வியடைந்தார்கள் அவர்களுடைய பெயரும் இல்லாமல் போயிற்று என்பதை இக்கால மனிதர்களில் அநேகர் அறியாதிருக்கிறார்கள் நியாயப்பிரமாணம் சொல்வதெல்லாம் நியாயப்பிரமாணத்திற்கு உட்பட்டவர்களுக்கே செல்லும் அப்படியே வேதத்தை அறிந்தவர்களுக்குள்தான் வேத பிரமாணம் செல்லும் மேலும் யாராயிருந்தாலும் நீதி நியாயங்களை நிலைநாட்ட வேண்டியதும் அவசியமே. ஒருவனுக்கோ, ஒரு கூட்டத்திற்கோ விட்டுக் கொடுக்கிறதினால் அவர்கள் இரட்சிக்கப்படுகிறார்கள் என்றால் அது தேவசித்தம். ஆனால் தேவசித்தம் இல்லாமல் விட்டுக்கொடுக்கிறது மற்றவர்கள் துணிகரம் கொள்ளுகிறதற்கு உற்சாகப்படுத்துகிறது போல் ஆகும் பழிக்குப் பழி வாங்கக்கூடாது என்பதே புதிய எற்பாட்டின் பிரமாணம். ஆனால் நீதியை நிலைநாட்ட வேண்டும்; மற்றவர்களும் முறையாய் நடக்க கற்றுக்கொடுக்க வேண்டும். அநீதியை அடக்க வே[illegible]ரு மெய்யான மார்க்கம் நீதியும் வல்லமையுடையதுமாயிருக்கிறது [illegible]கமும் பொய்யுமுடையவர்கள் கள்ளமார்க்கத்தார்கள் ஆவர்

தேவன் தம்முடைய நீதியையும் தம்முடைய வல்லமையையும் காண்பிக்க விரும்புகிறார் ஆனபடியினால் தேவனுடைய ஜனங்கள் நீதிக்காக போராடுவீர்களாக. சத்தியத்தை நிலைநாட்டப் போராட வேண்டும் தேவன் தம்முடைய வல்லமையைக் காண்பிப்பார் அவர் நீதியின் பக்கம் நின்று ஜெயங்கொள்ளச் செய்வார் இனிவரும் நாட்களில் இவ்விதமான நீதியையும் வல்லமையையும் கண்டே மக்கள் இறைவனண்டை வந்து சேர்வார்கள் தேவன் தம்முடைய வல்லமையைக் காண்பிப்பார் தேவ ஜனங்கள் எழும்பிப் பிரகாசிப்பீர்களாக இதோ கர்த்தர் வருகிறார்!!

***கிறிஸ்துவுக்குள்,***

***தலைமை அப்போஸ்தலர்.என்.லாசர்***

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும் அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும் தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும், சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும்படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது (எபே.4:11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசுகிறிஸ்து எனக்கு தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும் கட்டளைகளும் 7 (அப்.1: 1-3)" எனக்கு காண்பித்து, கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள்:

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் மத்28:18; மாற். 16:15.
2. விசுவாசித்து ஏற்றுக்கொள்ளுகிறவர்களை பிதா, குமாரன், பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்- மத். 28:19 (இயேசு மாதிரி (Through Action) செய்து காண்பித்தார்.
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள் - மத்28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள் - யோவான் 20: 23
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள் - யோவான். 21 : 15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு - அப். 1 :5-8.
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவு கூறும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார் - 1கொரி 11 : 23 -26

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு(2) என்கின்றனர் வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன் இயேசுவானவர் பிரதியுத்திரமாக: இல்லை அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும் அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப் 1:1, 10: 40-43).

- Chief Apostle.N.Lazar

## இதழின் உள்ளே

# வேதம்

வேதம் என்பது அறிவு என்று அர்த்தம் கொள்ளும் சமஸ்கிருத மொழியாம் தேவனுடைய சித்த்த்தையும், மனிதர் அவருக்குச் செய்ய வேண்டிய கடமையையும் வெளிப்படுத்துகிறதே வேதம் என்று அழைக்கப்படும் வேதயானது இயல் வேதம் என்றும் அருள் வேதம் என்றும் இருவகைப்படும். இயல்வேதமானது ஒளி வேதம் என்றும், சுபாவ வேதம் என்றும்; அருள் வேதமானது வரி வேதம் என்றும், செயற்கை வேதம் என்றும் சொல்லப்படுகிறது உண்டு மனம், புத்தி, சித்தம் உள்ள மனிதன் இவ்வுலகத்தில் தகுந்த பிமாமாணங்களினால் நடத்தப் படுகிறான். அவருடைய வாழ்வுக்கும், மறுமைக்கும் அகத்தியமாய் வேண்டிய தாய் இருக்கிறது. மனிதர்களை பிமாமாணங்களினால் ஆளுவது நீதியினால் கடவுளும் தாம் படைத்த சிருஷ்டிகளை சரியான பிமாமாணங்களி னால் ஆண்டு நடத்துவது நீதியான படியால் அவர் மனிதர்களுக்கு நீதி நெறியாகிய வேதத்தைக் கொடுக்கிறார்

## இயல்வேதம்:-

மனிதனுடைய அறிவினால் நன்மை, தீமை அறியத்தக்க பிமாமாணமே இயல்வேதம் ஆகும். மனிதன் உண்டாக்கப்பட்ட போது தேவன் அவனுக்கு கொடுத்த நல்லறிவே இயல் வேதத்திற்கு மூலமாய் இருக்கிறது. இதினால் தேவனைக் குறித்தும், நன்மை, தீமையைக் குறித்தும், இம்மை மறுமைக் கருத்தைக் குறித்தும், இன்ப துன்பத்தையும் சிலவற்றை அறிந்து கொள்ள மனிதன் அகத்திலும், புறத்திலும் ஏது இருக்கிறது.

மனதில் தேவனால் பாதிக்கப்பட்ட உணர்வே அகப் பிமாமாணம் எனப்படும். நியாயப் பிரமாணம் இல்லாத புறஜாதிகள் சுபாவப்படி நியாயப் பிமாமாணத்தின்படி செய்கிறபோது, நியாயப்பிமாமாணம் இல்லாதவர்கள் தங்களுக்குத் தாங்களே நியாயப் பிமாமாணமாய் இருக்கிறார்கள் அவர்கள் மனச்சாட்சி கூட சாட்சி இடுகிறதினால் குற்றம் உண்டு, குற்றம் இல்லை என்று அவர்களுடைய சிந்தனை ஒன்றை யொன்று தீர்க்கிறதினாலும், நியாயப் பிமாமாணத்திற்கேற்ற கிரியை தங்கள் இருதயங்களில் எழுதியிருக் கிறதற்கு காண்பிக்கிறார்கள் (ரோம. 2: 14,15). பஞ்சேந்திாங்களினால் அறிவதே புறத்துப் பிமாமாணம் எனப்படும். தேவனுடைய காணப்படாதவைகளாகிய அவருடைய நித்திய வல்லமை, தேவத்துவம் என்பவைகள் உலகம் உண்டானது முதற் கொண்டு தெளிவாய் காணப்படும். ஆதலால் அவர்கள் போக்குச் சொல்ல இடமில்லை (ரோ. 1: 20; யோபு. 12:7-9). இந்த இயல் வேதத்தினாலே மனிதன் தேவனை ஆராதிக்கிறதற்கு இடமுண்டு மனிதன் பாவம் செய்ததற்கு முன்னே இந்த வேதமே அவனுடைய விசுவாசம்,

நடக்கை முதலியவற்றிற்கு பூரண பிரமாணமாய் இருந்தது. பாவத்தினால் மனிதன் பிரமாண விரோதியாகி மனச்சாட்சிக்கு அடங்கி நடவாமல் சிருஷ்டிப்பின் ஆகமத்தைக் கண்டும் மனக்குருடனுமுள்ளவனாய் நன்மையைக் குறித்து கவலை இல்லாமல் சுய இஷ்டப்படி நடக்கிறவனாய் இருந்தான். இதனால் அவனவன் தன் தன் தோற்றத்தின்படி ஒவ்வொரு மார்க்கத்தை உண்டுபண்ணி ஒன்றை பலவாக்கி, அவர்கள் தேவனை அறிந்தும் அவரைத் தேவன் என்று மகிமைப்படுத்தாமலும், ஸ்தோத்தரியாமலும் இருந்து தங்கள் சிந்தனைகளினாலே வீணானார்கள்; உணர்வில்லாத அவர்களுடைய இருதயம் இருளடைந்தது. அவர்கள் தங்களை ஞானிகளென்று சொல்லியும் பைத்தியக்காரராகி, அழிவில்லாத தேவனுடைய மகிமையை அழிவுள்ள மனுஷர்கள், பறவைகள், மிருகங்கள், ஊரும் பிராணிகள் ஆகிய இவைகளுடைய ரூபங்களுக்கு ஒப்பாக மாற்றினார்கள் (ரோ. 1:20-23).

அருள் வேதம் (மனிதனுடைய அறிவு):-

மனிதனுடைய அறிவு இயல்பாய் அறிந்துக் கொள்ளக்கூடாத காரியங்கள் நேரடியாவது மற்றவர்கள் மூலமாவது திவ்வியமான அற்புதங்களால் உண்மையென்று விளங்கும்படிக்கு தேவனால் நமக்கு அருளப்படுகிறதே அருள் வேதமாகும் ("A divine revelation is a discovery of some proposition to the mind which came in not by the usual exercise of it's faculties, but by some miraculous divine interposition and attestation either mediate or immediate"-Doddridge)

பாலகருக்குத் தாயானவள் ஒலிவடிவாய் போதிக்கிறது போல, தேவன் ஆதி மனிதர்களுக்கு அருள் வேதத்துக்கு ஆதாரமாகிய உலக இரட்சகரைக்குறித்து வாக்குத்தத்தத்தை ஒலி வடிவமாய் அறிவித்தார் (ஆதி 3:15) பின்பு உபாத்தியர்கள் வாலிப மாணாக்கர்களுக்கு ஒலி வடிவாயும், வரி வடிவாயும் போதிக்கிறது போல தேவன் முற்பிதாக்களுக்கு பற்பல காலங்களில் காட்சியாகி ஒலி வடிவாயும், வரிவடிவாயும் போதித்தார் (எபி. 1:1) பல முகாந்தரமாய் தூரத்தில் பிரிந்திருக்கிற விபரமறிந்த பிள்ளைக்கு தகப்பன் சித்தத்தை அறிவிக்க விசிதம் அனுப்புவது போல, தேவன் பூமியிலே தாம் சிருஷ்டித்த தம்முடைய புத்திரராகிய மனிதர்களுக்கு தமது பூரண சித்தத்தை வரிவேதத்தினாலே அறிவித்திருக்கிறார். (IIதீமோ. 4:16,17)

ஆதியிலே மனிதனுடைய உள்ளத்தில் பதிந்திருந்த இயல் வேதத்திற்கும் இப்போது ஆகமங்கள் அடங்கிய அருள் வேதத்திற்கும் மாறாத தேவனுடைய திருவுளமே மூலமாகையால் அவைகளில் அதிக வித்தியாசம் இராது. இப்படியிருக்க மனதுக்கு அறிவாகிய ஒலி கொஞ்சமாயிருக்கிற படியாலும், அதற்கு இயற்கை பெலம் இல்லாதபடியினாலும், செயற்கை பெலனடைந்து திராணி இருக்கிற படியாலும் அருள் வேதம் எல்லாருக்கும் இன்னும் பூரணமாய் பரிசுத்தப்படாமல் இருந்தும் அதின் மூலங்களின் சத்தம்

பாரம்பரியமாய் ஏறக்குறைய எல்லாருக்கும் பல வழியாய் எட்டி இருக்கிறது (ரோ. 10:18). உலகத்தில் அறிவாளிகள் என்போர் தங்கள் இஷ்டப்படிக்கு பல, பல விகர்ப்பமான மார்க்கங்களை உண்டுபண்ணி இருக்கிறார்கள்

உலகத்தில் இப்போது பிரதானமான ஐந்து வேதங்கள் உண்டு. அவையாவன:

1. கிறிஸ்தவர்கள் கைக்கொண்டிருக்கிற வேதமும்.
2. முகமதியர் கைக்கொண்டிருக்கிற வேதமும்.
3. பார்சீககாரர்கள் கைக்கொண்டிருக்கிற வேதமும்.
4. இந்துக்கள் கைக்கொண்டிருக்கிற வேதங்களும்.
5. சீனர் முதலிய பௌத்தர்கள் கைக்கொண்டிருக்கிற வேதமுமே.

இவ்வைந்து வேதங்களின் கோட்பாடுகளும், ஒன்றை ஒன்று விரோதிக்கிறது ஒவ்வாமைக்கு சித்த விகர்ப்பம் காரணமாகல்லவோ இயல்பில்லாத விரோத பிரமாணங்கள் மாறாத சத்தியமுள்ள கடவுளின் சித்தமாய் இருக்க மாட்டாது. மனிதனுடைய சித்தமே ஒருவருக்கொருவர் விகர்ப்பமாயிருக்கும். கடவுள் ஒருவன் உண்டே, வேதம் ஒன்றே என்பதினாலே இவ்வைந்து வேதாகமங்களில் ஒன்றே சந்தேகமற சத்திய வேதாகமாக இருக்க வேண்டும். இதைக் குறித்து தொடர்ந்து நாம் பார்ப்போமாக!

(தொடரும்)

# வேதபாடம்

## (2 சாமு. 13:1 முதல் 20: 26 வசனம் முடிய)

*அப்சலோமின் கலகம்:*

தகப்பன் எப்படியோ அப்படியே மகனும் துன்மார்க்கத்தில் அம்னோன் தகப்பனை பின்பற்றினான். ஆனால் ஒரு வித்தியாசம் இருந்தது. அதாவது பத்சேபாளை தாவீது உண்மையாக நேசித்தான். அம்னோன் தாமாரை நேசிக்கவில்லை. நேசம் பிறருடைய நன்மையை நாடுகிறது. மோகம் தன் சுயதிருப்தியை மட்டுமே தேடுகிறது. சமீபத்தில் தாவீது தானே பாவத்துக்குட்பட்டபடியினால் அம்னோனை தண்டிக்கவில்லை. ஆனபடியினால் தாமாரின் சொந்த சகோதரனாகிய அப்சலோம் நீதியை நிறைவேற்றும் பொறுப்பை தானே ஏற்று அம்னோனை கொலைசெய்ததாக பார்க்கிறோம்.

ஒரு விதத்தில் தன் சகோதரனுக்கு அவன் நியாயம் செய்தான் என்றும் சொல்லலாம். தாவீது அரசன் அப்சலோமுக்கு ஒன்றும் செய்ய முடியவில்லை. இங்ஙனம் தாவீதின் பாவம் அவருடைய சொந்த குடும்பத்தையே பாதிக்கலாயிற்று. ஆனால் அப்சலோமை உடனே பட்டத்து குமாரன் என்ற நிலைமைக்கு உயர்த்துவது தேவ சித்தமல்லவென்று தாவீது கண்டார். எனவே அப்சலோம் ராஜாவின் முகத்தைப் பார்க்காமலேயே இரண்டு வருஷம் எருசலேமில் குடியிருந்தான். முன்

யோசனைக்காரனாகிய யோவாபுடன் அப்சலோம் கூடினதினால் அப்சலோம் மறுபடியும் முந்திய நிலைக்கு உயர்த்தப்பட்டான் எனவே மேலும் அவனது சூழ்ச்சிகளை கையாட வழி உண்டாயிற்று உடல் பொலிவும், உள்ளம் இழிவும் உடைய அப்சலோம் இனி அபிஷேகம் பெற்ற ராஜாவிடம் இருந்து இஸ்ரவேலனா கவர்ந்து கொள்ள முற்பட்டான். அங்ஙனமே பிசாசு, உலகம், மாம்சம் என்பவைகளும் நயவஞ்சகமாக நம்மை கடவுளிடம் இருந்து தன்மையப்படுத்த முயலும் நாம் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். எல்லோருக்கும் மூத்த சகோதரனை அப்சலோம் கொன்றுபோட்டான். இரண்டாவது சகோதரன் இறந்துவிட்டதாக தெரிகிறது இரண்டாம் சகோதரனின் பெயர் தானியேல் எனவே வரிசைப்படி அப்சலோம் சிங்காசனம் ஏற வேண்டியவனாய் இருந்தான் ஆனால் நியாயமான முறையில் ராஜ்ய பதவியை பெறும்வரை அவன் காத்திராமல் தன் இலட்சியத்தை அடைய எவ்வித உபாயத்தையும் கையாட துணிந்தான் அப்சலோம் முற்றிலும் சுயநலமுள்ளவனாய் இருந்தபடியினால் அவன் ஒரு வேளை ராஜாவாக ஆயிருந்தாலும் தன் தகப்பனைப் போல அவ்வளவு ஞானமாய், செம்மையாய் ஆளுகை செய்திருக்க மாட்டான் அப்படி இருந்தும் தாவீதின் அரசாட்சியைக் குறித்து ஜனங்கள் அதிருப்தி கொள்ளும்படி வகைதேடினான். இந்நாட்களிலும் அபிஷேகம் பெற்ற பரிசுத்தவான்களுக்கு விரோதமாக அவர்களுடைய ஆளுகை,ஊழியம், ஜீவியம் இவைகளைக் குறித்து மக்கள் அதிருப்தி அடையும்படியாக முயற்சி செய்து ஸ்தானத்தைப் பிடிக்க பிரயாசப்படுகிற புதிய அப்சலோமியர்களெல்லாம் இந்த முறையைத் தான் கையாடுவார்கள். அப்சலோமும் ஏனையோரும் ஈடுபட்டிருந்த நடவடிக்கைகள் யாவும் தன்மேல் தேவனுடைய நியாயத்தீர்ப்புகளாகும் என்பதை தாவீது உணர்ந்தபடியால் அப்சலோம் நகரத்தை நோக்கி வரும் போது யுத்தத்தில் வெகு பேறும் மாளாதபடி எருசலேமை தற்காக்காமல் தாவீது விட்டு விட்டு வெளியேறி ஓடிவிட்டார் சீமேயி வசைச் சொற்களையும் அமைதியோடு பொறுத்துக் கொண்டான். எத்தனையோ பேர் தங்களுக்கு அறிவாளிகளை நடத்த இடம் கொடாமல் தங்கள் உரிமைக்காக அடி, பிடி, சண்டைகள் செய்கிறார்கள்; இவ்விதமாய் கிறிஸ்தவர்கள் செய்யாமல் தேவனுக்கு காத்திருந்து ஜெபம் பண்ணுவது நல்லது (1கொரி. 6: 1-8, ரோம. 12:9).

தமது சத்தியத்திற்காக பழிவாங்கி தம்முடையவர்களை பாதுகாக்க கடவுளால் கூடும். தன் விவகாரம் தோற்றுப் போனது என்று தாவீது எண்ணவில்லை. ஏனென்றால் செய்திகளை அனுப்பும் படிக்கு தனக்கு வேண்டிய ஒழுங்குகளை செய்துவிட்டு தனக்காக எருசலேமில் காரியங்களை நடப்பிக்க தன் ஆலோசனைக்காரனாகிய கூசாவையும் அனுப்பிவைத்தான் பெட்டகத்தை எருசலேமுக்கு அனுப்பிவிட்டு யோர்தான் பள்ளத்தாக்கை நோக்கி மலையின் வழியாக தாவீது அழுது கொண்டு சென்றது மிக உருக்கமான ஒரு காட்சியாகும். அச்சமயத்தில் அவருடைய இருதயத்தின் நிலையைக் குறித்து 3,4,5 சங்கீதங்கள் வெளிப்படுத்துகின்றன ஆபத்து சூழ்ந்திருந்தபோதும் தாவீதின் நம்பிக்கை ஆண்டவரின் பேரில் இருந்தபடியினால் அவர் படுத்து உறங்கக்கூடியவாயிருந்தார் சொந்த குமாரனே தனக்கு விரோதமாய் இருந்ததால்

கிலேச முற்றிருந்த தாவீதுக்கும் அவரை பின் தொடர்ந்தவர்களுக்கும் யோர்தானுக்கு கிழக்கேயிருந்த மூன்று முக்கிய மனிதர்கள் ஆகாதவர்களை அழித்து பல உதவிகளை செய்தது அவர்களுடைய உள்ளத்தை உற்சாகப்படுத்தக் கூடியதாய் இருந்தது நெருக்கப்படுகிற தம் பிள்ளைகள் அவர்களின் இருண்ட நாட்களிலும் சங்கீதம் பாட கர்த்தர் உதவி செய்கிறார் என்பதே இதன் மூலமாக அறிகிறோம். அந்த மூன்று மனிதர்கள் அம்மோன் புத்திரரின் தேசத்து ரப்பா பட்டணத்தானாகிய சோபியும், நாகாசின் குமாரனும், லோதேபார் ஊரானான அம்மியேலின் குமாரன் மாகீரும், ரோகிலிம் ஊரானும், கிலேயாத்தியனுமாகிய பர்சிலாவுமே (IIசாமு 17: 27-29) பார்க்க. தன் பாவமே குடும்பத்திற்குள் பொல்லாப்பை கொண்டுவந்தது என்று தாவீது அறிந்திருந்தபடியினால், அப்சலோமைப் பற்றி தாவீது துக்கப்பட்டான். நடந்த சண்டையில் யோவாப் அப்சலோமைக் கொன்றுபோட்டான். யோவாப் ராஜ துரோகியைக் கொன்றதும், தாவீது அளவு கடந்த துயரத்தினால், துயரத்திற்குள் ஆழ்ந்ததற்காக அவனைக் கடிந்து கொண்டதும் யோவாப் செய்த காரியம் நியாயமே ஆகும் பொதுவாக கூறப்படுகிறபடி அப்சலோமின் முடியல்ல அவனுடைய தலையே கர்வாலி மரத்தில் மாட்டிக் கொண்டது. என் மகனே! அப்சலோமே! என் மகனே, என் மகனே அப்சலோமே!! என்று தாவீது புலம்பினதினால் எவ்வளவு துயரமாய் தாவீது புலம்பியிருப்பார் என்று பாருங்கள். பத்சேபாளை உற்றுப் பார்க்கையில் இவ்விதமாக கண்ணீர் சொரிந்திருந்தால் எவ்வளவோ வாசியாக இருந்திருக்கக் கூடும். ஆகாத மகனுக்கு கெட்ட முன் மாதிரியாக தாவீது இருந்தான்.

அவன் வீட்டிலிருந்தே, அதாவது தாவீதின் வீட்டிலிருந்தே, தாவீதுக்கு விரோதமாய் கேடு உண்டாகும் என்றும் பட்டயம் என்றைக்கும் அவர் வீட்டை விட்டு விலகாதிருக்கும் என்றும் தீர்க்கதரிசியாகிய நாத்தான் முன்னுரைத்த வார்த்தையின் படியே நிறைவேறுதலாயிற்று. ஒருவனும் தன்னந்தனியே பாவத்தில் ஈடுபடுவதில்லை அது பிறரையும் பாதிக்கும். அப்சலோமுக்குப் பதிலாக மரிக்கத் தாவீது விரும்பினதாக (IIசாமு. 18: 33) ல் நாம் வாசிக்கிறோம். விசனிக்கத்தக்க இந்த அதிகாரங்கள் ஆரம்பம் ஆகும் முன் தாவீது பாவத்துக்கு மரித்திருந்தால் எத்தனையோ நன்மையாயிருந்திருக்கும் இறைவன் நமக்கும் இரக்கம் பாராட்டி நாம் பாவத்துக்கு மரிக்கும்படி அருட்புரிவாராக ஆனாலும் அப்சலோமின் முரட்டாட்டத்திற்கு முற்றிலும் தாவீதையே நாம் குற்றம் சாட்டுவதில்லை. அப்சலோமுடைய பிரத்தியங்களுக்கு அப்சலோமே உத்திரவாதியாயிருந்தான். எனவே அதற்கேற்ற முடிவை அப்சலோம் அடைந்தான். வேதாகம சரித்திரத்தின் மேல் ஒரு சுலோகம் பெரிய எழுத்துக்களால் பொறிக்கப்பட்டுத் தோன்றுகிறது. அதாவது பாவமும், துரோகமும் ஒருவனுக்கு ஒரு நன்மையும் வருவிக்கிறதில்லை என்பதாம் அப்சலோமினால் ஏற்பட்ட புரட்சி அடக்கப்பட்ட பின்பு தாவீது சுயமாய் ஜனங்கள் மேல் தன் அதிகாரத்தை செலுத்தவில்லை.

ஆளுகை செய்வது அவரது உரிமையாகும். ராஜாவை திரும்ப அழைத்துக்கொண்டு வரவேண்டுமென்று ஜனங்கள் சொல்லும்வரைக்கும் தாவீது ராஜா காத்திருந்தார். அதேபோன்று சபை பூரணமாகும் வரைக்கும் கிறிஸ்து வர தாமதிக்கிறார்

அவரை மறுபடியுமாக அழைப்பதைக் குறித்து பரபரப்புடன் பேசவேண்டும். இயேசுவே வாருமென்று சபை ஆயத்தப்பட்டு அழைக்குமட்டும் கர்த்தர் காத்திருப்பார். தாவீதினுடைய சத்துருக்கள், மித்துருக்கள் விஷயமாய் தாவீது நடந்த விதம், தாவீது குணாதிசயம், மாதிரியாக விளங்குகிறது. சாப வார்த்தைகளைச் சொன்ன சீமேயி தண்டிக்கப்பட்டான். ஆனாலும் அவனுடைய முரட்டாட்டமான இருதயம் சீர்படாததினால் பின்னர் சாலோமோன் சீமேயியை ஒழித்துக் கட்டினார். ராஜாவுடன் போக முடியாது என்று பர்சிலா போக்குச் சொல்லிவிட்டார். ஆனால் அவர் குமாரன் கிம்காமுக்கு பெத்லகேமிலே தாவீதின் சுதந்தரத்திற்கு பங்கு வீதம் கிடைத்தது (எரே. 41:17). பெத்லகேமிற்கு சமீபமாயிருந்த கிம்காமின் குடியிருப்பு இடத்தைப்பற்றி குறிப்பிட்டிருக்கிறதைப் பார்க்கிறோம். அது வழிப்போக்கர் தங்கும் சத்திரமாக பிற்காலத்தில் மாற்றப்பட்டு விட்டதாகத் தெரிகிறது. அநேக நூற்றாண்டுகளுக்குப் பின்பு சத்திரத்திலே இடமில்லையென்று யோசேப்பும், மரியாளும் வெளியே அனுப்பப்பட்டனர் என்றும் உத்தேசிக்கப்படுகிறது. அப்படி இருக்குமானால் அவர் தமக்கு சொந்தமானவற்றில் வந்தார்; அவர் சொந்தமானவர்கள் அவரை ஏற்றுக்கொள்ளவில்லை (யோ 1:11) என்ற வார்த்தைகள் எவ்வளவு உண்மையாய் முடிந்தது என்று பாருங்கள் தாவீதுக்கு விரோதமாய் எதிர்த்த சேபாவுக்கும், அப்சலோமுக்கும் யாதொரு சம்பந்தம் இல்லாதிருந்தும் கலகத்தினால் ஏற்பட்ட கலவரமான நிலையை இவ்வுபத்திரவத்தைக் கொண்டு வந்தது. இங்ஙனம் தீமை ஒன்றின் மேல் ஒன்றாக பெருகிக் கொண்டே போனது. பிறரை வஞ்சிக்கத் தலைப்படும் போது நாம் ஒரு சிக்கலான சிலந்திக் கூடு போல ஒரு வலையைப் பின்னிக் கொள்கிறோம். ஆனபடியினால் நாம் கடவுளுக்குப் பயந்து நேர்மையாய் நடந்து கொள்ள வேண்டும். இறைவன் நியாயத் தீர்ப்பை நியமித்திருக்கிறார். சிறியவனோ? பெரியவனோ? தேவ சந்நிதானத்தில் ஒரு நாள் நியாயவிசாரணையில் நிற்கவேண்டும். ஆனபடியினால் இப்பொழுதே கடவுளோடு ஒப்புரவாகிக் கொள்வோமாக பின்பு நியாயத்தீர்ப்பு இல்லை.

(தொடரும்)

# நாமெல்லாரும் நித்திரையடைவதில்லை

உலகில் மனித சமுதாயம் தோன்றி ஏறத்தாழ 6000 ஆண்டுகள் ஓடி மறைந்து விட்டன. மனிதர்கள் பிறக்கிறார்கள், மரிக்கிறார்கள். இப்படி ஒரு சக்கரம் போல் மனித வாழ்க்கை சுழன்று கொண்டேயிருக்கிறது. மனிதர்கள் இறைவனைக் கண்டு கொள்ளும்படியாக பலவிதமான மார்க்கங்களை பின்பற்றுகிறவர்களாகக் காணப்படுகின்றனர் ஆனால் கிறிஸ்துவ மார்க்கத்தைத் தவிர மற்ற மதங்களில் உள்ளவர்கள் எந்த ஒரு நம்பிக்கையும் இல்லாதவர்களாக காணப்படுகின்றனர் கிறிஸ்தவர்கள் இறைவனாகிய இயேசு கிறிஸ்துவின் இரண்டாம் வருகையில் எடுத்துக் கொள்ளப்படுவோம் என்னும் விசேஷித்த

நம்பிக்கையோடு காணப்படுகின்றனர். வேதாகமம் இதைக்குறித்து திட்டமும் தெளிவுமாய் அதை ஆராய்ந்து பார்க்கும் ஒவ்வொருவருக்கும் வெளிப்படுத்துகிறது.

தேவ மனிதனாகிய ஏனோக்கின் வாழ்க்கையை நாம் கவனித்துப் பார்ப்போமாமானால் கர்த்தர் அவருக்குக் கொடுத்த ஊழியத்தையும், அவருக்குக் கொடுத்த வாக்குத்தத்தத்தையும் நிறைவேற்றியதையும் காணலாம். கர்த்தருடைய வருகையைக் குறித்து முதன் முதலாகப் பிரசங்கித்தவர் ஏனோக்கு, தமது ஆயிரமாயிரமான பரிசுத்த தூதர்களோடுங்கூட கர்த்தர் வருகிறார் என்று முன்னறிவித்து ஊழியம் செய்தார் (யூதா 15ம் வசனம்). இவ்விதமாக அவர் தம்முடைய ஊழியத்தை நிறைவேற்றிய பின்பு உயிரோடு கூட பரலோகத்துக்கு எடுத்துக்கொள்ளப்பட்டார் (ஆதி 5:24). தேவன் அவருக்குக் கொடுத்த வாக்குத்தத்தத்தைக் குறித்து எபிரேய நிருப கர்த்தா எழுதியுள்ளார். விசுவாசத்தினாலே ஏனோக்கு மரணத்தைக் காணாதபடிக்கு எடுத்துக்கொள்ளப்பட்டான் (எபி. 11:5) என்று எழுதியிருக்கிறது. விசுவாசத்தினாலே என்று இங்கு அழுத்தமாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. விசுவாசம் கேள்வியினாலே வரும் (ரோ 10:17) என்று சொல்லியிருக்கிறபடியே கேள்விப்படாமல் விசுவாசிக்க முடியாது ஆகவே கர்த்தர் ஏனோக்குக்கு வாக்குத்தத்தம் பண்ணியிருந்தார் அதை அவர் விசுவாசித்தார். அதனால் உயிரோடு கூட பரலோகத்துக்கு எடுத்துக்கொள்ளப் பட்டார் என்று பார்க்கிறோம். முதன் முதலாக பரலோகத்துக்கு எடுத்துக் கொள்ளப்பட்டவர் பரிசுத்தவானாகிய ஏனோக்கு.

ஏனோக்கைப் போன்று உயிரோடு பரலோகத்துக்கு எடுத்துக் கொள்ளப் பட்டவர் தீர்க்கத்தரிசியாகிய எலியா. ஆனால் இவருக்கு இப்படிப்பட்ட வாக்குத்தத்தம் இவருடைய ஊழியத்தின் பின்னாட்களில் கொடுக்கப்பட்டதாக அறிகிறோம். ஏனெனில் ஆகாப் ராஜாவின் மனைவியாகிய யேசபேலுக்குப் பயந்து எலியா தீர்க்கத்தரிசி தான் சாகவேண்டும் என்று கர்த்தரிடம் விண்ணப்பிக்கிறார். ஆகவே உயிரோடு கூட எடுத்துக்கொள்ளப்படுவதைக் குறித்து அவருக்கு அப்பொழுது வாக்குத்தத்தம் கொடுக்கப்பட வில்லையென்று அறிந்து கொள்ளலாம். அப்பொழுது தேவன் அவரைப் பலப்படுத்தி அவர் இன்னும் செய்ய வேண்டிய வேலைகளை எல்லாம் கட்டளையிடுகிறார். அவருடைய ஊழியம் நிறைவேறுகிற சமயத்தில் கர்த்தருடைய வாக்குத்தத்தம் கொடுக்கப்படுகிறது. அந்த வாக்குத்தத்

## வருந்துகிறோம்

சென்ற அக்டோபர்-2000 மாத இதழில் "வாலிபர் எழுந்து சிலம்பம் பண்ணட்டும்" என்ற தலைப்பின் கீழ் வந்த செய்தியுடன் "நாமெல்லாரும் நித்திரையடைவதில்லை" என்ற செய்தியின் பகுதியும் (தலைப்பில்லாமல்) சேர்ந்து தவறுதலாக பிரசுரிக்கப்பட்டு விட்டது எனவே மேற்குறிப்பிட்ட இரண்டு செய்திகளும் இம்மாத இதழில் தனித் தனியே பிரசுரிக்கப்படுகின்றன

த்தை அறிந்திருந்தபடியால் தான் அவர் எலிசாவை சோதிக்கும்படியாக பெத்தேலுக்கும், எரிகோவுக்கும் பின்பு யோர்தானுக்கும் கடந்து செல்கிறார் எலியாவுடன் இருந்த தீர்க்கதரிசிகளின் புத்திரருக்கும் எலியாவுக்கும் கொடுக்கப்பட்ட வாக்குத்தத்தத்தைக் குறித்து வெளிப்படுத்தல் உண்டானதைக் குறித்துக் காண்கிறோம் (2இராஜா. 2:3,5). பின்னர் எலியா சுழல் காற்றினாலே பரலோகத்துக்கு ஏறிப்போனார் (2இராஜா. 2:11). கர்த்தருடைய வாக்குத்தத்தம் நிறைவேறிற்று.

புதிய ஏற்பாட்டு சபையின் காலத்தில் அப் பவுலுக்கு ஒரு வெளிப்படுத்தல் உண்டானது. இவ்விதமாக அப்போஸ்தலனும் அவரைச் சார்ந்த சபையாரும் கர்த்தருடைய வருகையில் உயிரோடு கூட பரலோகத்துக்கு எடுத்துக் கொள்ளப் படுவார்கள் என்ற வெளிப்படுத்தல் உண்டானதைக் காண்கிறோம் (1கொ. 15:51; 1தெச. 4: 17). மேலும் அவர் மூன்றாம் வானமாகிய பரதீசு வரைக்கும் ஒரு சமயம் எடுத்துக்கொள்ளப்பட்டதாகக் காண்கிறோம் (2 கொரி. 12: 2,3). ஆகவே அவருக்கு வெளிப்படுத்தல் உண்டான போது அந்த வெளிப்படுத்தல் ஆதி சபைக்குக் கொடுக்கப்பட்ட வாக்குத்தத்தமாகவே எண்ணியிருந்தார் ஆனால் ஆதிச் சபைக்கு அந்த வாக்குத்தத்தம் கொடுக்கப்படவில்லை என்று ஆதிச்சபையின் சரித்திரம் மூலமாக அறிந்து கொள்ளலாம். அப் பவுலும் இரத்த சாட்சியாய் மரித்தது நாம் எல்லோரும் அறிந்ததே. அப் பவுலுக்கு கொடுக்கப்பட்ட வெளிப்படுத்தலானது கடைசி நாட்களில் கர்த்தர் அனுப்பியிருக்கிற அப்போஸ்தலருக்கும் அவரைச் சார்ந்த சபையாருக்கும் உரியது என்பதை ஆவிக்குரிய கண்களால் கண்டுகொள்ளலாம். இவ்விதமாக கடைசி கால திருச்சபையைக் குறித்தான வாக்குத்தத்தங்கள் வேதத்தில் ஆங்காங்கு எழுதி வைக்கப்பட்டுள்ளது. உதாரணமாக கர்த்தர் பேதுருவை நோக்கி இந்தக் கல்லின் மேல் என் சபையைக் கட்டுவேன்; பாதாளத்தின் வாசல்கள் அதை மேற்கொள்வதில்லை (மத். 16:18) என்று வாக்குத்தத்தம் பண்ணினார். ஆனால் ஆதிசபையானது அப்போஸ் தலர்கள் காலத்திற்கு பின்பு மறைந்து போயிற்று. வானமும், பூமியும் ஒழிந்துபோம் என்வார்த்தைகளோ ஒழிந்து போவதில்லை (மாற். 13:31) என்று சொல்லியிருக்கிறபடி கர்த்தருடைய வார்த்தைகள் எப்பொழுதும் நிறைவேறுகிறதாகக் காண்கிறோம்.

ஆகவே அப் பேதுருவுக்குக் கொடுக்கப் பட்ட வாக்குத்தத்தமானது கடைசி நாட்களில் எழும்பியிருக்கிற திருச்சபைக்கே சொந்தமானது என்று அந்த வசனங்களை தியானிப்பதின் மூலம் அறிந்து கொள்ளலாம்.

ஆனால் இந்நாட்களில் கிறிஸ்தவர்கள் கர்த்தர் வருவார், ஒவ்வொருவரையும் பரிசுத்தப்படுத்தி எடுத்துக்கொள்வார் என்று நினைக்கிறார்கள். ஆனால் கர்த்தர் அவ்விதமாக செய்யப்போவதில்லை. அதற்கான வசன ஆதாரமும் இல்லை. கர்த்தர் எப்பொழுதும் தம்முடைய சித்தத்தை தம்மால் தெரிந்து கொள்ளப்பட்ட பிரதிநிதியின்

மூலமாகவே நிறைவேற்றுகிறவர் என்று வேதத்தில் தெளிவாக விவரிக்கப் பட்டுள்ளது. மோசே முதல் பவுல் வரை ஒவ்வொரு காலக்கட்டத்திலும் கர்த்தர் தம்முடைய பிரதிநிதியை அனுப்பி தம்முடைய சித்தத்தை நிறைவேற்றியுள்ளார் என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை. அப்.பவுலுக்குக் கொடுக்கப்பட்ட வெளிப்படுத்தலை வாக்குத்தத்தமாகக் கொடுத்து கர்த்தர் தம்முடைய அப்போஸ்தலரை அனுப்பி யிருக்கிறார். அவர் மூலமாய் பாதாளத்தின் வாசல்கள் அதை மேற்கொள்வதில்லை என்ற தீர்க்கதரிசனத்தின் நிறைவேறுதலாக புதிய எருசலேம் சபையை எழுப்பியிருக்கிறார். பரிசுத்தவான்களாகிய ஏனோக்கு மற்றும் எலியாவைப் போன்று மேலான வாக்குத்தத்தத்தை சுதந்தரித்துக் கொள்ள திருச்சபையாம் புதிய எருசலேமுக்கு சேர்ந்து ஆயத்தப்பட உங்களையும் அழைக்கிறோம்.

"ஆனாலும் ஞானமானது அதன் பிள்ளைகள் எல்லோராலும் நீதியுள்ளதென்று ஒப்புக்கொள்ளப்படும் என்றார்" (லூக். 7:35)

# வாலிபர் எழுந்து சிலம்பம் பண்ணட்டும்

வாலிபக் காலம் ஒவ்வொருவர் வாழ்க்கையிலும் மிக முக்கியமான பங்கு வகிக்கிறது. உலகத்தைக் கலக்கிய மாவீரர்களாகட்டும், ஆவிக்குரிய மண்டலத்தை அதிரவைத்த பரிசுத்தவான் களாகட்டும் அவர்களெல்லாரும் தங்களுடைய வாலிப காலத்தில் சந்தித்த சோதனைகளும், சாதித்த சாதனைகளும் ஏராளம் ஏராளம். தங்களுடைய பாதையில் எத்தனை தடைகள் வந்தாலும் அத்தனையையும் உடைத்தெறிந்து வெற்றி என்ற இலக்கை அடையும் எண்ணத் துணிவு உள்ள காலம் தான் வாலிபக்காலம். இமயமலை சிகரத்தை எட்டிப்பிடிக்க வேண்டுமோ, இந்துமாக்கடலை நீந்திக்கடக்க வேண்டுமோ என்று எல்லாவற்றையும் சாதிக்கத் துடிப்பது தான் வாலிபக்காலம். சாதனைகளைப் படைக்கவும், சாதனைகளை முறியடிக்கவும், எல்லா சாதனைகளையும் தானே செய்திட வேண்டும் என்கிற ஏற்றமிகு எண்ணங்களும் உருவாகும் காலம் தான் வாலிபக்காலம். இப்படிப்பட்ட வலிமையான வாலிப காலத்துக்குள்ளாய் கடந்து வரும் அருமையான வாலிபர்களை ஆவிக்குரிய பாதயில் திருப்பி விட்டால் இந்த உலகமென்ன இதைப் போல ஈரேழு உலகங்கள் இருந்தாலும் அவற்றையெல்லாம் இயேசு கிறிஸ்துவின் பக்கம் திருப்பிக் காட்டுவார்கள் வாலிபர்கள்.

இந்திய தேசத்தில் வாலிபர்களின் நிலை மிகவும் கவலைக்கிடமாக மாத்திரமல்ல, கேள்விக்குரியாகவும் உள்ளது. ஏனெனில் ஆவிக்குரிய பார்வையற்றவர்களாய் உலகக் காரியங்களுக்காய் தங்கள் முழு பலத்தையும் செலவழித்து, அதிலும் திருப்தி ஏற்படாத திரிசங்கு நிலையில் உள்ளார்கள். மீட்டாத வீணை, மணம் தராத மல்லிகை, பாடாத குயில் இருந்து

என்ன பிரயோஜனம். அப்படியே தேவனுக்கு பிரயோஜனம் இல்லாத வாலிபக்காலமும் வீணே. கிறிஸ்தவப் பெற்றோர்களும் தங்கள் பிள்ளைகளை சரியானபடி கிறிஸ்துவுக்குள் வழி நடத்தாமல் பின்னாளில் பெரும் இன்னல்களுக்கு உள்ளாகிறார்கள். கழுவப்பட்ட பன்றி சேற்றில் புரள்வது போல அநேக கிறிஸ்தவ வாலிபர்கள் இன்று அரசியல் என்ற சாக்கடையில் சி ன் ன ா பி ன் ன ம ா கி க் கொண்டிருக்கிறார்கள். புத்தியீன வாலிபனைப்போலும், தகப்பன் கை விட்டு பிரிந்த மகன் போலவும் அநேக வாலிபர்கள் மனம்போன போக்கில் வாழ்ந்து தங்கள் ஆத்துமாவை மாய்த்துக் கொண்டிருக்கிறார்கள்

ஆகவே வாலிபர்கள் இப்படிப் பட்ட காரியங்களை விட்டு விட்டு தேவனுக்குப் பிரியமாய், தேவனுக்கு பிரயோஜனமாய் தங்களுடைய ஜீவியத்தை எப்படி அமைப்பது என எண்ணினால் மெத்த நலமாக இருக்கும். ஒவ்வொன்றிற்கும் ஒரு காலமுண்டு. அது போல இறைவனுக்கு சேவை செய்ய மிகச் சிறந்த காலம் வாலிப காலமாகும். பழைய, புதிய ஏற்பாட்டு ஆகமங்களில் பரிசுத்தவான்களின் வாழ்க்கை சரித்திரத்தைப் படித்துப் பார்க்கும்போது இந்த உண்மை விளங்கும் இந்த வாலிபக் காலத்தை இறை சேவை செய்ய பயன்படுத்தவில்லை யென்றால் வயதான காலத்தில் நிச்சயமாக முடியாது ஆகவே பலமும், பராக்கிரமும், எதையாவது சாதிக்க வேண்டும் என்கிற ஏக்கமும் கொண்ட வாலிபக் காலத்தை இறை சித்தம் செய்ய எவரும் தடை செய்யமாட்டார்கள்

ஆசரிப்புக் கூடாரத்தைவிட்டுப் பிரியாத வாலிபனாகிய யோசுவாவின் வாழ்க்கையை கவனித்துப் பாருங்கள் மோசேக்குப் பிறகு இஸ்ரவேல் ஜனங்களை வழிநடத்திச் செல்லும் தலைமை பொறுப்பு கொடுக்கப்பட்டது மன்னாதி மன்னர்களும் யோசுவாவுக்கு முன்பாக மண்ணைக் கவ்வினது மாத்திர மல்ல. சூரியனையும், சந்திரனையும் தங்கள் தங்கள் நிலையில் ஒரு பகல் முழுவதும் நிற்கச் செய்த அதிசயத்தையும் கர்த்தர் நடப்பித்தார். என் இருதயத்திற்கு ஏற்றவன் என்று கர்த்தரால் சாட்சி கொடுக்கப்பட்ட தாவீது, ராஜாவான போது அவருக்கு வயது முப்பது. தன் சரீரத்தை பாவத்துக்குள்ளாக்காதபடிக்கு பரிசுத்தமாய் பாதுகாத்துக் கொண்டதால் பார்வோனுக்கு அடுத்த ஸ்தானத்தில் உயர்த்தப்பட்டார், வாலிபனாகிய யோசேப்பு. கேபார் நதியண்டையில் தேவதரிசனங்களை எசேக்கியல் தீர்க்கத் தரிசி கண்டதும், மறைபொருள்கள் தானியேலுக்கு வெளிப்படுத்தப்பட்டு ராஜாவுக்கு அடுத்த ஸ்தானத்தில் உயர்த்தப் பட்டதும் வாலிப காலத்தில் தான்.

எல்லாவற்றிற்கும் மேலாக நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து உலகத்தை மாற்றியமைக்கும்படியாக, தம்முடைய வல்லமையை உலகிற்கு வெளிப்படுத்தும்படியாக வாலிப காலத்தையே தெரிந்து கொண்டார் தனது முப்பதாம் வயதில் ஆரம்பித்து மூன்றரை வருடங்கள் அவர் செய்த ஊழியம் உலகத்தை அவர் பக்கம் திருப்பியிருக்கிறது இரவு பகல் பாராது அயராது கடலில் உழைத்துக் கொண்டிருந்த அவருடைய வாலிப

சிஷர்களோ கர்த்தர் உயிர்த்தெழுந்த பின்பு உலகத்தைக் கலக்குகிறவர்களாகக் காணப்பட்டார்கள். அதிகாரிகள் ஆச்சரியப்பட்டார்கள். மன்னர்கள் மருண்டார்கள். பிரதான ஆசாரியர்கள் பித்தம் கொண்டவர்கள் போலானார்கள்.

திருச்சபையின் வாலிபர்களும் தேவனுக்கடுத்த காரியங்களில் தீவிரம் காட்ட வேண்டும். பெற்றிருக்கிற பரிசுத்தாவியை அனல் மூட்டி எழுப்பவும், சுடர்களைப் போல எழும்பி பிரகாசிக்கவும் வாஞ்சையுடையவர்களாய் காணப்பட வேண்டும். வாலிபக் காலத்தில் சபையை நடத்தவும், மேய்ப்பர்களை ஏற்படுத்தவும் அதிகாரம் பெற்ற தீமோத்தேயுவைப் போல, தீத்துவைப் போல இறை சித்தம் செய்ய முன்வர வேண்டும். மற்ற புறஜாதி வாலிபர்களைக் காட்டிலும் பத்து மடங்கு திறமைசாலிகளாக மாறவும், மற்றவர்களால் எதிர்த்து நிற்கக் கூடாத வாக்கு வல்லமையையும், தேவ ஞானத்தையும் பெறவும், கிறிஸ்துவுக்காக எதையாவது சாதிக்க வேண்டும் என்றும் முயற்சி செய்ய வேண்டும்.

நாம் பாடுவது அநேகர் உற்சாகமடைந்து பாடத்தக்கதாகவும், நாம் ஜெபம் பண்ணுவது மற்றவர்களும் ஆவிக்குள்ளாக நிரப்பத்தக்கதாகவும், நாம் சொல்லுகின்ற சாட்சி அநேகரை உணர்வடையத்தக்கதாகவும் அமைய வேண்டும். இப்படி தேவனுக்காக பக்தி வைராக்கியம் காண்பிக்கும் போது நம்முடைய சொந்தக்காரியங்களை தேவன் பொறுப்பெடுத்துக் கொள்வார். ஆவிக்குரிய ஜீவியத்தில் மாத்திரமல்லாது உலகக் காரியங்களிலும் நம்மை ஆசீர்வதித்து உயர்த்துவார்.

வாலிபக்காலம், நம்முடைய வாழ்க்கையை யாருக்கு ஒப்படைக்கப் போகிறோம் என்று சிந்திக்க வேண்டிய முக்கியமான காலகட்டம். அது கிறிஸ்துவுக்கா? உலகத்திற்கா? உலகமும் அதின் இச்சையும் ஒழிந்து போம். இயேசு கிறிஸ்துவோ நேற்றும் இன்றும் என்றும் மாறாதவராயிருக்கிறார்.

"வாலிபரே நீங்கள் பலவான்களாயிருக்கிறதினாலும், தேவ வசனம் உங்களில் நிலைத்திருக்கிறதினாலும், நீங்கள் பொல்லாங்கனை ஜெயித்ததினாலும் உங்களுக்கு எழுதியிருக்கிறேன்". (1 யோவா. 2:14)

## கோவாவில் ஆலயப் பிரதிஷ்டை

"கர்த்தர் எருசலேமைக் கட்டுகிறார்" (சங். 147: 2)

13-9-2000 புதன் கிழமையன்று காலை 10-00 மணியளவில் கோவாவில் புதிய எருசலேம் சபைக்கு சொந்தமாக, புதிதாக அமைக்கப்பட்ட ஆலயத்தை திருச்சபையின் தலைமை அப்போஸ்தலர் N. லாசர் அவர்கள் பிரதிஷ்டை செய்து சபையை ஸ்தாபித்தார்கள். அநேக ஊழியர்கள், தேவனுடைய பிள்ளைகள் வந்து, கலந்து தேவாசீர்வாதம் பெற்றுக் கொண்டனர் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம். தொடர்ந்து கோவா சபைக்காய் பிரார்த்திக்கவும்.

## புதிய எருசலேம் சபையின் விருதுநகர் கிளை ஆரம்பம்

1-8-2000 செவ்வாய்க்கிழமை அன்று காலை 10-00 மணிக்கு புதிய எருசலேம் சபையின் கிளை விருதுநகரில் ஆரம்பிக்கப்பட்டது. அநேகர் வந்து கலந்து கொண்டு தேவ ஆசீர்வாதம் பெற்றுச் சென்றனர்.

# சாட்சி

கர்த்தருக்கு ஸ்தோத்திரம்! என்னுடைய பெயர் பழனிச்சாமி என்கிற செபுலோன். என் துணைவியின் பெயர் தெபோராாள். எங்களுக்கு சந்திரா, தாமரி என்ற இரண்டு மகள்களும், தேவராஜ் என்ற ஒரு மகனும் உண்டு. நாங்கள் பாரம்பரையாக பக்தியுள்ள இந்து மதத்தை சார்ந்தவர்கள். நாங்கள் மேட்டுப்பாளையத்தில் வசித்து வருகிறோம். நான் வியாபாரம் நடத்தி வந்தேன். என் துணைவிக்கு அடிக்கடி தீராத தலைவலி, கால்வலி போன்றவைகள் இருந்தன. மருத்துவரிடம் சென்றும், பல இந்து கோயில்களுக்குச் சென்றும் பல தாயத்துக்கள் கட்டியும் குணமாகவில்லை. எனக்கு கடையில் பல நஷ்டங்களும் கடன் பிரச்சனைகளும் ஏற்பட்டது. என் சகோதர்கள் சொத்துப் பிரச்சினை செய்கிறதும் அதிகரித்தது. இந்த நிலையில் என் கடைக்கு வரும் ஒரு விசுவாசி ஒருவர் சாமநாயக்கன் பாளையத்திலுள்ள தேவபக்தியுள்ள கிறிஸ்தவ மெய்சபையான புதிய எருசலேம் சபையில் உள்ள போதகரிடம் அழைத்துக் கொண்டு போனார். அவர் என்னிடம் இயேசு கிறிஸ்துவை ஏற்றுக் கொள்ள வேண்டும், அவர் தான் மெய்யான தெய்வம் என்று விசுவாசிக்க வேண்டும். அப்பொழுது உங்களுக்கு இயேசு கிறிஸ்து சுகம் கொடுப்பார் என்று ஆலோசனை கூறி ஜெபம் செய்து அனுப்பினார் நாங்கள் அவர் வார்த்தையை ஏற்றுக்கொண்டு ஆராதனைக்குச் சென்றோம். தேவன் என் துணைவியாருடைய நீண்ட நாள் தலைவலி, கால்வலி போன்ற வியாதிகளை அற்புதமாக குணமாக்கினார். எங்களுடைய ஆத்துமாவிலும் பெரிதான சமாதானம் உண்டாயிற்று. தேவனுக்கே மகிமை! தேவன் என்னுடைய சகோதரர்களின் சொத்துப் பிரச்சனைகள் சமாதானமாய் முடிய உதவி செய்தார். என் பிள்ளைகளுடைய படிப்பையும் ஆசீர்வதித்தார். நாங்கள் 1997 ம் வருடம் இரட்சிக்கப்பட்டு, சமாதானமாக புதிய எருசலேம் சபையில் தேவனுக்கு சாட்சியாக வாழ்ந்து வருகிறோம் கர்த்தருக்கே மகிமை உண்டாவதாக! அல்லேலூயா!!

## கர்த்தருக்குள் நித்திரையடைந்தார்கள்

10-7-2000 அன்று புதிய எருசலேம் சபை மகிழ்ச்சிபுரம் கிளை சபையின் அங்கத்தினராகிய ஜெபமணி அவர்கள் (சகோ. எபனேசரின் தகப்பனார்) வயது 68 கர்த்தருக்குள் நித்திரையடைந்தார்கள். அன்னாரின் பிரிவால் வருத்தத்தில் இருக்கும் குடும்பத்தாருக்கு தேவன் ஆறுதல் அளிப்பாராக.

10-9-2000 அன்று புதிய எருசலேம் சபை நாகர்கோவில் கிளை சபையின் அங்கத்தினராகிய தேவராஜ் அவர்கள்(சகோதரி டாக்டர் செல்வியின் தகப்பனார்) வயது 84 கர்த்தருக்குள் நித்திரையடைந்தார்கள். அன்னாரின் பிரிவால் வருத்தத்தில் இருக்கும் குடும்பத்தாருக்கு தேவன் ஆறுதல் அளிப்பாராக.

11-5-2000 அன்று புதிய எருசலேம் சபை அங்கத்தினராகிய முழங்குழியிலுள்ள சகோ டேவிட் அவர்களின் மனைவி இரத்தினபாய் அவர்கள், வயது 68, கர்த்தருக்குள் நித்திரையடைந்தார்கள். அன்னாரின் பிரிவால் வருத்தத்தில் இருக்கும் குடும்பத்தாருக்கு தேவன் ஆறுதல் அளிப்பாராக.

# கிறிஸ்தவர்களுக்கு விரோதமாக சாத்தானுடைய தாக்குதல்கள்

*தெளிந்த புத்தியுள்ளவர்களாயிருங்கள், விழித்திருங்கள்; ஏனெனில் உங்கள் எதிராளியாகிய பிசாசானவன் கெர்ச்சிக்கிற சிங்கம்போல் எவனை விழுங்கலாமோ என்று வகைத்தேடி சுற்றித்திரிகிறான் 1பேதுரு. 5:8,9.*

விசுவாசத்தில் உறுதியாயிருந்து, அவனுக்கு எதிர்த்து நில்லுங்கள், உலகத்திலுள்ள உங்கள் சகோதரரிடத்திலே அப்படிப்பட்ட பாடுகள் நிறைவேறி வருகிறதென்று அறிந்திருக்கிறீர்களே. அப்.பேதுரு நம்முடைய எதிராளியைப் பற்றி சொல்லியிருக்கிறதாக நாம் அறிகிறோம். கிறிஸ்தவர்களுக்கு விரோதமாக சாத்தானுடைய தாக்குதல்களைப் பற்றி வேதாகமத்திலே சொல்லப்பட்டிருக்கிறது. கிறிஸ்தவர்களுக்கு விரோதமாக சத்துருவினுடைய தாக்குதல்கள், அப்பவுல் IIகொரி. 2:11 ஆம் வசனத்தில் அவனுடைய தந்திரங்களைப் பற்றி சொல்லியிருப்பதாக நாம் வாசிக்கிறோம். அவனுடைய தந்திரங்கள் நமக்கு தெரியாதவைகள் அல்லவே என்று இங்கே கூறி இருக்கிறார்.

சாத்தானால் நாம் மோசம் போகாதபடிக்கு அவனுடைய தந்திரங்கள் நமக்குத் தெரிந்திருக்க வேண்டும், தேவனுக்குச் சத்துருவும், நமக்குச் சத்துருவுமாக ஒரு எதிராளி உண்டு என்று வேதாகமம் நமக்குத் திட்டமாக அறிவிக்கிறது. அதற்காய் நாம் தேவனை ஸ்தோத்தரிப்போமாக. அவன் ஒரு உயிருள்ள ஆள் தன்மையுள்ளவன் என்று வேதாகமம் நமக்கு காண்பிக்கிறது. சாத்தானை தேவன் சிருஷ்டிக்கவில்லை, தேவ தூதனாக சிருஷ்டித்தார் ஆனால் அவன் சாத்தானாய் மாறிப்போனான் என்று வேதாகமத்தின் மூலமாக அறிகிறோம் (கொலோ. 1:16). ஏனென்றால் அவருக்குள் சகலமும் சிருஷ்டிக்கப் பட்டது; பரலோகத்திலுள்ளவைகளும் பூலோகத்திலுள்ளவைகளுமாகிய காணப் படுகிறவைகளும், காணப்படாதவை களுமான சகல வஸ்துக்களும், சிங்காசனங்களானாலும், கர்த்தத்துவங் களானாலும், துரைத்தனங்களானாலும், அதிகாரங்களானாலும் சகலமும் அவரைக் கொண்டும் அவருக்கென்றும் சிருஷ்டிக்கப்பட்டது. கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவுக்காக சிருஷ்டிக்கப்பட்டதாக நாம் வாசிக்கிறோம் இவ்விதமாய் பரலோகத்திலுள்ளவைகளாக இருக்கட்டும், பூலோகத்திலுள்ளவை களாக இருக்கட்டும், காணப்படுகிற வைகளாயிருக்கட்டும், காணப்படாதவை களாயிருக்கட்டும் இவைகளெல்லாம்

## பரிசுத்த விவாகம்

| மணமகன் | மணமகள் | இடம் | நாள் |
|---|---|---|---|
| S. எட்வின் | T. அவிர்றா மேபல் ரூத் | ஆரல்வாய்மொழி | 20.9.2000 |

சிருஷ்டிக்கப்பட்டது என்பதாம் ஆனபடியினாலே அவன் ஒரு சிருஷ்டி என்று நாம் திட்டமாக அறிந்து கொள்கிறோம். அவனைப் பற்றிய காரியம் தெளிவாக ஏசா. 14-ம் அதிகாரத்திலும், எசே. 28 ஆம் அதிகாரத்திலும் எழுதப்பட்டிருக்கிறது. உண்மையாகவே உயிருள்ள, எப்போதும் சுறுசுறுப்பான ஒரு எதிரி என்று சாத்தானைப் பற்றி வேதாகமத்தில் எழுதப்பட்டிருக்கிறது. ஆனபடியினாலே, மயக்க நிலையில் அல்ல, தெளிந்த புத்தியுள்ளவர்களாக இருக்க வேண்டும் என்று எழுதியிருக்கிறது. அடுத்தபடியாக விழித்திருங்கள் என்று சொல்லப் பட்டிருக்கிறது. ஒரு காவல் காரனைப்போல, எதிரி எப்போது வருகிறான் என்று கண்டு கொள்ளத்தக்க விழிப்பாக இருக்கவேண்டும் என்பது அதின் அர்த்தம். அவன் இவ்விதமாக ஒரு கெர்ச்சிக்கிற சிங்கம் போல எவனை விழுங்கலாமோ என்று வகை தேடி சுற்றித்திரிந்து வருகிறான். எவ்விதத்தி லேயும் யாரையாவது ஏதாவது செய்ய வேண்டும் என்று சுற்றித் திரிகிறான், வகைத்தேடி வருகிறான் என்று நாம் வேதத்தில் வாசிக்கிறோம். எனவே விசுவாசத்தில் உறுதியாய் இருந்து, அவனுக்கு எதிர்த்து நிற்க வேண்டும் என்று எழுதப்பட்டிருக்கிறது. சாத்தான் கிறிஸ்தவர்களைத் தாக்குகிறான் என்று வேதம் எச்சரிக்கிறது. அப்படிப்பட்ட பாடுகள் உங்கள் சகோதாரிடத்தில் நிறைவேறி வருகிறதே (1பேது. 5:9) என்று எழுதியிருக்கிறது. சாத்தானைப் பற்றி நாம் வேதாகமத்தில் வாசிக்கும்போது அவன் ஒரு ஆள் என்று நாம் அறிகிறோம். அவன் ஒரு உயிருள்ள சிருஷ்டியாக இருக்கிறான். அவன் கிறிஸ்துவை சோதிக்கும்போது கிறிஸ்துவோடு கூட பேசினான் என்று மத்.4ஆம் அதிகாரத்தில் நாம் வாசிக்கிறோம்.

அது ஒரு வெறும் சக்தியோ, வல்லமையோ அல்ல. ஒரு சக்தியோ, வல்லமையோ பேசமுடியாது என்பதை நாம் அறிந்திருக்கிறோம். ஆனால் ஒரு ஆள் என்று அந்த வேதவாக்கியத்தின் மூலமாக நாம் அறியமுடியும். ஆள் என்றால் உருவம் இருக்கவேண்டும் என்று தான் அர்த்தம் இல்லை பொதுவாக ஆள் என்று சொல்லும்போது, ஆள் தத்துவமானது பற்பல விதமாக இருக்கிறது. மனிதனும் ஆவியே; அந்த ஆவிக்காகத் தான் ஆத்துமாவும், இந்த பூலோக வாழ்க்கைக்காக இந்த சரீரமும் கொடுக்கப்பட்டிருக்கிறது. நம்முடைய ஆவியைப் பற்றியே பூரணமாக நாம் அறிய முடியாதவர்களாக இருக்கிறோம். பரிசுத்த ஆவியானவரைப் பற்றி நாம் கொஞ்சம் தான் அறிந்திருக்கிறோம். தேவன் ஆவியாயிருக்கிறார் என்று யோவா. 4:24-ல் வாசிக்கிறோம். சாத்தானும் இவ்விதமாக ஆவியாய் இருக்கிறான். அவசியப்படும்போது அவன் எந்த உருவத்தையும் எடுத்துக்கொள்ள முடியும். இயேசுவானவரை அவன் எருசலேமின் கோபுரத்தின் உச்சியிலே நிறுத்தி அங்கேயிருந்து தாழக் குதியும் என்று சொன்னான். அதாவது தற்கொலை செய்து கொள்ளும்படியாக அவன் சொன்னான். ஆனால் கர்த்தர் அதற்கு மறு உத்தாவாக வேத வசனத்தைத்தான்

சுட்டிக்காட்டினார். நம்முடைய எதிராளி எவனை விழுங்கலாமோ என்று வகைத்தேடி கெர்ச்சிக்கிற சிங்கம்போல சுற்றித்திரிகிறான் என்று எழுதியிருக்கிறது ஒருவன் உலகத்தானாய் உலகத்திலே பாவத்துக்குள்ளே இருக்கும் போது அவனுக்கு சோதனையில்லை. சாத்தான் அவனை சோதிக்கிறது கிடையாது. அவனுக்கு விரோதமாக எதையும் செய்கிறது கிடையாது. அவனுக்கு சாதகமாகவே காரியங்களை நடப்பித்து, அவனுடைய சித்தத்தை இந்த ஆத்துமாக்கள் மூலமாக அவன் நிறைவேற்றிக் கொள்கிறான். அந்த ஆவியானது அவனுக்குள் புகுந்து தான் விரும்புகிறதையெல்லாம் அவன் மூலமாக நிறைவேற்றுகிறது. அவன் ஒழுக்கம் கெட்டவனாக, அசுத்தமானவனாக, கொலைபாதகனாக, பொய்யனாக இருக்கிறான். அவன் உலகம் முழுவதையும் வஞ்சிக்கிற பொல்லாத ஆவி, வலு சர்ப்பம் என்று வெளிப்படுத்தல் ஆகமத்தில் எழுதப்பட்டிருக்கிறது (வெளி. 20: 2,10).

பொதுவாக சாத்தான் இல்லையென்று சில பகுத்தறிவுவாதிகள் சொல்லிக்கொள்ளுகிறதும், பேசுகிறதுமாக இருக்கிறார்கள். இஸ்லாம் மார்க்கத்திலேயும் சாத்தானைப் பற்றி தெளிவு கிடையாது. கெட்ட எண்ணங்கள் தான் சாத்தான் என்று அவர்கள் சொல்லுகிறார்கள். வெளி 12:9-ல் உலகமனைத்தையும் மோசம் போக்குகிற பிசாசு என்றும்; சாத்தான் என்றும் சொல்லப்பட்ட பழைய பாம்பாகிய வலுசர்ப்பம் தள்ளப்பட்டது. அது பூமியிலே விழத்தள்ளப்பட்டது. அதனோடேகூட அதைச் சேர்ந்த தூதரும் தள்ளப்பட்டார்கள் என்று வாசிக்கிறோம். உலகமனைத்தையும் மோசம்போக்குகிற பிசாசு என்று சொல்லுகிற அளவுக்கு அவன் ஒரு மகா சக்தியாக காணப்படுகிறான். நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவும் அதை ஒப்புக்கொண்டார். இதோ உலகத்தின் அதிபதி வருகிறான். அவனுக்கு என்னிடத்தில் ஒன்றுமில்லை என்று கர்த்தர் சொன்னதாக வாசிக்கிறோம். இது அந்தகாரத்தின் வேளையும், உங்களுடைய வேளையும், சாத்தானுடைய வேளையுமாக இருக்கிறது என்று கர்த்தர் சொன்னதாக வாசிக்கிறோம். அவனைக் குறித்து நம்முடைய கர்த்தாகிய இயேசு கிறிஸ்து சொல்லும் போது; அவன் தனக்காக ஒரு ராஜ்யத்தை உடையவனாக இருக்கிறான் என்று கூறுகிறார். மத்தேயு 13-ம் அதிகாரத்தில் சொல்லும் போது அவன் ஒரு திருடன், வேத வசனங்களை இருதயத்திலிருந்து திருடிக்கொள்கிறான் என்று கர்த்தர் சொன்னார். அவன் ஒரு பலவான், ஆத்துமாக்களை சிறைப் பிடித்து வைத்திருக்கிறான் என்றும் இயேசு சொன்னார்.

**கிறிஸ்தவர்களுக்கு விரோதமாக சாத்தானுடைய தாக்குதல்:**

(1) நமக்கு சோர்வையும், சோம்பலையும் உண்டாக்குகிறதையும், சுறுசுறுப்பு இல்லாத நிலையை உண்டாக்குகிறதும் சாத்தானுடைய முதல் வேலையாக இருக்கிறது. சோம்பல் அல்லது சோர்வு உண்டாகுகிறது என்றால் உடனே நாம் அதைக் கவனிக்க வேண்டும். தூக்கமயக்க ஆவி உண்டாகிறது என்றால் அதைக் குறித்து நாம் கவனமாக இருக்க

வேண்டும். பொதுவாக நமக்கு சரியான தூக்கமில்லையா? சரியான ஆகாரம் நமக்கு கிடைக்கவில்லையா? அல்லது சீதோஷ்ணநிலை மாறி இருக்கிறதா? இந்த ஒவ்வொரு காரியங்களையும் நாம் நன்றாக ஆலோசித்து பார்த்தோமென்றால், இது ஒன்றும் காரணமில்லை என்று நமக்குத் தெரியவரும். அப்படியென்றால் இது சாத்தானுடைய தாக்குதல் என்று அறிந்து கொள்ள வேண்டும். வேலைக்கு போகாமல் இருந்தால் ஒரு நாள் படுத்துக்கொள்வோம், மறுநாள் படுத்துக்கொள்ளலாம் என்கிற சோம்பல் உண்டாகும். வேலைக்கு போகிறதற்கே மனம் உண்டாகாது; இவ்விதமாக ஒரு சோம்பல் உண்டாகும்.

ஒரு பரிசுத்தவான் ஒரு புஸ்தகத்தில், கொல்லும் கொடிய பாவங்கள் ஏழு என்றும் அதிலே சோம்பலும் ஒன்று என்றும் எழுதியிருக்கிறார். இதைக் குறித்து நாம் மிகவும் கவனமாக இருக்க வேண்டும். உணவு மாற்றமா? அல்லது நெருக்கடியா? எதினாலே உண்டாகிறது என்று நாம் கவனிக்க வேண்டும். பொதுவாக நமக்கு சுறு சுறுப்பு இல்லாமல் இருக்கும்படியாக அவன் செய்கிறான் என்றால், நம் அன்றாடக கடமைகளை செய்யாமல் நம்மைத் தடுக்க அவன் முயற்சிக்கிறான். இன்றைக்கு செய்ய வேண்டியதை இன்றைக்குச் செய்யவில்லை என்றால் அது நாளைக்கு செய்யும் போது அது இன்றைய வேலையாக இருக்காது அது நாளைய வேலையாகத்தான் இருக்கும். இவ்விதமான சோம்பலுக்கு இடம் கொடுக்கிறவர்கள் நாளடைவிலே அவர்கள் பெரிய சோம்பேறிகளாகி சாத்தானால் ஆட்கொள்ளப் படுவார்கள். அவன் சோர்வையும், சோம்பலையும் உண்டாக்குவதற்கு பிரயாசப்படுகிறான். கிறிஸ்தவ வாழ்க்கையிலே சோர்வுக்கு இடம் கொடுக்கக் கூடாது. சோம்பலுக்கு இடம் கொடுக்கக்கூடாது. நம்முடைய கடமைகளை நாம் சரியாக செய்ய வேண்டும். உண்மையாகவே உடல் நிலை சரியில்லை என்றால் நாம் ஓய்வு எடுத்து அதற்கான காரியங்களை நாம் செய்ய வேண்டும்.

(2) தூக்கமின்மை:-

தூங்காமல் தூக்கம் வாராமல் தடுக்கிறதற்கு சாத்தான் தடை பண்ணுகிறான். அப்படி தூங்காமல் நம்மைத் தடுத்துவிட்டால் நமது உடலுறுப்புக்கள் பெலவீனப்படும். நம்முடைய கடமைகள் தடைபடும். நமக்குப் பெலவீனம் உண்டாகும். அதனால் பொதுவான அனுதின வாழ்க்கை பாதிக்கப்படலாம். ஆனால் தேவனுடைய பிள்ளைகள் இதை வேறு விதமாக மாற்றிக் கொள்ளலாம். தூக்கம் வாராத வேளைகளில், ஜெபிக்க ஆரம்பித்துவிட்டோம் என்றால் சாத்தான் பயந்து இந்த விஷயத்தில் தலையிட மாட்டான்.

தூக்கம் இல்லை என்பதற்காக கவலைப்படக்கூடாது. இராத்திரியில் தூங்கவில்லையே என்று கவலைப்பட்டு பகலில் கண்டிப்பாக தூங்கவேண்டும் என்று எண்ணக் கூடாது. அப்படி தூங்குகிறதாயிருந்தால் நாம் தூங்கிக்கொண்டேதான் இருப்போம்; நம்முடைய வாழ்க்கையும்

"தேவனைத் தேடு"
"Seek God"

Licensed to post without prepayment L No 75

Regd.No. 040088/84
Postal Regd No Tech/47-201/MBI/2000
Tamil Monthly Magazine

தூங்க ஆரம்பித்துவிடும்

(3) கடைமை ஆற்றுகிறதில் நெருக்கடி: நமக்கு அளவுக்கு மீறிய வேலைகள் இருக்கும் போது நமக்கு களைப்பையும், எரிச்சலையும் கொண்டு வர சாத்தான் முயற்சிப்பான் எந்த நெருக்கடியாக இருக்கட்டும். நாம் அமைதி காக்க வேண்டும். நிதானமாக நடந்து கொள்ள வேண்டும் தேவையானால் சற்று ஓய்வு எடுத்துக் கொள்ள வேண்டும்

(தொடரும்)

## புதிய எருசலேம் செய்தி INTERNET ல்

புதிய எருசலேம் செய்தி இப்பொழுது **http://www.tamilnews.org/** என்ற இன்டர்னெட் தளத்திலிருந்து வெளிவருகிறது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம் ஏற்கனவே 120 க்கும் அதிகமான நாடுகளில் உள்ள தேவ பிள்ளைகளுக்கு உற்ற ஆத்மீக நண்பனாக விளங்கும் 60 க்கும் அதிகமான பாிசுகளை பெற்ற புதிய எருசலேம் சபையின் ஆங்கில பத்திக்கையான **New Jerusalem News** ன் இன்டர்னெட் தளங்களாவன:

**www.njchurch.org www.njcnews.org www.prowebserv.com**
**www.trumpetcall.org www.truths.org www.njcindia.com**

## அறிவிப்புகள்

**முழு இரவு விழிப்பு ஜெபம்**

**13, திங்கள் (நவம்பர் 2000)**
**11, திங்கள் (டிசம்பர் 2000)**

புதிய எருசலேம் செய்தி பத்திரிக்கை

| | |
|---|---|
| **ஆண்டு சந்தா** | Rs. 30.00 |
| **வெளிநாடு ஆண்டு சந்தா** | Rs.400.00 |

**அனுப்ப வேண்டிய முகவரி**

Chief Apostle N Lazar,
"NEW JERUSALEM CHURCH"
Church Lane, Tilak Nagar,
Darga Cross Road, Sonapur,
Bhandup (W), MUMBAI-400 078

மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா எண்ணைக் குறிப்பிடவும். பழைய சந்தாதாரரா அல்லது புதிய சந்தாதாரரா என்பதையும் குறிப்பிடவும்.

பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதையும் தெளிவாகக் குறிப்பிடவும்.

"புதிய எருசலேம் செய்தி" பத்திரிக்கை வேண்டுவோர் ரூ.30 (முப்பது) சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தையும் தெளிவாகக் கொட்டை எழுத்துகளில் (Capital Letters), M.O. பாரத்தின் செய்திக்காக ஒதுக்கப்பட்ட பகுதியில் (Space for Communication) எழுதிப் பத்திரிகையைப் பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.

Edited, Printed and Published by Chief Apostle N LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Darga Cross Road, Sonapur, Bhandup(W), Mumbai-400 078 India *Phone* 91-22-5605515 *Fax* 91-22-5651992 *email* [illegible]
Printed at New Jerusalem Press, Tilak Nagar, Bhandup, Mumbai-400 078

# புதிய எருசலேம் செய்தி

# PUTHIYA YERUSALEM CHEIDHI

எக்காளம் 18; சத்தம்: டிசம்பர் 2000




"[illegible]ட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல் கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்—— விழித்திருங்கள்—— உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லோருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்——"

மாற்கு. 13 : 35-37

EDITOR : CHIEF APOSTLE N. LAZAR

MUMBAI, INDIA

# ஆசிரியர் உரை



இந்த நாட்களில் தீமை பெருகி, தீமையின் கடைசிகாலம் நெருங்கி விட்டபடியினால், அது கொந்தளித்து நிற்கிறது. ஆனால் தேவ ஜனங்கள் பயப்படவோ கலங்கவோ வேண்டிய தேவையில்லை. அழிவுக்கு முன்னானது அகந்தை என்பது போல தீயோனுக்கு அழிவு நெருங்கிவிட்டபடியினால் அவன் அகம்பாவம் கொண்டு பற்பல விதமாக பொய்யான கிரியைகளை, பேச்சுகளை நடப்பித்து வருகிறான். பிசாசையும் அவனுடைய கிரியைகளையும் அழிக்கும்படி தேவனுடைய திட்டம் மிகவும் தெளிவாக இருக்கிறது. தேவனுடைய பிள்ளைகள் ஜெயங்கொண்டோராகிய இயேசுவினுடைய சந்ததிகளாக அவருடைய தொண்டர்களாக, அவருடைய சீஷர்களாக இருக்கிறார்கள்.

ஆனபடியினால் தேவ ஜனங்களுக்கு எல்லாம் ஜெயமே. விசுவாசிக்கிறதற்கு மாத்திரமல்ல கிறிஸ்துவினிமித்தம் பாடுபடவும் நமக்கு அருளப்பட்டிருக்கிறது. இவைகளின் மூலமாக தேவன் மகிமை அடையவும் நாம் திடன் கொள்ளுவோமாக. உலக இரட்சகர் மாத்திரமல்ல சர்வலோகத்தின் நியாயாதிபதியாய் கர்த்தராகிய இயேசு கிறிஸ்து இருக்கிறார். ஆனபடியினால் அவருடைய வருகை உலகத்தை நியாயந்தீர்க்கிறதாக இருக்கும். உலகத்தின் சகல காரியங்களுக்கும் முடிவு உண்டாகும். இப்பொழுது இருக்கிற அரசியல் அரசாங்கங்களெல்லாம் கவிழ்க்கப்படும். உலக அரசாட்சி கிறிஸ்தவர்களுக்கு கையளிக்கப்படும். அவர் சக்கரவர்த்தியாய் எருசலேமிலிருந்து உலகமுழுவதும் ஆளுகை செய்வார். தேவனுடைய ஜனங்கள் உலகமெங்கும் ஆளுனராக விளங்குவார்கள். தேவன் தம் மேசியாவை அபிஷேகம்பண்ணியிருக்கிறார். அவர் வந்து ஆளுகை செய்யப்போகிறார். ஆனபடியினால் தேவ ஜனங்கள் தைரியங்கொண்டிருந்து தீமையை சகித்து சத்துருவுக்கு விரோதமாய் ஜெபித்து போராடி ஜெயங் கொள்வீர்களாக. தேவ கிருபை உங்கள் அனைவரோடுங்கூட இருப்பதாக. ஆமென்!!

*கிறிஸ்துவுக்குள்,*

*தலைமை அப்போஸ்தலர்.என்.லாசர்*

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும் அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும் தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும், சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும்படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது. *(எபே.4:11-16)*

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

*இயேசுகிறிஸ்து எனக்கு தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும் கட்டளைகளும் 7 (அப்1: 1-3)" எனக்கு காண்பித்து, கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள்:*

1. *உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் மத்.28:18; மாற். 16:15.*
2. *விசுவாசித்து ஏற்றுக்கொள்ளுகிறவர்களை பிதா, குமாரன், பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்- மத். 28:19 (இயேசு மாதிரி (Through Action) செய்து காண்பித்தார்.*
3. *திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைகொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள் - மத்.28:20.*
4. *அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள் - யோவான். 20: 23.*
5. *அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள் - யோவான். 21 : 15-17.*
6. *இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு - அப். 1 :5-8.*
7. *நான் வருகிற வரையிலும் என்னை நினைவு கூறும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார் - 1கொரி. 11 : 23 -26.*

*நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு(2) என்கின்றனர். வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன். இயேசுவானவர் பிரதியுத்திரமாக: இல்லை அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும் அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1:1, 10: 40-43).*

**- Chief Apostle.N.Lazar**

## [illegible]

# பூமி

பூமி எப்பொழுது உண்டானது? எப்படி உருவானது? இதிலுள்ள ஜீவ ராசிகள் எவ்விதம் உண்டாயின? மனிதன் எதற்காக சிருஷ்டிக்கப்பட்டான்? உலகத்தின் முடிவு என்ன? என்று ஏராளமான கேள்விகள் கேட்கப்பட்டுக் கொண்டே இருக்கின்றன. அநேகர் இவைகளுக்கான பதில்களைத் தேடி ஆராய்ச்சி செய்து கொண்டே இருக்கின்றனர். அறிவியல் வல்லுனர்கள் 'சூரியனிலிருந்து ஒரு பகுதி பிரிந்து வந்து குளிர்ந்து பூமி உண்டானதாகவும், பின்பு படிப்படியாக ஜீவராசிகள் உருவான தாகவும் கூறுகிறார்கள். இந்துக்களின் புராணங்களில் மனிதர்கள் சிருஷ்டிக்கப் பட்ட விதம் குறித்து சொல்லப்பட்ட விவரங்களை அறிவார்ந்த மனிதர்கள் எவரும் ஒப்புக் கொள்ள முடியாது. இப்படி விடை காண இயலா எல்லா கேள்விகளுக்கும் பரிசுத்த வேதாகமம் தெளிவான பதில்களை நமக்குத் தருகிறது. ஆரம்பத்தில் விஞ்ஞானிகள் இவைகளை ஏற்க மறுத்தாலும் காலப் போக்கில் அவர்கள் ஆராய்ச்சி செய்து உண்மை என்று ஏற்றுக் கொண்டுள்ளனர்.

பூமியைக் குறித்து பரிசுத்த வேதாகமத்தில் ஆதியாகமம் முதல் அதிகாரம் ஆரம்ப வசனத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆதியிலே என்று சொல்லப்பட்டிருப்பதால் காலக் கணிப்புக்கு எட்டாததாய் காணப் படுகிறது. அதாவது இன்ன காலத்தில் இன்ன வருடத்தில் பூமி தேவனால் உண்டாக்கப்பட்டது என்று நாம் கணிக்க முடியாது. பூமியானது அந்தரத்தில் தொங்கவிடப்பட்டுள்ளது (யோபு. 26:7). அது எந்த அஸ்திபாரத்தின் மீது அல்லது ஆதாரத்தின் மீது நிற்கிறது என்று நமக்குத் தெரியாது (யோபு. 38: 4,6). தேவன் தம்முடைய ஞானத்தினால் பூமியை அஸ்திபாரப்படுத்தியுள்ளார் (நீதி. 3:19). மேலும் பூமியானது வெறுமையாக இருக்கும்படி சிருஷ்டிக்கப்படாமல் குடியிருப்புக்காக சிருஷ்டிக்கப்பட்டது என்று வேதம் சொல்லுகிறது (ஏசா. 45:18). ஆகவே ஆதியிலே உண்டாக்கப்பட்ட பூமியில் தேவன் அதில் குடியிருப்பவர் களையும் வைத்திருந்தார் என்று அறிந்து கொள்ள முடிகிறது.

ஆதியாகமம் முதல் அதிகாரம் இரண்டாம் வசனத்தில் பூமியானது ஒழுங்கின்மையாக, வெறுமையாக இருளாக இருந்ததாக கூறப்பட்டுள்ளது. தேவனுடைய எந்த ஒரு சிருஷ்டிப்பும் எந்த ஒரு பழுதுமின்றி நேர்த்தியாக சிருஷ்டிக்கப்படுகிறது. ஆதியிலே உண்டாக்கப்பட்ட பூமியும் நேர்த்தியாகவே உண்டாக்கப்பட்டி ருக்கும் என்பதில் எந்த சந்தேகமும் இருக்கமுடியாது. அப்படியானல் பூமியில் மேலே சொல்லப்பட்டுள்ளபடி பாதிப்பு எப்படி உண்டானது என்று சிந்திக்கும்பொழுது வேதம் அதற்கான விளக்கத்தைக் கொடுக்கிறது. பூமியிலே தேவனுக்குப் பிரியமில்லாத கிரியைகள் தீவரமாகும் போது கர்த்தர் பூமியில் உள்ளவர்களை தண்டிக்க சித்தம் கொள்கிறார். சில சமயம்

ஜலப்பிரளயத்தை வரவிட்டு பூமியில் உள்ள யாவையும் அழித்துப் போடுகிறார். ஒரு ஸ்தலத்தில் வசிக்கும் ஜனங்கள் தங்களுடைய தீவிரமான பாவக்கிரியை களினிமித்தம் தேவனுக்கு கோபமூட்டும் போது தேவன் வானத்திலிருந்து அக்கினியையும், கந்தகத்தையும் வருஷிக்கப்பண்ணி அந்த ஸ்தலங்களை அழித்துப் போடுகிறார்.

ஒரு தேசத்துக்குடிகள் தேவ கோபத்திற்கேதுவானவர்களாய் காணப்படும்போது அவர்களை அந்த தேசத்திலிராதபடி துரத்திவிட்டு வேறு தேசத்து குடிகளை கொண்டு வந்து குடியமர்த்துகிறார். இப்படி பலவிதமான நடவடிக்கைகளை தேவன் எடுக்கிறார். அப்படிப்போல ஆதியிலே பூமியிலே குடியிருந்தவர்கள் கர்த்தருக்கு கடும் எரிச்சலையும், கோபத்தையும் உண்டாக்கக் கூடிய கிரியைகளை நடப்பித்ததினிமித்தம் பூமியிலே பாதிப்பு உண்டாயிருக்கலாம் என்று நாம் ஒரளவுக்கு நிதானிக்க முடிகிறது. இப்படி பூமியிலே பாதிப்பு உண்டானது பற்றி வாசிக்கிற நாம் இந்த பாதிப்பானது ஆதியிலே உண்டாக்கப்பட்டது முதற் கொண்டு அப்பொழுது தான் முதல் தடவையாக பாதிக்கப்பட்டுள்ளதா அல்லது அதற்கு முன்னமே பலமுறை பாதிப்பு ஏற்பட்டுள்ளதா என்று நாம் திட்டமாய் அறிய முடிவதில்லை.

ஆதியாகமம் முதல் அதிகாரம் மூன்றாம் வசனத்திலிருந்து நாம் தற்போது வசிக்கும் பூமி எவ்விதமாக அமைக்கப்பட்டது என்கிற விவரங்களும் மனிதன் முதல் சகல ஜீவராசிகளும் உண்டாக்கப்பட்ட விதமும் கூறப்பட்டுள்ளன. தேவன் ஏதேனை சிருஷ்டித்து என்றைக்கும் மனிதன் உயிரோடிருப்பதற்கு கட்டளையையும் கொடுத்து ஆதாமையும், ஏவாளையும் ஏதேனில் வைத்தார். ஆனால் அவர்கள் சாத்தானால் வஞ்சிக்கப்பட்டு தேவ கட்டளையை மீறினார்கள். மனிதனுக்கு மரணம் என்கிற சாபம் உண்டானது. ஏதேனை விட்டு மனிதன் துரத்தப்பட்டான். ஆனாலும் தொடர்ந்து வந்த மனித சந்ததியின் அக்கிரமக் கிரியை களினிமித்தம் கர்த்தர் மனுக்குலத்தை அழிக்கச் சித்தமானார். அந்த சந்ததியில் நீதிமானாக்கப்பட்ட நோவாவை தேவன் அழைத்து தன்னுடைய திட்டத்தை தெரியப்படுத்தி கட்டளை கொடுத்தார்.

தேவனுடைய கட்டளையின் படியே நோவா ஒரு பேழையை உண்டு பண்ணி, தன் குடும்பத்தாரையும் சகல ஜீவராசிகளிலும் ஒவ்வொரு ஜோடியையும் பேழைக்குள் பிரவேசிக்கச் செய்தார். பின்பு கர்த்தர் பூமியின் மேல் ஜலப்பிரளயத்தை வர விட்டார். வானத்தின் கீழ் உள்ள சகல உயர்ந்த மலைகளுக்கும் மேலாக 15 முழ உயரத்துக்கு ஜலம் பெருகினபடியால் பூமியில் இருந்த மனுஷர் முதல் சகல ஜீவராசிகளும் மாண்டு போயின. இவ்விதமாக நாம் தற்போது வாழ்கின்ற பூமி ஜலப்பிரளயத்தினால் ஒரு முறை அழிக்கப்பட்டுள்ளது.

ஜலப்பிரளயத்துக்குப் பின்னால் நோவாவின் சந்ததி மூலமாக ஜனங்கள் பூமியில் பரம்பினார்கள். அப்பொழுது பூமியெங்கும் ஒரே பாஷையும், ஒரே விதமான பேச்சும் இருந்தது

இதனிமித்தமாக மனிதர்கள் பெருமை கொண்டு தங்களுக்கு பேர் உண்டாக வேண்டும் என்று எண்ணி வானளாவும் ஒரு கோபுரத்தை கட்ட திட்டம் பண்ணி கட்டத் தொடங்கினார்கள். கர்த்தர் அவர்கள் பெருமையைக் கண்டு அவர்கள் பாஷையைத் தாறுமாறாக்கினார். ஒருவர் பேசுவது மற்றவருக்கு புரியாது போனபடியால் அவர்கள் கோபுரம் கட்டுவதை விட்டு விட்டு பூமியெங்கும் சிதறிப்போனார்கள். இவ்விதம் பாஷைகள் பூமியில் உண்டாயின. மனிதர்கள் பூமியெங்கும் பலுகிப் பெருகினார்கள்.

நாம் தற்போது ஜீவிக்கின்ற இந்த பூமியில் மனித இனம் சிருஷ்டிக்கப்பட்டு ஏறத்தாழ 6000 ஆண்டுகள் ஆவதாக வேதத்தின் மூலம் அறிய முடிகிறது. சமீபத்தில் இத்தாலி தேசத்தின் மலைப்பகுதியில் பனிக்கட்டிகளுக்கிடையில் மனித சடலம் ஒன்று கண்டெடுக்கப்பட்டது. அதை விஞ்ஞானிகள் ஆராய்ச்சி செய்து பார்த்து ஏறத்தாழ 5,300 ஆண்டுகளுக்கு முந்தைய மனிதன் என்று கூறியுள்ளனர். இன்னும் டைனோசர் போன்ற விலங்கினங்களின் படிவங்களை ஆராய்ச்சி செய்து பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முந்தையது என்று சொல்கின்றனர். இவை உண்மையாகவும் இருக்கலாம். ஏனெனில் காலம் கணிக்கமுடியாத ஆதியிலே பூமி தேவனால் உண்டாக்கப்பட்டது. இதைக் குறித்து பிரசங்கியும் ஒரு சந்ததி போகிறது: மறு சந்ததி வருகிறது. பூமியோ என்றைக்கும் நிலைத்திருக்கிறது என்று பிர. 1:4 இல் சொல்கிறார்.

ஆதியிலே உண்டாக்கப்பட்ட இந்த பூமியானது இல்லாமற் போகும்படியாக இது வரை அழிக்கப்படவில்லை. ஆனால் வரப்போகிற தேவ கோபத்தில் பூமி முற்றிலும் அழிக்கப்படவிருக்கிறதாக வேதத்தில் கூறப்பட்டுள்ளது. பூமியானது அக்கினிக்கு இரையாக வைக்கப் பட்டிருக்கிறது என்றும், பூமியும் அதிலுள்ள கிரியைகளும் எரிந்து அழிந்து போம் என்றும் சொல்லப்பட்டுள்ளது (2பேது. 3: 7,10). அவருடைய சமூகத்தினின்று வானமும், பூமியும் அகன்று போயின. அவைகளுக்கு இடங் காணப்படவில்லை என்று கூறப் பட்டுள்ளது (வெளி. 20:11). முந்தின வானமும், முந்தின பூமியும் ஒழிந்து போயின என்று குறிப்பிடப்பட்டுள்ளது. அவருடைய வாக்குத்தத்தத்தின் படியான புதிய வானமும், பதிய பூமியும் சிருஷ்டிக்கப்படும் என்று வேதம் சொல்லுகிறது (ஏசா. 65: 17, 2பேதுரு. 3:13; வெளி. 21:1). சிருஷ்டித்தல் என்றால் புதிதான ஒன்றை உருவாக்குதல் என்று பொருள்படும். ஆகவே நீதி வாசமாயிருக்கும் புதிய பூமி சிருஷ்டிக்கப்படவுள்ளது.

இந்த பூமி அழிக்கப்படுவதற்கு முன்பு நடைபெற வேண்டிய காரியங்கள் ஏராளம் உள்ளன. அவைகள் தீர்க்கதரிசனங்களாக எழுதி வைக்கப்பட்டுள்ளன. ஆகவே, அவைகள் முந்தி நிறைவேற வேண்டும். இப்பொழுது நாம் ஒரு தீர்மானம் எடுக்கவேண்டிய கட்டாயத்தில் இருக்கிறோம். அழிந்து போகவிருக்கிற இந்த பூமிக்குரிய காரியங்களிலேயே

தங்கள் வாழ்நாட்களை செலவழிக்கிறவர்கள் இந்த பூமியோடு அழிந்து போவது மாத்திரமல்ல, காலக் கணக்குக்கடங்காத என்றைக்கும் வேதனைப்படக்கூடிய அக்கினிக் கடலாகிய நரகத்திலேயும் தள்ளப்படுவார்கள். தேவ சித்தத்தின்படி ஜீவிக்கிற தேவ ஜனங்களோ நீதி வாசமாயிருக்கும் புதிய பூமியில் சதாகாலமும் சந்தோசமும், மகிழ்ச்சியுமாய் காணப்படுவார்கள். அதற்கு ஒரே வழி கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை ஏற்றுக் கொள்வதாகும். நீங்கள் எங்கு வசிப்பதற்கு ஆயத்தமாயிருக்கிறீர்கள்?

"இதோ, சீக்கிரமாய் வருகிறேன். அவனவனுடைய கிரியைகளின்படி அவனவனுக்கு நான் அளிக்கும் பலன் என்னோடே கூட வருகிறது" (வெளி. 22:12).

# வேதபாடம்

*(2 சாமுவேல் 21:1 முதல் - 24:25 முடிய)*

**தாவீதுடைய இறுதியான வருஷங்கள்**

யோவாபுடன் கூடி வேலை செய்வது மிகவும் கடினமாக இருந்தது. தாவீதின் சகோதரியாகிய செருயாளின் குமாரனாகிய இவன் இராணுவத் தளபதியாயிருந்தான். பொறாமையினால் அப்னேரையும் அமாசாவையும் கொன்றான். தாவீதின் வெளியரங்கமான மன்னிப்பின் ஆவிக்கு நேர்விரோதமாக தந்திரமும் சர்ப்பனையுமாக யோவாபின் உள்ளம் இருந்தது. என்றாலும் தாவீதின் இராஜ்யபாரத்திற்கு அவன் மிகுதியும் ஒத்தாசையாக விளங்கினான். அவன் செய்வதெல்லாம் தாவீதை அலட்டினாலும் அவனைப்போன்ற ஒரு துணையாள் தாவீதுக்கு தேவையாக இருந்தது. சேர்ந்து வேலைசெய்வதற்கு கடினமாய்தோன்றும் ஆட்களுக்கும் தேவ பணிவிடையில் முக்கிய ஸ்தானம் இருக்கிறது. ஆனால் அதினிமித்தமாய் எந்தக் குறைகுற்றங் களுக்கும் போக்கு சொல்லிக் கொண்டு இருக்க இடமில்லை. தன்னுடைய முரட்டுத்தனமான கீழ்ப்படியாமையான குணங்களை விட்டு ஆசீர்வாதம் பெற்றுக் கொள்வதே ஊழியர்களுடைய கடமையாகும் (எபே. 4:1-3; பிலி. 2: 1-4). பிரச்சனைகள் மேல் பிரச்சனைகளைத் தாவீது தீர்க்க நேரிட்டது. ஆனால் அவைகளை அவர் தேவனிடம் சமர்ப்பித்ததால் முடிவில் எல்லாவற்றின் மேல் வெற்றி சிறந்தார். அரக்கர்களை அழித்ததுடன் தாவீதுடைய முக்கிய விரோதிகள் ஒழிந்தனர். 22-ம் அதிகாரத்தின் ஸ்தோத்திர கீதமானது சங் 18க்கு ஒப்பாக காணப்படுகிறது. கர்த்தரை தன் கன்மலை, கோட்டை, விடுவிக்கிறவர், என் கடவுள், என்னுடைய அடைக்கலம், கேடகம், இரட்சண்யக் கொம்பு, என் உயர்ந்த துருக்கம், என் புகலிடம், என் இரட்சகர் என்றெல்லாம் அழைக்கிறார். தாவீதுக்கு தேவன் செய்த திட்டமான காரியங்களை நாம் கவனிக்க வேண்டும். அதி.23ன் ஆரம்ப வசனங்களில் தாவீது

தேவனுக்கு நன்றி செலுத்தி தன் அபாத்திரத் தன்மையை உணர்ந்து கொண்டதும். அதேசமயத்தில் தன் சந்ததியில் உதிக்கப்போகிற அதிமேலான இராஜனை எதிர்நோக்கினதுமான தாவீதுடைய இறுதியான இராஜரீக மொழிகள் அடங்கியுள்ளன. இராஜ்யத்திற்கான வீரச்செயல்கள் புரிந்த பராக்கிரமசாலிகளாகிய தாவீதின் தொண்டர்களைக் குறிப்பிடாமல் இச்சரித்திரம் முற்றுப்பெறாதாகையால் அவர்கள் நாமங்கள் இங்கு வரையப்படுகின்றன. இந்நாட்களிலும் கர்த்தருக்காய் தைரியமான வல்ல கிரியைகள் நடப்பிக்கப்பட வேண்டும். ஆனால் நமது போராயுதங்கள் மாமிசத்துக்குரியவைகள் அல்ல. நமது போராட்டம் மாமிசத்தோடும் இரத்தத்தோடுமல்ல ஆவிக்குரிய சத்துருக்களோடே நடைபெறுகிற யுத்தமாய் இருக்கிறது.

முற்றிலும் இராணுவசம்பந்தமான இலக்கம் பார்ப்பதை ஆட்சேபனை செய்ததில் யோவாப் தாவீதைக் காட்டிலும் ஞானவானாய் இருந்தான். அவனுக்கு தாவீது செவிகொடுத்திருந்தால் நலமாயிருந்திருக்கும். அப்படி செவிகொடுக்காததினால் வந்த தண்டனையில் ஆக்கினைக்கு எவர்களின் சொந்த வாழ்க்கை பாத்திரமாக இருந்ததோ அப்படிப்பட்டவர்களே மாண்டிருப்பர் என்று நம்ப ஏதுவுண்டு. மறுபடியும் தாவீது தன் மனஸ்தாபத்தை வெளிப்படுத்தினபடியால் அவர் மன்னிப்பைப் பெற்றார். எப்பொழுதுமே விழுந்து எழுந்து ஜீவிப்பதானது நம்மைப்பற்றிய கடவுளுடைய நோக்கமல்ல. ஆனால் நாம் தவறினால் அவர் மனந்திரும்புகிற இருதயங்களை ஏற்றுக்கொள்ள ஆயத்தமாய் இருக்கிறார். அர்வனாவின் களமானது பிற்காலத்தில் தேவாலயப் பிரகாரத்தில் பலிபீடம் நிறுவப்படத்தக்க இடமாக மாறிற்று, அதையும் எருதுகளையும் ஐம்பது சேக்கல் (ரூ.250) நிறை வெள்ளிக்கு தாவீது வாங்கினார். அந்த மலைச்சிகரம் முழுவதையும் 600 சேக்கலுக்கு (ரூ27,000) வாங்கினார் (1நாளா. 21:25).

இந்த இரண்டு இடங்களில் வித்தியாசம் எழுதப்பட்டிருப்பதுபோல் காணப்பட்டாலும் வித்தியாசமல்ல, சரிதான். இப்புத்தகத்தில் தாவீதைப்பற்றி இறுதியாக நாம் காணும் காட்சியானது, தேவனுக்குமுன் அவர் மனந்திரும்புகிறவராக பலிசெலுத்துவதும், இஸ்ரவேல் ஜனமாகிய தம் ஆடுகளுக்காக விண்ணப்பம் பண்ணுவதுமேயாம். தாவீதுடைய கடைசி நாட்கள் மிகவும் மகிமையாக முடிந்தது. ஏனென்றால் அவர் ஒரு சிறந்த தேவ பக்தன். 1, 2 சாமுவேல் புஸ்தகங்களின் சம்பவங்கள் நடைபெற்ற காலங்கள் கிட்டதட்ட நூற்றாக்கு சற்று அதிகமான காலமாகும். மிதமிஞ்சிய சீரழிவும், பலத்த செயல்களும், மகத்துவமான விடுதலைகளும் அடங்கினதாக இந்தப்பாகம் காணப்படுகிறது. ஆதரவற்றவராயும், தீழ்ப்பானவராயும் இருந்ததுமல்லாமல் பெட்டகம் பிடிபட்டும் ஆசரிப்புக் கூடாரம் பரிசுத்த குலைச்சல் ஆக்கப்பட்டும் அவர்கள் தலைவர்கள் பலட்சயமும் சீர்கெட்டவர்களுமாயிருந்த ஜனமாகிய இஸ்ரவேலர் பெரிய ஜாதியாக தலையெடுத்தனர். சூழ இருந்த

சத்துருக்கள் கீழ் அடக்கப்பட்டனர். ஆசாரியனும், லேவியனும் ஒழுங்கான முறையில் தேவ ஆராதனை நடத்தலாயினர். கோத்திரங்களின் கூட்டுறவுக்கு எருசலேம் தலைநகரமாக ஸ்தாபிக்கப்பட்டது. இரட்சகரை உலகத்தில் தோன்றச் செய்து என்றென்றும் நிலை நிற்கிற தாவீதின் உடன்படிக்கை அறிவிக்கப்பட்டது. அந்நாட்களில் பிடிவாதங்கொண்ட சவுலும், பரித்தியாகம் பண்ணும் சாமுவேலும், பக்தனான தாவீதும் இவர்கள் புரிந்த செயல்களைக் காட்டிலும் அவர்களுடைய குணாதி சயத்தில் சிறந்து விளங்கின வர்களாக இருக்கிறார்கள்.

இந்த ஆகமங்களில் இந்த நாமங்களே சரித்திரத்தை உருவாக்கு கின்றன. நாம் அகற்ற வேண்டியவை இன்னவை என்றும், நாம் பின்பற்ற வேண்டியவை இன்னவை என்றும் அவர்களிடம் கற்றறியலாம். இவ்வதிகாரங் களினூடே சேர்ந்து பின்னப்பட்ட கயிறுபோல் தேவனுடைய மீட்பின் அன்பும், அவருடைய மாறாத பரிசுத்தமும், அவர் வைத்திருக்கும் ஆசீர்வாதமும், முடிவடையாத அவர் நோக்கமானது. அவருடைய இராஜ்யத் தையும் மகா இராஜனை உலகத்துக்கு கொண்டுவர உழைத்து கொண்டிருக் கிறது என்பதை அறிகிறோம். தாம் ஏற்படுத்தின இராஜாவுக்கு அவர் மகத்தான இரட்சிப்பை அழிக்கிறார். தாம் அபிஷேகம் பண்ணின தாவீதுக்கும் அவன் சந்ததிக்குமே என்றென்றைக்கும் கிருபை செய்கிறார் (2 சாமு. 22: 51) வசனம் எவ்வளவோ உண்மையாய் இருக்கிறது. சாமுவேலின் புஸ்தகங்கள் தீர்க்கதரிசன வரிசையிலே வருகிற தென்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்வோமாக சாமுவேலின் புஸ்தகங்கள் முடிந்தது.

(தொடரும்)

# வேதம்

(தொடர்ச்சி)

ஒவ்வொரு மதஸ்தரும் தங்களு டைய கொள்கையே மெய்யென்றும் அவரவர்களுடைய மதங்கள் அவரவர் களுக்குத் தகுதியான அருள் வேதம் என்றும் சாதிப்பார்கள். ஆயினும் அப்படி எளிதாய் அவர்கள் சொல்லுகிறதற்கும் சாதிப்பதை திருஷ்டாந்தப்படுத்துவதற்கும் மிகுந்த வித்தியாசம் உண்டு. பொய் எப்போதும் வேற்றுமையை காட்டாம லிருக்கும் தான் உண்மையானதென்று காண்பிக்கும்படி சத்தியத்தையும் தன்னோடு சேர்த்துக் கொள்ளும். அப்படியிருந்தால் தேவன் சத்தியத்தை மனதுக்கும், மனதை சத்தியத்திற்கும் காரியங்கள் ஒன்றிற் கொன்று இயல்பாய் சம்மந்தப் பட்டிருக்கிறபடி படைத்திருக் கிறபடியால் சத்தியம் எளிதாய் விளங்குமே. வெள்ளிப்பணம் இருக் கிறபடியால் ஈயப்பணத்தையும் சிலர் செய்கின்றார்கள். நல்ல நோட்டுக்கள் இருக்கிறதினால்தான் கள்ள நோட்டுக்

களையும் சிலர் அடித்து வெளியிடுகிறார்கள். வேதம் என்று ஒன்று இருக்கிறதினால் அதின் மாதிரியின் படியே பல பொய்வேதங்களும் உண்டாக்கப்பட்டிருக்கிறது. வெள்ளிப் பணத்தையும் ஈயப்பணத் தையும் பரீட்சித்துப்பார்த்தால் எது வெள்ளிப் பணம், எது ஈயப்பணம் என்று அறிந்து கொள்ளுகிறது போல வேதங்களின் தன்மையையும் மனமாகிய உறைகல்லிலே உறைக்கிறதினால் தெளிவாய் அறிந்து கொள்ளலாம். பொன்னெல்லாம் அணியானாலும் அணியெல்லாம் பொன்னல்ல. இதைக் கண்ணுள்ளோர் கண்டு மனமுள்ளோர் கருதுவார்களல்லவோ?

1.சத்திய வேதத்துக்கும் பொய் வேதங்களுக்கும் இருக்கிற வித்தியாசத்தை தோன்ற சத்திய வேதம் சில விசேஷமான இலட்சணங்களை உடையதாய் இருக்க வேண்டும். அவையாவன.

1. அது சத்தியத்தை மாத்திரம் அறிவிக்க வேண்டும்.
2. அது மனிதனுடைய புத்தியிலே தோன்றமாட்டாத பரம இரகசியங்களை அறிவிக்க வேண்டும். அவை புத்திக்கெட்டாதவைகளாய் இருந்தாலும்; புத்திக்கு விரோதமாய் இருக்கக்கூடாது.
3. அது எவ்விதத்தினாலும் நம்முடைய மனதை மெய்யான தேவனிடத்திற்கு வழி நடத்த வேண்டும்.
4. அறிவின் மேலுள்ள பேராசைக்கு திருப்தி செய்யத்தக்க விசேஷங்களை அது நம்முடைய மனதிற்கு போதிக்க வேண்டும்.
5. விசேஷமாய் தேவனிடத்தில் அன்பு கூறும்படிக்கும் அக்கிரமங்கள் யாவையும் வெறுத்து விடும்படிக்கும் பரிசுத்த பிரமாணங்களை அது போதிக்க வேண்டும்.
6. அதிலுள்ள வாக்கியங்கள் ஒன்றிற்கொன்று விரோதமாய் இராமல் இசைவுள்ளவைகளாய் இருக்க வேண்டும்.
7. மனிதனுடைய கெட்ட குணங்களை மாற்றுகிறதற்கும் மனதை நிச்சயமாய் சமாதானத்தினாலும், சந்தோஷத்தினாலும் நிரப்புகிறதற்கும் பூரணமாய் தேவனுடைய கற்பனைகளுக்கு கீழ்ப்படியப் பண்ணுகிறதற்கும் ஏதுவான உபதேசங்களை போதிக்க வேண்டும்.
8. மனிதனுடைய புத்தியினால் அறியக் கூடாத நடக்கைகளை முன்னறிவிக்க வேண்டும். இந்த லட்சணங்களுள்ள வேதமே மெய் என அறிந்து கொள்ளலாம். கிறிஸ்தவ சமய வேதத்திற்கு இவ்வித எட்டு லட்சணங்களும் உண்டு. அப்படி உண்டோ இல்லையோவென்று பார்ப்போமாக.

வேதம் சத்தியமானதை மாத்திரம் அறிவிக்க வேண்டுமென்ற முதலாம் லட்சணம் இந்த வேதத்தில் உண்டு. நான்கு பிரமாணங்களைக் கொண்டு ஒருவன் சத்தியமென்கிறதை நிச்சயிக்கலாம். அவையாவன:

1. சம்பவித்ததாக சொல்லியிருக்கிற காரியங்கள் சம்பவித்தபோதே மனிதனுடைய கண்ணும் செவியுமாகிய இந்திரியங்கள் உணர்ந்தறிந்து கொள்ளப்பட்டதாய் இருக்க வேண்டும்.

2. அந்தக் காரியங்கள் உலகத்தில் அநேகருக்கு முன் வெளியரங்கமாய் செய்யப்பட்டிருக்க வேண்டும்.

3. அப்படி வெளியரங்கமாய் செய்யப் பட்டக் காரியங்கள் பிற்காலத்தில் நினைவு கூறும்படிக்கும் அவைகள் சம்பவித்ததற்கு தகுந்த குறிப்புகளும் அவைகளைக் குறித்து மனிதர்கள் செய்யத்தகும் தகுந்த கருமங்களும் அப்பொழுதே ஸ்தாபிக்கப்பட்டிருக்கவேண்டும்.

4. அப்படிப்பட்ட குறிப்புகளும் கருமங்களும் காரியங்கள் சம்பவித்தது முதல் ஸ்தாபிக்கப்பட்டு கைக்கொள்ளப் பட்டு வரவேண்டும். இந்த நான்கு பிரமாணங்களில் முன் நிற்கிற இரண்டும் பிரத்தியட்சப் பிரமாணங்களாய் இருக்கிறது. அவைகளைக் குறித்து எவ்வளவேனும் சந்தேகங்கள் தோன்றமாட்டாது. ஒரு எத்தன் நான் நேற்று சென்னைப் பட்டணத்திலிருக்கிற சமுத்திரத்தை ஓரிடத்தில் வற்றப்பண்ணி, ஜலம் இருபுறமும் மதிலாக நிற்க அதின் நகரத்தார் யாவரையும் அதிலே நடக்கப் பண்ணினேன் என்று அபத்தமாய் சொல்வானானால் மனிதர்கள் அவனை நம்புவார்களோ? அவனைப் பித்தன் என்பார்களல்லவா? இல்லாவிட்டால் அவன் பொய்யை நம்ப அவர்களாவது பித்தர்களாய் இருக்க வேண்டுமல்லவா!!

ஆகையால் ஒரு காரியம் மெய்யாய் இராமற் போனால், புத்திசாலிகளால் உடனே நம்பப்படமாட்டாது. ஆனால் ஒருவேளை ஒருவன் இந்தக்காரியத்தை வெகு காலத்திற்கு முன் சம்பவித்ததென்று பிற்காலத்தில் சொல்லி மனிதர்கள் அதை நம்பும்படிக்கு எத்தனப்படலாம். அவன் அப்படிச் செய்தாலும் மேற்கொண்டிருக்கிற இரண்டு கடைசி பிரமாணங்களினால் அவன் சொல்லும் காரியம், மெய்யும் பொய்யும் விளங்குமே. எப்படியெனில் அவன் இந்த சங்கதி ஆயிரம் வருஷத்துக்கு முன்னே நடந்ததென்று அபத்தமாய்ச் சொல்லும்போது ஜனங்கள் அவனை நோக்கி நீர். சொல்லுகிற காரியங்கள் ஆயிரம் வருஷத்திற்கு முன் நடந்ததென்பதற்கு திருஷ்டாந்தங்களென்ன? அதற்கு அடுத்த குறிப்புகளென்ன? மனிதர்கள் அது சம்பவித்தது முதற் செய்து கொண்டிருக்கும் கருமங்களென்ன? என்று கேட்டு, அக்கேள்விகளுக்கு நியாயமான உத்தரவு கிடையாமற் போனால் இவ்விதமான திருஷ்டாந்தமில்லாத காரியங்கள் பொய் என்று தீர்மானிப்பார்கள். இந்த நியாயங்கள் யாவருக்கும் யதார்த்தமாய் தோன்றுமாகையால் மோசேயையும் இயேசு கிறிஸ்துவையும் குறித்த காரியங்களின் உண்மையை இந்நான்கு பிரமாணங்களினாலே திருஷ்டாந்தப்படுத்துவோம்.

மோசே ஆறுலட்சம் ஜனங்களை நோக்கி உங்கள் தேவனாகிய கர்த்தர் செய்த சிட்சையும், அவருடைய மகத்துவத்தையும், அவருடைய பலத்த கையையும், அவருடைய ஓங்கிய புயத்தையும், அவர் எகிப்தின் நடுவிலே எகிப்தின் ராஜாவாகிய பார்வோனுக்கும், அவன் தேசம் அனைத்திற்கும் செய்த அவருடைய அடையாளங்களையும், அவருடைய கிரியைகளையும், எகிப்தின்

சேனையையும் அவர்கள் குதிரைகளையும், இரதங்களையும் உங்களைப் பின் தொடர்ந்து வருகையில் கர்த்தர் சிவந்த சமுத்திரத்தின் ஜலத்தை அவர்கள் மேல் புரளப்பண்ணி இந்நாள் வரைக்கும் இருக்கிறது போல அவர்களை அழித்த அவருடைய செய்கைகளையும் நீங்கள் இவ்விடத்திற்கு வருமளவும் அவர் உங்களுக்கு வனாந்திரத்தில் செய்ததையும், பூமி தன் வாயைத் திறந்து எலியாப் என்னும் ரூபன் குமாரனுடைய மக்களான தாத்தானையும் அபிராமையும் அவர்கள் குடும்பங்களையும் அவர்கள் கூடாரங்களையும் இஸ்ரவேல் எல்லாருக்குள்ளிருந்தும் அவர்களுக்கு இருந்த அவர்களுடைய சகல பொருளுடமைகளையும் விழுங்கும்படி செய்ததையும், அறியாமலும் காணாமலுமிருக்கிற உங்களுடைய பிள்ளைகளுடன் நான் பேசவில்லை; இன்று நீங்களே அறிந்து கொள்ளுங்கள். கர்த்தர் செய்த மகத்துவமான கிரியைகளையெல்லாம் உங்கள் கண்களல்லவோ கண்டது என்று சொன்னார் (உபா. 11: 2-7).

இந்த சங்கதி உண்மையாய் இராமற்போனால் அவர் இவ்வளவு யதார்த்தத்தோடும் தெளிவோடும் பொய் சொல்ல முடியாது. அது அபத்தமானால் ஜனங்கள் அதை எளிதாய் ஏற்றுக் கொள்வார்களா? ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். ஏனெனில் மேற்கண்ட இரண்டு முதற்பிரமாணங் களில் நாம் கண்ட, கேளாத காரியமாய் இருக்கிறபடியினால் நம்பமாட்டார்கள். நேரடியாய் அவர்கள் எதிர்த்துப் பேசுவார்கள். சொன்னது உண்மையாய் இருந்ததேயானால்; அவர் எழுதின ஆகமங்களை உண்மையென்று யாதொரு சந்தேகமும் ஆட்சேபிக்காமல் அங்கிகரித்துக் கொள்வார்கள். அப்படியே இது அங்கீகரிக்கப் பட்டதாயிருக்கிறது.

ஆனாலும் மோசேயின் ஆகமங்கள் மோசேயின் வெகு காலத்திற்கு பின் எழுதப்பட்டு அவர் பெயரால் பிரசித்தம் செய்யப்பட்டிருக்கும் என்ற சிலரின் கருத்து ஏற்றுக்கொள்ளப் படத்தக்கதல்ல. ஏனெனில், இந்த ஆகமங்கள் மோசேயினாலேயே எழுதப்பட்டு அவர்காலமுதல் உடன் படிக்கைப் பெட்டியில் வைக்கப் பட்டதென்று எழுதப்பட்டுள்ளது (உபா. 31:24-26). மோசே இந்த நியாயப்பிரமாண வார்த்தைகளை ஒரு புஸ்தகத்தில் எழுதி முடித்த போது அவர் கர்த்தருடைய உடன்படிக்கைப் பெட்டியை சுமக்கிற லேவியருக்கு கற்பித்ததாவது: நீங்கள் நியாயப்பிரமாண புஸ்தகத்தை வாங்கி அதை உங்கள் தேவனாகிய கர்த்தரின் உடன்படிக்கைப் பெட்டியின் பக்கத்திலே வையுங்கள். அங்கே அது உனக்கு எதிரான சாட்சியாய் இருக்கும். அதுவுமன்றி, இந்த ஆகமங்களில் ஒரு பிரதி ராஜாவினிடத்திலும் இருக்க வேண்டுமென்ற கட்டளையும் இருந்தது (உபா. 17: 18-20).

(தொடரும்)



# கிறிஸ்தவர்களுக்கு விரோதமாக சாத்தானுடைய தாக்குதல்கள்

(தொடர்ச்சி)

**நான்காவது:- வியாதி பெலவீனங்கள்:**

யாருக்காவது வியாதிகள், பிரச்சனைகள் உண்டாகிவிட்டால் சீக்கிரமாக அதை சரிபண்ணிக்கொள்ள வேண்டும். இல்லையென்றால் நமக்கு அன்றாட வாழ்க்கையும், ஊழியமும் பாதிக்கப்படும். சாத்தான் நம்முடைய சரீரத்தை தாக்கி, நமது நரம்பு மண்டலத்தை தாக்கி, நம்மை தளர்ச்சியடையவும், சீர்குலையவும் செய்கிறதற்கு அவன் பிரயாசப்படுகிறான். அதிலே அவன் வெற்றி பெற்று விட்டானென்றால் நம்முடைய பெலவீன வேளைகளிலே லேசாக நம்மை பாவம் செய்ய வைப்பான். இதற்கு விரோதமாக நாம் மிகவும் தெளிவாக, தெளிவுள்ளவர்களாக நடந்து கொள்ள வேண்டும். மிகவும் சுத்தமாக இருக்க வேண்டும். வியாதிகள் இருந்தால் உடனே சரிசெய்து கொள்ள வேண்டும்.

வியாதிகள் என்று கூறும் போது, சின்ன தலைவலி, காய்ச்சல், பெலவீனங்கள் போன்றவற்றைப் பற்றி நான் குறிப்பிடவில்லை.. எப்பொழுதாவது இப்படி சில காரியங்கள் நேரிடலாம். அது சீதோஷண மாற்றம், உணவு மாற்றங்கள் அல்லது ஏதாவது நாம் சரியான வேளைக்கு சாப்பிடாமல், ஓய்வு எடுக்காமல் இருந்ததினால் வந்திருக்கும். இதை நாம் சரி செய்து கொள்ளலாம். ஆனால் வியாதி என்று கூறப்படுவது நிரந்தரமாக நம்மைப் பாதித்து, நம்மை ஊனமாக்கக் கூடிய, அசதியாக்கக் கூடியதாகவும் நம்மை உட்காரவைக்கக் கூடியதாகவும் இருந்தால் அதை நாம் உடனே சரி செய்துவிட வேண்டும். ஆனால் இந்தக் காரியம் சாத்தானால் நடைபெறுகிறது என்கிறதை அனேகர் அறியாமல் இருக்கிறார்கள். 18 வருஷமாய் சாத்தானால் கட்டப்பட்டு இருக்கிற இந்த ஆபிரகாமின் மகளை விடுதலையாக்க வேண்டியது அவசியமல்லவா என்றுச் சொல்லி கர்த்தர் சுகப்படுத்தி விட்டார் என்று நாம் வேதத்தில் பார்க்கிறோம். அநேக வியாதிகள் பிசாசினால் உண்டானது என்றுச் சொல்லி கர்த்தர் அவைகளை விரட்டி அவர்களை சுகமாக்கினார் என்று வேதத்தில் எழுதப்பட்டிருக்கிறது. இதிலே ஒரு முக்கியமான காரியம், நரம்பு தளர்ச்சி போன்றவைகள் உண்டாகும்போது நரம்பு மண்டலம் முழுவதையும் அவனுடைய ஆளுகையில் கொண்டு வந்து அவர்களை பெலவீனப்படுத்தி விடுவான். அவைகளுக்கு எதிராக நாம் நம்முடைய சரீரத்தையும், மனதையும் பண்படுத்திக் கொள்ள வேண்டும்.

**ஐந்தாவதாக:-**

சாத்தான் நம் மனதைக் கெடுத்து அழிக்கிறதற்காக முற்படுகிறான். பொதுவாக சாத்தானுடைய தாக்குதல் அதிகமாக மனதிலே நடைபெறுகிறது. அவனுடைய தொழிற்சாலையாக முதலில் அவன் வேலை செய்தது நமது மனதில் தான். இரட்சிக்கப்பட்டபோது அந்த ஆத்துமா கடவுளுக்குள்ளாக ஆகி விட்டது; ஆனபடியினால் அவனுக்கு இடமில்லாமல் போயிற்று. ஆனால்

அவன் மறுபடியும் நம்மை தாக்குதல் நடத்தி மனதைப் பிடிக்கிறதற்காக பிரயாசப் படுகிறான். 2 கொரி. 4:4-இல் நாம் வாசிக்கிறபோது தேவனுடைய சாயலாயிருக்கிற கிறிஸ்துவின் மகிமையான சுவிசேஷத்தின் ஒளி, அவிசுவாசிகளாகிய அவர்களுக்குப் 'பிரகாசமாயிராதபடிக்கு, இப்பிரபஞ்சத்தின் தேவனானவன் அவர்களுடைய மனதைக் குருடாக்கினான் என்று எழுதப்பட்டிருக்கிறது.

உலகத்தின் மக்கள் அறிவாளிகள், ஞானிகள், ஐசுவரியவான்கள் அநேகர் கிறிஸ்துவின் சுவிசேஷத்தை ஏற்றுக் கொள்ள இருக்கமுடியாதபடி இருக்கக் காரணம் அவர்களுடைய கண்கள் குருடாயிருக்கிறதினாலேயாகும். (ஆவிக்குரிய அவர்களுடைய ஆத்துமக் கண்கள் குருடாயிருக்கிறது என்பதாம்). அவர்களுடைய கண்களை திறக்கும்படியாக, முதலாவது நாம் ஜெபம் பண்ணவேண்டும்.

கர்த்தர் அப்போஸ்தலரைப் பார்த்து சொல்லும் போது, நான் உன்னை உன் சுய ஜனங்களினின்றும், அந்நிய ஜனங்களி னின்றும் விடுதலையாக்கி அவர்கள் என்னைப்பற்றும் விசுவாசத்தினாலே பாவ மன்னிப்பாகிய மீட்பையும், பரிசுத்த ஆவியைப் பெற்றுக் கொள்ளும்படியும் அவர்கள் இருளை விட்டு ஒளியினிடத்திற்கும், சாத்தானுடைய அதிகாரத்தைவிட்டு தேவனுடைய ராஜ்யத்துக்கு உடன் படும்படிக்கும் அவர்களுடைய கண்களைத் திறக்கும்படி நான் அவர்களை உன்னிடத்தில் அனுப்புகிறேன் வா என்று கர்த்தர் சொன்னதாக நாம் வாசிக்கிறோம் (அப். 26:17,18). இப்பிரபஞ்சத்தின் தேவனானவன் அவர்களுடைய கண்களை குருடாக்கிவைத்திருக்கிறான். இந்நாளிலேயும் சாத்தான் இரட்சிக்கப்பட்ட மக்களுடைய கண்களை மறுபடியும் குருடாக்குகிற தற்காகப் பிரயாசப்படுகிறான். உபதேசங்களை மாற்றுகிறதின் முக்கிய நோக்கம் என்னவென்றால் சாத்தான் அவர்களுடைய கண்களை குருடாக்கி கர்த்தருடைய வருகையிலே எடுத்துக் கொள்ளப்படாதபடிக்கு தடுக்கிறதற்காக அவன் இவைகளைக் கையாளுகிறான். சாத்தான் நேரடியாக அல்ல, ஊழியக்காரர் மூலமாக செயல்படுகிறான் என்று எழுதப்பட்டிருக்கிறது. 11கொரி. 11: 14,15-ல் அது ஆச்சரியமல்ல, சாத்தானும் ஒளியின் தூதனுடைய வேஷத்தைத் தரித்துக் கொள்வானே.

ஆகையால் அவனுடைய ஊழியக்காரரும் நீதியின் ஊழியக்காரருடைய வேஷத்தைத் தரித்துக் கொண்டால் அது ஆச்சரியமல்லவே; அவர்கள் முடிவு அவர்கள் கிரியைகளுக்குத் தக்கதாயிருக்கும் என்றுச் சொல்லி எழுதப்பட்டிருக்கிறது. சிலர் பிசாசு பிடித்தவர்களைக் குறித்துச் சொல்லுவார்கள் ஒளியின் தூதன் தாக்கியிருக்கிறான் என்று. ஒளியின் தூதன் அல்ல, சாத்தான் ஒளியின் தூதனுடைய வேஷத்தை தரித்துக் கொள்கிறான். அப்படியே அநீதியின் ஊழியக்காரன், (சாத்தானுடைய ஊழியக்காரன்) கிறிஸ்துவின் ஊழியக்காரன் வேஷத்திலே வருவான் என்று இங்கே எழுதியிருக்கிறது. பொதுவாக ஒரு

அபிப்பிராயத்தை உபதேசங்களாகச் சொல்லுகிறார்கள் -

உலகத்தான் நம்மிடத்தில் ஒரு காரியத்தை சொன்னால் நாம் நம்பமாட்டோம், ஒரு விசுவாசி சொன்னால் கிறிஸ்தவ விசுவாசி நம்புவான், ஒரு ஊழியக்காரன் சொன்னால் ஒரு ஊழியக்காரர் பொய் சொல்லுவாரா? அவர் சொல்லுகிறதும் உண்மையாகத்தான் இருக்கும் என்று அதை நம்புவான். அதைக் காட்டிலும் ஒரு தீர்க்கதரிசி, ஒரு அப்போஸ்தலன் சொன்னால் ஒரு ஊழியக்காரன் சொல்லுகிறது உண்மை யாகத்தான் இருக்கும் என்று சொல்லி அதை ஏற்றுக்கொள்வார். இந்நாட்களில் கள்ள உபதேசத்தில் விழுந்தவர்களைப் பாருங்கள் அவர்களைத் திருப்புவது அதிக கஷ்டமான காரியம். கர்த்தர் இரக்கம் பாராட்டி அவர்களுடைய கண்களைத் திறந்தால் உண்டு, இல்லையென்றால் அவர்கள் பூரணமடைவதோ, கர்த்தருடைய வருகையில் எடுத்துக் கொள்ளப் படுகிறதோ கடினமான காரியம்.

பாவம் செய்தவர்களைக் குறித்துச் சொல்லும் போது, அவர்கள் அந்த மயக்கத்திலிருந்து விடுதலையாகும்படி அவர்களுடைய கண்களைத் திறக்கும் படியாக இந்த ஊழியத்தை செய்ய வேண்டும் என்றுச் சொல்லி எழுதி யிருக்கிறது. இந்த உலகத்தில் கள்ள உபதேசங்கள் மலிந்து போய்க் கொண்டி ருக்கின்றன. தங்களுடைய அபிப்பிராயத்தை உபதேசங்களாகச் சொல்லுகிறார்கள். சிலர் அதை தேவனுடைய வெளிப்படுத்தல் என்றுச் சொல்லி மக்களை வஞ்சிக்கிறதைக் காண்கிறோம். ஆனால் வெளிப்படுத்தல் பற்றி என்ன என்றால் அவர்களுக்குத் தெளிவாக தெரிவதில்லை. எனவே மக்கள் வஞ்சிக்கப்பட்டுப் போகிறார்கள். பின்மாற்றத்தில் விழுந்தவர்களும் அப் படித்தான். ஆனால் எதிர்த்துப் பேசுகி றார்கள், தர்க்கம் பண்ணுகிறார்கள் என்றால் ஆச்சரியப்படுகிறதற்கு ஒன்று மில்லை. சாத்தான் அவர்களுடைய கண் களை குருடாக்கி இருக்கிறான்.

2தீமோ 2: 25,26-ல் எதிர்த்து பேசுகிறவர்கள் சத்தியத்தை அறியும்படி தேவன் அவர்களுக்கு மனந்திரும்புதலை அருளத்தக்கதாகவும், பிசாசானவனுடைய இச்சையின்படி செய்ய அவனால் பிடிபட்டிருக்கிற அவர்கள் மறுபடியும் மயக்கந்தெளிந்து அவன் கண்ணிக்கு நீங்கத்தக்கதாகவும், சாந்தமாய் அவர் களுக்கு உபதேசிக்க வேண்டும் என்பதாம். தர்க்கம் பண்ணியோ சண்டை போட்டோ நாம் சத்தியத்தை நிலை நிறுத்த முடியாது. எந்த தர்க்கத்தினுடைய முடிவும் கசப்பாகத்தான் முடியும். பொதுவாக ஞானிக்கு தர்க்கமில்லை என்று சொல்லுவார்கள். சத்தியத்தைச் சொல்ல வேண்டும்; ஏற்றுக் கொள்ள மனமில்லையென்றால் விட்டு விட

**வஞ்சிக்கப்படாதிருங்கள்**

**புதிய எருசலேம் சபை மூலம் ஆஸ்திரேலியா இன்னும் வெளிநாடுகளுக்கு வேலை தேடிச் செல்லும் மக்களுக்கு ஏற்பாடுகள் செய்யப்படுகிறதாக இம்மானுவேல் தாஸ் என்பவன் பொய் சொல்லி இதுவரை அநேகரை வஞ்சித்து வந்து கொண்டுள்ளான். அவன் பல பெயர்களில் செயல்படுகிறான் எச்சரிக்கையாயிருப்பீர்களாக!**

வேண்டும். ஜெபம் பண்ண வேண்டும். மீண்டும் சந்திக்கும் போது அதைக் குறித்துப் பேசலாம் IIகொரி 4: 6-ல் நாம் வாசிக்கும் போது மகிமையின் அறிவாகிய ஒளியைத் தோன்றப் பண்ணும் பொருட்டாக, எங்கள் இருதயங்களிலே பிரகாசித்தார் என்று எழுதியிருக்கிறது. சுத்தமான சத்தியம் தேவனுடைய வசனத்தின்படியானது. வேத வசனத்தை சொல்லியும் "நான் ஒத்துக்கொள்ள மாட்டேன்" என்கிறவர்கள் சாத்தானின் பிடியில் இருக்கிறார்கள்.

தவறான சிந்தனை அல்லது நம்மை குறித்து யாராவது தவறாக பேசினார்கள் என்றால், அல்லது நாம் பிறரை தவறாக பேசுகிறோம், சிந்திக்கிறோம் என்றால் இதைக் குறித்து நாம் கவனமாக இருக்கவேண்டும். உடனே அதிலிருந்து விடுதலைப் பெற்றுக் கொள்ள வேண்டும். கசப்பான வேர்கள், உட்பகை, ஏமாற்றம் அதாவது காதல் தோல்வி, பள்ளியில் தோல்வி, பரீட்சையில் தோல்வி, தொழிலில் தோல்வி, ஏமாற்றம், பொறாமை முதலியவைகள் மூலமாக சாத்தான் நம் மனதுக்குள் நுழை கிறதற்காக பிரயாசப் படுகிறான். ஆரம்பத்திலே கண்டு நாம் அதை அகற்றி விடவில்லை என்றால் அது வெறும் பகையாக நம் உள்ளத்திலே நிலைத்துப் போய்விடும். அப்போது சாத்தான் நம்முடைய உள்ளத்திலே குடி கொண்டிருக்கிறான் என்று சொல்லலாம்.

**ஆறாவதாக:**

சாவின் வாயிலாக, சாத்தான் கிறிஸ்தவர்களை கொலை செய்ய வேண்டும் என்று எண்ணுகிறான். நாம் இவ்விதமாக வாசிக்கிறோம் (வெளி. 1:18)-ல் நான் மரணத்திற்கும் பாதாளத் திற்குமுரிய திறவு கோல்களை உடையவராக இருக்கிறேன் என்று சொல்லி கர்த்தராகிய இயேசு கிறிஸ்து திருவுளம்பற்றுகிறார். ஆனால் நாம் யோபுவின் புஸ்தகத்தை வாசிக்கும்போது யோபுவினுடைய பிள்ளைகளை சாத்தான் கொல்லுவதற்கு கர்த்தர் அனுமதிக் கொடுத்துவிட்டார் என்று நாம் அறிகிறோம். ஒரே நாளில் வீடுகள் அவர்கள் மேல் விழுந்து அந்த பிள்ளைகள் எல்லோரும் இறந்து விட்டார்கள்.

யோபு 1;12,18,19 ஆகிய வசனங்களில் நாம் இப்படி வாசிக்கிறோம். இதோ, அவனுக்கு உண்டானவையெல்லாம் உன் கையிலிருக்கிறது; அவன் மேல் மாத்திரம் உன் கையை நீட்டாதே என்றார்; அப்பொழுது சாத்தான் கர்த்தருடைய சந்நிதியை விட்டுப் புறப்பட்டுப் போனான். இவன் இப்படி பேசிக் கொண்டிருக்கையில் வேறொருவன் வந்து; உம்முடைய குமாரரும், உம்முடைய குமாரத்திகளும் தங்கள் மூத்த சகோதரன் வீட்டிலே புசித்து திராட்சரசம் குடிக் கிறபோது, வனாந்தர வழியாய்ப் பெருங்காற்று வந்து, அந்த வீட்டின் நாலு மூலையிலும் அடிக்க, அது பிள்ளைகளின் மேல் விழுந்ததினால் அவர்கள் இறந்து போனார்கள்; ஒருவன் மாத்திரம் தப்பி, அதை உமக்கு அறிவிக்கும்படி வந்தேன் என்றான் என்பதாம்.

சத்தியத்தினிமித்தம், ஊழியத் தினிமித்தம், சுவிசேஷத்தினிமித்தம் இரத்த சாட்சியாய் மரிக்கிறது நல்லது. அது கர்த்தருக்கு சித்தமானால் அதற்கு கர்த்தர்

அனுமதி கொடுப்பார். சாத்தான் யோபுவின் பிள்ளைகளை ஒரே நாளில் கொன்று போட்டான் என்று பார்க்கிறோம். ஆனால் யோபுவைக் குறித்துச் சொல்லும்போது; அவரைத் தொடுகிற தற்கு அதாவது அவர் ஜீவனை தொடுகிறதற்கு அனுமதி கொடுக்காததி னாலே யோபுவை கொல்ல முடியவில்லை. ஆகையால் நாம் சாத்தானை எதிர்க்க வேண்டும்.

கொலை செய்யாதிருப்பாயாக என்பது பிரமாணங்களிலே ஒன்று, நம்முடைய ஜீவன் தேவனால் அருளப்பட்டிருக்கிறது. தற்கொலை ஆவியினால் தூண்டப்படும்போது சாத்தானை எதிர்க்க வேண்டும். இந்த தற்கொலை ஆவிகள் வந்து ஒருவனை ஆட்கொள்ளும் போது நீ செத்துப்போ, அப்பொழுதுதான் உன்னை பற்றிய செய்தி தெரியவரும் என்று பலவிதமான காரியங்களை காட்டி தற்கொலை செய்வதற்கு தூண்டுவான். தற்கொலை செய்கிறவர்கள் சாத்தானுடைய கூட்டத்தோடு சேர்க்கப்படுகிறார்கள். உடனே பாதாளத்துக்குப் போகிறார்கள். தற்கொலை செய்யாமல், அவர்கள் மனந்திரும்பி கடவுளை நோக்கி ஜெபம் பண்ணி, சம்பந்தப் பட்டவர்களிடம் மன்னிப்பு கேட்டு வாழுகிறதற்கு அவர்களுக்கு நிறைய காலம் உண்டு, நேரம் உண்டு. வேதாகமத்தில் அகித்தோப்பேல் நான்று கொண்டு செத்தான்; யூதாஸ் நான்று கொண்டு செத்தான் என்றெல்லாம் எழுதியிருக்கிறது. யூதாஸ் தான் குற்றமில்லாத இரத்தத்தை காட்டி கொடுத்தேன் என்று சொன்னானே ஒழிய அவன் மனந்திரும்பவில்லை, இயேசுவை நோக்கி பார்க்கவில்லை; இயேசுவினிடத்தில் வந்து மன்னிப்புக் கேட்டு அதிலிருந்து விடுதலை பெற்றிருக்கலாம். அகிதோப் பேல் துர்ஆலோசனை சொல்லுகிற மனிதனாக இருந்தான்; தனது விருப்பம் நிறை வேறவில்லை என்பதற்காக செத்துப் போனான்.

(தொடரும்).

# கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் பிறப்பு

இயேசு கிறிஸ்து திரியேகத்துவத்தில் ஒருவரும், மனுஷ அவதாரம் பண்ணின தேவ குமாரனும் சற்குருவுமாகிய உலக இரட்சகர். இயேசு அல்லது யோசுவா என்பது இரட்சிப்பார் என்கிற எபிரேய மொழி (மத்.1:21). கிறிஸ்து என்பது அபிஷேகம் பண்ணப்பட்டவர் என்கிற கிரேக்க மொழி. கிறிஸ்து என்ற பெயரும் மேசியா என்ற எபிரேய பெயரும் ஒரே பொருள் உள்ளதே (மத்.21:4; ஏசா. 45:7). இரட்சகர் பூலோகத்திலிருந்த போது இயேசு என்ற ஒரு பெயரால் மாத்திரம் அழைக்கப்பட்டார்.

அவர் பரமண்டலத்தில் ஏறின பின்பு இயேசு என்கிற நாமம் பொதுவான நாமம் கிறிஸ்து என்கிற நாமம் அவர் அபிஷேகிக்கப்பட்டு அனுப்பப்பட்டவர் என்கிற அர்த்தமும் பின்பு இரண்டு பெயர்களையும் சேர்த்தே அவர் தமது புண்ணிய பலன்களினால் பாவிகளாகிய உலகத்தாரை இரட்சிக்கிற வல்லமையும் கிருபையும் உள்ளவராய் இருக்கிற

படியினாலும் அப்படியே அவர் உலகத்தாரை இரட்சிக்க தேவனால் நியமித்து அபிஷேகம் பண்ணப்பட்டு அனுப்பப்பட்டவராயிருக்கிறபடியினாலும், இயேசு கிறிஸ்து என்று அழைக்கப்பட்டார் (மத். 1:21; மாற். 1:1).

கிறிஸ்துவுக்கு வேதத்தில் இடப்பட்டிருக்கிற பெயர்களில் சில: அடைக்கலம், அதிசயமானவர், அதிபதி, அபிஷேகம் பண்ணப்பட்டவர், அப்போஸ்தலர், அன்பர், அஸ்திபாரம், இரண்டாம் ஆதாம், ஆதி, ஆசாரியர், ஆண்டவர், ஆலோசனைக்காரர், இரட்சகர், இம்மானுவேல், இரக்கமுள்ளவர், இராஜா, இயேசு, இஸ்ரவேல், உன்னதமானவர், ஊற்று, எருசலேம், ஒளி, கண்கானி, கர்த்தன், கன்மலை, காரியக்காரன், கிறிஸ்து, கிருபையுள்ளவர், கேடயம், சத்தியம், சபைத்தலைவர், சர்வவல்லோன், சர்வ வியாபி, சர்வஞ்ஞா, சாட்சி, சாலோமோன், சிருஷ்டிகன், ஜீவ அப்பம், ஜீவன், ஜீவவிருட்சம், சுதந்திரன், சுத்திகரிப் போன், சுயாதிபதி, செங்கோல், சேனாதிபதி, யோகோவா, தங்கம், தலைவன், தாபரம், தாவீது மைந்தன், தீர்க்கதரிசி, தீவினையற்றோன், தூதன், தேவ ஈவு, தேவ சொருகன், தேவ ஞானம், தேவ பலன், தேவாலயம், தேவன், நம்பிக்கை, நித்திய பிதா, நித்தியன், நித்திய ஜீவன், நியாயாதிபதி, நியாய நெறியாளர், நீதிபரர், நீண்ட ஆயுஸ் உள்ளவர், நீதியின் சூரியன், நீடிய சாந்தன், பக்தன், பரிசுத்தர், பரிமளம், பலி, பனி, தேவன், தேவனுடைய குமாரன், பாக்கியமுள்ளவர், பகல்வன், பாவநாசகன், பாவிகளின் சிநேகிதன், பிணையாளன், பிரதான ஆசாரியன், பிரபு, பொக்கிஷம், போதகர், மகிமையுள்ளவர், மத்தியஸ்தர், மணவாளர், மனுஷர், மனுஷகுமாரர், மிகாவேல், மீட்பர், முடி, மேசியா, மேய்ப்பர், ஜீவ வழி, வாசல், வார்த்தை ஆகியவையே. 109 பெயர்கள்

இயேசுகிறிஸ்துவினுடைய வருகையைக் குறித்து ஆதி முதல் பற்பல தீர்க்கதரிசனங்கள் இருந்ததுமன்றி அவருடைய வருகைக்காக யூதர்கள் மாத்திரமல்ல மற்றவர்களும் காத்திருந்தார்கள். அன்னாள் என்ற தீர்க்கதரிசியானவள் தன் புருஷனை இழந்த பின்பு தேவாராதனைக்கென்று தன்னை முழுவதும் ஒப்புவித்திருந்தாள் (லூக். 2:35,37). அவளைப் போல் அக்காலத்து யூதர்களிலும், சமாரியர்களிலும் அநேகரும் இரட்சிப்புக்காக எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள் (யோவா. 4:25,26; 1:60). சுகத்தோனி என்ற அஞ்ஞானி எழுதினபடி உலகத்தாரை உலக இராஜ்யத்தை கட்டப்போகிறவர் அக்காலம் யூதாவில் எழும்புவார் என்கிற சமுதாயத்தோர் எல்லோரும் பூவுலக கீழ்புறமெங்கும் பலத்த செய்தி உண்டாயிருந்தது என்று எழுதுகிறார்.

இதன்றி வேறே அஞ்ஞான புஸ்தகங்களில் எழுதியிருக்கிறதைப் போல் அவர்களுக்கு உண்டாயிருந்த வெளிப்பாட்டினால் (Revlation) சந்நதங்கள் முதலான அதற்கான தருணம் நிறைவேறினபடியால் யூதாவிலிருந்து வந்த ஒருவர் உலகத்தின் இராஜனாய் உலக இராஜ்யத்தை ஆளுவாரென்று தேவகட்டாயத்தினாலே வெளிப்படுத்துதல் பெற்றிருந்தார்கள் (மத் 8:29). ஆதி மனுஷராகிய முதல் தந்தை தாய் பாவத்தில் விழுந்தபோதே பாவநாசக

ராகிய இயேசுவில் இயேசுகிறிஸ்துவைக் குறித்து தேவன் பாவத்திற்கு ஏவின தீயோனை நோக்கி திருவுளம் பற்றினதாவது உனக்கும் ஸ்திரிக்கும் உன் வித்துக்கும் அவள் வித்துக்கும் பகை உண்டாக்குவேன். அவர் உன் தலையை நசுக்குவார், நீ அவர் குதிங்காலை நசுக் குவாய் என்றார் (ஆதி. 3: 15; யோ. 3: 8).

இயேசுகிறிஸ்துவைக் குறித்து:

1. வல்லமையுள்ள தேவன் மனுஷ அவதாரம் பண்ணுவாரென்றும் (ஏசா. 9:6).
2. அவர் கன்னிகையினிடத்தில் பிறப்பா ரென்றும் (ஏசா. 7: 14).
3. ஆபிரகாம் சந்ததியில் தோன்றுவா ரென்றும்.
4. பெத்லேகம் ஊரிலே பிறப்பாரென்றும் (ஆதி. 22: 18; 19:110; ஏசா. 11: 1; மீகா 5:1,2).
5. குறித்த காலத்தில் பிறப்பாரென்றும் (மீகா. 5:2).
6. அவர்வரும் போது யூதர்கள் சொந்த இராஜ்யம் சொந்த இராஜா நியாயாதிபதியும் இல்லாமல் இருப்பாரென்றும் (தா. 9:25).
7. அவர் எருசலேமில் கட்டப்பட்ட தேவாலயத்திற்கு வருவாரென்றும் (ஆதி. 19: 10).
8. அவர் வருகிற வேளையில் யோவானாகிய ஸ்நானகன் பிறப்பாரென்றும் (ஏசா. 2:9).
9. அவர்வருகையில் இரண்டாம் ஆலயம் அதிக மகிமையுள்ளதாய் இருக்குமென்றும் (ஆகாய்2: 7,9,10).
10. அவர் சுப விசேஷங்களைப் போதித்து அநேக அற்புதங்களை செய்வா ரென்றும் (ஏசா. 35: 4,6; 50: 2,4).
11. அவர் மிகவும் தாழ்த்தப்பட்டு பாவம் போக்கும் பலியாக தன் ஜீவனை ஒப்புக்கொடுக்கப்பட்டு மரித்து உயிர்த்தெழுந்து மகிமை அடைவா ரென்றும் (சங். 22: 6; ஏசா53).
12. அவர் நித்திய நீதியை உண்டுபண்ணி நீதியென்னும் சூரியனாக பூலோகத்தார் யாவருக்கும் ஞானமாகிய மெய்யொளியைப் பிரகாசிப்பித்து அவர் ஒருவரே இரட்சண்யக் கர்த்தரா யிருப்பாரென்றும் பூர்வீகத் தீர்க்கதரிசிகள் மகா ஆச்சரியமான விவரமாய் முன்னறிவித்து இருந் தார்கள் (தானி. 9:24; ஏசா. 53:11; மல்.4:2).

மேற்சொல்லிய தீர்க்கதரிசனங்கள் அடங்கிய வேதாகமங்களிலெல்லாம் கிறிஸ்து நாதர் தோன்றுவதற்கு 400 வருஷத்திற்கு முன்னே யூதர்களுடைய வசத்தில் இருந்தது. அவர்களில் சிலர் அவரை எதிர்பார்த்துக் கொண்டி ருந்தனர். சிலர் இன்னமும் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். தீர்க்க தரிசனங்களாய் சொல்லியிருக்கிறபடி அடையாளத்துக்கு நிறைவேறிற்றோ, அவரே மேசியா என்பது நிறைவேறிற்றோ, இல்லையோ என்று தீர்க்கதரிசனத்தின் மூலமாக விசாரித்துக் கண்டு கொள்ளலாம். இவரே மேசியா என்பதற்கு சந்தேகம் இல்லை. தானியேல் தீர்க்கதரிசி அறிவித்த 4,900 வருஷங்கள், 1900 வருஷங்களுக்கு முன்னே நிறேவேறிற்று. யூதர்களுக்குப்பின் இன்னும் நீதி சாஸ்திரத்திலும் யூதர்களுக்குள்ளே ராஜாவும் நியாயாதிபதியும் இல்லாமல் இருக்கிறதை நாம் பார்க்கிறோம். 1840 வருஷமாய்

களுக்க

ட்களிலே பாவங்களை ... றார். இது எல்
ுத உண்டாக்குகிற நற்ம... யதியாய் இருக்கிறது இதே
ரை விசுவாசிக்கிற நீங்கள் பாவ மன்னிப்பைப் பெற்
ுக்தியடைவீர்கள்.

# லம் செய்தி INTERNET ல்

இப்பொழுது **http://www.tamilnews.org/** என்ற
வெளிவருகிறது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்
... ப 120 க்கும் அதிகமான நாடுகளில் உள்ள தேவ
ஞக... ற ஆத்மீக நண்பனாக விளங்கும் 60 க்கும் அதிகமான பரிசுகளை
திய எருசலேம் சபையின் ஆங்கில பத்திக்கையான **New Jerusalem News**
ர்னெட் தளங்களாவன:

**www.njchurch.org** www.njcnews.org **www.prowebserv.com**
www.trumpetcall.org **www.truths.org** **www.njcindia.com**

## அறிவிப்புகள்

**முழு இரவு விழிப்பு ஜெபம்**

*13, திங்கள் (நவம்பர் 2000)*
*11, திங்கள் (டிசம்பர் 2000)*

**புதிய எருசலேம் செய்தி பத்திரிக்கை**

| | |
|---|---|
| ஆண்டு சந்தா | Rs. 30.00 |
| வெளிநாடு ஆண்டு சந்தா | Rs.400.00 |

**அனுப்ப வேண்டிய முகவரி**

ief Apostle N.Lazar,
EW JERUSALEM CHURCH"
irch Lane, Tilak Nagar,
a Cross Road, Sonapur,
lup (W), MUMBAI-400 078

மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா எண்ணை குறிப்பிடவும். பழைய சந்தாதாரரா அல்லது சந்தாதாரரா என்பதையும் குறிப்பிடவும்.

பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்ல நன்கொடையா என்பதையும் தெளிவா குறிப்பிடவும்.

"புதிய எருசலேம் செய்தி" பத்திரிக்கை வாங்குவோர் ரூ30 (முப்பது) சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தையும் தெளிவாகக் கொட்டை எழுத்துகளில் (Capital Letters), M.O. பாரத்தில் செய்திக்காக ஒதுக்கப்பட்ட பகுதியில் (Sp for Communication) எழுதிப் பத்திரிகையை பெற்றுக் கொள்ளும்படி கேட்டு கொள்ளப்படுகிறீர்கள்.

ited and Published ... ale
ar, Bhandup(W), ...
Pr...